உ

# புலவர் உலகம்

## கம்பன் கலை நிலை

### இரண்டாம் தொகுதி


ஆசிரியர்

ஜெகவீர பாண்டியன்





மதுரை

மதரூஸ், சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

**1943**

ஐந்திணை இயல்பும் அணிபெற ஆய்ந்து
பைந்தமிழ்ச் சுவைகள் பலவும் தோய்ந்து
கல்விச் சிறப்பும் காவலர் ஆட்சியின்
பல்வகை நலனும் படிந்த பண்பினர்
உயர்தமிழ்ப் புலமையோடு உணர்ச்சி ததும்பச்
சொன்மழை பொழியும் தூய மாமுகில்
தேசு மிகுந்தொளிர் செகவீர பாண்டியர்
தந்தருள் இன்பக் கம்பன் கலையைக்
கண்டு மகிழ்ந்து கவினில் ஆழ்ந்தேன்
உள்ளம் களித்தேன் உணர்ச்சியில் திளைத்தேன்
சொல்லுதற் கரிய சுவைபல நுகர்ந்தேன்
எல்லையில் இன்பருள் நல்லாசிரியர்
பல்லூழி காலம் பண்புடன் வாழ
எல்லாம் வல்ல இறைவன்
சொல்லார் அடிகள் தொழுகுவம் யாமே.

ரா. சுப்பிரமணியன்.

# முகவுரை

இது புலவர் உலகத்தின் இரண்டாவதுதொகுதி. இந்நூலின் இயல்பும் நிலையும் முறையும் முதல் தொகுதியின் முகவுரையில் நன்கு விளக்கப்பட்டுள்ளன. அதனை மீண்டும் ஒரு முறை நோக்கி ஈண்டு இணைத்து எண்ணிக்கொள்ளுதல் இதமாம். தண்டமிழ்ப் புலமையில் தலைசிறந்துள்ள பண்டைக் காலத்துப் புலவர் பலருள்ளும் கம்பனது கலைநிலையே முந்துற இதில் இடம் பெற்றுள்ளது. அந்தக் கவிஞர் பெருமான் அருளியுள்ள இராமாயணம் என்னும் இனியகாவியத்தைப் புதியமுறையில் தனியே ஆராய்ந்து வருகின்றது. காவியநிலை, கதையின் நோக்கம், சொற் பொருள் விளக்கம், உவமைக் குறிப்பு, உணர்ச்சித்திறம், உறுதி நலங்கள் என்னும் இவைகளோடு கவியின் இருதயத்தையும் இதன்கண் நாம் கண்டு மகிழ்ந்து கலைச்சுவையை நுகர்ந்து வருகின்றோம்.

காவிய பாத்திரங்களைத் தனித்தனியே பிரித்தெடுத்து இது வெளிப்படுத்துகின்றது. தசரதன், கோசலை என்னும் இருவருடைய இயல்நலங்களை முதன்மையாக ஆராய்ந்து முடித்தருளியது.

இப்பொழுது காவிய நாயகனாகிய இராமபிரானைக் கண்ணூன்றி நோக்கிக் கருத்துடன் கவனித்து மகிழ்கின்றோம். இவ்வீர வள்ளலுடைய அவதார நிலை, குணநலங்கள், இளமைப் பழக்கங்கள், குடிசனங்களிடம் காட்டியுள்ள அருள் ஒழுக்கங்கள், தந்தை சொற்படி வில் ஏந்தி விசுவாமித்திரருடன் சென்றது, கங்கை கடந்தது, அங்கநாடு அடைந்தது, கதைகள் பல கேட்டது, பாலைவனம் புகுந்தது, தாடகை வந்து எதிர்ந்தது, அவளைப் பெண் என்று கருதி இரங்கி இக்குலமகன் பொறுதிசெய்து நின்றது, அவள் கொல்ல முயன்றது, அதன்பின் அம்பு ஏவி அவளை இவன் கொன்று முடித்தது என்னும் சரித வரலாறுகள் இது வரை முறையே வந்திருக்கின்றன. இவ்வளவோடு இந்த இரண்டாம் பகுதி முடிந்துள்ளது.

புனிதமான இந்த இனிய இராம கதையில் கம்பனுடைய மதிநலம் மணியுள் ஒளிபோல் மருவி மிளிர்கின்றது. பல்வேறு வகைப்பட்ட உணர்வுநலங்களை ஒருங்கே உதவிமன்பதைக்கு இன்பமாய்ச் சுவை சுரந்து வருகின்ற இந்நூல் இனிது நிறைவேறும் வண்ணம் எம்பெருமான் திருவடிகளை இறைஞ்சி நிற்கின்றேன்.

இங்ஙனம்

ஜெகவீரபாண்டியன்.

# சிறப்புப்பாயிரம்

## ஸ்ரீ போன்னம்பல சிவம் அவர்கள் இயற்றியது

மலரில் அயனும் அவன்படைத்த மாபே ருலகும் வியப்படையப்
புலவர் உலகம் என்னுமொரு புதுமை யுலகம் தனைப்படைத்திவ்
வுலகின் மனிதர் யாவரும்மெய் யுணர்வாம் வடிவம் உறச்செய்தான்
இலகு புலவ ரேறுஜெக வீர பாண்டி யேந்திரனே.

## வித்துவான், நா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் இயற்றியன

செந்தமிழ்ப் புலமை வாய்ந்த செகவீர பாண்டி வள்ளல்
நந்தமிழ்க் கம்பர் யாத்த நற்கவி யுரைகாண் இன்பம்
உந்தமிழ் தூற்றே என்கோ! உயர்தெளி நதியே என்கோ!
வந்தமர் கடலே என்கோ! மற்றென்கோ வரைகுவாமே. (1)

பேர்பெரிய வள்ளுவரும் பிறங்குகவிக் கம்பருமே
ஏர்பெரிய நந்தமிழுக் கேற்றகதி என்பதுபோல்
பார்பெரிய செகவீர பாண்டியனார் அவ்விருவர்க்கு
ஓர்பெரிய கதியெனவும் உள்ளுகந்து வாழ்த்துதுமே. (2)

## மீ. சோக்கலிங்கம் பிள்ளை அவர்கள் இயற்றியது.

கற்றவரே யல்லாமல் கம்பன் கலைநிலையை
மற்றவரும் கண்டு மனமகிழ—முற்றுணர்ந்து
செப்பும் கவிஞன் ஜெகவீர பாண்டியனை
ஒப்பார் ஒருவர் இலர்.

## வித்துவான், A. R. சுப்பையர் அவர்கள் இயற்றின

கம்பன் உளக்கருத்தைக் கண்ணாடி போல்விளக்கிச்
செம்பாக மாகத் தெளிவாக்கி—எம்போன்றார்க்கு
இன்னமுதம் ஈந்தளிக்கும் இக்கவிமா ணிக்கத்தை
என்னென்று போற்றுவேன் ஈங்கு. (1)

கலைநிலையைக் கண்டேன் கருத்தையுமுட் கொண்டேன்
விலையிலா முத்தோ மிளிரும்—தலைமணியோ
அல்ல அவைகிடைக்கும் ஆனல் இதுபோன்ற
நல்லநூல் ஏது நமக்கு. (2)

## தேனூர் வே. செ. சோக்கலிங்கம் பிள்ளை அவர்கள் இயற்றியன.

நலனும் திருவும் நவஞா னமும்நம்மை நாடிவரும்
இலகும் தமிழுக் கணிகல மாய இலக்கணங்கள்
பலவும் படைத்த செகவீர பாண்டியன் பண்பொடருள்
புலவர் உலகம் எனும்பே ருலகிற் புகுந்திடினே.

இருபாலும் நயமாக இனிய உறுதி நலனை இங்ஙனம் நேரே கருதி யுரைத்திருப்பினும் வேறோர் பொருளும் மறைவாய் இதில் விரவியுள்ளது. உள்ள நிலையை ஊன்றிப் பார்க்க.

இராமன் முடி துறந்து வனம் புகுந்து வருந்தியலைய, நான் உடல் துறந்து ஒழிந்து போக ஓர் உறுதி நாடியுள்ளேன் என மேல்விளையும் வினை முடிவையும் குறிப்பாக இது உணர்த்தி நிற்கின்றது.

மன்னன் சொன்ன வாக்கில் இன்னவாறு இன்னல் நிலையையும் இடையே தொனிக்க வைத்து முன்னை வினையின் முடிவினை முன்னுற நாம் உன்னி யுணர்ந்துகொள்ளும்படி கவி இதில் உரையாடல் புரிந்திருக்கின்றார்.

சக்கரவர்த்தி மந்திரிகளிடம் மதிநலம் கனிய உரையாடி வரும்பொழுது விதிவலியும் அவர் மொழியில் இடையே புகுந்து விளையாடி மகிழ்கின்றது. தான் கருதிய துறவுநிலை பிறவித் துயரை நீக்கி உயிர்க்கு உய்தி தரும் என உண்மையாக நம்பியிருத்தலால் உறுதி எண்ணினேன் என்றான்.

11. தன் எண்ணம் துறவில் மிகவும் முறுகியுள்ளமை தெரிய அதனை மறுபடியும் மன்னன் இதில் வலியுறுத்துகின்றான்.

"இராமன் தாதை செருக்களத்து இறந்திலன்; மூப்பு அடைந்த பின்னரும் துறந்திலன்" என்னும் பழிச் சொல்லுக்கு ஆளாகிப் பாழே நான் வாழ்ந்திருப்பது பெரிதும் இரங்கத் தக்கதாம் எனத் தனது உள்ளக் குறிப்பையும் உறுதி நிலையையும் அமைச்சர் உருகியுணர அரசன் இவ்வாறு உரைக்கலானான்.

போரிடைப்பட்டவர் என முன்னம் பொதுவாக உரைத்தான்; இங்கே அதனைத் தனக்கே சிறப்பாகக் குறித்தான். அமரில் மாய்வதை எவ்வளவு ஆர்வத்துடன் பாராட்டி வருகிறான்! இப்படி ஒரு வீர மனப்பான்மை யாரிடமும் வீறுடன் அமைவது அரிதாம். செருக்களம்=போர்புரியும் இடம்.

மகாவீரனாகிய இராமனைப் பெற்றிருந்தும் தசரதன் வீரச் சாவைப் பெறாமல் வீணே செத்தானே என்னும் வெய்யபழியைப் பெறலாமா? என்று வெய்துயிர்த்திருக்கும் வேகம் நோக்குக.

இராமனுக்குத் தான் தந்தையாயுள்ளதைச் சிந்தை மகிழ்ந்து எடுத்துக்காட்டி யாதும் நிந்தை நேராதபடி நெறிமுறை சென்று நிறைபுகழ் அடையவேண்டும் என்கின்றான்.

தசரதனுடன் மாறுபட்டுப் போராட வருவார் யாரும் இல்லாமையால்செருக்களத்தில் அவன் இறந்துபடுதல் எய்தாமல் போயது; போகவே இனிஎஞ்சியுள்ளது துறந்துகோடலே; அதனையும் விரைந்து செய்து உய்யாமல் வீணே காலங் கழித்து வந்தால் அரிய மானுடப் பிறவியை அடைந்தும் அதன் பயனை அடையாமல் அநியாயமாய் அழிந்தபடியாம் ஆதலால் பிறந்திலன் என்பதில் பிறிது உண்டாகுமோ? என்றான்.

பகுத்தறிவு நிறைந்த சிறந்த மனிதயாக்கையைப் பெற்றிருந்தும் அதன் பயனைப் பெறுதவர் இழிந்த விலங்குகள்போல் கழிந்து போதலால் மக்களுருவில் பிறந்திருந்தாலும் அவர் பிறவாதவரே யாவர் என்க.

"தோற்றம்சால் ஞாயிறு நாழியா வைகலும்
கூற்றம் அளந்துநும் நாளுண்ணும்—ஆற்ற
அறஞ்செய் தருளுடையீர் ஆகுமின் யாரும்
பிறந்தும் பிறவாதார் இல்." (நாலடியார்)

என்றதும் காண்க. கூற்றுவன் உங்கள் ஆயுளை நாளும் உண்டு கொண்டு வருகின்றான்; அதனைக் கண்டுணர்ந்து விரைந்து உயிர்க்கு உறுதிசெய்துகொள்க என இதில் உய்தி காட்டியுள்ளமை அறிக.

நான் துறந்திலனாயின் பிறந்திலன் என்னும் பிழையேயன்றி வேறொன்றும் உண்டாகாது என்பான் பிறிது உண்டாகுமோ? என்றான். இசைவளர் செங்கோல் தசரதன் என உலகம் முழுதும் புகழோங்கி நின்ற நான் இந்த இகழோடு இழிந்துபடலாமா? என்பது குறிப்பு. இழிவும் பழியும் என்பால் ஏறாமல் அன்பாற்றி அருளுங்கள் என்பது கருத்து.

பெற்ற பிறவிக்குப் பெரும் பயன் உற்ற உயிருக்கு உறுதி செய்துகொள்வதே; அங்ஙனம் கொள்ளவில்லையாயின் அல்லற் பிறப்பாய் அவமேக் கூர்ந்து வறிதே அது இழிந்துபோம் ஆதலால் அப்போக்கை நுனித்து நோக்கி இனித்த நலனை விரைந்துசெய்து பிறந்த பயனை எல்லாரும் பெறவேண்டும் என்றவாறு.

" பெறுதற்கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற்கரிய பிரானடி பேணூர்
பெறுதற்கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற்கரிய தோர் பேறிழந்தாரே." (திருமந்திரம்)

" எய்தற்கரிய யாக்கைதனக் கெய்திற் றென்றால் அதுகொண்டு
செய்தற்கரிய அறங்கள்பல செய்து துயர்கூர் பிறவியினின்று
உய்தற்கொருமை பெறஒண்ணுது உழல்வோன் உடம்பு பொற்கலத்தில்
பெய்தற்குரிய பால்கமரில் பெய்த தொக்கும் என்பரால்."
(பிரபுலிங்கலீலை.)

இவை ஈண்டு எண்ணற் குரியன. அரிய மனிதப் பிறவியை அடைந்தும் அதன் பயனைப் பெருதொழிவது பேரிழவாம் என்பதை இவையும் உணர்த்தி நிற்றலறிக.

கமர்=நிலப்பிளப்பு. கமரில் பெய்தபால் வீணே பாழாதல் போல் உறுதிநாடி உய்யாதவர் எய்திய உயர் பிறப்பும் வறிதே ஈனமாம் என்க.

பிறவியின் பயனை விளக்கியும், துறவு தவங்களைக் குறித்தும் நளினமாகப் பேசி வந்த மன்னன் இராமனுக்கு மணி முடி சூட்டுதலாகிய தனது ஆர்வத்தைத் தெளிவுறக்கூறத் துணிந்து மொழிகளை அயலே அழகாக வெளியிடுகின்றான்.

12. எனது அருமை மகனுடைய திருமணத்தைக் கண்டு நான் பெருமகிழ்ச்சி யடைந்தேன்; இனி அவனது பட்டாபிடேக வைபவத்தையும் பார்த்து மகிழவேண்டும் என்னும் ஆர்த்தி என்னுள்ளத்தில் பூர்த்தியாயுள்ளது என நேர்த்தியாக இதில் வார்த்தையாடுகின்றான்.

இராமனை இங்கே பெருமகன் என்றது, பெருமை என்னும் அருமைப் பண்பிற்குத் தனி யுரிமையுடையனாய்த் தலைமை யெய்தி நிற்கும் நிலைமை கருதி. ஏந்தல் செம்மல் குரிசில் என்னை போல் மாந்தருட் சிறந்தோரை இப்பெயர் சிறப்பாக உணர்த்தி வரும்.

" பெருமகன் மல்லன் தலைவன் பெருமான்
குரிசில் செம்மல் கோமான் கோவே
ஆண்டகை பொருநன் அண்ணல் ஓங்கல்
ஏந்தல் மீளி விடலை பெருந்தகை." (பிங்கலந்தை)

எனப் பெருமையிற் சிறந்தோரைக் குறித்துவரும் பெயர்கள் பதினைந்துள் இதனை முதன்மையாக வைத்திருத்தலால் இதன் உயர் நிலை புலனும்.

பெருமகன் என்னும் பேர் சிறந்த அரசர்களையே பண்டு குறித்து வந்திருக்கின்றது.

"ஒருமகள் காதலின் உவகை நோய்செய்த
பெருமகன் ஏவலின்"
(இராமாயணம், கிளைகண்டு நீங்குபடலம், 39)

"திருமகள் இவளெனத் திலக வெண்குடைப்
பெருமகன் கோயிலுட் பேதை வைகுமே." (சிந்தாமணி, 183)

"அறம்புரி செங்கோல் அவந்தியர் பெருமகன்."
(பெருங்கதை 2-7)

"ஒருதனி வந்தஉம் பெருமகன் போல" (மணிமேகலை, 14)

"பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்" (சிலப்பதிகாரம், 13)

இவற்றுள் பெருமகன் உணர்த்தி நிற்றல் காண்க. முதலிலும் இறுதியிலும் பெருமகன் என்றது தசரதனையே குறித்து வந்துள்ளது.

இங்ஙனம் சிறந்த அரசனையே யாண்டும் குறித்து வருகின்ற இந்த உயர்ந்த பெயரை இங்கே தனது செல்ல மகனுக்கு இட்டுச் சொல்லியது, அவனை விரைவில் அரசுமுடி சூட்ட அவாவி நிற்கும் ஆர்வத்தால் என்க.

இளைய புதல்வர் நால்வரினும் வேறுபாடு தெரியப் பெருமகன் என்றான் என வெளியே எளிதாகப் பொருள்படவும் உள்ளே அரிய பல நலங்களை ஆராய்ந்து கொள்ளவும் உரிமையாக இப் பெயர் மருவியுள்ளது.

உலகில் மகவெனத் தோன்றினோர்க் கெல்லாம் மகிமை தர வந்த பெருமான் ஆதலால் பெருமகன் எனவும், தன்னைப் பெற்றோர்க்குப் பெருநலம் அருளும் குலமகன் ஆகையால் பெருமகன் எனவும், வீரம் கொடை முதலிய குணநலங்களால் எவரும் தனக்கு நிகரில்லாதவனாய்ப் பெருகி நிற்றலால் பெருமகன் என

வும், பெரிய மகான்களெல்லாம் பேணிப் போற்றும் திருமாலே ஒரு மகனாய் வந்துள்ளமையால் பெருமகன் எனவும், சிறுமை சிறிதும் மருவாமல் பெருமைக்கெல்லாம் பேரெல்லையாய் மிளிர்த லால் பெருமகன் எனவும், எத்திறத்தும் உத்தம நிலையில் ஓங்கி ஒளிரும் புருடோத்தமன் ஆதலால் பெருமகன் எனவும் இராமன் ஈண்டுக் கூற நின்றான் எனக் குறிப்பு நலன்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவும் இது நேர்ந்து நின்றது.

இராமன் தனக்குப் பிள்ளையாய்ப் பிறந்ததும், அவனது கலி யாண கோலத்தைக் கண்டதும் பெறலரும் பேறுகளாக மன்னன் எண்ணியிருத்தலால் பிறக்க, கண்ட யான் எனத் தன் மேன்மை விளங்க விளம்பினான்.

சீதையாம் திருமகள் என்றது குணநலங்களாலும் திவ்விய சௌந்தரியங்களாலும் அக்குலமகள் நிலவி நிற்கும் நிலைமையை வியந்து வந்தது. தெய்வத் திருமகளே புதிய ஒரு பெயருடன் தனக்கு மருமகளாய் வையம் புகுந்துள்ளாள் என்பதாம்.

அருமை மகனைப் பெற்றேன்; திருமணம் செய்து பார்த் தேன்; இனி மணி மகுடம் சூட்டி அரசுரிமையான அவனது பட்டாபிடேக கோலத்தையும் கண்குளிர நான் கண்டு மகிழ வேண்டும் என்பான், "அவனிமாது எனும் ஒருமகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன்" என்றான். கண்டு உவப்ப என் றதனால் அக் காட்சி யின்பத்தின் கோலாகலங்களும், அவற்றைக் காணவேண்டும் என்னும் வேணவாவுடன் மன்னன் முன்னதாக கவே எண்ணி எதிர் நோக்கியுள்ளதும் இனிது புலனும்.

மணம் என்றது இன்ப நலம் தெரிய வந்தது.

அரசன் தனியுரிமையாய்த் தலைமை எய்தி நின்று பூமியைப் பரிபாலித்துப் போகங்களை நுகர்ந்து வருதலால் நிலத்தை நாயகி யாகவும், அவனை நாயகனாகவும் மேலோர் கூற நேர்ந்தனர்.

மகிபதி, பிருதிவிபதி என அரசுக்கு வழங்கிவரும் பெயர்க் காரணங்களையும் நோக்குக. மகி = பூமி.

"அணிமுடி அரசர்மாலை அழனுதி வாள்கள் என்னும்
மணிபுனை குடத்தின் நெய்த்தோர் மண்ணுநீர் மருள ஆட்டிப்
பணைமுலைப் பைம்பொன்மாலைப் பாசிழைப் பூமி தேவி
இணைமுலை ஏகமாக நுகரிய எய்தினானே."
(சீவகசிந்தாமணி 2326)

இது, சீவகன் அரசுரிமை அடைந்ததைக் குறித்துக் கூறியது. பகை அரசரை வென்று தன் நிலத்தைக் கைக்கொண்டு அவன் நிலவி நின்ற நிலைமையை இன்பச் செவ்வி தோன்ற இதில் விளக்கியிருக்கிறார்.

ஒரு மகள் மணம் என முன்னர் வந்ததையும், "இணைமுலை நுகரிய" என்ற இதனையும் இணைத்து நோக்கி இனநலம் தெரிக.

நிலவுரிமை இன்ப நிலையுடையது ஆதலால் அன்பு நலங் கனிய மனைவி என இங்ஙனம் அது உரைக்க வந்தது.

*"செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்." (குறள், 1039)

என நிலத்தை இல்லாளுடன் இணைத்து வள்ளுவப் பெருந்தகை இதில் உணர்த்தியுள்ளமை காண்க. குலமகளுக்கு உரிய ஊடலும் கூடலும் நிலமகளுக்கும் உண்டு ஆதலால் தலைமகன் அவளை நலமுறப் பேணி நன்கு பாதுகாத்து வரவேண்டும் என்பதாம். நிலத்தை மனைவியோடு சமமாக வைத்து அடிகள் விளக்கியிருக்கும் நயத்தை இதில் ஆய்ந்து பார்க்க.

* நிலத்துக்கு உரியவன் அடிக்கடி போய் அதனைப் பாராமல் இருப்பின் அது பாழ்பட்டு ஒழியும் என்பதாம். உணவு உடை முதலியன உதவி அன்புடன் அளவளாவித் தன் மனைவியை ஒருவன் பேணுவழி அவள் உள்ளம் வெறுத்து அவனை எள்ளி ஒழிதல் போல் உடையவன் வந்து உரிமையுடன் காணாத விளைபுலமும் கடையாய் இழிந்து போம் என்பார், "இல்லாளின் நிலம் புலந்து ஊடிவிடும்" என்றார். நிலத்தை மனைவியோடு நேர் குறித்தது போகம் தருதல் கருதி. கிழவன்=உரியவன். காட்டுச் சொத்துக்கு வீட்டுச் சொத்தை எடுத்துக்காட்டி அந்த இரண்டு உரிமைப் பொருள்களையும் மனிதன் இனிதாகப் பேணிவர வேண்டும் எனத் தேவர் இதில் உணர்த்தி நிற்கும் அழகை ஊன்றி யுணர்ந்து கொள்க. கிழவனும் உழவனும் உரிமை தெரிந்து உளவறிந்து பருவமுடன் பேணி இனிது ஒழுகவேண்டும் என்பதாம்.

அரிய பாக்கியமாய் இனியவளஞ் சுரந்திருத்தலால் நிலம் திரு என நின்றது. தலைவன் ஒருவனைத்தழுவி விளங்கலால் அது தலைவி என வந்தது.

சீதாலட்சுமியுடன் இராச லட்சுமியையும் தனது அருமை மகனுக்கு உரிமை செய்யக் கருதியுள்ளமையான் திருமகள் மணம், ஒரு மகள் மணம் என இருவகை மணமா உருவகஞ் செய்து அரசன் இனிது மொழிந்தான்.

ஏகபத்தினி விரதனுய் எங்கும் இசை பெற்றுள்ள இராம னுக்கு இருதாரங்களை மன்னன் இங்கே இசைத்துச் சொன்னது என்னை? எனின், அவன் பலதார நிலையன் ஆதலின் அந்நிலையினில் உவகை மிஞ்சி இவ்வாறு உரைத்தான் என்க.

தான் நுகர்ந்து சுவை கண்டதையே மனிதன் யாண்டும் உவந்து மொழிவான் என்பதை ஈண்டு உணர்ந்து கொள்ள வேண்டும்.

அரச திருவை இவ்வண்ணம் இரசமாக அரசன் உரை செய்துள்ளான் எனினும், இராமனது பரம நிலையையும் ஈண்டு உரிமையாக உணர்ந்துகொள்ளும்படி அவ்வுரை உருவாகியுள் ளது. என்னை? பூமகளும் புவிமகளும் திருமாலுக்குத் தேவியர் ஆதலால் அப் பெருமானின் அவதாரமாய் வந்துள்ள இராமனுக் கும் அவ்வாறே உரிமை கூற நேர்ந்ததென்க.

நிலமகள்பால் திருமால் பெருமால் கொண்டுள்ளது.

"அரவாகிச் சுமத்தியால், அயில்எயிற்றியின் ஏந்துதியால்,
ஒருவாயின் விழுங்குதியால், ஓரடியால் ஒளித்தியால்,
திருவான நிலமகளை இஃதறிந்தால் சீருளோ
மருவாருந் துழாயலங்கல் மணிமார்பின் வைகுவாள்?"
(விராதன் வதைப் படலம், 57)

இது விராதன் கூறியது. அவன் சாபம் நீங்கித் திவ்விய நிலையை அடைந்தபொழுது இராமனது தெய்வப் பெற்றியை வியந்து பலவாறு புகழ்ந்து போற்றுங்கால் இடையே இவ்வாறு சுவையாகக் கூறியிருக்கின்முன்.

இப் பாடலின் உல்லாச ஆடலை ஊன்றிப் பார்க்க.

"எம் பெருமானே! மலர் மகளும் நிலமகளும் ஆகிய இரு தேவியருள் இளையவளிடத்து மட்டும் நீர் பெரு மோகமுடைய ராய்ப் பெருகியிருக்கின்றீர்! அவளைத் தலையில் தூக்கிச் சுமக்கின்றீர்! தழுவித் தாங்குகின்றீர்! வாரிவிழுங்குகின்றீர்! யாரும் அறியாவகை அணைத்து மறைக்கின்றீர்! இவ்வண்ணம் கடுங் காதலுடன் கலந்து சுகித்துக் களியாடல் புரிந்தால் திருமகளாகிய பெரிய பிராட்டி புலந்து சினந்து பொருமிவருந்தாளா?" என்று அன்புரிமையுடன் வினவியிருக்கும் அழகை ஆய்ந்து நோக்குக. காதல்சுவை கனியப், பத்திச்சுவை சொட்ட, உலகியலை ஒட்டி இப்பாடல் அமை[illegible]ருக்கும் பாகம் தெரிக.

அரவாகிச் சுமத்தல், [illegible]நிசேடனாய் நின்று தாங்குதல்; எயிற்றின் ஏந்துதல், பன்றி வடிவம்கொண்டபொழுது அதாவது வாரகாவதாரத்தில் நிகழ்ந்தது; வாயில் விழுங்குதல் பிரளய காலத்தில் நேர்ந்தது; அடியால் ஒளித்தல், வாமனவதாரத்தில் மாவலியிடம் வாய்ந்தது என்க.

நிகழ்ச்சிகளை இணைத்துப் பிணைத்து உவமைச்சுவை உள்ளே [illegible], சந்தர்ப்பங்கள் பான்மை சார்ந்து திகழ, கூடலும் ஊடலும் குலாவி நிலவ இப்பாடலைப் பாடியிருக்கிறார்.

இங்ஙனம் இருமனைவியருடைய பெருமாளே இராமனாய் வந்திருத்தலால் அந்த உரிமையும் தெரிய இங்கே இருமை வந்தது.

நிறை குணத்து அவனி என்றது அவளது பொறையுடைமையை நினைந்து. பொறுமைக்குப் பூமிதேவி பேர் பெற்றவள் ஆதலால் அச்சிரிய பண்பு சிறப்புற வந்தது.

சீவகோடிகளைத் தாங்கி என்றும் ஆதரித்து வருதலால் பூமியை எவ்வுயிர்க்கும் இனியதாயாக எண்ணலாயினர். இவ்வண்ணம் தோன்றிய உயிர்களுக்கு உறுபசி நீக்கி, உயர் வளம் உதவி, செல்வமும் தேசும் சேர நல்குதலால் திருவையும் தாயா உருவகம் செய்தனர். இன்னவாறு மன்னுயிர்கட்கு அன்னையராய் மருவி நின்ற இவர் முன்னவனுக்கு இன்னுயிர்த் துணைவிகளாய் எண்ண வந்தனர் என்க. அவ்வரவு இவ்வகையாயது.

தத்துவ நோக்கில் இங்ஙனம் உய்த்துணரவுள்ள இந்த உத்தம சத்திகளைத் தத்தமக்குத் தோன்றியவாறே தெய்வங்களாகவும், தேவிகளாகவும் பாவினங்களில் கவிகள் வருணிக்கலாயினர். விரிந்த நிலத்திற்கும் சிறந்த செல்வத்திற்கும் அதிதேவதைகளாய் விளங்கி நிற்கின்ற செல்விகளையே கல்வியுலகில் பூதேவி சீதேவி எனச் சொல்லிவருகின்றனர்.

இங்ஙனம் செல்வச் சீமாட்டியாகிய சீதேவியை இராமன் முதலில் மணந்து கொண்டான் ஆதலால் இனி உடனே பூதேவியையும் அப்பூமான் பொருந்தி மகிழவேண்டும் என்பதாம்.

இந்த இரண்டு தேவியரும் இராமனை அடைந்துகொள்ள அருந்தவம் புரிந்திருக்கின்றனர்; அவர் வருந்தி நில்லா வகை விரைந்து காரியம் செய்யவேண்டும் என மேலே அரசன் துரிதமாக விழைந்து பேசுகின்றான்.

13. அலர்மேல் மங்கையும், நிலமாதும் பலகாலும் புரிந்து வந்த தவப்பயன் பழுத்து ஒன்று பலன் பெற்றுள்ளது; மற்றொன்றும் விரைவில் முற்றுறச் செய்தல் நலம் என்பதாம். கலியாணம் முடிந்தது; இனி இராமனுக்கு மகுடாபிடேகம் செய்ய வேண்டும் என்பதை மன்னன் இன்னவாறு குறித்திருக்கிறான்.

“நிலன் எனும் நங்கையும், மலர்மிசைச் செல்வியும் கணவனை எய்திய தவப்பயன் தாழ்ப்பது தருமம் அன்று” என்றது முன்னமேயே இராமனை அடைய அவர் ஆவலித்திருக்கும் ஆர்வ நிலை தெரிய வந்தது. சீதேவி திருமணம் எய்தினாள்; இனி, பூதேவியும் ஒரு மணம் எய்தி உளம் களிக்க வுள்ளனள் என்றவாறு.

கருவிலேயே திருவுடையனாய் அரசுரிமை வாய்ந்து எவரும் பரச வந்திருக்கின்ற இராமனை விரைவில் மணிமகுடம் சூட்டி நாடு நகரமும் பீடுபெற்றுயர நாம் கண்டு மகிழவேண்டும் என்பது கருத்து.

14. தனது தலைமகனுக்கு முடிசூட்ட விழைந்த தசரதன் பலவகைக் கருத்துக்களையும் நலமுற விளக்கிவந்து முடிவில் தன் உள்ளக் குறிப்பைத் தெளிவாக வெளியே சொல்லியிருக்கும் திறம் வியந்து நோக்கவுள்ளது.

ஆதலால் என்றது முன்னே ஓதியுள்ள ஏதுக்களையெல்லாம் ஒருங்கே எண்ணி உணர்ந்துகொள்ள வந்தது.

இராமனுக்கு அரசை நல்கி, நான் மாதவம் தொடங்க நண்ணுவேன் என்றது இதுவரை பேசிவந்த பிரசங்கத்தின் சாரமான பயன் என்க.

இந்த உள்ளக் கருத்தை உணர்த்துதற்கு மன்னன் இன்னவாறு நன்னயமாகப் பல பேசியிருக்கிறான். தொகுத்துச் சுட்டி வகுத்துக்காட்டி விரித்துக்கூறித் தத்துவ வுண்மைகளையெல்லாம் வித்தகமாக விளக்கியிருக்கின்றான்.

அரசன் அமைச்சரை நோக்கி உரையாடியுள்ள உறுதி நலங்களை யெல்லாம் முதலிலிருந்து தொடர்ந்து மீண்டும் எண்ணிக் கொள்ளும்படி இனைய கூறினான் என விநயமாகக் கவி சுட்டியருளினார்.

முதிர்ந்த வயதும் சிறந்த அனுபவமும் வாய்ந்த இந்த உயர்ந்த பாத்திரத்தின் வாயிலாக நம் கவிஞர்பிரான் வெளியிட்டிருக்கிற தத்துவ ரகசியங்கள் மிகவும் உய்த்துணரத் தக்கன.

மூலநூலாகிய வால்மீகத்தில் இராமனுக்கு முடி சூடுவதை மட்டும் குறித்துத் தசரதன் பேசியிருப்பதாக உள்ளது. இந்தப் பகுதியில் வேறு விசேடமாக அங்கு ஒன்றும் இல்லை.

கம்பர் இங்கே திவ்விய போதனைகளைச் செவ்வையாகப் பொழிந்திருக்கின்றார். அநித்திய விவேகம், மறுமை நோக்கம், பிறவி நீக்கம், பொறி புலன்களின் நிலைமை, போகங்களின் போக்கு, இறத்தலை நினைத்தல், அவாவறுத்தல், துறவு, தவம், ஞானம், முத்திப்பேறு முதலிய உத்தம உறுதி நலங்களை உணர்வொளி தவழ உருக்கமாய் உரைத்திருக்கிறார்.

நமது கவிச் சக்கரவர்த்தியின் மேதா விலாசத்தில் உதித்தெழுந்த உணர்வு நலங்கள் புவிச்சக்கரவர்த்தியின் மொழிவழியே ஒளி தவழ்ந்து ஈண்டு இவ்வண்ணம் வெளிவந்துள்ளன என்க.

எந்த இடத்தில் எந்தப் பாத்திரத்தின் மூலமாக எந்த உண்மைகளை எந்த நிலையில் வெளியிடவேண்டுமோ அந்த நலங்களை அவ்வாறே அழகாகவும் தெளிவாகவும் வெளிப்படுத்தி உயிர்

களுக்கு இவர் உதவிபுரிந்துள்ள திறம் உணருந்தோறும் உவகையும் வியப்பும் ஒருங்கே விளைத்து வருகின்றது.

தண்ணளி நிறைந்த இவ்வண்ணலது மதிநலம் கலைவளங்கள் சுரந்து பலநலங்களும் மலிந்து தெய்வீகமும் பொலிந்திருத்தலால் இயல்பாகவே மெய்யறங்களை அமிர்த தாரைகள் போல் இடங்கள்தோறும் பெய்தருள்கின்றார். தம்மை வெளிப்படுத்தாமலே இனித்த நீதிகளை மனுக்குலமுய்ய இவர் தெளித்துச் செல்லும் செலவு திவ்விய நிலையில் திகழ்ந்தொளிர்கின்றது. இவரது வெளிப்பாட்டில் ஒளிப் புண்மைகள் பல உள்ளே உறைந்து கிடக்கின்றன.

இராமனுக்கு அரசாட்சியைக்கொடுத்துவிட்டு, என்பிறப்பை நீக்கும் பொருட்டு நான் தவம்செய்யப் போகின்றேன் என்னும் இதில் நாட்டில் இராத மன்னனுக்கு அரசை நல்குதல், தசரதன் சாதல், கைகேசி கேடு சூழ்தல் எனப் பின்னே நிகழவுள்ள கெடு நிலைகள் இடையே தொனித்திருத்தலை நுனித்தறிந்து கொள்க.

மன்னன் மாதவம் தொடங்க எண்ணினன்; மாது ஆகிய கைகேசி அவனுக்கு அவம் தொடங்க நண்ணினள் என்க. கவி எண்ணுதனவும் இங்ஙனம் நுண்ணிதாக எண்ணிக்கொள்ளும்படி உரைகள் இடந்தந்துள்ளன.

தனது அருமை மகனை முடிமன்னன் ஆக்க விரும்பித் தான் முடி துறந்து படி துறந்து முடியும்படி அரசன் முடித்து நின்றான் ஆதலால் அமைச்சரது முடிவுரையை முடிவில் வினவியருளினன்.

யாது நும் கருத்து? என்றது இது வரையும் தான் உரைத்து வந்த உறுதிமொழிகளைக் கவனமாய்க் கேட்டிருந்த மந்திரிகள் அவரவருடைய எண்ணங்களைத் தெளிவாக வெளியே ஒரு முகமாய் விளக்கியருள என்க.

சக்கரவர்த்தியினுடைய கண்ணியமான அருமைவாசகங்களை மிகவும் மரியாதையுடன் உரிமை மிகுந்து கேட்டு வந்த சிற்றரசர்களும் பிரதானிகளும் மதிமந்திரிகளும் முடிவில் பதிலாக யாது கூறினர்? என யாவரும் அறிய ஆவல் மீக்கூர்வர்.

கலைஞானம் கனிந்த அந்த மதிமான்கள் யாவரும் மன்னன் உரை முடிந்தும் மாறு ஒன்றும் பேசாமல் சிறிதுபோது மௌன

மாயிருந்தார். அம்மவுன நிலையில் மறுக்கமும் உருக்கமும் மருவி யிருந்தன. அப்பன நிலைகள் தனி யுணர்வுடையன.

உரிமை மிகுந்த அவ் அருமைக் காட்சியைக் கவி மிகவும் அழகாகச் சித்திரித்துக் காட்டியிருக்கின்றார். அடியில் வருவன காண்க.

மந்திரிகளின் மனநிலை.

" திரண்ட தோளினன் இப்படிச் செப்பலும் சிந்தை
புரண்டு மீதிடப் பொங்கிய உவகையர் ஆங்கே
வெருண்டு மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால்
இரண்டு கன்றினுக்கு இரங்குமோர் ஆவென இருந்தார்.

மறுகி இசைந்தது.

அன்னர் ஆயினும் அரசனுக் கதுவல துறுதி
பின்னர் இல்லெனக் கருதியும் பெருநில வரைப்பில்
மன்னும் மன்னுயிர்க்கு இராமனின் மன்னவர் இல்லை
என்ன வுன்னியும், விதியது வலியினும் இசைந்தார்."

(மந்திரப்படலம், 32, 33)

இக் கவிகள் இரண்டையும் கருத்தூன்றி நோக்குக.

அரசன் உரையாடி முடிந்தபின், அமைச்சர் உடனே அதற்குப் பதில் சொல்லவேண்டும். அங்ஙனம் சொல்லமாட்டாமல் உள்ளம் கவன்று ஒருவர் முகத்தை ஒருவர் நோக்கி மறுகலாயினர். என்னே மறுக்கம்? எனின், பின்னே பார்க்க.

அரசாட்சியைக் குமரனிடம் கொடுத்துவிட்டு அரசன் ஒதுங்கி யிருக்க வேண்டுகின்றான். அவ் வேண்டுகோளுக்கு உடனே இசையின், "கிழவன் ஒழியட்டும்" என்று உளமகிழ் வுடன் அவர் எதிர்பார்த்திருந்தபடியாம்; ஆகவே அது வேந்தனுக்கு உள்ளே சிறிது ஐயத்தையும் அவலத்தையும் விளைத்து அவமதிப்பைக் காட்டும்; இசையாதுமறுத்துவிடினோ இளவரசை மதியாமல் இளித்தபடியாய் ஈனம் பயக்கும். இந்த தரும சங்கடமான நிலையில் கருமம் கைதவறாமல் உரிமையுடன் அமைச்சர் தகுதியாகப் பதில் உரைக்கவேண்டும். இடர்ப்பாடான இந்நிலைமையில் அவர் கடப்பாடாற்றியிருக்கும் காட்சியைக் கவி இங்கே நமக்கு நன்கு காட்டியிருக்கிறார். நாடிக் காணவேண்டும்.

உயர்ந்த மனோதத்துவங்களும், உணர்வுறுதிகளும் ஊன்றி யுணரும்படி இதன்கண் ஊடாடியுள்ளன.

இராமன் அரசபுரிய வருகின்றான் என்றதை அறிந்தவுடனே அமைச்சர் முதலாக அங்கிருந்தவர் அனைவரும் அளவிடலரிய தோர் பெரு மகிழ்ச்சியடைந்து அதிசய பரவசராய் ஆவல்மீக் கூர்ந்தார் ஆதலால், "சிந்தை புரண்டு மீதிடப்போங்கிய உவகையர்" என அவரது அக நிலையை விளக்கியருளினார். பொங்கிய என்றதனால் உவகை வெள்ளம் உள்ளம் கொள்ளாமல் ஓங்கிப் பெருகி உயர்ந்து நின்றமை உணரலாகும்.

இங்ஙனம் பேருவகை மண்டி ஆர்வமீதூர்ந்து நின்ற அவர் மன்னன் பிரிந்து போவதை நினைந்தவுடனே முன்னைய மகிழ்ச்சியை முழுதும் மறந்து இன்னல் மீக்கூர்ந்தனர்.

இன்பமும் துன்பமும் ஒருங்கே கலந்த இந்த இனிய பரிதாப நிலையை எவ்வாறு விளக்குவது? இதனைச் செவ்வையாகத் தெளிவுபடுத்தற்குக் கவி நளினமாக ஓர் உபாயத்தை இங்கே கையாண்டிருக்கிறார்.

இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆவென இருந்தார் என உவமையை மாத்திரம் காட்டிவிட்டு அவர் ஒதுங்கிக்கொண்டார். அன்புரிமையை அளந்து தெளியக் கன்றும் பசுவும் நம் கண்முன் வந்தன. பால்குடி மறந்த பெரிய ஒரு கன்றும், அழகிய இளங் கன்று ஒன்றும் உடைய ஒரு பசு பருவம் முதிர்ந்த முன்னதினும், சின்னதான இளங்கன்றினிடமே உளம் கனிந்து இருக்கும்; ஆயினும் பெரியது பிரியநேரின் பெரிதும் வருந்தும் என்க. இராமன் வரவில் பேராவலுடைய மந்திரிகள், தசரதன் பிரிவதில் பெருந்துயருடையராய் வருந்தி நின்றார் ஆதலால் அவர்க்கு இங்கே அது உவமையாக வந்தது. தனித்தனியே எல்லாரும் ஈற்றாவென ஆற்றாமை மீதூர்ந்திருந்தார் என்பதாம்.

கன்றுடைய அமைச்சர்க்குக் கன்றுடைய ஆவினை ஒப்புக் கூறியது அன்புரிமையால் தலைசிறந்து நிற்கும் அவரது பண்பும், நண்பும், மாண்மையும், மேன்மையும் நன்கு தெரிய என்க.

மன்னனுக்கும் மந்திரிகட்கும் உள்ள மனவுருக்கத்தை இன்னவாறு இனிய உவமையால் உணர்த்தி இன்புறுத்தி யிருக்கின்றார்.

ஆவும் கன்றும் காவியத்தில் பல இடங்களில் எடுத்துக் காட்டாக வந்துள்ளன. அவற்றைப் பின்பு காட்டுதும்.

இங்கே திரண்ட தோளினன் என இந்த இடத்தில் இந்தச் சமயத்தில் தசரதனைக் குறித்தது சிந்திக்கத்தக்கது.

சொல்வன்மை, அறிவுத்திறம், செல்வப் பெருக்கு, குல மரபு, ஞான நலம் முதலிய யாதாவது ஒரு விசேடத்தால் அரசை ஈண்டு விளக்கியிருக்கலாம். அங்ஙனமின்றிப் பருவம் முதிர்ந்தும் உருவத்தில் கைவைத்துத் தோளின் திண்மையை இங்ஙனம் சுட்டிக்காட்டியது, அரசபாரம் தாங்கி ஆட்சிபுரியும் ஆற்றல் இன்னும் மாட்சிமையுற்றுள்ளது; இருந்தும் மகன்மேல் உள்ள காதலால் உரிமையை அவனிடம் நல்கி மன்னன் ஒதுங்க விரைகின்றான் என்பது விளங்க என்க.

இராமனை அரசனாகப் பெறுவதில் பேராசையும், அதே சமயத்தில் தசரதனைப் பிரிய நேர்வதை நினைந்து பெருந்துக்கமும் ஒருங்கே யடைந்து, இரண்டு கன்றினுக்கு இரங்கி யுழல்கின்ற ஆவென மருண்டு மறுகிய அமைச்சர் பின்பு ஒருவாறு தெருண்ட சிந்தையராய்த் தேறலாயினர். தேறியும் மன்னன் எதிரே வேறொன்றும் விரித்துக்கூறவில்லை.

சகல குண சம்பன்னனை இராமன் அரசுபுரியின் அகில வுலகங்களும் ஆர்வமீதூர்ந்து பேரின்பம் நுகரும்; அந்தப் பேராளனே என்றும் பாராள உரியவன்; அக்குலமகனைப் பெற்றுப் பரமபாக்கியவானாய் நலமிகுந்துள்ள நம் மன்னன் இனி அருந் தவநிலையில் ஆறுதலடைந்திருத்தலே பெருந்தகவாம் என இன்னவாறே முன்னும் பின்னும் எண்ணி நோக்கி அமைச்சர் அனைவரும் அமைதியுடன் தம்முடைய சம்மதத்தைச் சக்கரவர்த்தி முன் மிக்க விநயமாக வெளிப்படுத்தினர். மந்திரிகளுடைய இந்த உடன்பாட்டறிக்கையில் வினைவிளைவையும் கவி உடன்படுத்தியிருக்கிறார். விதியது வலியினுஞ் இசைந்தார் என்ற இது மதியது வலியினும் மிஞ்சி அதிசய வாசகமாய் வந்துள்ளது.

இது எந்த விதி? யார் செய்தது? யாருக்குப் பலன்தர நேருக்கு வந்தது? நல்விதியா? தீ விதியா? இன்னவாறான எண்ணங்களை இவ்விதி இங்கே விளைத்து நிற்கின்றது.

மதிவலிமிக்க அமைச்சர் மன்னன் சொல்லுக்கு மாறு ஒன்றும் சொல்லாமல் உடனே இசைந்தார்; அங்ஙனம் இசைந்தது விதிவலியினாலேயாம் என்பார், "கருதியும், உன்னியும், விதியது வலியினும் இசைந்தார்" என்றார். கருத்தையும் மதியையும் கடந்து விதி இங்கே நடந்திருக்கிறதென்பது குறிப்பு. விதியை முடிவில் வைத்தது அதன் முடிவே முடிவானமை தெரிய.

இன்ன காலத்தில் இன்ன இடத்தில் இன்னாருக்கு இன்னது நடக்கும் என்னும் நியதியே விதியாம். அந்த நியதியின்படி ஈண்டு நிகழ்ந்திருக்கின்றதென்பதாம்.

இராமனது வனவாசம், சீதையின் பிரிவு, தசரதன்முடிவு, குடிகளின் குலைவு, அரக்கரின் அழிவு முதலியவற்றிற்கு வழி கோலியபடியாய் இவ் இசைவு இனிது நிறைவேறியதென்பதை நாம் நுணுகி உணர்ந்து கொள்ளும்படி விதிவலியை ஞாபக மூட்டிக் கவி இவ்வாறு இங்கே எச்சரித்திருக்கிறார்.

சொல்லாட்சியிலேயே எல்லாக் காட்சிகளையும் எளிதே விளக்கி இனிதாகத் தெளிவு செய்து போகின்றார். இவரது போக்கும் நோக்கும் மானச உலகத்தை மாண்புறுத்தி வருகின்றன.

அமைச்சருடைய உடன்பாடு தெரிந்தபின் அரசர்பிரான் வசிட்ட முனிவரை இனிது நோக்கினான். அந்த அருந்தவர் அவையில் இருந்தவர்களுடைய குறிப்பையும், மன்னனது விருப்பையும் முன்னுறத் தெரிந்து இன்னுரை பகர்ந்தார். ஞானகுண சீலரான அவருடைய இனிய வாய்மொழிகள் உணர்வொளி சுரந்து உயிருருக்கம் நிறைந்து உரிமை கனிந்து உயர்நிலையில் ஓங்கியுள்ளன. அடியில் வருவன காண்க.

தசரதனை நோக்கி வசிட்டர் பேசியது.

"நிருப நின்குல மன்னவர் நேமிபண் டுருட்டிப்
பெருமை எய்தினர் யாவரே இராமனைப் பெற்றார்?
கரும மேயிது கற்றுணர்ந் தோய்க்கினிக் கடவ
தரும மும்மிது தக்கதே நினைத்தனை தகவோய். (1)

புண்ணியத் தொடர் வேள்விகள் யாவையும் புரிந்த
அண்ணலே! யினி அருந்தவம் இயற்றவும் அடுக்கும்
வண்ண மேகலை நிலமகள் மற்றுனைப் பிரிந்து
கண்ணி லுந்திலள் எனச்செயும் நீதந்த கழலோன். (2)

புறத்து நாமொரு பொருளினிப் புகல்கின்ற தெவனோ
அறத்தின் மூர்த்திவந் தவதரித் தானென்ப தல்லால்
பிறத்தி யாவையும் காத்தவை பின்னுறத் துடைக்கும்
திறத்து மூவரும் திருத்திய திருத்துமத் திறலோன். (3)

பொன்னுயிர்த்தபூ மடந்தையும் புவிஎனும் திருவும்
இன்னுயிர்த் துணை இவனென நினைக்கின்ற இராமன்
தன்னுயிர்க் கென்கை புல்லிது தற்பயந் தெடுத்த
உன்னுயிர்க்கென நல்லன்மன் னுயிர்க்கெலாம் உரவோய்!

வாரம் என்னினிப் பகர்வது வைகலும் அனையான்
பேரி றல்வரும் இடையுறு பெயர்கின்ற பயத்தால்
வீர நின்குல மைந்தனை வேதியர் முதலோர்
யாரும் யாம்செய்த நல்லறப் பயனென இருப்பார். (5)

மண்ணி னும் நல்லள் மலர்மகள் கலைமகள் கலையூர்
பெண்ணி னும் நல்லள் பெரும்புகழ்ச் சனகியோ நல்லள்
கண்ணி னும் நல்லன் கற்றவர் கற்றிலா தவரும்
உண்ணும் நீரினும் உயிரினும் அவனையே உவப்பார். (6)

மனிதர் வானவர் மற்றுளார் அறங்கள்காத் தளிப்பார்
இனியிம் மன்னுயிர்க்கு இராமனிற் சிறந்தவர் இல்லை
அனையன் ஆதலின் அரசிற் குறுபொருள் அறியின்
புனித மாதவம் அல்லதுஒன் றில்லெனப் புகன்றான். (7)

(மந்திரப்படலம், 35-41)

இந்த இனிய கவிகளின் பொருள்களை நுணுகி அறியவேண்டும். முனிவரது மொழிநலமும் மதிநலமும் புனித நிலைகளில் பொங்கி இங்கே இனிமையுற வந்திருக்கின்றன.

இராமனுக்கு முடிசூட்டுவதைக் குறித்து இராச சபையில் தசரதன் ஆலோசனை செய்தான். அதற்கு அமைச்சர் அமைதியாக உடன்பாடு காட்டினர். அதன்பின் வசிட்டரது கருத்தை உணர்ந்துகொள்ள விழைந்து அவரது முகத்தை அரசன் உவந்து

பார்த்தான். அப்பார்வையின் ஆர்வநிலையை யறிந்து முனிவர் நேரே பேசலானார். அவ்வாசகங்களை இப் பாசுரங்கள் எண்க.

"அரசர் பெரும! உமது குலமரபில் ஆழியுருட்டி அகில மும் புரந்து பெருமாண்புடன் முன்னர் நிலவி நின்ற மன்னருள் உம்மைப்போல் உயர்ந்த மகிமையை எவரும் அடைந்திலர்; இனி யாரும் அடையவும் முடியாது. திவ்விய மங்கள குண கண சொரு பியான இராமனை மகனாகப் பெற்றிருக்கின்றீர்! பெறலரும் பேறான இம்மகப்பேறென்றால் மிகப்பேரெய்தி விண்ணும் மண் ணும் தொழ நீர் விளங்கி நிற்கின்றீர்; பரம புண்ணியசாலியான நீர் இதுபொழுது எண்ணியுள்ள காரியம் பெரிதும் போற்றத் தக்கது. உமது கல்வி யறிவுக்குத் தக்கபடியே இந்த நல்வினையை நாடிக்கொண்டீர். ஆட்சியை அருமை மகனிடம் உரிமை செய்து விட்டு உயிர்க்குறுதி நாடி ஒருமையெய்தி ஒதுங்கி யிருப்பது உமக்கு உயர்ந்த தருமமே; அந்நிலை இருமையும் இன்பமாம்.

புண்ணிய கருமங்கள் ஆகிய யாகங்கள் யாவும் யாண்டும் எண்ணியபடியே முடித்து இசைமிக வளர்த்து எவ்வுயிரும் இன் புற உலகை இதுவரை இனிது பாதுகாத்து வந்தீர்! அவ்வாறே இனி இராமனும் ஆதரித்து வருவான்; இளம்பருவமுடையனே; அரசை நலம் பெறப் பேணமுடியுமா? என்று நீர் யாதும் கவல வேண்டா; அவனை ஒரு மனிதனாக எண்ணலாகாது; தரும மூர்த்தியே இவ்வாறு இனிய உருவம் தாங்கி இங்கே வந்திருக் கின்றது. திரிமூர்த்திகளும் சேர்ந்து செய்யத் தக்க அரிய காரி யத்தை இந்தவொருமூர்த்தியே தனிநின்று எளிது செய்யவல்லனாம்.

திருமகளும் நிலமகளும் தமக்கு உரிமையான இனிய கண வனாக இராமனை எண்ணி இன்புறுகின்றனர். நீரோ உமது தனி மகனாக நினைந்து உளமிக மகிழ்கின்றீர்! அகில வுலகங்களோ அவனைத் தம்முயிர் எனக் கருதி விம்மித முறுகின்றன. தன்னு யிரைப் போல் பிறவுயிரைப் பாதுகாக்கின்றவன் எவனோ அவனே நீதிமான்களுள் தலை சிறந்தவனாகின்றான். இராமனோ, தன் னு[illegible]ட்டிலும் பிறவுயிர்களை விழைந்து பேணுபவனாய்ப் பெ[illegible]ங்கின்றான். இங்ஙனமாயின் அவனது அருள் நிலையை எங்[illegible]ளந்து கூறுவது? தனக்கெனவாழாப் பிறர்க்குரியா ளனு[illegible]ந்துவந்துள்ள இப்பேராளன் பாராள வருவனாயின்

அவ்வரவால் உலகுயிர்களுக்கு உளவாம் ஊதியங்களும் உறுதி நலங்களும் இவ்வளவாம் என யாரேனும் அளவு கூற முடியுமா? உம்முயிர்க்கினியனாய் எவ்வாறு அவன் உதவி நிற்கின்றானோ அவ்வாறே உலகுயிர்க்கெல்லாம் அலகிலா நலங்கள் புரிந்து நிலையான உதவியாளனாய் நிலவி நின்று என்றும் தலைமைபெற்றுள்ளான்.

உமக்கு முகமனாக இங்கே ஒன்றும் நான் அவனை வியந்து பேசவில்லை. உள்ளதை உள்ளபடியே சொல்லுகின்றேன். உமது பிள்ளை என்று எண்ணியுள்ள அவ்வள்ளலை உள்ளுந்தோறும் உள்ளமும் உணர்வும் உயிரும் அமிர்த மயமாய் ஆனந்தம் பெருகி வருகின்றன. அவனது பேரை உச்சரித்தவுடனே எல்லா இடையூறுகளும் விளக்கொளியைக் கண்ட இருள்போல் விலகி ஒழிகின்றன. என்ன ஆச்சரியம் இது! அவனுக்கு இட்ட பெயரை எட்ட நின்று வாயால் சொன்னவர்க்கே இன்னவாறு துன்பங்கள் நீங்குமாயின் கிட்ட நெருங்கி அவனை நேரே கண்டவர்க்கும் தொட்டவர்க்கும் உண்டாகின்ற இன்ப நலங்களை எவரளந்து சொல்லவல்லார்! இங்ஙனம் எல்லையில்லாத பெருமகிமை யுடையனாய்க் காணினும் கேட்பினும் கருதினும் களிதரும் தெளிவேபாமுதமாய்த் தித்தித்தொளிர்கின்ற அவ்வுத்தமக் குரிசிலைத் தத்துவஞானிகள் முதலிய சத்துக்கள் எல்லாரும் தத்தம்புண்ணியப் பயனே கண்ணிய வுருவுடன் இவ்வண்ணம் வந்துள்ளதென எண்ணி விழைந்து இன்புற்று வருகின்றனர்.

அவ்வண்ணலுக்கு வாழ்க்கைத் துணையாய் வாய்த்துள்ள சீதையோ மாதரின் மங்கலம். நிலமகள் மலர்மகள் கலைமகள் மலைமகள் என்னும் தெய்வ சத்திகளினும் திவ்விய நலமுடையளாய் அவள் சிறந்து நிற்கின்றாள். பொறுமை அழகு அறிவு கற்பு முதலிய அற்புத நலங்கள் அவளிடம் அடைக்கலம் புகுந்துள்ளன. அத்தகைய பெண்ணரசியின் கண்ணினும் நல்லனாய் இங்கு எண்ணிய இளவரசு இசைமிகுந்திருக்கின்றான். அவனது நிலைமையை நிலை தெரிவது அமரர்க்கும் அரிது. நீர் குமரன் என்று தமருடன் குலாவி வருகின்றீர்! பல பல பேசி என்? உலகில் உள்ள உயிர்களெல்லாம் உண்ணும் உணவினும் பருகும் நீரினும் உரிய உயிரினும் மிகவும் இனியனாக அவனை உவந்துபேணி உளமுருகி வருகின்றன. இதனால் அவனது புனித நிலைமை இனிது புலனும்.

மனிதர் தேவர் இயக்கர் சித்தர் கந்தருவர் முதலிய எந்த மரபிலும் இந்த இராமனுக்குச் சமானமானவர் எவரும் இலர்; புண்ணிய உருவம்; புகழின் நிலையம்; அழகின் அமைதி; அறிவின் நிறைவு; ஆண்மையின் மேன்மை; நேரெதிர் காணு வீர மூர்த்தி; ஆருயிர்க்கென்றும் ஆதரவாளன்; இந்நாடு மட்டுமன்று பாருலகெல்லாம் பாதுகாக்க வல்லவன்; இந்நல்லானிடம் எல்லாப் பொறுப்பையும் நல்கிவிட்டு யாதொரு கவலையுமின்றி மாதவ நிலையில் நீர் மருவியிருக்கலாம்என இங்ஙனம் முனிவர் கூறிமுடித்தார்.

இவ்வுரைகளைக் கேட்டுவரும்பொழுது அரசன் கரைகாணாத இன்ப வெள்ளத்தில் களித்திருந்தான். பெரியவருடைய வார்த்தைகள் இராமனது மாட்சியை விளக்கி ஆர்த்திமிகுந்து வந்திருக்கின்றன. அரசின் உள்ள நிலை தெளிந்து உண்மைகளை உரிமையுடன் வெளிப்படுத்தியிருக்கிறார்.

"வண்ண மேகலை நிலமகள் மற்றுஉனைப் பிரிந்து
கண்ணி ழந்திலள் எனச்செயும் நீதந்த கழலோன்."

என்ற இதில் தசரதனை உலகிற்குக் கண் என்று காட்டியிருக்கிறார். கண்ணும் கருத்துமாய் இரவும் பகலும் இனிது ஆராய்ந்து படிபுரந்து குடிசனங்களை அவன் பாதுகாத்து வந்திருக்கும் பான்மையை இங்ஙனம் மேன்மையாகக் குறித்திருக்கிறார்.

நீ பேணி வந்தபடியே உன் மகனும் கண்ணூன்றி நோக்கிக் காணியாட்சியை நன்கு காத்துவருவான் என்பார், உனைப்பிரிந்து நிலமகள் கண் இழந்திலள் எனச் செயும் நீதந்த கழலோன் என்றார். நீ யாதும் ஐயமுறாமல் வையத்தைப்பையனிடம் வைத்துப் போகலாம் என்பது கருத்து. நீ கண் எனக் காத்த உலகை இவன் உயிர் எனப் போற்றுவன் என்பது குறிப்பு.

இந்த வாக்கியத்தில் வேறொரு கெடுபொருளும் இடைமருவியுள்ளது. என்னை மருவல்? எனின், பின்னே காண்க.

மன்னர் மன்னவா! நிலமகள் உன்னைப் பிரிந்து கண் இழந்து உயிரும் இலள் என இவன் செய்யும் என்பதாம். தசரதன் இறந்துபட, இராமன் முடி துறந்து வனம்போக, நாடு ஒளி

யிழந்து உயிரில்லாத உடல்போல் நிலைகுலைந்து கிடந்தமையை நினைந்துகொள்க. பின்னே நிகழவுள்ள உண்மை இன்ன வண்ணம் முனிவர் மொழியுள் முன்னுற முடங்கிக்கிடக்கின்றதென்க.

கழலோன் என்றது நாடு துறந்து காடும் மலையும் கடலும் கடந்து தன் காரியம் காணப்போகும் வீரியம் தெரியவந்தது.

மேகலை என்பது பெண்கள் இடையில் அணியும் ஒரு வகை மணி யணி. இது மேகலாபரணம் எனவரும். பூமியைப் பெண்ணாக உருவகஞ் செய்தமையால் அதற்கியைந்த அடைமொழி வந்தது. முன் பொருளில் நன்பொருள் குறித்து நின்ற இது, பின் பொருளில் வண்ணமே கலையும் நிலமகள் என நிலை திரிய நேர்ந்தது. உரிய தலைவன் இல்லாமையால் வண்ணம் கலைந்து வடிவு குலைந்து நிறம் பிரிந்து நிலைதிரிந்து ஒளியிழந்து நிலமகள் உழலலாயினள் என்பதாம். முனிவர் எண்ணமிலே அவர் மொழிகளில் இவ்வண்ணம் எண்ணவந்தது விதிவினையின் எண்ணத்தால் என்க. இளவரசின் ஏற்றம் புகழ்ந்து வருங்கால் எதிர் மாற்றங்கள் இவ்வாறு இடையே தோற்றலாயின.

இராமன் பேரைச் சொல்லின் அல்லல் எல்லாம் அகன்று போம் என்பார், "அனையான் பேரினால் இடையுறு பெயர்கின்ற" என்றார். துன்பத்தை உணர்த்திவரும் இடையூறு என்னும் சொல் இங்கே இடைகுறுகி விகாரமாய் வந்தது. பெயரின் அயல் எழுதும் பொழுதே இவ்வாறு ஊறு உருக்குலைந்தது என்றால், அதனை ஓதுங்கால் அடியோடு அது ஒழிந்துபோம் உண்மையை வேறு உணர்த்தவும் வேண்டுமோ? என்பது விநோதமாக ஈண்டு உய்த்துணரவுள்ளது.

இராமன் புனிதமான புண்ணியமூர்த்தி ஆதலால் அவன் நாமம் எண்ணினார்க்கு இடையூறு நீக்கி இன்பம் தர வல்லதாயது.

தன் வாயினால் சொல்லாமல் பிறர் வாயினால் அப் பேரைச் சொல்லக்கேட்டாலும் ஒருவன் கேடு நீங்கிப் பீடுபெற்றுப்பெரும் பயன் அடைவன் என்பார். இந்த வுண்மையைத் தெளிதற்குச் சம்பாதி சரிதமே சாலும் கரியாம். சூரிய வெப்பத்தால் சிறகிழந்துபோய்த் துயருழந்து கிடந்த சம்பாதி இராம நாமத்தை வானரர் சொல்லவும் உடனே சிறகு பெற்றுச் சிறந்து நின்றான். அந்நிலையை அடியில்வரும் பாடலால் அறியலாகும்.

### சம்பாதி வானரரை வேண்டியது.

" எல்லீரும்அவ் இராம நாமமே
சொல்லீர் என்சிறை தோன்றும் சோர்விலா
நல்லீரப் பயன் நண்ணும் நல்லசொல்
வல்லீர் வாய்மை வளர்க்கும் மாண்பினீர் !

### வானரர் இராமநாமம் உரைத்தது.

என்றான் அன்னது காண்டும் யாமென்று
நின்றார் நின்றுழி நீல மேனியான்
நன்று நாமம் நவின்று நல்கினார்
வன்றோ ளான்சிறை வானந் தாயவே.

### பேரின் பெருமை நேர் கண்டு மகிழ்ந்தது.

தெருண்டான் மெய்ப்பெயர் செப்ப லோடும்வந்
துருண்டான் உற்ற பலத்தை உன்னினார்
மருண்டார் வானவர் கோனை வாழ்த்தினார்
வெருண்டார் சிந்தை வியந்து விம்முவார்."

(கிட்கிந்தாகாண்டம், சம்பாதிப்படலம்)

உற்றதுயர் நீங்கி இராமநாமத்தால் சம்பாதி உய்திபெற்றுள்ளமை இதனால் உணரலாகும். வந்த இடையூறு ஒழிந்த படியிது. வருவனவும் இப் பெயரால் பெயர்ந்து தொலைந்துபோயுள்ளன.

இந்த இராமநாமத்தின் தனிமகிமையை அனுமான் நன்கு அனுபவித்திருக்கின்றான். அல்லல் நேர்ந்த போதெல்லாம் இதனைச் சொல்லி வென்று சுகம் கண்டுள்ளான். ஒன்று அடியில் வருகின்றது காண்க.

" ஊறுகடி தூறுவன ஊறிலறு முன்னைத்
தேறிலி அரக்கர்புரி தீமையவை தீர
வேறுவகை யாவுடைய இராமன்என எல்லாம்
மாறுமதின் மாறுபிறி தில்லென வலித்தான்."

(கடல்தாவு படலம், 89)

அனுமான் ஆகாயமார்க்கமாய்க் கடல் கடந்து இலங்கையை நோக்கிச் செல்லுங்கால் இடையே நேர்ந்த இடையூறுகளை நினைந்து மறுகி இங்ஙனம் துணிந்து சொல்லினான் என்க.

ஊறு இல் அறம் உன்னாத் தேறு இலி என்றது அழிவற்ற அறத்தை நினையாத தெளிவற்றவர் என்றவாறு. இதனால் அரக்கரது பழிபாவங்களின் நிலைமை புலனாம். அக்கொடியவர் புரியும் தீமைகளும் கடிதின் வருகின்ற இடையூறுகளும் இராம நாம உச்சாரணத்தினால் ஒழிந்துபோம் என அனுமான் உறுதியாகத் துணிந்து கொண்டான் என்பதாம். மேலே சிறிவந்த அல்லல்கள் யாவும் அப்பேரைச் சொல்லியவுடனே ஒல்லையில் ஒழியும் என்பார், இராமன் என எல்லாம் மாறும் என்றார். தான் இருந்த திசையையும் நோக்காமல் செய்தவரிடமே அவை போய்ச் சேரும் என்பது மாறும் என்ற குறிப்பால் அறியலாகும். வலித்தான் = உள்ளத்தில் நிச்சயமாக நினைந்து கொண்டான். சம்பாதியிடம் நேரே கண்டதோடு தனது அனுபவத்தாலும் நன்கு தெரிந்திருந்தான் ஆதலால் இங்ஙனம் நிலையாக நிச்சயம் செய்தான் என்க. இராமநாம பாராயணத்தில் இவன் மிகவும் தலைசிறந்தவன். இந்த உண்மையைக் காவியத்தில் அன்பு ததும்பக் கம்பர் காட்டியிருக்கிறார். பின்பு காணலாம்.

பேரின் மகிமை இவ்வாறாயின் அப்பேராளன் பெருமையை எவ்வாறு அளவிட்டு எப்படி உரைப்பது?

" இறுவாய்ப்பின் இராமஎன் றோர்உம்பர்
உறுவர் என்பது நிச்சயம் ஆதலான்
மறுவில் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவர் என்பது பேசவும் வேண்டுமோ ?

எனப் பாயிரத்தில் கூறியுள்ளதும் கண்டு சிந்திக்கத்தக்கது.

ஒருவன் சாகும் சமயத்தில் ராம என்று ஒரு தரம் சொன்னாலும் அவன் பாவங்களெல்லாம் உடனே நீங்கிப் பரமபதத்தை இனிது அடைவான் என இது உணர்த்தி நிற்றல் காண்க. இறுவாய்ப் = இறக்கும்பொழுது. இறுதல் = அழிதல். மரண காலத்தைக் குறித்தது. கரணம் கலங்கிய அந்நேரத்தில் கருத்தின்றி உரைத்தாலும் இந்நாமம் அரணமாய் நின்று ஆருயிரை ஆதரிக்கும் அருள் நிலை தெரிய என்க.

உயிர்களுக்கு இங்ஙனம் செயிர் நீக்கி உயர் பதம் உதவி வரலால் தாரக மந்திரம் என இப்பேர் பாரகமெங்கும் பரவலாயது.

தமது கதா நாயகனுடைய பேர்மேலுள்ள தம் ஆர்வநிலையை வசிட்டர் அனுமான் முதலிய உயர்ந்த பாத்திரங்களின் வாயிலாக நம் கவிஞர்பிரான் இங்ஙனம் சுவையுடன் வெளிப்படுத்தியிருக்கிறார் உரைத்துள்ள திறம் உணர்ந்து மகிழத்தக்கது.

உலகிலுள்ள எல்லாரும் இராமனிடம் அன்புமீதூர்ந்து அவனைத் தம் கண்ணினும் உயிரினும் இனியனாகக்கருதிப்போற்றி வருகின்றார் என்பார், "உண்ணும் நீரினும் உயிரினும் அவனையே உவப்பார்" என்றார். உயிரும் நீரும் உள்ளும் புறமும் உணர வந்தன.

கற்றவர் கற்றிலாதவரும் என்றது நல்லார் பொல்லார் எல்லாரும் ஒருசேர உருகி நின்று அவனை உவந்து போற்றி மகிழ்ந்து வருகின்றார் என்றவாறு. ஆருயிர் யாவும் அநவரதமும் அவனிடம் இங்ஙனம் ரமித்திருத்தலால் ஆன்மராமன் என்னும் மேன்மைப்பெயருடன் அவன் விளங்கி நிற்கின்றான்.

உண்ணும் நீரை உவமை காட்டியது, உயிர்க்குத் தாரகமாயிருக்கும் அதன் நீர்மையை நோக்கி.

"உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்றென்றே கண்கள்நீர்கள் மல்கி"
(திருவாய்மொழி, 6-7)

என்ற நம்மாழ்வார் வாய்மொழியை மனந்தெளிய இந்தப் பாசுரம் இங்கே வந்திருக்கின்றது. வாசித்தறிக.

தேக சௌந்தரியத்திலும் குணநலங்களிலும் உபகார நிலையிலும் இராமன் உயர்ந்து நிற்றலால் உயிரினங்கள் அவன்பால் உயர் காதல் மண்டி இவ்வாறு உரிமை கொண்டுள்ளன என்க.

அருமை மகன் என்னும் அபிமானத்தால் நீர் ஆர்வம் கொண்டாடுகின்றீர்; ஆருயிர்களோ அவனது சீர்மையிலும் நீர்மையிலும் மயங்கி நெஞ்சுருகி நிற்கின்றன என்பதாம்.

இங்ஙனம் தன் பிள்ளையைக் குறித்து அக்குரு மகான் பேசி வரும்பொழுது இவ்வள்ளல் உள்ளம் களித்து உவகை மிஞ்சிப் பரவசமாயினன். ஆனபடியை அடியில் பார்க்க.

### தசரதன் மகிழ்ச்சி நிலை.

"மற்றவன் சொன்ன வாசகம் கேட்டலும் மகனைப்
பெற்ற வன்றினும் பிஞ்ஞகன் பிடித்தவப் பெருவில்
இற்ற வன்றினும் எறிமழு வாளவன் இழுக்கம்
உற்ற வன்றினும் பெரியதோர் உவகையன் ஆனான் (1)

### வசிட்டரை வணங்கியது.

அனைய தாகிய உவகையன் கண்கள்நீர் அரும்ப
முனிவன் மாமலர்ப் பாதங்கள் முறைமையின் இறைஞ்சி
இனிய சொல்லினை எம்பெரு மானருள் வழியின்
தனியன் நானிலம் தாங்கிய தவற்கிது தகாதோ? (2)

### முகமன் மொழிந்தது.

எந்தை நீயுவந் திதம்சொல எங்குலத் தரசர்
அந்த மில்லரும் பெரும்புகழ் அவனியில் நிறுவி
முந்து வேள்வியும் முடித்துத்தம் இருவினை முடித்தார்
வந்த தவ்வருள் எனக்குமென் றுரைசெய்துமகிழ்ந்தான்.'
(மந்திரப்படலம், 42-44)

தசரதனுடைய உவகையும் உரைகளும் உள்ளுருக்கம் தோய்ந்து இவற்றுள் உணர்ச்சி மிகுந்துள்ளன. இராமனது மேன்மையை முனிவர் இனிமையாகப் பேசிவந்தார். அப்பேச்சு மன்னனுக்குப் பெருமகிழ்ச்சியை விளைத்தது: அவ்விளைவினை விழைவுற விளக்கியிருக்கும் அழகு அதிசய நிலையில் அமைந்துள்ளது.

மகன் புகழ்ச்சியைக் குருவின் வாயால் கேட்டபொழுது மன்னன் மனத்தில் பொங்கி எழுந்த மகிழ்ச்சி நிலை எவ்வளவு? எனின், இவ்வளவு என்று அதனை எடை தூக்கிக் காட்டமுடியாது; அளவு கருவி ஒன்று தருகின்றேன் அதனால் அவ் அளவினை அளந்து கண்டு கொள்ளுங்கள் எனக் கவி இங்கே கைதந்திருக்கின்றார்.

தசரதன் வாழ்நாளில் நேர்ந்த சந்தோட நிலைகள் பலவற்றுள்ளும் தனக்கு மகன் பிறந்ததை அறிந்தபோது உண்டானதே மிகவும் சிறந்ததாம்; அவன் பருவம் அடைந்து மிதிலை புகுந்து கலியாணத்தின் பொருட்டு வீரசுல்கமாக வைத்திருந்த வில்லை வளைத்ததைத் தெரிந்த சமயம் எழுந்த உவகை அதனினும்

உயர்ந்ததாம்; கலியாண முடிந்து அவன் மீண்டுவருங்கால் எதிரே மூண்ட பரசுராமனை வென்று சயங்கொண்டதைக் கண்ட காலத்தில் உண்டான மகிழ்ச்சி அவ்விரண்டினும் மிகுந்ததாம்; புனிதமான அவனது பெருந்தகைமைகளை அருந்தவர் வாயிலாக இன்று கேட்டபொழுது கிளர்ந்தெழுந்த இன்பம் முன்னம் குறித்த மூன்றினும் பெரியதாய் முதன்மை எய்தி நின்றதென்பதாம். தொடர்ந்து வளர்ந்து உவகை நிலை உயர்ந்துள்ள படியை ஊன்றிப் பார்க்க.

பிறப்பு திருமணம் வெற்றி என்னும் அந்நிலைகளில் கண்டதினும் தன் மகனைச் சான்றோன் என ஆன்றோர் வாயால் கேட்ட சமயம் உண்டான உவகையே அரசனுக்கு மிகவும் பெரிதாய்ப் பேரின்பம் பயந்துள்ளதென்க.

* "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்." (குறள், 69)

என்ற அருமைத் திருக்குறள் இங்கே உணரத்தக்கது.

பெற்ற அன்றினும், இற்ற அன்றினும், உற்ற அன்றினும் இன்று பெரியதோர் உவகையன் ஆனது அருமை மகனுடைய பெருமை முழுவதும் தெரிந்ததோடு தான் கருதியபடி முடிசூடுதலுக்கும் அடிகோலி அமைந்துள்ளமையான் என்க.

தன் மகனது மேன்மையைக்கேட்ட தந்தையின் மனமகிழ்ச்சிக்கு அம்மைந்தன் சம்பந்தமான நிகழ்ச்சிகளையே நிரலாக நினைவுறுத்தி உவமை குறித்து உவகை நிலையை விளக்கியிருக்கும் திறம் உணருந்தோறும் வியப்பும் விம்மிதமும் விளைத்து வருகின்றது.

புதல்வன் கீர்த்தியைக் கேட்ட தசரதன் ஆனந்த பரவசனாய்க் கண்கள் நீர் மல்கி முனிவரை வணங்கித் துதி மொழி

* தன் பிள்ளையை நல்லவன் என்று பிறர் சொல்லக் கேட்டபொழுது தாய்க்கு உண்டாகும் உள்ளக் களிப்பை இது உணர்த்தியுள்ளது. தன் வயிற்றிலிருந்து ஆண் குழந்தை பிறந்ததைக் கண்டவுடன் பெற்ற மனம் பெருமகிழ்ச்சியடையுமாயினும் அப்பிள்ளை பெரியவனாகி மேலோரால் புகழப்பெறுங்கால் அத்தாய் பேரானந்தமுடையளாய்ப் பெருகி நிற்பள் ஆதலால், "ஈன்ற பொழுதின் பெரிது உவக்கும்" என்றார். மகவின் உயர்வு தாய்க்கு மிகவும் உவகை விளைக்கும் என்பதாம்.

கூறினன். அவர் முகமலர்ந்திருந்தார். அதன் பின் மந்திரிகள் ட்டத்தில் தலைவனுயுள்ள சுமந்திரன் எழுந்தான். தொழுது முன்னின்று உழுவலன்புடன் அம்மதிமான் பேசிய அழகினைக் கவி எழுதிக் காட்டுகிறார். காட்சியைக் கண்ணூன்றிக் காணுங்கள்.

சுமந்திரன் எழுந்து பேசுதல்.

"பழுதில் மாதவன் பின்னொன்றும் பணித்திலன் இருந்தான்;
முழுதும் என்றுறு மந்திரக் கிழவர்தம் முகத்தால்
எழுதி நீட்டிய இங்கிதம் இறைமகற் கேறத்
தொழுத கையினன் சுமந்திரன் முன்னின்று சொல்லும். (1)

விநய வாசகம்.

உறத்தகும் அரசு இராமற்கென் றுவக்கின்ற மனத்தைத்
துறத்தி நீ எனும் சொற்சுடும்; நின்குலத் தொல்லோர்
மறத்தல் செய்கிலாத் தருமத்தை மறப்பதும் வழக்கன்று
அறத்தி னூஉங்கினிக் கொடியதென லாவதொன் றியாதே? (2)

உறுதி கூறியது.

புரைசை யாக்கரி நிருபர்க்கும் புரத்துறை வோர்க்கும்
உரைசெய் மந்திரக் கிழவர்க்கும் முனிவர்க்கும் உள்ளம்
முரசம் ஆர்ப்பநின் முதல்மணிப் புதல்வனை முறையால்
அரச னாக்கிப்பின் அப்புறத் தடுத்தது புரிவாய்." (3)
மந்திரப்படலம், 45-47)

அமைச்சர் திரளிலிருந்து சுமந்திரன் எழுந்ததும், அரசின் எதிரே மரியாதையுடன் நின்றதும், உணர்வொளிவீச உரைகளாடியதும் இனிய நாடகக் காட்சியாய் இதில் பீடுபெற்றுள்ளன. பாடல்களை நுணுகிப் பார்க்க.

முதல் பாட்டில் அமைந்துள்ள உணர்ச்சி நலங்களைத் தெளிவாக வெளியே எழுதிக்காட்ட இயலாது. அறிவுக் கண்கொண்டு கருவி நோக்கின் அரசவை நிலையும், அருந்தவர் இருப்பும், அமைச்சர்கள் அமைதியும், ஆலோசனைகளும், உள்ளம் துணிந்ததை ஒவ்வொருவரும் தனித் தனியே ஒலித்து உரையாமல் எல்லாரும் ஒரு முகமாய் முதல் மந்திரியை நோக்கி முகமலர்ந்ததும், அனைவருடைய குறிப்பையும் அத்தலைமை அமைச்சன் நலமுறத் தெரிந்ததும், கருதிய உறுதியை அரசின் உள்ளம் கொள்ள

உரைக்கத் துணிந்ததும், உவந்து எழுந்ததும், எழுந்தவன் தொழுத கையனாய்த் துவண்டு நின்றதும், கெழுதகைமையோடு மொழிகள் பகர்ந்ததும் முறையே இனிது புலனும்.

தங்கள் அபிப்பிராயங்களைக் கண் சாடைகளாலும் முகக் குறிப்பினாலும் தம் இனத் தலைவனுக்கு அமைச்சர்கள் உணர்த்தியுள்ள நிலையை, மந்திரக் கிழவர் தம்முகத்தால் எழுதி நீட்டிய இங்கிதம் என இன்சுவை கனியக் கவி இங்கே விளக்கியிருக்கிறார். சக்கரவர்த்தியின் முன்னிலையில் நிகழ்ந்த அந்த நளினமான நாகரிகக் காட்சியை இந்த மொழிகளில் கண்டு நாம் உளம் மிக மகிழ்கின்றோம். "எழுதி நீட்டிய இங்கிதம்" என்னும் இவ் இனிய வாக்கியம் பலமுறையும் படிக்கச்செய்து மீண்டும் மீண்டும் தன்னை நோக்கத் தூண்டுகின்றது. இங்கிதம்=மனக்குறிப்பு.

அறிஞர் முகத்தால் ஆண்டு எழுதி நீட்டிய இங்கிதத்தை நம் கவிஞர் மொழியால் ஈண்டு எழுதி நீட்டி வழி வழியே யாரும் இங்கு இதமுறக் கழிபேருவகை யூட்டியிருக்கின்றார்.

2. இராமன் அரசுரிமைக்கு வருவதை நினைந்து மகிழ்கின்ற எங்கள் நெஞ்சை நீங்கள் இராமல் நீங்குவது என்னும் அந்நினைவு வந்து சுட்டு எரிக்கின்றது. என் செய்வோம்? பருவம் முதிர்ந்தவுடன் இளவரசிடம் ஆட்சியைக் கொடுத்துவிட்டு உலகபாசத்தை நீங்கி ஒதுங்கி யிருப்பது தலைமுறை தலைமுறையாக நடந்துவருகின்ற உங்கள் குலமரபின் வழக்கம்; அம்முறைமையை இன்று மறுத்துரைப்பதும் மரியாதையன்று; தேவரீருடைய இறைமையைப் பிரிந்து நிற்பதோ எமக்குப் பொறுக்கமுடியாத துன்பமாய் மறுக்கமீக்கூர்கின்றது. தரும ஒழுங்கு தவறாமல் நடப்பது என்றால் அம்மா! அதில் எவ்வளவு கொடுமைகள் இடையிடைந் தெழுகின்றன? நெறிமுறை வழுவாத நீதிமான் எதிரேமாறுபேசுவது மடமையாகும் ஆதலால் என் கடமையை யுணர்ந்து கருத்தடங்கி நிற்கின்றேன்; அறத்தை ஆற்றி நிற்பது அறவும் கொடிது என இங்ஙனம் அமைச்சன் உரைத்து நின்றான்.

இம்மதிமானுடைய உரைநுட்பங்கள் உணர்ச்சி ததும்பி உருக்கம் நிறைந்து உரிமை சுரந்திருக்கின்றன.

இளையவர் வரவில் பிரியம் மிகுந்திருப்பினும் பெரியவர் துறவை உள்ளுந்தோறும் கொள்ளித்தீ வைத்ததுபோல் உள்ளம் துடித்து நின்றது ஆதலால், "உவக்கின்ற மனத்தைத் துறத்தி எனும் சொல் சுடும்" எனத் தன் துயர நிலையை உணர்த்தி நின்றான்.

இவ்வரவு செலவுகளில், "மற்ற மந்திரிகள் இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ என இருந்தார்." சுமந்திரனே எரியிடைப்பட்டதுபோல் மன்னன் பிரிவை நினைந்து பெரிதும் பரிதபித்தான் என்க. ஆகவே அரசிடம் இவனுக்கு உள்ள உழுவலன்பினிலை உணரலாகும்.

துறத்தலோ அறத்தின் வழிப்பட்டது; அதனை மறுத்து உரைக்க முடியாமல் மறுகி அஞ்சுகின்றான்; தலைவன் பிரிவையோ பொறுத்திருக்க முடியவில்லை; இந்தப் பரிதாபமான நிலையில் மனவெறுப்புற்று, "அறத்தின் ஊங்குக் கொடிது யாதே?" என்று தருமத்தை நொந்துகொண்டான்.

அறம் துறவை விதித்துத் தனக்கு ஓர் பிரிவை விளைத்துள்ளமையான் அந்தச் சங்கடம் பொறுக்கமாட்டாமல் அதனை வெறுத்துக்கூறித் தன் ஆற்றாமையை இங்ஙனம் ஆற்றி நின்றான். மனித சுபாவம் இதில் இனிது விளங்கியுள்ளமை காண்க.

இவ்வாறு மறுகி நின்றவன் ஒருவாறு உறுதிகொண்டு அரசை நோக்கி, "முதலில் இளவரசுக்கு முடிசூட்டுவதைக் கவனியுங்கள், அதன்பின்பு அடுத்ததைச் செய்யலாம்" என்று நயமாக முடித்தருளினான்.

முன்னதாக நல்ல காரியம் நடக்கட்டும்; பின்னுள்ளதைப் பிறகு பார்ப்போம் என்று விரகுடன் கூறியபடி யிது.

குறுநில மன்னர், பெருநிலவேந்தர், மந்திரக்கிழவர், அந்தணர், அருந்தவ முனிவர் குடிசனங்கள் முதலிய எல்லோரும் இராமனுடைய மகுடதாரண விழாவை விழைந்து கண்டு உளங்களிகூர்வர்; காரியத்தை விரைந்து செய்யவேண்டும் என விநயமாக வேண்டி நின்றான்.

முதல் மந்திரி இவ்வாறு கூறவே சக்கரவர்த்தி மிக்க மகிழ்ச்சியடைந்து இளவரசை அரசவைக்கு அழைத்துவரும்படி பணித்

தான். அவன் பணித்ததும், இராமனை அமைச்சன் அழைத்து வரச் சென்றதும், அச்சமயம் அந்தப்புரத்தில் அந்த அழகன் அமர்ந்திருந்ததும், சென்றவன் கண்டதும், உத்தரவை உரைத்ததும், உடனே அவ்வுத்தமன் உவந்தெழுந்ததும், விரைந்து வந்ததும், வாவில் நிகழ்ந்ததும் சிறந்த திவ்வியக் காட்சிகளாய்த் தேசு அமைந்துள்ளன. அடியில் வருவன காண்க.

### தசரதன் இராமனை அழைத்து வரச்சொன்னது.

"என்ற வாசகம் சுமந்திரன் இயம்பலும் இறைவன்
நன்று சொல்லினை நம்பியை நளிமுடி சூட்டி
நின்று நின்றது செய்வது விரைவினில் நீயே
சென்று கொண்டணை திருமகள் கொழுநனை என்றான். (1)

### சுமந்திரன் சென்றது.

அலங்கல் மன்னனை அடிதொழுது அவன்மனம் அனையான்
விலங்கல் மாளிகை வீதியின் விரைவொடு சென்றான்
தலங்கள் யாவையும் பெற்றனன் றமெனத் தளிர்ப்பான்
பொலங்கொள் தேரொடும் இராகவன் திருமனை புக்கான் (2)

### இராமனைக் கண்டது.

பொன்னின் இன்னமுதன்னவள் தன்னொடும் பிரியா
வன்ன மென்சிலைக் குரிசிலும் மருங்கினி திருப்ப
அன்னல் ஆண்டிருந் தானமு கருநற வெனத்தன்
கண்ணும் உள்ளமும் வண்டெனக் களிப்புறக் கண்டான். (3)

### கட்டளை குறிக்கவும் அக்கட்டழகன் எழுந்தது.

கண்டு கைதொழுது ஐயவிக் கடலுடைக் கிழவோன்
உண்டோர் காரியம் வருகென உரைத்தனன் எனலும்
புண்ட ரீகக்கட் புரவலன் பொருக்கென எழுந்தோர்
கொண்டல் போலவன் கொடிநெடுந் தேர்மிசைக் கொண்டான்,"

(மந்திரப்படலம், 48-51)

இந்தப் பாசுரங்களை ஊன்றிப்படியுங்கள். ஆலோசனை மகா மண்டபம், அமைச்சர் திரள், அரியணை, தசரதன், சுமந்திரன், இராசவீதி, அரண்மனை, அந்தப்புரம், இராமன், சீதை, இலக்குவன், இராச மரியாதைகள், விநயமான உரையாடல்கள், அழ

கிய இரதங்கள் முதலிய இனிய அருமைக் காட்சிகள் உங்கள் மனக்கண்முன் தோன்றி மகிழ்ச்சியை விளைக்கும்.

தசரதன் கருதியதைக் கருதியபடியே குறிப்பறிந்து விருப்புறச் செய்ய வல்லவன் ஆதலால் சுமந்திரனை இங்கே அவன் மனம் அனையான் என்றார். இந்த உவமை உரிமை மிக வுடையது.

மன்னன் மனம் என மருவியுள்ளமையானே இராமனது அரசுரிமையை உவந்து உலக முழுவதையும் தானே பெற்றுள்ளவன்போல் உள்ளம் களித்தான் என்க. முன்னுறக் குறித்த கருத்தைப் பின்னுற விருத்தி செய்து பேருவகை விளையப் பொருத்திச் செல்கின்ற கவியின் புலனலம் அவியின் சுவையாய்ப் புவியில் பரவியுள்ளது.

பொன்மயமான தேருடன் இளவரசை அழைத்துவரும்படி முதல் மந்திரி சென்றபொழுது அந்தச் சுந்தரன் அங்கே அமர்ந்திருந்த இன்பக் காட்சியைக் கம்பர் மொழியில் கண்டு களிக்கலாமேயன்றி வேறு வழியில் விண்டு விளக்க இயலாது.

சீதையை இங்கே பெண்ணின் இன் அமுது என்றது பெருமானுக்குப் பெரும்போக நிலையமாய்ப் பேரின்பம் பயந்திருக்கும் நீர்மையை நினைந்து. இனிய அமிர்தம் தனியே ஒரு பெண்ணுருவமைந்து நண்ணியுள்ளதுபோல் அப்பெண்ணரசி யிருந்தாள் என்பதாம். பிரியா வண்ண வெஞ்சிலைக் குரிசில் என்றது இலக்குவனை. அருமை மனைவியும் உரிமைத் தம்பியும் அருகமர்ந்திருக்க அந்த அண்ணல் ஆண்டு அமர்ந்திருந்த வண்ணம் எண்ணருந் தகையதோர் இன்பப் பேறு யிருந்ததென்பதாம்.

இவ்வாறு வீற்றிருந்த அக் குமரனைக் கண்ட அளவில் சுமந்திரனுக்கு உளதாய உவகைக்கு அளவே இல்லை. கண்டு கண்டு களிமீக்கொண்டு உழுவலன்பு உள்ளே பொங்கக் கெழுதகைமையோடு பரவசனாகி அருகே நெருங்கினான். அருமையான இனிய தேனைக் கண்டபொழுது வண்டுகள் எவ்வாறு மண்டி விழுந்து மயங்கிக் கிடக்குமோ அவ்வாறே இராமனிடம் உயிர்க் காதல் மிஞ்சி உள்ளம் பறிபோய் அவ்வழகனைக் கண்குளிர நோக்கிக் களிப்பூர்ந்து நின்றான் ஆதலால், "அழகு அருநறவு எனத் தன் கண்ணும் உள்ளமும் வண்டு எனக் களிப்புறக் கண்டான்" என அக்காட்சியின் மாட்சியை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

இராமனது திவ்விய சவுந்தரியத்தில் கவிக்கு இயல்பாக உள்ள ஆர்வமும் இதன்கண் ஊடுருவி ஒளிர்கின்றது.

இங்ஙனம் கண்குளிரக் கண்டு களிப்பு மிகுந்து அருகு அணுகி உரிமையொடு தொழுது மன்னன் குறித்ததை மந்திரி உரைத்தான். தந்தை கட்டளை என்றவுடனே அம்மைந்தன் விரைந்தெழுந்து தம்பியோடுவந்து தேரில்அமர்ந்தான். மாளிகையிலிருந்து தேரூர்ந்து இராசவீதிவழியே வருங்கால் ஊரவர் கண்டு கண்டு உவகை மீக்கொண்டார். அவ்வுவகை நிலைகளைக் கவி சுவை பெற வருணித்திருக்கிறார். சபாமண்டபம் அடைந்தவுடன் இராமன் இனிது இறங்கி உள்ளே புகுந்து வசிட்டரை வணங்கித் தசரதனைத் தொழுது தகவுடன் அணுகினான். அணுகவே அவ்வள்ளல் துள்ளி எழுந்து இப்பிள்ளைப் பெருமானை அள்ளியணைத்து அகமுருகி நின்றான். உழுவலன்புடன் அவனை வாரித் தழுவும்பொழுது அரசனது உள்ளமும் உயிரும் உவகை வெள்ளத்தில் ஆழ்ந்திருந்தன.

"காதல் பொங்கிடக் கண்பனி யுகுத்திடக் கனிவாய்ச்
சீதை கொண்கனைத் திருவுறை மார்பகம் சேர்த்தான்."

என்றதனால் அவனது ஆர்த்தியும் ஆவலும் நன்கு அறியலாகும். கண்ணீர் சிந்தியது ஆனந்த பரவசத்தால் என்க.

உள்ளும் புறமும் உவகை மண்டி அங்ஙனம் புல்லி நின்ற நிலையைக் குறித்துக் கவி மிகவும் அற்புதமாக ஓர் கற்பனை செய்திருக்கிறார். அடியில் வருவது காண்க.

தசரதன் இராமனைத் தழுவி நின்ற நிலை.

"நலங்கொள் மைந்தனைத் தழுவினன் என்பதென்? நளிர்நீர்
நிலங்கள் தாங்குறும் நிலையினை நிலையிட நினைந்தான்
விலங்க லன்னதிண் டோளையும் மெய்த்திரு விருக்கும்
அலங்கல் மார்பையும் தனதுதோள் மார்புகொண் டளந்தான்."
(மந்திரப்படலம், 60)

சக்கரவர்த்தி ஆர்வமீதூர்ந்து தனது அருமை மகனைத் தழுவியுள்ளதற்குக் கவி சாதுரியமாக இதில் பொருள் கூறியிருக்கும் திறம் பேருவகையை விளைத்து நிற்கின்றது.

நலம் கோள் என்றது அறநலங்களெல்லாம் இராமனிடம் குடிகொண்டிருக்கும் நிலை தெரிய வந்தது. தருமகுணசீலனை அந்த அருமை மைந்தனைத் தந்தை இங்கே தழுவி நின்றது உழுவலன்பினால் என வெளியே எளிதாகத் தெரியுமாயினும் உள்ளே வேறொரு குறிப்பு உண்டு என்று பின்னே உணர்த்த வருகின்றார் ஆதலால், தழுவினன் என்பது என்? என வினாவை ஊன்றி நோக்கும்படி எதிரே தோன்ற நிறுத்தினார். தழுவிய காரணம் யாது? எனின், தெளிவுற மொழிகின்றார்.

“நாம் இதுவரை இனிது பாதுகாத்துவந்த உலகினை இப்பொழுது குமரனிடம் கொடுக்கப் போகின்றோம்; ஆட்சிப் பொறுப்போ மிகவும் அதிகம். அமரரும் வியந்து நோக்கத் தக்கது; அரும்பேறமைந்தது; * பெரும் பொறை யுடையது; அத்தகைய இப்பெரிய அரசபாரத்தை இளம்பருவமுடைய இந்த அழகன் தாங்க வல்லனோ?” என்று இன்னவாறு மன்னன் சங்கித்து ஆளின் நிலை தெரிய விரும்பித் தனது தோளையும் மார்பையும் கொண்டு அவனது தோள் மார்புகளின் ஆளநீளங்களை இங்ஙனம் அளந்து பார்த்தான் என்பதாம். ஒருவனிடம் ஒரு காரியத்தை வைப்பவர் அவனது நிலைமையை முதலில் பரிசோதனை செய்து கொள்ளுவர் ஆதலால் அந்த முறைமையை இங்கே விளக்கியிருக்கிறார்.

தோளொடு தோளும் மார்பொடு மார்பும் அழுந்தத் தழுவி ஆர்வமீக்கூர்ந்து அரசு நின்ற நிலைக்குக் கவி இங்கே கருத்துரைத்திருக்கும் பொருத்தம் உவப்புற வுள்ளது. தமது கற்பனைக் குறிப்பை இடத்திற்கு ஏற்ப இன்புற இசைத்திருக்கிறார். அரசுரிமை நல்கி மகுடாபிடேகம் செய்யும் சமையம் ஆதலால் இவ்வாறு அமைய வுரைத்தார்.

முன்னம் ஒரு முறை மன்னன் மகனைத் தழுவியிருக்கின்றான். அன்னதற்கும் இதற்கும் உள்ளவாசியை ஈண்டு இணைத்து நோக்க வேண்டும்.

* “அனந்தனும் யானையும் கிரிகளும் பெயரத் தாங்கிய அரும் பொறை” என மன்னன் முன்னம் எண்ணியுள்ளதும் ஈண்டு எண்ணத்தக்கது. இந்நூல் பக்கம் 142 பார்க்க.

சக்கரவர்த்தி மிதிலையில் சந்தித்த பொழுது இராமனைத் தழுவினன்; தழுவவே அக்குலமகனுடைய இளந் தோள்கள் இரண்டும் இவனது மார்பில் *மறைந்தன என்றார். இங்கே அவை சரிசமமாக வளர்ந்து எதிர் எதிர் நிலை ஒத்திருந்தன என்கின்றார். என்னே இது? பருவ நிலையையும் உருவ வளர்ச்சியையும் உலகம் உய்த்துணர்ந்துகொள்ள இங்ஙனம் வைத்திருக்கிறார். மிதிலையில் தழுவிய அச்சமயம் இராமனுக்கு வயது பதினாறு; இப்பொழுது இருபத்து நான்கு என்க. எட்டு ஆண்டுகள் இடை கழிந்து போனமையும், உடல் வளர்ந்துள்ள நிலைமையும் ஈண்டு உணரவந்தன. ஏறக்குறைய மூந்நூற்று முப்பது பாடல்களுக்கு முன்னம் குறித்துள்ளதை நினைவில் வைத்துக்கொண்டு இன்னவாறு கவி இனிமையாகப் பொருத்தியிருக்கிறார். எண்ணியோ எண்ணுமலோ இவ்வண்ணம் வண்ண ஓவியங்களைச் செவ்வையாக இவர் வரைந்துபோகும் நலங்கள் இடங்கள்தோறும் உணர்ந்து மகிழவுள்ளன.

அழகிய கம்பீரமான தோற்றத்துடன் பருவ முதிர்ந்த ஒரு சக்கரவர்த்தி தனது அருமை மகனை உழுவலன்போடு தழுவி உளமகிழ்ந்து நிற்கும் ஓர் அற்புதக் காட்சி இதில் பொற்புறப் பொலிந்து நிற்கின்றது.

உலகிலுள்ள அரச திரு எவ்வளவு உயர்ந்து தோன்றினும் காலாந்தரத்தில் உருவற ஒழிந்துபோம்; அங்ஙனம் போகாமல் என்றும் பெரும் போகமாய் நீண்டு யாண்டும் நிலைத்துள்ள தெய்வத்திருமகள் ஆர்வமுடன் மருவி மகிழ்ந்திருக்கும் மார்பு ஆதலின், "மெய்த்திரு இருக்கும் அலங்கல் மார்பு" என அதன் சீர்மையும் நீர்மையும் துலங்க வுரைத்தார். அலங்கல்=மாலை. முத்து மாலைகளும் இரத்தின மாலைகளும் மலர் மாலைகளும் துவண்டு கிடக்கும் திருமார்புடைய சுகுமாரன் என்பது அலங்கல் மார்பு என்றதனால் அறியலாகும். விலங்கல்=மலை. கலங்கா நிலைமை கருதி வந்தது.

மன்னனுடைய தோள் மார்புகளுக்கு யாதொரு விசேடமும் கொடாமல் மகனுடையவைகளை இன்னவாறு குறித்தது அவற்றின் நன்னயங்களை யெல்லாம் நாடி ஓர்ந்துகொள்ள என்க.

* இந்நூல் பக்கம் 377 பார்க்க.

இங்ஙனம் அதிசய நிலையில் அன்புறத் தழுவிநின்ற மன்னன் பின்பு அவ் அழகனைத் தன் அருகே இருத்திக் கண்ணும் மனமும் களிப்புறக் கனிந்து நோக்கி இனிய மொழிகள் இசைக்க நேர்ந்தான். நேர்ந்து சொன்ன நிலைகளைக் கூர்ந்து பார்க்க.

மன்னன் முன்னுறக் குறித்தது.

"ஆண்டு தன்மருங் கிரீஇயுவந் தன்புற நோக்கிப்
பூண்ட போர்மழு வுடையவன் நெடும்புகழ் குறுக
நீண்ட தோளைய! நிற்பயந் தெடுத்தயான் நின்னை
வேண்டி எய்திட விரைவதொன் றுளதென விளம்பும்."

மழு உடையவன் என்றது பரசுராமனை. எப்பொழுதும் போரில் மூண்டு நின்ற அவரது ஆண்டகைமையை நினைந்து பூண்ட போர் என்றான். அவரை வென்று தொலைத்து வீரப் புகழோடு விளங்கியுள்ள தனது அருமை மகனுடைய பெருமையை விழைந்து கூறுகின்றான் ஆதலால்,

"மழுவுடையவன் நெடும்புகழ் குறுக நீண்டதோள் ஐய!" என்றான். அரச குலத்துக்கெல்லாம் பரம விரோதியா யிருந்த ஒரு கொடும் பகையை யழித்து நெடும்புகழ் விளைத்துள்ள நீயே பேரரசாய் நின்று பாராள வல்லவன் என்பது கருத்து.

வரிசிலை வாங்கி ஓர் வசையை நல்கிய பெருவிசயன் என முன்னம் குறித்ததற்கேற்ப ஈண்டும் புகழ் குறுக நீண்டதோள் என்றார். இந்தப் பிரயோகம் மிகவும் சுவையுடையது.

திண்டோள், நீண்டதோள் எனத் தோளையே ஈங்குத் தொடர்ந்து சுட்டியது, அகிலமும் ஆளும் தன்மை வாய்ந்து வெற்றித் திருவுடையனவாய் வீறுகொண்டு நிற்கும் அவற்றின் கொற்றம் கருதி என்க.

நிற்பயந்து எடுத்த என்றது அருந்தவம் புரிந்து உன்னைப் பெற்றெடுத்துள்ள பரம பாக்கியசாலியான நான் உன்னிடம் ஒன்று பெற விரும்புகின்றேன் என்றவாறு. பையனை ஐய! என்றது ஆர்வ மிகுதியால் என்க.

இங்ஙனம் உரிமையுடன் விளித்து அருமை மகனிடம் தன் உள்ளக் கருத்தை அரசன் சொல்லலானான்.

## தசரதன் இராமனிடம் உரைத்தவை.

" ஐய! சாலவும் அலசினன் அரும்பெரு மூப்பும்
வெய்ய தாயது வியலிடப் பெரும்பரம் விசித்த
தொய்யல் மாநிலச் சுமையுறு சிறைதுறந் தினியான்
உய்ய லாவதோர் நெறிபுக உதவிட வேண்டும். (1)

உரிமை மைந்தரைப் பெறுகின்ற துறுதுயர் நீங்கி
இருமை யும்பெறற் கென்பது பெரியவர் இயற்கை
தரும மன்னநிற் றந்தயான் தளர்வது தகவோ
கருமம் என்வயிற் செய்யிலென் கட்டுரை கோடி! (2)

மைந்த நங்குல மரபினின் வந்தருள் வேந்தர்
தந்த மக்களே கடைமுறை நெடுநிலம் தாங்க
ஐந்தொ டாகிய முப்பகை மருங்கற அகற்றி
உய்ந்து போயினர் ஊழிநின் றெண்ணினும் உலவார். (3)

முன்னை யூழ்வினைப் பயத்தினும் முற்றிய வேள்விப்
பின்னை எய்திய நலத்தினும் அரிதினிற் பெற்றேன்
இன்னம் யானிந்த அரசியல் இடும்பையன் என்றால்
நின்னை யின்றுள பயத்தினின் நிரம்புவ தியாதோ? (4)

ஒருத்தலைப்பரத் தொருத்தலைப் பங்குவின் ஊர்தி
எருத்தின் ஈங்குநின் றியல்வரக் குழைந்திட ருழக்கும்
வருத்தம் நீங்கியவ் வரம்பறு திருவினை மருவும்
அருத்தி யுண்டெனக்கு ஐய! ஈ தருளிட வேண்டும். (5)

ஆளும் நன்னெறிக் கமைவரும் அமைவின னாகி
நாளும் நங்குல நாயகன் நறைவிரி கமலத்
தாளின் நல்கிய கங்கையைத் தந்துதந் தையரை
மீள்வில் இன்னுல கேற்றினன் ஒருமகன் மேனாள். (6)

மன்னரானவர் அல்லர்மேல் வானவர்க் கரசாம்
பொன்னின் வார்கழற் புரந்தரன் போலியர் அல்லர்
பின்னு மாதவம் தொடங்கினோன் பிழைத்தவர் பிறரார்
சொன்ன மாமகற் பெற்றவர் அருந்துயர் துறந்தார். (7)

அனைய தாதலின் அருந்துயர்ப் பெரும்பரம் அரசன்
வினையின் என்வயின் வைத்தனன் எனக்கொள வேண்டா
புனையு மாமுடி புனைந்திந்த நல்லறம் புரக்க
நினையல் வேண்டும்யான் நின்வயிற் பெறுவதீ தென்றான். "

(மந்திரப்படலம், 62-69)

இந்தப் பாடல்களை நன்கு சிந்திக்கவேண்டும்.

தனது அருமை மகனை இனிது நோக்கித் தசரதன் கூறியுள்ள இச்சீரிய உரைகளில் அவனுடைய கூரிய அறிவு நலனும் ஆர்வ நிலையும் தெளிவாக வெளியாயிருக்கின்றன.

1. இராமையா! நெடுங்காலம் அரசுபுரந்து வந்தமையால் நான் மிகவும் தளர்ந்து வருந்தியுள்ளேன்; அரசபாரம் தாங்கி வந்ததோடு வயதும் முதிர்ந்து கிழவனும் ஆயினேன்; மேலும் தொடர்ந்து என்னால் இந்த ஆட்சியை இனி நடத்த இயலாது; இக்கரும பந்தத்தில் நின்றும் நீங்கி ஒதுங்கியிருந்து உயிர்க்கு உறுதியான உயர்நிலையை நான் அடைந்துய்யும்படி நீ எனக்கு உரிமையுடன் உதவி செய்யவேண்டும்.

பொதுவாக இவ்வுலகில் நல்ல புதல்வரைப் பெற்றவர் இம்மையில் புகழும் மறுமையில் பேரின்பமும் பெற்று மகிழ்வார் என்பது மேலோர் துணிபு. அவ்வாறு சாதாரணமான மக்களைப் பெற்றோர்களே இவ்வாறு மிக்க பேறுகளை அடைவார் ஆயின், தருமமே உருவமாய்ப் பெருகிவந்துள்ள உன்னை ஒருபிள்ளையாகப் பெற்றிருக்கின்ற நான் இன்னமும் இந்த இன்னலான வாழ்க்கையில் இருந்து உழல்வது தகுமா? என்பால் அன்பால் இரங்கி எனக்கு உதவி செய்ய விரும்பின் நான் சொல்வதை உவந்து கேட்டு இசைந்ததைச் செய்க.

நமது குலமரபில் முன்னம் தோன்றியுள்ள முடி மன்னர் எல்லோரும் முதிர்ந்த பருவம் அடைந்தவுடனே தங்கள் தங்களுடைய புதல்வர்களிடமே அரசுரிமையை ஒப்படைத்துவிட்டுத் தனி ஒதுங்கியிருந்து ஐம்புலன்களை வென்று முப்பகைகளையும் கடந்து எப்பொழுதும் யாதும் குறையாத பேரின்ப நிலையமான முத்தியை அடைந்திருக்கின்றனர். அங்ஙனம் அடைந்துள்ள நம்முன்னோர்களைத் தனித் தனியே விதந்து கூறி ஈண்டுவிரிப்பது மிகை.

முன்னே புரிந்துள்ள நல்வினைகளாலும் பின்னே செய்த புண்ணியங்களாலும் உன்னை அருமையாக நான் பெற்றிருக்கிறேன். இப்பேற்றினை நினைந்து நினைந்து நாளும் நான் பெருமகிழ்ச்சி யடைந்து வருகின்றேன். இங்ஙனம் பெறலரும்

பேருளனாய்ப் பெருகி மகிழ்ந்துள்ள நான் மீளவும் பிறவித் துன் பத்தில் வீழாதபடி விரைந்து சூழ்ந்து உயர்ந்த பதவியை அடைய வேண்டும்; அங்ஙனம் அடையாதொழியின் நீ பிறந்திருத்தலா லும், உன்னை நான் பெற்றுள்ளதாலும் உற்ற பயன் என்னும்? உலகம் உய்யவந்த நீ உரிய தந்தைக்கு ஓர் உய்தி தருவது அரு மையாகுமா?

பெரிய பொதி மாடு போல் அரசபாரத்தை நெடிது தாங்கி நான் மிகவும் வருந்தி நிற்கின்றேன். அவ்வருத்தத்தை நீக்கி அவ் வரம்பறு திருவினில் என்னை நீ இருத்தி யருளவேண்டும்.

நமது மூதாதைகளுள் பகீரதன் என்னும் ஒரு குலமகன் தோன்றி அரியதவம் புரிந்து விண்ணிலுறு கங்கையை மண்ணில் கொணர்ந்து எண்ணரிய முன்னோர்களைப் புண்ணிய வுலகிலுய்த் துப் புகழ்மிகப் பெற்றுள்ளான். தாதையைப் பயந்த மூதாதை யர்க்கும் ஆதரவு புரிந்து உய்திநல்கி உயர்கீர்த்திமானாய் நிலவி நிற்கின்ற அக் கோமகன் குலமரபில் நீ வந்து பிறந்திருக்கிறாய்; சிறந்த குணசீலனாய் விளங்கியுள்ள உன்னிடம் பெற்ற தந்தை யைப் பேணி அருளவேண்டும் என்று நான் விழைந்து கூறுவது நாணுத்தரு செயலாம்.

இவ்வுலகில் நல்ல குல மக்களைப் பெற்றவரே எல்லாரினும் சிறந்தவராவர்; அரசர் அருந்தவர் அமரர் இந்திரர் முதலிய எவ ரினும் அவர் உயர் நலமுடையராய் ஒளிமிகப்பெற்றுப் பிறவித் துயரும் நீங்கிப் பேரின்பம் அடைகின்றார். அத்தகைய குல மக்களுக்கெல்லாம் தலைமகனாய் யாண்டும் என்றும் முன் மாதிரி யாய் நிலவி நிற்கின்ற உன்னை நான் பெற்றிருக்கின்றேன்; என் புண்ணியப்பேற்றை எண்ணி அளவிடவல்லார் யார்? மண்ணும் விண்ணும் புகழ மகப்பேற்றால் இவ்வண்ணம் மகிமைபெற்றுள்ள நான் உன்னிடம் ஒன்று பெற விரும்புகின்றேன். உரிமைபுரிந் தருள்க.

தலைமுறை தலைமுறையாக மரபு நிலை திரியாமல் வழிமுறை யே வருகின்ற இந்த அரசுரிமையை அடையும் பருவமுடைய னாய் ஒளிபெற்றுள்ள நீ உடனே உவந்துகொள்ள வேண்டும்; "யாதொரு கவலையுமின்றி உல்லாசமாக உலாவித் திரிகின்ற நம்

தலைமேல் கிழவன் பெருஞ்சுமையை வைக்கின்றானே" என்று நினைந்து கொள்ளலாகாது; மரபின்படியே மணிமுடி புனைந்து அரசுபுரிந்து அறம்புரந்து ஆருயிர்களுக்கு அருள் புரியவேண்டும்.

இந்த என் உள்ளக்கருத்தை இனிது சொல்லவே உன்னை இங்கு அழைத்தேன். உவந்தருள் புரிக என்பதாம்.

இது வரை வரைந்தன முன்னே காட்டிய பாட்டுக்களில் கூட்டிய பருப்பொருள்களாம். இனி இவற்றுள் அமைந்துள்ள குறிப்புக்களையும் நுண்பொருள்களையும் நுனித்து நோக்குவாம்.

1. மகனை ஐய என்று இங்கே பலமுறை விழைந்து கூறியிருக்கின்றான். இது பிரிய வாசகமாய் அன்புரிமை கனிந்து வந்தது. வைய முழுவதும் ஐயனே என்று அடிதொழவுள்ள அரசர்பிரான் தன்செய்ய வாயால் ஐய எனப் பைய விளித்தது இப்பையனிடம் உய்யலாவதோர் உறுதிபெற விரும்பியுள்ளமையான் என்க.

நெடுங்காலம் அரசபாரம் தாங்கி வருதலால் மிகவும் தளர்ந்து வருந்தினேன் என்பான் சாலவும் அலசினன் என்றான்.

அலசல் = தளர்தல், வருந்தல். தொய்யல் என்றது வையகத்தின் வெய்ய நிலை தெரியவந்தது. தொய்யல் = சஞ்சலம், துன்பம்.

தனது நெடிய உழைப்பையும் உடலின் இளைப்பையும் மூப்பையும் முன்னுறக் குறித்தது பின்னுற உரைக்கும் உதவிநிலைக்கு அநுகூலமாக என்க.

உடல் நிலையையும் உள்ளக்குறிப்பையும் இங்ஙனம் உரைத்துப் பின்பு பெற்றோர்களுக்குப் பிள்ளைகளால் உளவாகும் பெருநலங்களை உணர்த்துகின்றார்.

2. இவ்வுலகில் மனிதர் நல்ல மக்கட் பேற்றைவிரும்புவது இங்கே மகிழ்ச்சியுடன் வாழ்ந்து பின்பு இன்ப நிலையமான முத்தியையும் அடைவதற்காகவேயாம். ஆகவே இம்மை மறுமை என்னும் இருமையிலும் புதல்வரால் பெருமை யடைவதையே பெற்றோர் உரிமையாகக் கருதியுள்ளனர் என்பது பெற்றாம்.

"மைந்தரைப் பெறுகின்றது உறுதுயர் நீங்கி இருமையும் பெறற்கு என்பது பெரியவர் இயற்கை" என்றது, மக்கட் பேற்றால் எய்தும் பயனைக்குறித்து முன்னோர் இன்னவாறு கருதியிருக்கின்றனர் என்பதாம்.

பிள்ளைப் பேறுடையார் பெறும் பேறுகள்.

"இம்மை யுலகத்து இசையொடும் விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்
பல்லோர் கூறிய பழமொழி." (அகம், 66)

மகப்பேற்றின் மகிமை குறித்து வந்திருக்கும் இந்த அகப்பாட்டு இங்கே ஆராய்ந்து சிந்திக்கற்பாலது. இளங்குழந்தைகளைக் கண்டால் பகைவர் ஆயினும் தம் பகைமை நீங்கி உளங்களிகூர்ந்து விழைந்து கொள்வர் ஆதலால், செறுநரும் விழையும் சிறுவர் என்றார். செறுநர்=பகைவர். சூதுவாது யாதும் இன்றி வெள்ளையுள்ளமுடையராயப் பிள்ளைகள் இனிதா விளங்கியிருப்பர் ஆதலின், செயிர்தீர் காட்சி என அவரது புனிதமான இனிய இயல்பை விளக்கியருளினர். செயிர்=குற்றம். காட்சி=அழகு. செம்மலோர்=செவ்வியோர், உயர்ந்தோர்.

நல்ல பிள்ளைகளைப் பெற்றவர் இம்மையில் இசையும் மறுமையில் பெருமையும் பெறுவர் எனச் சங்கத்துச் சான்றோராகிய செல்லூர்க் கோசிகன் கண்ணனார் இங்ஙனம் கூறியிருக்கின்றார்.

மைந்தரைப் பெறுகின்றது இருமையும் பெறற்கு

என்னும் இது முன்னதை அடியொற்றி வந்திருத்த லறிக.

சாமானியமான பிள்ளைகளைப்பெற்றவரே இவ்வாறு பெருமை பெறுவர் என்றால் உன்னைப் பெற்றுள்ள நான் என்ன பயன் அடைந்து எவ்வாறான நிலையில் இருக்கவேண்டும்? எனத் தன் பேற்றின் ஏற்றத்தை வியந்து மன்னர்பிரான் பின்னர்ப் பேசுகின்றான்.

இராமனது உருவ நிலையையும் குணநலங்களையும் உள்ளூற விழைந்து கூறுகின்றான் ஆதலால், தருமம் அன்ன நின் என்றான். இங்ஙனம் அருமையான பிள்ளையைப் பெற்றுள்ள நான் மறுமையில் யாரும் பெறமுடியாத பெருமையை விரைவில் பெற்று மகிழ

வேண்டுமேயன்றி ஈண்டுச் சிறுமையுற்று நிற்கலாமா? என்பான் தளர்வது தகவோ? என்றான்.

உரிமை தெரிய இவ்வாறு உரைத்துப் பின்பு மரபின் முறைமையை எடுத்துக்காட்டித் தனது தவநிலையை மீண்டும் விளக்கினான். அதன்பின் அரசபாரத்தின் நிலைமையையும் அதனைத் தான் தாங்கி வந்திருக்கும் தகவையும் உரைக்கின்றான்.

ஒருத்தலைப் பரத்து ஒருத்தல் என்றது பொதிமாட்டை. தனியே சுமக்கும் பாரத்தை யுடையது ஆதலால் இங்ஙனம் பேர் பெற்று வந்தது. ஒருத்தலைப் பரத்து=ஒரு நிலையே பாரமுடையது. பரம்=பாரம். ஒரு தலை என்பது இடையே ஒற்று மிகுந்து ஒருத்தலை என வந்தது. நெற்றியின் ஒரு பக்கத்தே உண்டாகும் நோவை ஒருத்தலை நோய், ஒருத்தலைப்பிடி என வழங்கிவருதல் காண்க. இருகட்சியுள் ஒரு கட்சிக்கு மட்டும் அநுகூலமாகச் செய்வதை ஒருத்தலைப்பட்சம் என்பர். வண்டிப்பாரம் இருதலையும் இசைந்து நின்று ஈர்க்கப்படும் இயல்பினது ஆதலால் அதனினும் வேறுபாடு தெரிய ஒருத்தலைப்பாரம் என்றார். எருது தன் முதுகில் தனியே சுமந்து செல்லும் தனிச்சுமை என்றவாறு

ஒருத்தல் என்பது யானை எருமை பன்றி புலி புல்வாய் முதலியவற்றின் ஆணினை உணர்த்திவரும்.

"புல்வாய் புலியுழை மரையே கவரி
சொல்லிய கராமொடு ஒருத்தல் ஒன்றும்;
வார்கோட் டியானையும் பன்றியும் அன்ன;
ஏற்புடைத் தென்ப எருமைக் கண்ணும்." (தொல்காப்பியம்)

"கவரி யானை பன்றி கரடி
உரிய வாகும் ஒருத்தல் பெயர்க்கோடை." (பிங்கலந்தை)

இவற்றால் ஒருத்தல் குறித்துவரும் பொருள்நிலை புலனும்.

"பிடியொடு போந்த பெருங்களிற்று ஒருத்தலை." (பெருங்கதை)

என்பதும் காண்க. இன்ன வகை விலங்கின் ஏற்றைச் சிறப்பாகக் குறித்துவரும் ஒருத்தல் என்னும் பேர் இங்கே காளைமாட்டை உணர்த்தி நின்றது. இன்ன சொல் இன்ன

பொருளைத்தான் உணர்த்திவரும் என்னும் வரம்பு காலவேற்றுமையால் திரிந்து வருகின்றது.

பங்குவின் ஊர்தி எருத்து என்றது முடவன் ஏறிச்செல்லும் எருது என்றவாறு. பங்கு=முடவன். அங்கத்தில் பங்கம் உடையவன் பங்கு என நின்றான். கால் நொண்டியாயிருப்பவன் எருதின்மேல் ஏறிச்செல்வது வழக்கம். "ஏறச் சொன்னால் எருதுக்குக் கோபம், இறங்கச் சொன்னால் முடவனுக்குக்கோபம்" என்னும் பழமொழியாலும் இவ்வுண்மையை நன்கு அறியலாகும். எருது எருத்து என வலி மிகுத்து வந்தது.

ஒரு பக்கத்தே பாரத்தையும், ஒரு புறத்தே முடத்தையும் உடைய எருது என இதற்கு ஓர் உவமையாகப் பொருள் கொண்டால் என்னை? எனின், கவிக்கு அது கருத்தாயின்,

"ஒருத்தலைப்பாரம் ஒருத்தலைப் பங்குவு முடைய எருத்து"

எனத் தெளிவாக எழுதியிருப்பர்; அங்ஙனம் எழுதாமையால் அப்பொருள் பொருந்தா தென்க.

"இரும்பியல் அனந்தனும் இசைந்த யானையும்"

(மந்திரப்படலம், 16)

எனத் தனது அரசபாரத்திற்கு ஆதிசேடனையும், திசை யானையையும் மன்னன் முன்னம் ஒப்புரைத்திருத்தலால் ஈண்டும் அத்திக்கு யானையையே சுட்டியுள்ளான் என்று கொள்ளலாகாதோ? எனின், இடமும் இனமும் இசையவில்லை. சுமையின் வருத்த நிலையை உணர்த்த எருத்தைக் குறித்துள்ளமையான் அதனோடு இனமான பொதிமாடே இங்குப்பொருத்தமாம்என்க.

ஒருத்தலை இயல்வரக் குழைந்து, எருத்தின் இடர் உழக்கும் வருத்தம் என்று பொருத்தி நோக்குக. இயல்=தன்மை, இயல்பு. பொதி சுமக்கும் எருது எனவே பொறுதியுடன் அரச பாரம் பொறுத்து வந்துள்ளான் என்பதாம்.

பொதிமாடும், முடவனைத் தாங்கும் எருதும் ஈண்டு உவமைகளாய் வந்தன. முன்னது அரசபாரத்தைத் தனியே நின்று தான் தாங்கிவரும் தன்மை தெரியவந்தது; பின்னது தனக்குப் பதிலாக உரிமையுடன் ஒருவன் வந்து தாங்கினால் அன்றி அந்த அரசியல் இனிது நடவாது என்னும் உண்மை யுணர வந்தது.

உரிமையான மாற்ருள் வந்து தனது ஆற்ருமையை அவசியம் ஆற்றவேண்டும் என்பதாம்.

மாடுகளைத் தனக்கு ஒப்பாக மன்னர்பிரான் குறித்தது தான்பட்டுள்ள பாடுகளை அறிந்தருள என்க.

மாட்டுப் பாடுபட்டு மறுகி நிற்கின்ற எனது மறுக்கத்தை நீக்கி என்னை வீட்டுக்கு அனுப்பவேண்டும் என்று பிள்ளையிடம் பிதா இவ்வாறு உள்ளன்போடு கேட்டுக்கொள்கின்ருன்.

வரம்பு அறு திரு என்றது மோட்சத்தை. எல்லையற்ற பேரின்பப் பெருவாழ்வு ஆதலால் அது இங்ஙனம் பேர் பெற்று வந்தது.

பிள்ளைகள் என்றும் உரிமையுடன் பெற்ருேர்க்கு உதவி புரிவதில் தலை சிறந்தது எனத் தனது குலமரபின் நிலைமை தெரியப் பகீரதனை உதாரணமாக எடுத்துக் காட்டினன்.

இறந்து சாம்பலாய்க் குவிந்து கிடந்த மூதாதையரனைவரை யும் தனது அருந்தவப் பயனுல் சிறந்த பதவியில் ஒருங்கே உய்த்த பெருந்தகையாளன் ஆதலால் அக்குலமகனை இங்குத் தலைமையாக விதந்து குறித்தான். சோம்பலின்றி முயன்று சாம்பலுக்கும் ஏம்பலாய்த் தன் குடியை உய்வித்த அக்கோ மகனைப் படி முழுதும் இன்றும் பாராட்டி வருகின்றது.

குலமரபின் கொடிவழி நிலைமையைக் குமரன் உள்ளம் கொண்டருளக் குறித்தபடியிது. பாரம்பரையின் பான்மையை இங்ஙனம் மேன்மையுற உணர்த்திப் பின்பு பொதுவாக மக்கட் பேற்றின் மாட்சியை உரைக்கின்ருன்.

இந்திர வாழ்வு எய்தியிருப்பினும், மைந்தர்இலராயின் அவர் மாண்பினை அடையார்; அறிவுடைய நல்ல மகனைப் பெற்றவரே எல்லா இன்ப நலங்களையும் பெறுகின்ருர் என இங்ஙனம் மகப் பேற்றின் பெருமையை மிகப்போற்றி உரைத்தான்.

சொல் மருமகன் பெற்றவர் அருந்துயர் துறந்தார்

என இறுதி உரையாக உறுதிபெற முடித்திருக்கிருன். இவனுடைய உரைகளில் உணர்வு நலங்களும் உரிமை யமைதி களும் தரும நெறிகளும் உள்ளுறைந்துள்ளன.

பெற்றோர் இட்ட கட்டளையைத் தட்டாது நடக்கும் புதல்வரே யாண்டும் உத்தம புத்திரராய் உயர் நலம் பெறுவர் ஆதலால், சொல் மறுமகன் எனச்சுட்டி யுரைத்தான்.

பின்னே தான் சொல்லப் போவதை மறுக்காதிருக்கும்படி முன்னதாக இன்னவாறு மன்னன் அணைகோலிக் கொண்டான்.

"தந்தைசொல் மிக்க மந்திரம் இல்லை."
"தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை" (ஔவையார்.)

என்றதனால் மாதா பிதாக்களுடைய சொல்லை மைந்தர் எவ்வளவு மதித்துப்போற்றவேண்டும் என்பது நன்கு புலனும்.

இங்ஙனம் சொல் மறுத பிள்ளைகளிடம் பெற்றோர்க்கு உள்ளன்பும் உரிமையும் ஓங்கிவளரும்; வளரவே இன்பமும் அறமும் இருபாலும் பெருகிவரும்; வரவே குடிக்கும் படிக்கும் நிலையான பெருநலமாய்அக்குமரர் தலைசிறந்துநிற்பர்; இந்த நன்னிலைக்கெல்லாம் மூலகாரணமாயுள்ளமையான் சொல்வழி ஒழுகல் நல்வழியாக இங்கே விதந்து சொல்ல நேர்ந்தது.

அன்பிலும் ஆதரவிலும் தாயும் தந்தையும் மேலானவர் ஆதலால் தம் புதல்வர்க்கு உயரிய உறுதி நலங்களையே அவர் உரிமையுடன் உரைப்பர்; அவ்வுரைகளை உவந்துகொண்டவர் உயர்ந்துதிகழ்வர்; இகழ்ந்து நின்றவர் இழிந்து கழிவர்என்பதாம்.

"சொற்கேளாப் பிள்ளைகளால் குலத்துக்கு ஈனம்" என்றதனுல் சொல் மறுப்பில் உளவாம் அல்லல் நிலை அறியலாம்.

அறிவு அழகு வீரம் முதலிய குணநலங்களுள் ஏதாவது ஒன்றால் விசேடியாது சொல்மறுமையை இசைத்துச் சொன்னது அவ்வெல்லாம் இருந்தாலும் இஃது இல்லையாயின் பெற்றோர் உள்ளம் வருந்தும் ஆதலால் அவருடைய உவகை நிலையின் உளவறிய இங்ஙனம் உரைத்தான் என்க.

இத்தகைய நல்ல சற்புத்திரர்களைப் பெற்றவர்கள் எல்லா நலங்களையும் பெற்று இருமையிலும் பெருமையாய் இன்புறுவர் ஆதலால் அருந்துயர் துறந்தார் என்றான்.

எத்தகைய சிறந்த நிலையில் உயர்ந்திருந்தாலும் நல்ல புத்திரர்கள் இலராயின் அவர் உற்ற துயர் நீங்கி உயர் சுகம் பெறார்

என்றதனால் மக்கட் பேற்றின் அருமையும் பெருமையும் அறிய லாகும். இந்த இனிய பேற்றைக் குறித்து மேலோரும் நூலோ ரும் மிகவும் புகழ்ந்து போற்றியிருக்கின்றனர். சில அடியில் வருவன காண்க.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற" (குறள், 61)

"படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணும்
உடைப் பெருஞ் செல்வராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்து
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே." (புறம், 188)

"பொறையிலா அறிவு, போகப் புணர்விலா இளமை, மேவத்
துறையிலா வனசவாவி, துகிலிலாக் கோலத்தூய்மை
நறை யிலா மாலை, கல்வி நலமிலாப் புலமை, நன்னர்ச்
சிறை யிலா நகரம் போலும் சேயிலாச் செல்வமன்றே."
(விவேக சிந்தாமணி)

"நொக்கிள மலர்துதை விலாத சோலையும்
புக்கிளந் தாமரை நகாத பொய்கையும்
மிக்கிளம் பிறைவிசும்பிலாத அந்தியும்
மக்களை இலாததோர் மனையும் ஒக்குமால்." (சூளாமணி)

"தந்தை யாயினோர் இனிது வீற்றிருப்பதும் தமது
மைந்தர் தங்குடி பரித்தபின் அன்றிமற் றுண்டோ?
எந்தைவந்துநந் தொன்முறை போற்றலால் யானும்
சிந்தை தன்னிலோர் எண்ணமும் இன்றியே சிறந்தேன்."
(கந்தபுராணம்)

"கல்லா மழலைக் கனியூறல் கலந்துகொஞ்சும்
சொல்லால் உருக்கி அழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்
இல்லாதவர்க்கு மனைவாழ்வின் இனிமை என்னும்?

மெய்தானம் வண்மை விரதம் தழல்வேள்வி நாளும்
செய்தாலும் ஞாலத்தவர் நற்கதி சென்று சேரார்;
மைதாழ் தடங்கண் மகவின்முகம் மன்னுபார்வை
எய்தா தொழியின் பெறுமின்பம் இவணுமில்லை." (பாரதம்)

" விரிகடல் அமிழ்தமும் வேலை ஞாலமும்
செருமுகத் தழலுமிழ் சிறுகண் யானையும்
எரிமணிக் குப்பையும் எளிதின் எய்தலாம்
அருமகப் பெறுதல் மற்றரிய தென்பவே.

விம்மிமின் னுழைமருங் கொசிய வீங்கிய
கொம்மைவெம் முலையினாய்! குதலைமென்மொழிச்
செம்மைய வருமகப் பெறாத தீமையோர்க்கு
இம்மையும் மறுமையும் இன்பம் இல்லையால்." (நைடதம்)

" கண்ணில் யாக்கையும் திங்களில் கங்குலும் கண்போல்
அண்ணல் மந்திரி யில்லரசாட்சியும் அருளில்
திண்ணென் நெஞ்சமும் புலவரில்அவையும் ஒண் தீம்பால்
வண்ணவாயிள மக்களில் வாழ்வும் ஒப்பாமால்"

(சீகாளத்திப்புராணம்)

" மெத்துகின்ற விழுமிய சீர்த்தியோடு
எய்த்தல் இன்றி இருமை யின்புந் தரும்
புத்திரற் பெறும் புண்ணிய வாழ்க்கைதான்
அத்தவத்தினும் ஆற்றச் சிறந்ததே."

(திருக்கூவப் புராணம்)

" இறைவர் ஞானமும் ஏதம் இலாமையும்
பொறையும் பூண்ட புதல்வர்ப் பெறுவரேல்
மறவரேனும் அவரையவ் வல்வினை
பிறவி ஏழினும் பின்தொட ராதரோ?"

(திருக்கழுக்குன்றப் புராணம்)

" பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்.

கைதவந்தான் நீக்கிக் கருத்தில் கறையகற்றிச்
செய்தவந்தான் எத்தனையும் செய்தாலும்—மைதீர்
மகப்பெறு மானிடர்கள் வானவர்தம் ஊர்க்குப்
புகப்பெறார் மாதராய்! போந்து." (நளவெண்பா)

"மனிதன் குடிவாழ்வை மாட்சி யுறுத்தி
இனிது முயல இசைத்துக்—கனிவுமிகச்
செய்வதெலாம் சேயின் செயலால் குடிக்கென்றும்
உய்தி யவனே உணர்." (தருமதீபிகை)

இச்செய்யுள்கள் யாவும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கன.

மக்கட் பேற்றை விழைந்து இன்னவாறு முன்னோர் பலரும் வியந்து மொழிந்திருத்தலால் அதன் நன்னயங்களை யெல்லாம் நன்கு ஆராய்ந்து நாடிக்கொள்ளவேண்டும்.

பிறந்த குடியையும் பெற்றநாட்டையும் சிறந்த நிலையில் விளக்கி வழி வழியே உயர்ந்த குலமக்கள் ஓங்கி வரலால் உலகிற்கு அவர் உயிராதாரமாய் நிலவி ஒளி செய்துள்ளனர்.

சொல்மறு, அறிவழிந்த, மைதீர் என்னும் விசேடணங்களால் மக்களைச் சுட்டியுள்ளமை உய்த்துணரத் தக்கது. குற்றமற்ற இத்தகைய உத்தமப் புதல்வரே பெற்றோர்க்கு இனியராய்ப் பெருநலம் பயப்பர் என்க.

ஈன்றவர் சொல்லை மறுத்து இழிவினைகள் புரியும் மைந்தர் தோன்றலினும் தோன்றாமை நன்று.

" தந்தைசொல் மறுப்பவர்கள், தாயுரை தடுப்போர்,
அந்தமறு தேசிகர்தம் ஆணையை இகந்தோர்,
வந்தனைசெய் வேதநெறி மாற்றினர்கள், மாறாச்
செந்தழலை வாயநிர யத்தினிடை சேர்வார்."
(கந்தபுராணம், மார்க்கண்டேயப்படலம், 54)

சொல்மறு மகன் என மன்னன் முன்னம் சொல்லியுள்ளதையும், சொல் மறுப்பவர்கள் என்று இதில் வந்துள்ளதையும் ஒத்து நோக்கி உறவுரிமை தெரிக.

சொல்வழி யமைந்து நல்வழி நடவார் அல்லலுழந்து அருநரகடைவார் என்றதனால் அப்பிள்ளைகள் எள்ளத்தக்கவர் என்பது பெற்றாம். பெற்றோர் உள்ளம் கொதிக்க நடந்தால் பெருங்கேடு உண்டாம் என்பது கருத்து.

"The eye that mocketh at his father, and
despiseth to obey his mother, the ravens of
the valley shall pick it out, and the young
eagles shall eat it." (Bible)

" தந்தையை இகழ்ந்து தாயை அவமதிக்கின்ற மைந்தன் கண்ணைக் கருங்காக்கைகளும் இளங் கழுகுகளும் பிடுங்கித் தின்னும்" எனச் சாலமன் (Solomon) என்னும் யூதமன்னன் இங்ஙனம் சொல்லியிருக்கின்றான். பெற்றோரை மதியாத பிள்ளைகள் எந்நாட்டிலும் எக்காலத்திலும் எல்லாராலும் இழிக்கப்பட்டுள்ளமை இதனால் இனிது புலனாம்.

" நெறி யிகந்துதம் மரபினின் நீரல செய்யும்
மறுவின் மைந்தரைப் பெறுதலின் மகப்பெறா தனுருற்று
உறைதல் நன்று, மற்றொருவனால் உயர்குல முழுதும்
சிறுமை எய்தில், ஆங்கவற்றுறந் துறுபழி தீர்ப்பார்."
(காசிகாண்டம்)

இவ்வண்ணம் குணக் கேடான பிள்ளைகளால் குடிகெடும் ஆதலால், குடி யுயர்த்தும் குலமக்கள் நிலைமை தெரியத் தகுதியான அடைமொழி வந்தது.

"பெற்றோர் எல்லாம் பிள்ளைகள் அல்லர்" (நறுந்தொகை) என்றதும் இங்கே உள்ளத்தக்கது.

உணர்வுநலமுடைய இனிய புதல்வரே மனித சமூகத்திற்கு மகிமை தர வல்லவர் ஆகையால் அப்புனித மக்களே யாண்டும் போற்ற நின்றனர்.

இவ்வாறு குணநலம் வாய்ந்த குலமக்களின் நிலைமையைப் பொதுவாக விளக்கியுரைத்துத் தனது தலைமகனிடம் பக்குவமாகச் சக்கரவர்த்தி முடிபுனைய வேண்டினன்.

இவ்வேண்டுகோளைக் கேட்டவுடன் அவ் ஆண்டகை என்ன பதில் சொன்னான்? யாது செய்தான்? என இன்னவாறான எண்ணங்கள் எல்லார் உள்ளங்களிலும் எளிது தோன்றும்.

இந்தச் சமயத்தில் தந்தையை நோக்கி இராமன் எவ்வாறு பேசியிருப்பான்? என்று நீங்கள் ஒவ்வொருவரும் தனித்தனியே ஊகஞ் செய்துபாருங்கள்! அங்ஙனம் பார்வையில் படிந்து ஆர்வமீதூர்ந்தால் அந்த அழகனது நிலைமையை விளக்கியுள்ள கவியின் காட்சி கழிபேருவகையாய் ஒளிமிகுந்துவரும். சிந்தனைசெய்து வீணே தியங்கி நிற்பானேன்? கவியையேவிரைந்து கண்டுகொள்வோமே எனின், இதோ அடியில் வருகின்றது; கடிது காண்க.

## இராமன் அமைதி

" தாதை அப்பரி சுரைசெயத் தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்; கடனிதென் றுணர்ந்தும்,
யாது கொற்றவன் ஏவியது அதுசெயல் அன்றோ
நீதி எற்கென நினைந்தும் அப்பணிதலை நின்றான். "

(மந்திரப்படலம், 70)

மணிமுடி புனைந்து அரசு புரிந்து அருள்க என்று தசரதன் வேண்ட, அதற்கு இராமன் இசைந்துகொண்ட அற்புதக் காட்சியை இதில் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்க. அகக்கரண நிகழ்ச்சிகளை முகக் கண்ணெதிரே கவி காட்டிவரும் கலைநிலை கருதி மகிழவுள்ளது.

அரசபோகம் வருவதென்றால் யாரும் அதில் ஆசை கூர்வர் ஆதலால் உலக இயல்பான அந்த ஆவல் இங்கே யாதும் இல்லை என்பார், காதல் உற்றிலன் என்றார்.

மனைவியுடன் தனியே இனிதமர்ந்து உல்லாசமாக உவந்திருப்பதை விட்டு, அரசபாரத்தை வகித்துக் கட்டுப்பாட்டோடு அடங்கியிருக்கவேண்டுமே என்று இகழ்ந்து விடவும் இல்லை என்பார், இகழ்ந்திலன் என்றார்.

இப்படி விருப்பும் வெறுப்பும் இலனாயினும், தக்க பருவத்தில் தந்தைக்கு உதவிசெய்ய வுரிய தனது பொறுப்பினை உணர்ந்தும், தாதை ஏவியது யாதாயினும் அதனை உவந்து செய்வதே நீதியாம் என நினைந்தும் அவ்வுத்தரவை இராமன் உவந்து கொண்டான் என்பதாம்.

ஏவியது யாது, அது செயல் அன்றோ நீதி ? என்றதில் இராமனது பிதிர்வாக்கிய பரிபாலனம் பேரொளி வீசி நிற்கின்றது.

தனக்கு இனிதாயினும், இன்னாதாயினும், நல்லதாயினும், தீயதாயினும் தந்தை சொல்லியதைத் தவறாமல் செய்வேன் என்பதாம். இந்த உறுதியினால் இக்குலமகன் உலகிற்கெல்லாம் ஒரு தலைமகனாய் நிலவலாயினான். ஈன்றவர் சொல்வழி ஒழுகிய தோன்றல்களுக்குள் இச்சான்றோனையே சான்றவரெவரும் தலைமையாகச் சான்று காட்டி வருகின்றனர். அரசாட்சியை ஏற்றுக்

கொள் என்று தசரதன் சொன்னபொழுது அந்த அருமைத் தந்தையின் திருமுகத்தை நோக்கி யாதொரு எதிர்வார்த்தையும் பேசாமல், "அப்பா இட்டகட்டளை எதுவாயினும் யாண்டும் எப்பொழுதும் அதனைத் தட்டாமல் செய்துமுடிப்பேன்" என்னும் உறுதியுடன் ஒப்பியிருக்கும் இராமனது மவுனக்காட்சியை கவி இங்கே அற்புதமாகச் சித்திரித்திருக்கிறார்.

அப்பணி தலை நின்றான் என்றது, "அவன் காலாலிட்ட பணியை நான் தலையால் செய்வேன்" என்னும் நிலை தெரிய வந்தது. பணிவும் பண்பும் அணிசெய்துள்ளன.

என்ன மரியாதை! என்ன விநயம்! என்ன நாகரீகம்! மன்னன் முன்னிலையில் மகன் புரிந்திருக்கும் பெருந்தகைமையும் அமைதியும் அதிசய நிலையில் துதிசெய்ய வுள்ளன.

## தசரதன் அரசவையை விட்டு எழுந்தது

எதிர்மொழி யாதும் பகராமல் அகனமர்ந்து முகமலர்ந்து இராமனிருந்த நயனுடைமையை நன்கு தெரிந்து உளமிக உவந்து அரியணையினின்று எழுந்து குமரனை உயிருற விழைந்து தழுவி விட்டுத்தசரதன் மந்திரிகளுடன் அரண்மனைக்குச் சென்றான். சென்ற நிலைமையை அடியில்வரும் கவியில் பார்க்க.

"குரிசில் சிந்தையை மனக்கொண்ட கொற்றவெண்குடையான்
தருதி இவ்வரம் எனச்சொலி உயிருறத் தழுவிச்
சுருதி யன்னதன் மந்திரச் சுற்றமும் சுற்றப்
பொருவில் மேருவும் பொருவருங் கோயில்போய்ப்புக்கான்."

பிள்ளையினுடைய உள்ளக்குறிப்பை உய்த்துணர்ந்து உவகை மிஞ்சி அள்ளி யணைத்து ஆர்வமொடு தழுவி நிறுத்தி அரசன் இங்ஙனம் தனது இனிய மாளிகையை அடைந்தான்.

அதன்பின் இளவரசு எழுந்தது; உழையிருந்தவரனைவரும் உவந்து போற்றினர். முன்பு வந்த தேரில் ஏறித் தம்பியோடு நம்பி அரண்மனை புகுந்தான்.

## இராமன் சென்றது.

நிவந்த அந்தணர் நெடுந்தகை மன்னவர் நகரத்
துவந்த மைந்தர்கள் மடந்தையர் உழையர்பின்தொடரச்
சுமந்திரன்தடந் தேர்மிசைச் சுந்தரத் திரள்தோள்
அமைந்த மைந்தனும் தன்னெடுங் கோயில்சென்றடைந்தான்.

(மந்திரப்படலம், 72)

அரச மரியாதைகளும், அளவளாவல்களும், வரன்முறைகளும், பழக்க வழக்கங்களும் இங்கே விளக்கமாயுள்ளன.

நிகழ்ச்சி நிரல்களை உணர்ச்சி ததும்பக் கவி சுவையாக உரைத்திருக்கிறார்.

நிவந்த என்றது அறிவொழுக்கங்களில் உயர்ந்த என்றவாறு. அந்தணர், மன்னவர், மைந்தர்கள், மடந்தையர், உழையர் தொடரக் கோயில் அடைந்தான் என்றதில் அன்று இராமன் அரசவையிலிருந்து தன் மாளிகைக்கு எழுந்தருளியபொழுது உடனெழுந்த விழுமிய காட்சிகள் வெளிப்பட்டுள்ளன.

மந்திராலோசனையை முடித்துச் சபா மண்டபம் நீங்கி அரண்மனையை அடைந்த தசரதன் மகனது முடிசூட்டு வைபவத்துக்கு வந்து சேரும்படி தேச மன்னர் யாவருக்கும் திருமுகம் அனுப்பினன்.

விழாவிற்கு வேண்டிய ஆயத்தங்களை யெல்லாம் விரைந்து செய்யும்படி வசிட்டரிடம் உரைத்தான். அம் முனிவரும் மனமுவந்து இனிதகன்று போய்க் காரியங்களை நன்கு கருதி நின்றார்.

## தசரதன் அரசருடன் அளவளாவி யிருந்தது

இங்ஙனமிருக்க உய்த்த திருமுகம் கண்டு உவகை மீக்கூர்ந்து சிற்றரசர் சிலர் உறவுரிமையுடன் முன்னுற வந்தனர்; சக்கரவர்த்தியைக் கண்டனர். அனைவரையும் தக்கவாறு உபசரித்துப் பக்கம் வைத்துத் தன் கொலு மண்டபத்தில் அவன் உரையாடிக்கொண்டிருந்தான். இராமன் அரசுரிமைக்கு வருவதைக்குறித்து மிகவும் உவந்து பேசினன். அந்தச் சொல்லைக் கேட்குந்தோறும் எல்லாரும் உள்ளங்களித்தார். அவர் களிப்பூர்ந்திருந்த நிலையைக் கவி வெளிப்படுத்தி யிருக்கிறார். அடியில் வருவன காண்க.

### அரசர் அடைந்த மகிழ்ச்சி

"இறைவன் சொல்லெனும் இன்னற வருந்தினர் யாரும்
முறையின் நின்றிலர் முந்துறு களிப்பிடை மூழ்கி
நிறையும் நெஞ்சிடை உவகைபோய் மயிர்வழி நிமிர
உறையும் விண்ணகம் உடலொடும் எய்தினர் ஒத்தார்.

அவரது ஆர்வ நிலை

ஒத்த சிந்தையர் உவகையர் ஒருவரின் ஒருவர்
தத்தமக்குற்ற அரசெனத் தழைக்கின்ற மனத்தர்
முத்த வெண்குடை மன்னனை முறைமுறை தொழுதார்
அத்த நன்றென அன்பினோடு அறிவிப்பதானார்.

உவகை யுரை

மூவெழு முறைமையெங் குலங்கள் முற்றுறப்
பூவெழு மழுவினால் பொருது போக்கிய
சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு
ஆவவிவ் வுலகமீ தறனென் றுரரோ."

(மந்திரப்படலம், 75-77)

இராமன் ஆட்சிக்கு வருவதைக் கேட்டவுடன் அரசர்கள் அடைந்துள்ள உவகை நிலைகளும், உரிமைமொழிகளும் இவற்றால் அறியலாகும்.

முதல் பாட்டில் மெய்ப்பாட்டின் விளைவுகளை உய்த்து நோக்குக.

1. தசரதன் சொல்லை இங்கே நறவு என்றது பெருங் களிப்பூட்டி நிற்கும் அதன் பெற்றியை நினைந்து. மது உண்ட வண்டுகள் போல் அம்மொழி யுண்ட மன்னர்கள் களி மண்டி யிருந்தனர் என்பதாம். மூழ்கி என்றதனால் ஆனந்தக் கடலில் அவர் ஆழ்ந்து நீந்திய நிலை அறிய நின்றது. முறையில் நின்றிலர் என்றது உள்ளக் களிப்பால் தலைதடுமாறி அங்கே நடந்து கொள்ளவேண்டிய முறை மறந்து போயினர் என்றவாறு.

இராமன் முடிசூடுவதைச் சொன்னவுடனே அரசர்கள் எல்லாரும் எல்லையில்லாத பெருமகிழ்ச்சியை அடைந்தனர்; அந்த இன்ப நிலையை எளிதாக வெளியே சொல்லமுடியாது ஆதலால்,

விண்ணகம் உடலோடும் எய்தினர் ஒத்தார் என உவகை யளவை உய்த்துணர்ந்துகொள்ளும்படி உரைத்துப்போயினார்.

சுவர்க்க இன்பம் புண்ணியப் பயனால் பெறுவது. அது, இந்த ஊன உடல் ஒழிந்து திவ்விய சரீரம் வாய்ந்து உயிர் தனியே தோய்ந்து நுகரும் இனிய போகங்களை யுடையது.

அந்த விண்ணுலக போகத்தை இம்மண்ணுலகில் எடுத்த உடலோடும் போய் ஒருவன் மடுத்து நுகர முடியாது; யாண்

டும் முடியாத அதனை ஈண்டு முடிந்ததாக நினைந்துகொண்டு இங்கே எய்தியுள்ள இன்ப நிலையை உணர்ந்துகொள்க என்பார் இங்ஙனம் உணர்த்தியருளினர்.

இம்மையிலேயே மறுமை யின்பத்தை எய்தி மகிழ்ந்தனர் என்பதாம். அரசரது எல்லையில்லாத மகிழ்ச்சி நிலையை இவ்வாறு அதிசயமுறச் சொல்லியிருக்கிறார். இந்தப் பிரயோகம் காவியத்தில் பல இடங்களிலும் வந்துள்ளது.

"உடம்பொடு துறக்க நகர் உற்றவரைஒத்தார்" (கடிமணப்படலம்) என முன்னர் உரைத்துள்ளதும் காண்க.

இவ்வாறு உவகை எய்தினவர் ஒருவர் இருவர் அலர்; அனைவரும் ஒரு நிகராகவே பெரிதும் களிபெருகி நின்றனர் என்பார், ஒத்த சிந்தையர் என்றார். நெஞ்சினர் என்னாது சிந்தையர் என்றது வெளித்தோற்றத்தில் எளிதில் மயங்காமல் எதனையும் நன்றாக ஆராய்ந்தறியும் பேரறிவாளர் என அவரது சிந்தனை சத்தியும் செவ்விய நிலைமையும் தெரிய என்க.

இராமன் அரச பட்டத்துக்கு வருவதை அறிந்தவுடனே அரசரெல்லாரும் பரமானந்த நிலையராய் நிலவி நின்றனர் என முதலில் குறித்தார்; இங்கே மற்றொரு புத்துணர்ச்சியை இனிமையாகச் சித்திரித்து விசித்திர விளக்கம் செய்கின்றார்.

"தத்தமக்கு உற்ற அரசு எனத் தழைக்கின்ற மனத்தர்" என்னும் இது எத்துணைச் சுவையுடையது!

"தலங்கள் யாவையும் பெற்றனன் தான்எனத் தளிர்ப்பான்" என முன்னம் சுமந்திரனைக் குறித்துச் சொல்லி யிருப்பதும் காண்க.

தேசமக்கள் யாவரும் ஒருமுகமாய் இங்ஙனம் இராமன் பக்கல் அன்பு பூண்டு ஆர்வமீதூர்ந்து நிற்றலால் அவனது புனித நீர்மையும் எவ்வுயிர்க்கும் இனியனாய்த் தனியமைந்திருக்கும் தகைமையும் நன்கு புலனாம்.

இங்ஙனம் பெருமகிழ்ச்சியில் பெருகி நின்ற அரசர்கள் தசரதனை நோக்கி உரிமையுடன் இனிது உரையாடலானார்.

அரசர் பேசியது.

அருமை நாயகா! எம் அரச குலத்தை இருபத்தொரு தலை முறையாகக் கருவறுத்து வந்த பரசுராமனை அடியோடு வென்று பாரரசுக்கெல்லாம் சீரும் சிறப்பும் நல்கி யுள்ள மகா வீரனுக்கே இந்த உலக முழுவதும் உரிமையாகும். அந்த அழகனுடைய அடி நிழலில் அமர்ந்து திறை செலுத்தி முறை நடத்தும் முடி மன்னர் களாகிய நாங்கள் குடிசனங்களினும் பெரும் பாக்கியவான்களா யுள்ளோம். இனி இராமராச்சியம் எனும் பேர் பெற்று இம் மண்ணுலகம் ஓர் புண்ணிய வுலகமாய்ப் பொலிந்து விளங்கும்.

அறிவு குணம் அழகு முதலியவற்றுள் யாதானும் ஒன்றால் இராமனை விசேடியாமல் பரசுராமனை வென்றதையே மன்னர் ஈண்டு விதந்தெடுத்துச்சொன்னது என்னை? எனின், தங்கள் குல மரபில் நெடுங்காலம் படிந்திருந்த பழிமாசைத் துடைத்துப் பகையை ஒழித்தருளிய அவ்வுவகையை நன்றியறிவுடன் அவர் உரைத்தார் என்க. எந்த வகையிலும் தமக்குச் சொந்தமாய் நேர்ந்த உபகாரச் செயல் மனிதர் உள்ளத்தே பதிந்து உறைந்து கிடக்கும் ஆதலால் அந்த நினைவு இங்கே முந்துற வந்தது.

மூவெழு முறைமை என்றது இருபத்தொரு தலைமுறையாக என்றவாறு. வழி வழியே அழிவு நேர்ந்த வகை தெரிய வந்தது. அழியா ஆயுளையுடைய அவர் ஏறக்குறைய எழுநூறு வருடங்களாக இந்த அழிவு வேலையைச் செய்துவந்திருக்கிறார்.

பூ எழு என்றது மழுவின் கூர்மையும் பொலிவும் குறித்து நின்றது. பூ என்னும் ஓரெழுத்தே ஒருமொழியாய் நின்று கூர்மையை உணர்த்திவரும்.

"பூவாய் வாளி" (வானரர் களங்காண் படலம், 9)

"பூவாட் கோவலர்" (புறம், 224)

"பூ நின்ற வேல் மன்னன்" (இறையனார், 17 மேற்கோள்)

இவற்றுள் பூ குறித்து நிற்றலறிக.

"வயிரமும் வள்ளும் வசியும் வையும்
அயிலும் நிசிதமும் அள்ளும் பூவும்
ஆறும் கூர்மையின் அபிதா னம்மே." (பிங்கலந்தை)

இதில் கூர்மைக்கு உரிய பேர்களைக் காண்க.

எம் குலங்கள் முற்றுற என்றதனால் அரசமரபு அழிந்து போயிருக்கும் அளவு நிலை புலனும். இங்ஙனம் பலகாலம் தங்கள் குலகாலனைக் கொலைபுரிந்து வந்த கொடிய பகையை முடிய நீக்கி அரசகுலத்துக்கெல்லாம் நெடியகீர்த்தியை நிலைநாட்டிய மகா வீரன் என்பார், சேவகன் சேவகம் செகுத்த சேவகன் என இராகவன் பெருமையை நாவகம் குளிர மன்னர் நயந்து கூறினர்.

செகுத்தல்=வெல்லல், அழித்தல்.

"திருக்கிளர் ஒளி குலாய் வானகம் செகுக்குமே"

(சிந்தாமணி, 1903)

"சேரார் இன்னுயிர் செகுக்கும்" (பரிபாடல், 2)

"தீங்கு செய்பவர்களைச் செகுத்தல் திண்ணம்"

(இராமாயணம், மீட்சிப்படலம், 278)

இவற்றுள் செகுத்தல் உணர்த்தி நிற்றல் அறிக.

எதிரியை வெல்லுதல் இருவகைய. ஒன்று அவனைக் கொன்று தொலைத்தல்; மற்றொன்று அவனைக் கொல்லாமலே அவனுடைய வல்லமைகளெல்லாவற்றையும் வாங்கிவிடுதல். இங்கே நேர்ந்த பகை வென்றி பிந்திய நிலையில் சேர்ந்தது.

பரசுராமன் சிரஞ்சீவி ஆதலால் அவனைச் சிரஞ் சீவாமல் அவனது உரஞ்சீவி மட்டும் ஒழியவிட்டான் என்க.

பல தலைமுறைகளாக அரசர் குலத்தை நிலையழித்து நெஞ்சந் தருக்கித் தன்னை வெல்லவல்லார் உலகில் யாரும் இல்லை என்று வீறுகொண்டு நின்ற வீரப்பிரதாபத்தை யெல்லாம் நேரே ஒரு கணத்தே ஒருங்கே யழித்து மழுவாளனை வழுவாளனாக்கி வந்த வழியே மீளவிடுத்த பெருவீரன் ஆதலால், "சேவகம் செகுத்த சேவகன்" என இராமபிரான் இங்கே பாராட்ட நின்றான்.

சேவகம் =வீரம். வீரம் செகுக்கப்பட்டது என்றதனால் சாரம் போய்ச் சக்கையாயுள்ளமை பெறப்பட்டது.

பல்லும் நகமும் இழந்த புலிபோல் பரசுராமர் எல்லும் இசையும் இழந்து இழிந்துபோயுள்ளமையால் அரச குலங்கள் அச்சம் நீங்கி உச்ச நிலையில் உயர்ந்து வரலாயின.

## சேவகன் என்னும் சொல் வழக்கு

சேவகன் என்பது இக்காலத்தில் ஊழியனைக் குறித்து வருகின்றது. முற்காலத்தில் உயர்ந்த சுத்த வீரனையே இது உணர்த்தி வந்திருக்கின்றது. இப்பெயரால் இராமனைப் பல முறையும் கம்பர் உவந்து குறித்திருக்கின்றார்.

"சேகு சேர்தரச் சேவகன் தேரின்பின்
ஏகும் மீளும்" (பாலகாண்டம், உலாவியற்படலம் 37)

"தெருவே திரிவார் ஒரு சேவகனார்" (கடிமணப்படலம், 7)

"செஞ் சேவகனார் நிலைநீர் தெரிவீர்"
(சடாயுஉயிர்நீத்தபடலம், 78)

"சுருதியன்ன சேவகன் சிறுமுன்னம் சேதுவும் தெரிந்த"
(கடல்தாவுபடலம், 20)

"ஏறு சேவகன் மேனியல்லால் இடை" (சூளாமணிப்படலம், 19)

"சிறந்தது போரே என்றான் சேவகன் முறுவல் செய்தான்"
(அங்கதன் தூதுப்படலம், 7)

"சேவகன் சென்னி நேரே வென்றுதிர்கென விட்டனன்"
(கும்பகருணன் வதைப்படலம், 331)

இவற்றுள் இராமனைச் சேவகன் என்று குறித்திருத்தலறிக.

வீர நாயகனான முருகப் பெருமானையும் சேவகன் என்னும் பேரால் பாவலர் பாராட்டியிருக்கின்றனர். அடியில்வருவன அறிக.

"செய்யோய் மயிலேறிய சேகவனே"
"திதிபுத்திரர் வீறடு சேவகனே"
"விரவும் சுடர்வேல் விடு சேவகனே"
"செறுவேல் முனைமேல் எறி சேகவனே"
(கந்தரனுபூதி, 25, 50, 57, 96)

"சிறைமயிற் பரிநடாத்தும் சேவகப் பெருமானே"
"செம்பொற்றடந்தேர் உருட்டிவரு சேவகன்
(முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் 7, 92)

இவ்வாறு பண்டு வீரமூர்த்திகளைக் குறித்துவந்துள்ள சேவகன் என்னும் பேர் இன்று எவ்வாறு இழிந்து வழங்கிவருகின்றது! சொல்லாட்சியும் காலவேற்றுமையால் தன் மூல நிலை திரிந்து முதன்மையை யிழந்து கோலம் குலைந்து படுகின்றது.

நெடிய பழம் பகையை மிகவும் சிறிய இளம்பருவத்திலேயே வென்று தொலைத்த இராமனது சேவகச் செய்கையை வியந்து பாராட்டித் தம் குலமானங்காத்த அக்கோமகனுக்கே இந்நிலவுலகமுழுவதும் நிலையாக என்றும் உரிமையுடையது; அதுவே தரும முறையாம்; என அரசரனைவரும் ஒரு முகமா யுவந்து கூறினர். அங்ஙனம் கூறிய மகிபரை மாறி ஒரு முறை வேறு வகையாய் வினவலாயினன்.

## தசரதன் அரசரை நன்கு பரிசோதித்தது

முன்னம் கூறிய மன்னருடைய இன்னுரைகளைக் கேட்டுத் தசரதன் உளமிக மகிழ்ந்தான். மகிழ்ந்தவன் மீண்டும் அவர்களுடைய அந்தரங்க வுண்மையைத் தெளிவாக அறிய விரும்பினன். உள்ளம் காண விரும்பினமையால் கள்ளமாக மெள்ள ஒன்று பேசினன். அப்பேச்சு விநயம் வாய்ந்தது; விரகு மிகவுடையது. அடியில் வருவது காண்க.

> "மகவையின் அன்பினல் மயங்கி யானிது
> புகலநீர் புகன்றவிப் பொம்மல் வாசகம்
> உவகையின் மொழிந்ததோ? உள்ளம் நோக்கியோ?
> தகவென நினைந்ததோ? தன்மை என்? என்றான்."
>
> (மந்திரப் படலம், 79)

மன்னனுடைய சதுரப்பாடும் விநயவாசங்களும் இதன் கண் சுவை மிகுந்து வெளிவந்துள்ளன. இவனது பேச்சுத் திறம் பலவகை நிலையிலும் தலை நிமிர்ந்து நிற்கின்றது. சில அடியில் வருவன.

"அருமை நண்பீர்! என் பிள்ளைமேல் உள்ள பேரபிமானத்தினல் அவனை மணி மகுடஞ் சூட்டி அரசனுக்கிப் பார்க்க வேண்டும் என்று நான் தெரியப்படுத்தினேன்; நீவிர் அதற்கு யாதொரு மாறுபாடும் வேறு கூறுமல் எல்லாரும் ஒரு முகமாய் உடன்பட்டு உவந்து கொண்டாடுகிறீர்கள். இந்த உவகை மொழியை உள்ளன்புடன் சொல்லுகின்றீர்களா? அல்லது எனது மனநிலைக்கு இசைவாக ஒத்துப்பாடுகின்றீர்களா? உங்களுடைய உள்ளக் கிடக்கையை கள்ளம் யாதுமின்றித் தெள்ளத் தெளிய வெளியே நேரே சொல்லவேண்டும்" என இன்னவாறு மன்னர்

பிரான் அரசர்களை நோக்கிப் பேசலானான். பின்னர் அவர்களுடைய உரைகளை நிறை தூக்கி நிலைமையை ஆராய்கின்றான்.

இப் பொம்மல் வாசகம் என்றது உலக முழுவதையும் இராமன் ஒருவனே ஆள உரியவன் என அரசர் ஆர்வமீதூர்ந்து சொன்ன ஆரவாரத்தையும், ஆவலையும் குறித்து நின்றது. பொம்மல்=பொலிவு, மிகுதி.

"உவகையின் மொழிந்ததோ ? உள்ளம் நோக்கியோ ? தகவு என நினைந்ததோ ? தன்மை என் ? என மன்னன் வினவியிருக்கும் இந்த நன்னயங்கள் நயந்து நோக்கத்தக்கன.

முதல்வினா அரசரை நோக்கியது, இரண்டாவது வினா தசரதனைச் சார்ந்தது, மூன்றாவது இராமனை நேர்ந்தது, இறுதியில் உள்ளது கருதிய உறுதியைப் பொதுவாக அறுதியிட்டு உரைக்க வந்தது.

இளவரசுக்கு முடிபுனைய வேண்டும் என்று நீங்கள் இனிது மொழிந்தது உங்கள் உள்ளக் களிப்பினாலா ? அல்லது பிள்ளைக் காதல் கொண்டுள்ள என் நெஞ்சுக்கு உகப்பாகும்படி முகமனாகச் சொன்னீர்களா ? ஆட்சியை நடாத்தும் மாட்சிமையில் இராமனுக்கு உள்ள தகுதியைச் சீர்தூக்கி ஆராய்ந்து கூறினீர்களா ? நடுவு நிலைமையோடு கூடிய உங்கள் முடிவு நிலை என்ன ? உண்மையை ஒளியாது சொல்லுங்கள் என்றவாறு.

இந்த வினாக்களில் நளினமும் விநயமும் நாகரீகமும் நன்கு சுரந்து கழி பேருவகையுடன் ஒளி செய்துள்ளன.

இவ்வாறு தசரதன் கூறவே அரசர்கள் இராமனுடைய பான்மை மேன்மைகளை மிகவும் ஆவேசத்துடன் பாராட்டலாயினர்.

"மன்னர் மன்னவா ! தேவரீர் முகத்துக்கு எதிரே இனிப்பாக ஈண்டு யாதும் யாம் இச்சகம் பேசவில்லை ; எங்கள் உள்ளத்தில் உள்ளதையே உவந்து வெளியிட்டோம் ; நாங்கள் மட்டுமல்ல இந்த உலகத்திலுள்ள எந்த மனிதனும் இராமன் என்றால் அன்புமீக்கூர்ந்து இன்பம் உறுகின்றான். நேரே கண்ணால் காணாதவர்களும் அவனுடைய சீர்மை நீர்மைகளைக் கேள்வியால் அறிந்து ஆர்வ மீதூர்ந்து ஆனந்தமடைகின்றார்கள். எல்லா

வுயிர்களும் இங்ஙனம் இன்பமுறுதற்கு அவன் உள்ளப் பண்பே காரணமாயுள்ளது. சகல கலியாண குணங்களும் அவனைச் சரணமடைந்து அரணமாய் நிற்கின்றன. அவனது அரசபுனை கோலத்தைக் காணவேண்டும் என்று தருமதேவதையே கருமதேவதையைக் கைகூப்பிக் களிப்பூர்ந்துள்ளது. அவன் தலையில் முடி புனைவது உலகிலுள்ள உயிர்களின் அடிவயிற்றில் அமிர்தம் வார்த்தது போலாம்." என இன்னவாறு பேசி வந்த மன்னர் பின்னர் நன்னயமான சில உவமைகளை எடுத்துக் கூறினர். அடியில் வருவன காண்க.

"ஊருணி நிறையவும், உதவு மாடுயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவும்,
கார்மழை பொழியவும், கழனி பாய்நதி
வார்புனல் பெருகவும், மறுக்கின்றார்கள்யார்?"

இந்தக் கவிப் பொருள் மிகவும் சிந்தித்து மகிழத்தக்கது.

முன்னம் மன்னன் கேட்ட நான்கு வினாக்களுக்கும் விடையாக வந்தனபோல் இங்கே நான்கு உபமானங்கள் தோன்றியுள்ளன.

ஊருணி, மரம், மழை, நதி, என்னும் இந்நான்கும் உவமை வாசகங்கள். ஊருணி = குளம். ஊரிலுள்ளவர்களால் உண்ணப்படும் தண்ணீரினையுடையது என்னும் ஏதுவான் வந்தது.

ஒரு ஊரில் குடியிருக்கும் சனங்களெல்லாருக்கும் நல்ல குடி தண்ணீர் அமைந்துள்ள குளம் ஒன்று உண்டு; அதில் ஆண்டு முழுவதுக்கும் வேண்டிய நீர் வந்து நிறையும்பொழுது அவ்வூரில் உள்ளவர் யாராவது அந்நீர் வரவேண்டாம் என்று தடுப்பாரா? நீர் வரவு கண்டபோது உள்ளமும் உயிரும் குதூகலித்து எல்லாரும் எவ்வாறு உவந்துகொண்டாடுவாரோ அவ்வாறே இராமன் மணிமுடி புனைந்து அரச பதவிக்கு வரும்பொழுது உலகிலுள்ள உயிர்களெல்லாம் உள்ளம் களித்து ஆர்வமீதூர்ந்து ஆனந்தம் கொண்டாடும் என்பதாம். ஊருணியோடு நேர்வைத்ததனால் இராமனது இனிய நீர்மையும், இதம்புரியியல்பும், உலகம் அவனை உண்ணும் நீரினும் உவந்தெண்ணியுள்ளதும் உணரலாகும். உலகுயிர்கட்டு நிலையான உபகாரி என்பதாம்.

பரம்பரையாக ஊருக்கு உயிராதாரமாயுள்ள ஏரியில் நீர் சுருங்கும்போது புது வெள்ளம் பொங்கி வரும்; அங்ஙனம் வருங்கால் அவ்வூரவர் பேருவகை கூர்வர்; அதுபோல் உலகுக்கு ஆதாரவாயுள்ள தசரதன் முதுமை யடையவே இளவரசனான இராமன் அரியணைக்கு வருகின்றான்; அவ்வரவு உலகினர் எல்லார்க்கும் உயர் பேரின்பமாய் ஓங்கி நிற்கும் ஆதலால் ஊருணி நீர் இங்கே உவமையாய் வந்தது. பழைய நீர் தசரதன், புது வெள்ளம் இராமன், ஊருணி அரசியல், ஊரவர் உலகினர், என உவமை நிலையை ஊன்றி யுணர்ந்து கொள்க.

பயன்மரம் என்றது கனிமரத்தை. மதுரமான கனிகள் பல பழுத்து இனிய மரம் ஒன்று பருவகாலத்தில் செழிப்புறின் மக்கள் அதனைக் கண்டு களிப்புமீக்கொள்வர்; அதுபோல் அரிய பல குணநலங்களை இயல்பாகவுடைய இராமன் மணிமுடியுஞ்சூடி அரசாகவரின் அகிலவுலகங்களும் உவகை மீக்கொள்ளும் என்க.

கார்மழை என்றது கோடை மழையினும் வேறுபாடு தெரிய வந்தது. பருவமழை பொழியின் பயிர்களும் உயிர்களும் பெரு மகிழ்வடைதல்போல் கார்வண்ணனை இராமனும் அரசுமுறை புரியின் உலகுயிர்கள் யாவும் உயர் நலம் அடையும் என்பதாம்.

கழனிபாய் நதி என்றது வயல்களுக்கு நீர் நல்கும் சீவநதியை. கழனி=வயல். அரிய விளை நிலங்களுக்கு உரிய நீர் உதவும் பெரிய நதியில் வெள்ளம் பெருகி வருங்கால் எல்லாரும் உள்ளங் களிப்பர்; அதுபோல் நாடு நகரங்களிலுள்ள மக்கள் யாவருக்கும் பேராதரவாயுள்ள இராமன் நேரே அரச திருவுடையின் பாரெங்கும் அதனைப் பாராட்டி மகிழும் என்பதாம்.

உயிர்களுக்கெல்லாம் பேருதியமாய்ப் பெருகி வருகின்ற இனிய உறுதி நலனை வேணவாவுடன் அனைவரும் விழைந்து கொள்வாரேயன்றி மறுத்து நிற்பவர் யாரும் இரார் என்பார், மறுக்கின்றார்கள் யார்? என்றார். வினா, துணிவும் தெளிவும் தோன்றவந்தது.

உவமைகளை மாத்திரம் உரைத்துவிட்டுப் பொருள் நிலையை உய்த்துணர்ந்து கொள்ளும்படி வைத்திருக்கிறார். இங்ஙனம்

வருவது பிறிதுமொழிதல் என்னும் அணியாம். இந்தப் பாடல் மூன்று திருக்குறள்களைப் பொதிந்து வந்துள்ளது.

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (குறள், 215)

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின். (குறள், 216)

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு. (குறள் 211)

வள்ளுவப் பெருந்தகையின் வாய்மொழிகளைவாரியெடுத்துத் தம் சீரிய பனுவல்களில் ஆர்வமுடன் கம்பர் அமைத்திருக்கும் அமைதி இதனால் இனிது புலனாம்.

உபகாரிகளிடம் செல்வம் பெருகின் அப்பெருக்கு எல்லா உயிர்கட்கும் பொது உரிமையா யின்பம் பயக்கும்; அவர் யாதொரு பயனையும் எதிர்பாராமல் வானம்போல் வையம் உய்யச் செய்வர் என்பது இவற்றின் கருத்தாம்.

இந்த உவமைகளை இங்கே எடுத்துக்காட்டியதனால் இராகவன் உலகு அவாம் பேரறிவாளனாய், உயர் நயனுடையனாய், மாரிபோல் சீரிய பண்புகள் வாய்ந்து யாரும் நலமுறப் பேருபகாரியாயிருக்கின்றான் என்பதும், அவனிடம் அரச திரு அடைவதை அகில வுலகங்களும் உவந்து கொண்டாடும் என்பதும் உணர்த்தியபடியாம்.

"சீவகோடிகள் யாவும் இராமனிடம் அன்புமண்டி ஆவல் கொண்டுள்ளன; அவ்வாறே அவனும் ஆருயிர்கள்மேல் ஆர்வமீதூர்ந்து அருள் சுரந்து நிற்கின்றான்.

அப்பெருமான் பக்கல் நாங்கள் உரிமை பூண்டிருப்பதும், திருமுடி புனைவதில் உவகை கொண்டு நிற்பதும், உலகொப்பனைக்காகவல்ல; எங்கள் உள்ளமும் உயிரும் அத்தரும மூர்த்திபால் பரவசமாய்ப் பதிந்துகிடக்கின்றன" என அரசர் இவ்வாறு உரைசெய்து முடித்தார். முடிக்கவே தசரதன் உள்ளத்தில் உவகை வெள்ளம் பொங்கி யெழுந்தது. எல்லையில்லாத மகிழ்ச்சியில் திளைத்து அரசரை நோக்கி ஆர்வமொடு பேசினான்.

அவருடைய உரைகளைக் கேட்டு இவன் உவந்து நின்ற நிலையும், உரையாடிய வகையும் ஊன்றி நோக்கத் தக்கன. அடியில் வருவன காண்க.

"மொழிந்தது கேட்டலும் மொய்த்து நெஞ்சினைப்
பொழிந்தபே ருவகையான், பொங்கு காதலான்,
கழிந்த தோர் இடரினன், களிக்கும் சிந்தையான்,
வழிந்தகண் ணீரினன், மன்னன் கூறுவான் :

செம்மையில் தருமத்தில் செயலில் தீங்கின்பால்
வெம்மையில் ஒழுக்கத்தில் மேன்மை மேவினீர்
என்மகன் என்பதென் ? நெறியின் ஈங்கிவன்
நும்மகன் கையடை நோக்கும் ஊங்கென்றான்."

(மந்திரப் படலம், 84, 85)

தனது அருமை மகனுடைய பெருமையைப் பிறர்வாயால் கேட்கும் போதெல்லாம் தசரதன் பெருமகிழ்ச்சியடைகின்றான். அந்த உவகைப் பெருக்கால் அவனுக்கு உளவாகும் மெய்ப்பாடுகளைக் கவி எப்படி விளக்கிக் காட்டுகின்றார்? என்பதை இடங்கள் தோறும் ஊன்றியுணர்ந்து கொள்ளவேண்டும்.

உவகையான், காதலான், இடரினன், சிந்தையான் என்பன அகத்தெழு நிகழ்ச்சிகள். பிள்ளைப் பிரியத்தால் அவன் உள்ளமும் உயிரும் அடையும் உவகைப் பெருக்கும் உணர்ச்சித் திறங்களும் அளவிடலரியனவாய் நிலைநிமிர்ந்துள்ளன.

வழிந்த கண்ணீரினன் என்றது உள்ளே எழுந்த ஆனந்தத்தை அளந்தறிந்து கொள்ள வந்தது.

இங்ஙனம் உவந்த மன்னன் அரசரை நோக்கிப் பல படப் புகழ்ந்தான். மேன்மை மேவினீர் என்பதைச் செம்மை முதலியவற்றோடு தனித்தனி கூட்டி நோக்குக.

தீங்கின்பால் வெம்மையில் என்றது தீயகாரியங்களைவெறுத்தொழிப்பதில் மேன்மையாளர் என்றவாறு. பல வகையிலும் உயர்ந்த ஒழுக்கங்களில் சிறந்த உத்தமர்களே! "இராமனை என் மகன் என்பது என்? இன்று முதல் நும்மகன்; அவன் உங்கள் அடைக்கலம்; இனி எல்லாவற்றையும் நீங்களே பார்த்துக் கொள்ளவேண்டியது" என்று தன் வார்த்தையை முடித்தான்.

இந்த உரைகள் அந்த அரசர்களை எவ்வளவு பரவசப்படுத்தியிருக்கும்! எதிர்கால நிலையை எண்ணிச் சொன்னபடியிது. காரியசாதனையில் தசரதனது சாதுரியமும் சாகசவசனங்களும் எவ்வளவு இடம் பெற்றுள்ளன என்பது இதனால் அறிந்து கொள்ளலாம்.

தன்னிடம் வணங்கி ஒழுகி வந்ததுபோல் புதிதாய்ப்பட்டத்துக்கு வருகின்ற இளவரசிடமும் சிற்றரசர் பணிந்து நடந்து வரவேண்டுமே என்று இன்னவாறு மன்னன் உறவுரிமையை உறுதிபெற வலியுறுத்தினன்.

அரசர்களிடம் இவ்வாறு அளவளாவியிருந்து விட்டுத் தசரதன் தனியிடத்தைச் சார்ந்தான். வந்தவர்களும் தங்கள் தங்களுக்கு நியமித்திருந்த மாளிகைகளில் தங்கியிருந்தனர்.

மறுநாள் மன்னர்பிரான் கணித வல்லுநரை அழைத்து முடி சூடுதற்குரிய நன்னாளைப் பார்க்கும்படி பணித்தான். அவர் கோள்களை ஆராய்ந்து நாள் நலந் தெரிந்து நல்ல முகூர்த்தத்தை நன்கு குறித்தார். சக்கரவர்த்தி அவர்க்குத் தக்க பரிசளித்தான்; சோதிடர் போனபின் வசிட்டரிடம் முடிபுனை கடிகையை இராமனுக்கு அறிவித்து அரசுமுறைகளை உரை செய்யும்படி வேண்டினன். அருந்தவர் அவ்வாறே அப்பெருந்தகையிடம் சென்று உற்றதை உரைத்து நீதி உபதேசங்கள் பல ஓதிவந்தார்.

மகனுக்கு மகுடாபிடேகம் நேர்ந்துள்ளதை அந்தப் புரத்திலிருந்த கோசலை யறிந்து பெருமகிழ்ச்சியடைந்து தானங்கள் பலதந்து தெய்வங்களை வழிபட்டுச் செய்தவங்கள் புரிந்து சிந்தை விழைந்திருந்தாள். எல்லாரும் இன்பமீக்கூர்ந்தார்,

## தசரதனும் கைகேசியும்

அயோத்தி நகரம் எங்கணும் அரிய பெரிய அலங்காரங்கள் நிகழ்ந்தன. பறுபுலங்களிலிருந்து மகுட மன்னர் முதல் அனைவரும் ஆர்வமுடன் ஊர்திகளில் வந்துகொண்டிருந்தனர். இந்த ஆரவாரங்களை அந்தப்புரத்தின் மேல்மாடத்திலிருந்த மந்தரை என்னும் கூனி கண்டாள். கோமுடி சூடுதல் தெரிந்தாள். கொதிப்பு மீக்கொண்டாள். கடுத்து வந்து கைகேசியிடம் கலகம் மூட்டினள். "இராமன் பட்டத்துக்குவரின், உன் மகன்

பரதனும் நீயும் அவமானப்பட்டு அவமே அழிந்துபோவீர்! அரசு பரதனுக்கே உரியது; காரியமுடியுமுன் விரைந்து கைக்கொள்க; அயர்ந்திராதே'' என்று விரகுடன் நயந்து பேதித்தாள். முதலில் அவள் மறுத்தாள்; விடாப் பிடியாய் இவள் உரைத்த தீயபோதனைகளால் முடிவில் அவள் தூயசிந்தனையும் திரிந்தது; தீங்கு செய்யத்துணிந்தாள். முன்னம் சம்பராசுரனோடு தசரதன் போராடியபொழுது கைகேசி தேரோட்டியதை வியந்து இரண்டு வரங்களைப் பெற்றுக்கொள்ளும்படி விழைந்து சொன்னான். வேண்டியபோது கொள்வதாக அவள் விட்டு வைத்திருந்தாள்.

இப்பொழுது அவ் இரண்டனுள் ஒன்றால் இராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டு, மற்றொன்றால் பரதனுக்குப் பட்டங்கட்டிக் கொள்ளவேண்டும் என்று திட்டங் கட்டிக்கொண்டாள். இந்தச் சூழ்ச்சியைக் கூனியே குறித்துக்கொடுத்தாள். அவள் உரையின் படியே செய்ய அதிசதுராக விரைவு செய்தாள்.

நாள்தோறும் சக்கரவர்த்தி கைகேசியின் அரண்மனைக்கே படுக்கைக்கு வருவன். அங்கு வைத்தே காரியத்தை முடித்துக் கொள்ளவேண்டும் என்று அவள் கருத்தூன்றி நின்றாள். அந் நிலைக்கு அநுகூலமாக அவள் செய்துகொண்ட நீலித்தனங்கள் பல.

கூனி போனபின் தன் மேனியிலணிந்திருந்த அருமையான அணிகளை அவிழ்த்தெறிந்தாள். பட்டாடையைக் களைந்தொதுக்கிப் பழந்துணியைக் கட்டிக்கொண்டாள். நெற்றியில் அணிந்திருந்த திலகத்தை முற்றத்துடைத்தாள். மலர்மாலையைக் கலைத்தாள். கூந்தலைக் குலைத்து விரித்து விடுத்தாள். தலைவிரி கோலமாய்த் தரையில் படுத்துக்கொண்டாள். உயர்ந்த நிலையினளாயினும் உள்ளம் பழுதானாள். பேரழகியான அவள் பாரிழவாகப் படுத்திருந்த அலங்கோலம் அவலமிகவுடையது. அவளுடைய இயல்புகள் விசித்திரமான நிலையில் விளைந்துள்ளன. இந்தப் பாத்திரத்தைப் பற்றித் தனியே கூறுங்கால் யாவும் பார்க்கலாம்; ஆயினும் இவள் பாசாங்கு செய்து பாடுகிடந்த படுகிடக்கையை மட்டும் பார்த்துப் போவோம். மன இடும்புடன் மாறுபட்டு அந்தப்புரத்தில் அமளி அயலே அலங்கோலமாய்த் துவண்டு

கிடந்த நிலையைக் கவி அலங்காரமாக எழுதிக் காட்டியிருக்கிறார். அக்காட்சியை இங்கே காண வருகின்றோம்.

### கைகேசி கொண்ட அலங்கோலங்கள்

"கூனி போனபின் குலமலர்க் குப்பைநின் றிழிந்தாள்;
சோனை வார்குழற் கற்றையிற் சொருகிய மாலை
வான வார்மழை நுழைதரு மதிபிதிர்ப் பாள்போல்
தேனவாவுறு வண்டினம் அலமரச் சிதைத்தாள்; (1)

விளையும் தன்புகழ் வல்லியை வேரறுத் தென்னக்
கிளைகொள் மேகலை சிந்தினள்; கிங்கிணி யோடும்
வளை துறந்தனள்; மதியினில் மறுத்துடைப் பாள்போல்
அளக வாணுதல் அரும்பெறல் திலதமும் அழித்தாள்; (2)

தாவின் மாமணிக் கலன்மற்றும் தனித்தனிச் சிதறி
நாவி நன்குழல் நானிலந் தைவரப் பாப்பிக்
காவி யுண்கண்கள் அஞ்சனம் கான்றிடக் கலுழாப்
பூவுதிர்ந்த தோர் கொம்பெனப் புவிமிசைப் புரண்டாள்; ()

நவ்வி வீழ்ந்தென நாடக மயில்துயின் றென்னக்
கவ்வை கூர்தரச் சனகியாம் கடிகமழ் கமலத்து
அவ்வை நீங்குமென் றுஅயோத்திவந் தடைந்தஅம் மடந்தை
தவ்வை யாமெனக் கிடந்தனள் கைகயன் தனையை." (4)

(மந்தரை சூழ்ச்சிப் படலம், 85, 88)

கைகேசியது அலங்கோல நிலையைக் குறித்து வந்திருக்கும் இந்த நான்கு பாடல்களையும் ஊன்றி நோக்கவேண்டும். நறுமணமுடைய மலரணையைவிட்டுக் கீழே இறங்கினாள் ஆதலால் குலமலர்க் குப்பை நின்று இழிந்தாள் என்றார். குலமலர் என்றது மல்லிகை பிச்சி மகிழம் முதலிய நல்ல சாதி மலர்களை. கூந்தலுள் பொதிந்திருந்த மாலையைப் பிதிர்த்து எறிந்தது மேகத்துள் புகுந்திருந்த சந்திரனைச் சிதைத்தது போல் இருந்தது என்பதாம். வாசனைக்கும் தேனுக்கும் ஆசையுற்று வண்டுகள் வந்து மொய்த்து முரன்று நின்றன; மாலையைச் சிதைக்கவே அவை அலமந்து அலைந்தன ஆதலால், வண்டினம் அலமரச் சிதைத்தாள் என்றார். சூடியிருந்த மாலையின் மணமும் மாண்பும் இதனால் அறியலாகும். அறியவே அவளது இன்பச் செவ்வியும், இராச போகங்களின் வைபவங்களும், எழில் நலங்களும் இனிது புலனும்.

கறுத்து அடர்ந்து நெய்த்து நீண்டு விரிந்து பரந்து இருந்தமையால் கூந்தலைச் சோனை வார் குழல் என்றார். சோனை=கார் மேகம், விடாமழை. கார்மேகம் நீர் சொரியக் கனிந்து காலூன்றி நின்றதுபோல் கூந்தல் வடிந்து வார்ந்து கிடந்ததென்பதாம்.

இடையில் அணிந்திருந்த மேகலையைக் கழற்றி எறிந்தது புகழ்க் கொடியை வேரோடு அறுத்து வெளியே வீசியது போல் இருந்தது. விலையுயர்ந்த வயிரங்கள் பதித்து வெள்ளிய ஒள்ளிய முத்துக்கள் கோத்திருந்தமையால் புகழோடு அது ஒத்தெண்ண வந்தது. புகழை அடியோடு அறுத்தாள் என்றதனால் பழியை நெடிதாக விளைத்துப் பல துயரங்களை வளர்த்தாள் என்பது புலனும். கிங்கிணி=காலணி. வளை=கையணி.

நெற்றியில் இட்டிருந்த திலகத்தை அழித்தது மதியில் மறுத்துடைத்ததுபோல் இருந்தது. கலைகள் நிறைந்த பூரண சந்திரன்போல் அவளது திருமுகமண்டலம் ஒளி வீசியுள்ளமை இதனால் உணரலாகும்.

அரிய மணியணிகளையும் மலர்மாலைகளையும் அகற்றித் தனது கரிய நீண்ட கூந்தல் அயலெங்கும் பரந்து விரிந்து கிடக்க அவள் பரிதாபமாய்த் தரையில் புரண்டு கிடந்தாள் ஆதலால், பூ உதிர்ந்ததோர் கோம்பு எனப் புவிமிசைப் புரண்டாள் என்றார். மேனியின் மென்மையும் தன்மையும் விளக்கி இது பொழுதடைந்துள்ள வெறுமையும் குறித்த படியிது.

மிருது மேனியளான அவள் இவ்வாறு வறிதே படியில் படிந்து நொடியில் கொஞ்சம் அழுகையையும் வரவழைத்துக் கொண்டாள். நெஞ்சம் துயருறாமலே வஞ்சக் கண்ணீர் வடிப்பதில் வஞ்சியர் வல்லர் என்பதை அவளுடைய அஞ்சன நயனங்கள் நயமாக அன்று காட்டி நின்றன.

கருங்குவளைபோன்ற அழகிய கண்களில் எழுதியிருந்த மை விழுதுவிட்டோட அழுதுகிடந்த அவளது அவநிலையில் வடிவும் வனப்பும் காட்டி முடிவில் நவமாகச் சில உவமைகளை யுரைத்துக் கவி ஒரு நிலைமையை விளக்கியிருக்கின்றார்.

69

பிணைமான் ஒன்று துணையின்றித் துயருழந்து வீழ்ந்தது போலவும், அழகிய மயில் அயர்ந்து துயின்றதுபோலவும் அலமந்து கிடந்தாள் என்பார்,

நவ்வி வீழ்ந்தென, நாடக மயில் துயின்றென்ன என்றார். நவ்வி=மான். நாடக மயில் என்றது கலாபம் விரித்துக் குலாவி நடித்த கோலமயில் என்றவாறு. உவமைகள், நோக்கும் சாயலும் நோக்கி வந்தன.

அகத்தே துயரம் இல்லாதிருந்தும் புறத்தே அது மிகவும் பெருகித் தோன்றும்படி உருவும் செயலும் மருவி இருந்தாள் ஆதலால் கவ்வை கூர்தர என்றார். கவ்வை=துன்பம். கூர்தல் =மிகுதல். உள்ளம் கோடிக் கள்ளம் புரிந்து கிடந்த அக்கரவும் விரகும் தெரிய வந்தது. இக்கிடை, உலகுயிரடங்கலும் துயரடையத் தொடங்கியுள்ளமையால் கவ்வை கூர்தல் எல்லாரையும் எதிர் நோக்கி நின்றது.

கைகேசி பொய்யாகக்கூர்ந்த கவ்வை உலகுக்கு மெய்யாக நேர்ந்ததென்க. வைய மையல் துறந்த மெய்யறிவாளரையும் இவ்வெய்ய துயர் விடாது பிடித்துள்ளமையைக் காவியத்துள் பின்பு காணலாம்.

"கவ்வையம் பெருங்கடல் முனியும் கால் வைத்தான்"
(நகர்நீங்கு படலம், 161)

என வசிட்டரைக் குறித்துள்ளதும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

கைகேசி இப்பொழுது அடியிட்டிருப்பது இராமன் முடிதுறந்துபோக, தசரதன் சாக, பரதன் பரிதபிக்க, படி முழுவதும் படுதுயரடைய, நெடிய துன்பங்களுக்கெல்லாம் நிலையாக முன்னுறக் கொடி கட்டிய படியாம் என்பதைக்கவி இங்கே தெளிவாக வடிகட்டி வைத்திருக்கிறார்.

கடிகமழ் கமலத்து அவ்வை என்றது இலட்சுமியை.

கடி=வாசம். கமலம்=தாமரை. மணம் கமழ்கின்ற செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் தாய் என்றவாறு.

திருமகளை சனகமன்னன் மகளாய் வந்து தோன்றியிருத்தலால் சனகியாம் அவ்வை என நின்றாள். உயிர்களுக்கு அருள்

புரிந்து ஆதரிக்கும் தாய் எனத்திருவின் அருமையும் பெருமையும் உரிமையும் உணர அவ்வை என்றார். அவ்வை=தாய்.

" அவ்வைக்கு மூத்த மாமன் " (சிந்தாமணி, 1046)
என்புழி அவ்வை உணர்த்தி நிற்றல் அறிக.

திருவயோத்தியை விட்டுச் சீதேவி நீங்கப் போகின்றாள் என்று தெரிந்து மூதேவி முன்னதாக வந்து சக்கரவர்த்தியின் அரமனையுள் புகுந்து முடங்கிக் கிடந்ததுபோல் கைகேசி நுடங்கிக் கிடந்தாள் என்பார்,"கைகயன் தனையை, அம்மடந்தை தவ்வையாம் எனக் கிடந்தனள்" என்றார்.

மூதேவி இலக்குமிக்கு மூத்தவள் ஆதலால், "அம்மடந்தை தவ்வை" என்றார். தவ்வை=மூத்தவள், மூதேவி என்க.

" தவ்வையாயினும் தாயே ஆயினும் " (பெருங்கதை, 3, 14)

" தவ்வையராகிய தாரையும் வீரையும்
அவ்வையராயினீர் நும்மடி தொழுதேன்" (மணிமேகலை,11)

இவற்றுள் தவ்வை என்பது மூத்தவளைக் குறித்து வந்துள்ளமை காண்க.

பாற்கடல் கடைந்தபொழுது முதலில் மூதேவி தோன்றினாள் ஆதலால் அவளை மூத்தவள் எனவும், அதன்பின் பிறந்த அழகிய திருவை இளையவள் எனவும் வழங்கலாயினர்.

அவள், கேட்டிற்கு உரியவள்; இவள், ஆக்கத்திற்கு அதிதேவதை. இருவரும் ஒருவரை ஒருவர் நேரே எதிர்முகம்பாரார். இருளும் ஒளியும் போல் ஒருத்தி நின்ற இடத்தில் மற்றொருத்தி தலைகாட்டமாட்டாள் என்க.

*" அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்." (குறள், 167)

* பொருமையுடையவனைத் திருமகள் வெறுத்து நீங்க மூதேவி வந்து அவனைப் பிடித்துக்கொள்வாள் என்பதாம். பிறர் ஆக்கத்தைக் கண்டு பொருமைப்படின் ஆக்கத்தின் அதிதேவதையாகிய இலட்சுமி அவனை அருவருத்து வெறுத்துப்போவள். போகவே இருமையுமிழந்து அவன் இழிதுயரடைவன் என்க. அழுக்காறு கொடிய கேடுடையது ஆதலால் அதனை யாதும் கொள்ளலாகாதென்பது குறிப்பு.

என வள்ளுவப்பெருந்தகையும் இந்தத் தங்கைதமக்கை எடுத்துக்காட்டி வையம் உய்ய உணர்த்தியிருக்கும் அருமை ஊன்றி யுணரத் தக்கது.

தன் மனக்கோட்டம் உலகத்திற்குப் பெருங்கேட்டை விளைத்துநிற்றலால் கைகேசி இங்கே கேட்டை என நின்றாள்.

பேரரசியாய்ச் சீரும் சிறப்பும் பெற்றுப் பெருமித நிலையில் பெருகியிருந்த கைகேசி ஒரு சிறு தீய எண்ணம் உள்ளே புகுந்தமையால் இவ்வாறு இழிவாக எள்ளப்பட்டாள் என்க. உள்ளம் சிறிது கெடின் மனிதன் எல்லாம் கெட்டு இழிக்கப்படுவான் என்பது இதனால் உணரநின்றது.

கைகேசியை மூதேவி என்று இப்படி அமங்கலமாகச்சொன்னது இனி அவள் மங்கலம் இழத்தலையும் குறிப்பாக உணர்த்தி நின்றது. எந்த நிமிடத்தில் அணிகலங்களைச் சிதறினாளோ அப்பொழுதே அவள் விதவைக் கோலத்திற்கு அடிகோலிக் கொண்டாள் என்க.

அரைச் சேலையோடு தரைக் கிடையாய்க்கிடந்த இந்தஅலங் கோலம் என்றும் நிலைத்தகோலமாய் நிலைபெற்று நின்றது.

தனையை = மகள். தந்தையின் தன்மையள் என்றவாறு. கைகயன் என்றது கேகய தேசத்து அரசனை அசுவபதியை.

கைகேசியை இங்கே தசரதன் மனைவி என்னாது கைகயன் தனையை என்றது பிறந்த இடத்தின் பிடிவாத நிலைமை தெரிய.

புகுந்த இடம் மிகுந்த துயரடைய முயல்கின்றாள் ஆதலால் அவளது இயலும் செயலும் அயலும் அறிய வுரைத்தார்.

கிடந்துள்ள மூதேவி எழுந்தவுடனே சீதேவி நடந்து கொள்ளநேரும் என்பதாம். சீதை இராமனோடு வனம் போக நேரும் மூண்டிருப்பதை இவ்வளவு நயமாக வுரைத்திருக்கிறார்! நேர்ந்த நிகழ்ச்சியால் மேல் நிகழவுள்ளதை ஓர்ந்துகொள்ள வுரைத்தபடியிது.

இவ்வளவில் மந்தரை சூழ்ச்சிப் படலம் முடிகின்றது; பின்பு கைகேசி சூழ்வினைப் படலம் தொடங்குகின்றது.

அவலப் போர்வையைப் போர்த்துக்கொண்டு மன இடும்புடன் கைகேசி இங்ஙனம் கலுழ்ந்து கிடந்தாள்.

## தசரதன் பள்ளியறைக்கு வருவது

இவள் இப்படிக் கிடக்க அரசர் பிரான் தனது அருமை மகனுடைய மகுடாபிடேகத்திற்கு வேண்டிய ஆயத்தங்களை யெல்லாம் மந்திரி பிரதானிகளுடன் கலந்து நன்முக ஆராய்ந்து முடிவுசெய்து வைத்துவிட்டு இரவு பதினைந்து நாழிகையளவில் கொலு மண்டபத்திலிருந்து புறப்பட்டு அந்தப்புரத்திற்கு வந்தான். வரும்பொழுது அரசர் பலரும் உரிமையுடன் மரியாதை யாக உடன் தொடர்ந்து வந்தனர். மாளிகை வாயிலையடையவே, அனைவரும் வணங்கி விடை பெற்றகன்றனர். சக்கரவர்த்தி உள்ளே நுழைந்தான்; சேடியரும் செவிலித் தாயரும் பணிப் பெண்களும் வழக்கம்போல் எதிர்கொண்டுவந்து வணங்கி நிற்க மன்னன் மகிழ்ந்து வந்தான். பள்ளிமண்டபத்தின் உள்வாயில் வரவும் எல்லாரும் அயலொதுங்கினர். ஏந்தல்மட்டும் தனியே புகுந்தான். அற்புத நிலையில் அமைந்துள்ள அந்த விசித்திர மாளிகை அன்று பொற்பிழந்து தோன்றியது. மன்னர்பிரான் வரும்பொழுதெல்லாம் புன்னகை தவழ இன்முகம் பொலிய எழில் ஒழுக எதிர்நிற்கும் இனிய துணைவியைக் காணுமையால் அவன் துணுக்கம் மீக்கொண்டான்; அடுத்துப் பள்ளியறையை அணுகினன். நடுநிசியில் முடிமன்னன் அங்கே வந்த வகையை யும் நின்ற நிலையையும் நேர்ந்த நிகழ்ச்சிகளையும் கவிப்படங்களில் இங்கே காணவேண்டும். அடியில் வருவன காண்க.

நாழிகை கங்குலின் நள்ளடைந்த பின்றை
யாழிசை அஞ்சிய அஞ்சொல் ஏழை கோயில்
வாழிய என்றயில் மன்னர் துன்ன வந்தான்
ஆழி நெடுங்கை மடங்கலாளி அன்னுன். (1)

வாயிலின் மன்னர் வணங்கி நிற்ப வந்தாங்கு
ஏயின செய்யு மடந்தைமாரோ டேகிப்
பாயல் துறந்த படைத் தடங்கண் மென்றேள்
ஆயிழை தன்னை அடைந்த ஆழி மன்னன். (2)

அடைந்தவண் நோக்கி அரந்தை என்கொல் வந்து
தொடர்ந்த தெனத்துயர் கொண்டு சோருநெஞ்சன்
மடந்தையை மானை எடுக்கும் ஆனையேபோல்
தடங்கைகள் கொண்டு தழீஇ எடுக்க லுற்றுன். (3)

நின்று தொடர்ந்த நெடுங்கை தம்மை நீக்கி
மின்றுவள் கின்றது போலமண்ணில் வீழ்ந்தாள்
ஒன்றும் இயம்பலள் நீடுயிர்க்க லுற்றுள்
மன்றல் அருந்தொடை மன்னன் ஆவி யன்னுள். (4)
(கைகேசி சூழ்வினைப் படலம் 1—4)

காதலும் சோதலும் இவற்றுள் கலந்திருக்கின்றன.

யாழ் இசை அஞ்சிய அம்சொல் ஏழை எனக் கைகேசியை இங்கே விதந்து காட்டியிருக்கிறார். யாழினது இசை மிகவும் இனிமையுடையது. அந்த இனிய கீதமும் இவளது வாய்மொழி எதிரே இன்னுதாய் இழிந்துபடும்; அவ்வளவு அதிமதுரமான அழகிய சொல்லினையுடையாள் என்பதாம்.

செவிக்குஇனிமையான சுவைகளில் மிகவும் பேர்பெற்றுள்ள யாழிசையும் இவள் சொல்லெதிரே தலைகாட்ட முடியாமல் தாழ்ந் தொழியும் என்பார் அஞ்சிய என்றுர். அஞ்சுதற்குரிய நெஞ்சு இசைக்கு இல்லையாயினும் நெஞ்சுடையார் சுவையுணர்ந்து கொள்ளும்படி இங்ஙனம் சொல்லியருளினுர்.

யாழிசையும் அஞ்சி ஒளியுமாறு விஞ்சிய சுவை தோய்ந்த அத்தகைய இன்னசொல்லுடையவள், யாரும் அஞ்சத்தக்க நஞ்சி னும் கொடிய வன்சொல் ஒன்றைச் சொல்லப் போகின்றுளே என்று தம் அச்சத்தையும் கவி முந்துற இதில் உய்த்துணர வைத்திருக்கிறார். முன் இனிமை நோக்கி அஞ்சிய இசை பின் இன்னுமை தெரிந்து இனைய நேர்ந்தது என்க.

யாழ், குழல் முதலிய இசைக் கருவிகள் எவ்வளவு இனிய கீதங்களைப் பொழிந்தாலும் அவற்றையெல்லாம் வெறுத்து விடுத்துக் கைகேசியின் பேச்சை விழைந்து பெரு மோகமுடைய னுய்த் தசரதன் அவளிடம் உருகியிருப்பான் என்பது குறிப்பு.

உள்ளமும் உணர்வும் களிகூரும்படி உரையாடி வந்த அவள் இன்று உயிரழியும்படி உரையாட வருகின்றுள் ஆதலால் வேறெல்லாவற்றையும் விடுத்துச் சொல்லால் அவளை இங்கே சுட்டிக் கூறினுர்.

ஏழை என்பது வறியனையும் அறிவிலியையும் பெரும்பாலும் உணர்த்திவரும். அபலைகள் என்னும் கருத்தில் பெண்களையும் ஒரோவழி இம்மொழியால் குறிப்பர்.

"ஏழை மாதரைச் சூழ்வர நின்ற" (பெருங்கதை 4, 14) என்புழி ஏழை நிலை காண்க.

செல்வம் மிகவுடையராயினும் அதன் பயனை இழந்து நிற்பின் அவர் ஏழை என்று இழிக்கப்படுவர்.

"எனதெனா தென்றிருக்கும் ஏழை பொருளை
எனதெனா தென்றிருப்பன் யானும்—தனதாயின்
தானும் அதனை வழங்கான் பயன்துவ்வான்
யானும் அதனை அது." (நாலடியார், 276)

தானும் நன்ருக அனுபவியாமல், பிறர்க்கும் யாதும் உதவாமல் பொருளைப் பொத்தி வைத்திருக்கும் உலோபியைக் குறித்து உரைத்தபடியிது. ஒரு நலமும் செய்யாமல் என்னுடையது என்னுடையது என நெஞ்சுள் இறுமாந்து வீணே எண்ணிக் கொண்டிருக்கின்ற பிசுனன் பொருளை நானும் எனது எனது என எண்ணியிருப்பேன் என்று தெருவில் நின்றுகொண்டு ஒருவன் சொல்லிக் களித்தான். அவனை மற்ருெருவன் பார்த்து அது எப்படி உனக்குச் சொந்தமாம்? என்ருன். அப்பொருளில் ஒரு சிறிதும் அவன் எடுத்து உண்ணுன்; கொடுத்து மகிழான். யானும் அதில் யாதும் எடேன்; யார்க்கும் கொடேன். அவனுக்கு எவ்வளவு உரிமையுளதோ, அவ்வளவு எனக்கும் உண்டு. இருவருக்கும் இதில் யாதொரு வேற்றுமையுமில்லை. இன்னும் ஒரு வகையில் அவனினும் நான் பெரிய பாக்கியவான். என்னை? அப்பொருளில் சிறிது குறைந்தாலும் அவன் உயிர் துடித்துச் செத்தேபோவான்; அது அடியோடு அழிந்துபோனுலும் நான் யாதும் வருந்தாமல் உவந்திருப்பேன் என்பதாம்.

நகைச்சுவை ததும்ப உரைத்திருக்கும் இதன் நயத்தைப் பார்க்க. பொருள் பெரிதும் உடையானை ஏழை என்று இதில் சுட்டியிருப்பதே ஈண்டு நமக்கு வேண்டியதாம்.

அறமும் இன்பமும் அருளவல்ல பொருளைத் தன் கையில் வைத்திருந்தும் அதனைப் பயன்படுத்தத் தெரியாமையால் பழியும் துன்பமும் அடைந்து ஏழை என அவன் இழிவுறலாஞன்.

உள்ளமும் உயிரும் உவகையுறச் செய்யும் இன்சொல் உடையளாயிருந்தும் அவ்வுடைமையை இழந்து வறிதே இழிந்துபடுதலால் கைகேசி இங்கே ஏழை என நின்ருள்.

நங்கை, மங்கை, வஞ்சி, என யாதாவது ஒன்றை அஞ்சோல் என்னும் சீருடன் அமைத்தாலும் அடி நன்ருக அமைந்துவிடும்; அங்ஙனம் யாதும் கூருமல் ஏழை என இடை நுழைத்து வைத்தது அவளது அறியாமையும் அழிவும் தெரிய என்க.

தன் தாலியறவே வேலிகோலியுள்ளமையால் அவளுடைய எதிர்கால நிலைமையை நினைந்து கவி இங்ஙனம் இரங்கிக்கூறினர்.

"வாழிய என்றுஅயில் மன்னர் துன்ன வந்தான்"

என்றது சக்கரவர்த்தி அங்கே வந்த திருவின் வைபவம் தெரிய நின்றது. வீழிய வருதலால் வாழிய வந்தது.

ஆளி நிலை.

மடங்கல் அன்னன், ஆளி அன்னன் எனத் தனித்தனி கூட்டி நோக்குக. ஆளி என்பது சிங்க உருவமும் விசித்திரமான துதிக்கையு முடையது. கூரிய பற்கள் அமைந்தது; வீரியம் மிக்கது. சிங்கத்தினும் பேராற்றல் வாய்ந்தது. இத்தகைய சிறந்த மிருகம் பண்டைக் காலத்தில் இந்நாட்டில் இருந்தது. இந்த வல்விலங்கே யானையைக் கொல்ல வல்லது. இதன் முழக்கத்தைக் கேட்டால் யானைத் திரள்கள் அஞ்சியலறி அலமந்து ஓடும்.

"செங்கண்மால் தெழிக்கப்பட்ட வலம்புரித் துருவம்கொண்ட
சங்குவாய் வைத்து நம்பன் தெழித்தலும், தறுகண் ஆளி
பொங்கிய முழக்கின் வேழப் பேரினம் புலம்பி னற்போல்
தங்குதார் மன்னர் எல்லாம் தளர்ந்துகண் சாம்பினுரே."

(சீவகசிந்தாமணி, 811)

சீவகன் போரில் வீரம் குறித்துச் சங்கநாதம் செய்தபோது ஆளிமுழக்கம் கேட்ட யானைகள்போல் அரசர் அலமந்தனர் என்பதாம். அதன் அடலும், ஆற்றலும், ஆரவாரமும், அதிசய நிலையும் இதனல் இனிது புலனும்.

இதன் சிறிய குட்டி பெரிய மதயானையையும்கொன்றுவிடும். பால்குடி மறந்த போதே யானைமேல் விரைந்து பாய்ந்து அதனை இறந்துபட நூறும் என்பர்.

"முன்முதல் துறந்த அன்றே முரித்தாள் ஆளியானைத்
தலைநிலம் புரள வெண்கோடுண்டதே போன்று தன்கைச்
சிலையிடம் பிடித்த ஞான்றே தெவ்வரைச் செகுத்த நம்பி
நிலவுமிழ் குடையின் நீழல் துஞ்சுக வையம் என்பார்."
(சிந்தாமணி, 2554)

"ஆளி நன்மான் அணங்குடைக் குருளை
மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத்
தலைக்கோள் வேட்டம் களிறட் டாஅங்கு"
(பொருநராற்றுப் படை, 139)

"ஆளி கண்ட ஆனை இனம்போல்
வாளி வல்வில் வயவர் நீங்க" (பெருங்கதை, 1, 56)

"மீளி முன்பின் ஆளி போல
உள்ளம் உள்ளவிந் தடங்காது" (புறம், 207)

ஆளியைக் குறித்து இவை உணர்த்தியுள்ளமை காண்க.

யானை இனத்திற்கே வயிரியாய் நின்று அவற்றைக் கொன்று வருதலால் இந்த வீர மிருகத்திற்கு யானையாளி என்றே பேரமைந்துள்ளது. முகத்திலிருந்து கைநீண்டிருத்தலால் பூட்கை எனவும் பேருண்டு.

"அறுகு பூட்கை யானையாளிப் பேர்" (பிங்கலந்தை)

எனவரும் இதனால் இதன் இயல்பும் செயலும் இனிது புலனும்.

யானைக் கூட்டங்களுக்கு ஆளிபோல அரசர் கூட்டங்களுக்கு இவன் மீளி மொய்ம்பனாய் விளங்கியிருந்தான் என்பதாம்.

நரர்களுக்குத் தலைமையுற்று நரேந்திரனாயுள்ளமையால் மிருகேந்திரனும், அரசர் மாறுபட்டுமீறியெழுந்த பொழுது அவரைச் சிறியடக்கும் ஆண்டகைமைக்கு ஆளியும் ஈண்டு உவமைகளாய் வந்தன என்க.

ஆழிநெடுங்கை என்றது சக்கரமுடைய நெடியகை என்றவாறு. நெடுமை கொடை அழகுகளின் பெருமை குறித்து நின்றது. காத்தற் கடவுளாகிய திருமால் கரத்தில் சக்கரம் இருத்தல் போல் காவலர் கையிலும் இருக்கும் என்பது கவிமரபு.

"உறங்கு மாயினும் மன்னவன் தன்ஒளி
கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்"

என்றபடி யாண்டும் என்றும் அரசனது ஆணை தொழில் புரிந்தருளும் ஆதலால் அது உருளும் நேமியாய் உருவகிக்க

முடிசூடும் வைபவம் மறுநாள் காலையில் நடைபெறவுள்ளமையால் முதல் நாள் இரவு நெடு நேரம் வரையும் கருமத் தலைவர்களுடன் காரியங்களையெல்லாம் கண்ணூன்றி அரசன் ஆராய்ந்து கொண்டிருந்தான்; நடுச் சாமத்திற்கு மேலும் இரண்டு நாழிகை கடந்து சென்றது ஆதலால், கங்குலின் நள் அடைந்த பின்றை என்றார். கங்குல்=இரவு. நள்=நடு. பின்றை=பின்பு.

"வெள்ளிமுளைத்த நள்ளிருள்" (பொருநராற்றுப்படை) என்றதனால் இடையாமம் கழிந்து போயுள்ளமை புலனும்.

மன்னர்பிரான் கைகேசியிடம் எழுந்துவந்த நேரம் இன்னது என்று குறித்த படியிது.

உடன்வந்த அரசர்கள் எதுவரையும் வரலாமோ, அதுவரையும் வந்தார்கள். எல்லையை அடைந்ததும் எல்லாரும் சக்கரவர்த்தியை வணங்கி வாசல் வெளியே நின்று கொண்டனர் ஆதலால், "வாயிலின் மன்னர் வணங்கி நிற்ப" என்றார்.

அரசியிருக்கும் அரண்மனை ஆதலின் தசரதனைத் தவிர வேறு ஆடவர் யாரும் உள்ளே வரலாகாதென்க. காப்பு நிலையும் கண்ணியமும் மருங்கும் மரியாதைகளும் இதனால் ஒருங்கே உணரலாகும்.

இவ்வாறு சிறந்த இராச மரியாதைகளுடன் வந்தவன் உள்ளே புகுந்தான். பொன்மயமான பள்ளி மாளிகையை அடைந்தான். காதல் மனைவியைக் காணாமையால் நோதலுடன் அயலே நோக்கினான். கள்ளம் புரிந்து கிடந்தவளைக் கண்டான். உள்ளம் திகைத்தான். அருகே போய் நின்றான். அழைத்தான்; "கைகா! கைகா!" என்று இருமுறை மிருதுவாகக் கூவியும் அவள் ஒரு சிறிதும் அசையாமல் முகம் கவிழ்ந்து கிடந்தாள். "என்ன இது!" என்று மன்னன் கவன்றான். நிமிர்ந்து நின்று

கம்பீரமாய் மறுகி நோக்கினான். பிறகு தனது இருகரங்களா லும் அவளை ஆரத்தழுவி அணைத்தெடுத்தான். எடுத்த கைகளை விடுத்து நழுவி மின்னல் கொடிபோல் துவண்டு புரண்டு மீண்டும் மண்ணிடை விழுந்தாள்; கண்ணீருடன் பெருமூச்சுவிட்டுக் கிடந்தாள்.

அரசன் அவலமிகவுடையனாய்க் கவலைமீக் கொண்டான். எண்ணுதனவெல்லாம் எண்ணலானான். "செல்வச்சீமாட்டி யாகிய இவளுக்கு என்ன குறை? பகல் முழுதும் சுகமாயிருந் தாளே! உடலில் ஒரு நோயும் காணோமே! வேறு யாராவது மனம் நோகும்படி இகழ்ந்து பேசியிருப்பாரோ? எவளாவது ஏசி இருப்பாளோ? இந்த மகாராணியைச் சிந்தை துணிந்து நிந்தை செய்ய வல்லவர் யார்? பேர் ஊர் தெரிந்தால் பின்னர் அவர்கதி என்னாம்? எந்த உலகத்தில் யாராயிருந்தாலும் அவர் தீருவது திண்ணமே" என இன்னவாறு பலபல எண்ணி அருக மர்ந்து அவளை நோக்கி நேர்ந்ததைச் சொல்லும்படி நெஞ்சுருகி வினவினான். வினவியுள்ள நிலையை அடியில் பார்க்க.

"அன்னது கண்ட அலங்கல் மன்னன் அஞ்சி
என்னை நிகழ்ந்தது? இஞ்ஞாலம் ஏழில் வாழ்வார்
உன்னை இகழ்ந்தவர் மாள்வர்; உற்றதெல்லாம்
சொன்னபின் என்செயல்காண்டி! சொல்லிடு என்றான்"

இன்னவாறு சொன்னதினால் மன்னனது மனநிலை அன்று என்னவாறு இருந்திருக்கும்? என்பதை ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம். உள்ள நிலையை ஊன்றிக் காண்க.

"இஞ்ஞாலம் ஏழில் வாழ்வார்" என ஏழுலகங்களில் உள் ளவர்களையும் எட்டிச் சுட்டியது, தனது பேராற்றலை அறிந்து அவள் நேரே திருந்தி வர என்க. தன்னுடைய பாராக்கிரமங் களை மனைவியிடம் சொல்லிக்கொள்வதில் மனிதனுக்கு ஒரு தனி இனிமை உண்டு. உள்ளே ஒன்றும் இல்லாதவனும் எல்லாம் உடையவன்போல் இல்லாளிடம் சொல்லாடி மகிழ்வான். உலக இயல்பு இங்ஙனமிருக்க, எல்லாப் பேராற்றல்களும் இயல்பாக வாய்ந்துள்ள அரசர்பிரான் இங்கே பெருவீறுதோன்ற உரை யாடியதில் வியப்பு ஒன்றுமில்லை. ஆனாலும் வார்த்தைகள் அளவு மீறிவந்துள்ளன. அந்தப் புரத்திற்கு வந்தவுடனே தன் சிந்தை

நிலை திரிந்து எந்த மனிதனும் பரவசமடைந்து அவள் வசமா வான் என்பதை இந்த உவளகம் உணர்த்தி நின்றது.

இஞ்ஞாலம் ஏழில் வாழ்வார் எவ்வளவு பெரியவராயினும், உன்னை இகழ்ந்தவர் மாள்வர் என்றது ஈண்டு ஊன்றி உணரத் தக்கது. இது ஊழ்வழி வந்த சூழ்மொழி யாகும்.

"நீ இப்படிக் கிடக்கும்படி உனக்கு இடையூறு செய்தவர் எவர்? இகழ்ந்து பேசினவர் யார்? விரைந்து சொல்! அவர் எவ்வுலகத்தவராயினும் உடனே அவரை அடியோடு அழித்து விடுகின்றேன்; ஒளியாது உரைத்தருள்க! கைகா!" என்று அவள் மீது கையை வைத்துக் கொண்டு அருகணைந் தமர்ந்து இவன் உருகிக் கேட்டான்.

படியரசெல்லாம் பணியும் முடியரசுடையவன்; மகாவீரன்; பேரறிவாளன்; இக்கால நிலைப்படி வயது அறுபதாயது; "வயது முதிர்ந்தேன்; கிழவனாயினேன்" என உழையர் பாலும் இளவலிடமும் இவனே பல முறை கூறியுள்ளான். இந்தக் கிழவனே அந்தப் புரத்தில் வந்து இந்தப் பாடுபட்டால் வேறு குமரர் படும் பாட்டைக் கூறி யாவதென்?

"பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ?" என நம் கவிஞர் பிரான் முன்னம் குறித்து வைத்தது இன்னவாறான காதலாடல்கள் காவியத்துள் இடங்கள் தோறும் இடம் பெற்றுள்ளமையை எண்ணியே என்க.

காதலியிடம் ஆதரம் பெருகிக் காதல்மிக மண்டியிருத்தலால் வேந்தன் நிதானம் தவறி நிலைமீறிப் பேசநேர்ந்தான். "உனக்கு என்ன செய்கின்றது? ஏன் இப்படிப் படுத்திருக்கிறாய்? உள்ளதைச் சொல்!" என இன்னவாறு நயமாகக் கேட்டிருக்கலாம்; இவ்வளவில் நில்லாமல், "உன்னை இகழ்ந்தவர் மாள்வர்" என்று சொன்னது வினை விளைவாய் வந்தது. என்னை? கைகேசியை இகழ்ந்தவர் யாரும் இலர்; இனி, தசரதனை அவளே இகழ வருகின்றான்; அவனே மாளப்போகின்றான்; இந்த இழவு வசனம் தன்னையே கொல்லும்படி மன்னன் வாயில் முன்னதாக வந்துள்ளது. இது கவி கருதி வைத்ததா? விதி சொருகிவிட்டதா? மதிவலி கொண்டு பொறுதியோடு ஆராயவேண்டும்.

உற்றது எல்லாம் சொன்னபின் என் செயல் காண்டி ! என்றது இகழ்ந்தவரைச் சொல்லுக ; உடனே நான் அவரை அடியோடு அழித்து ஒழிப்பேன் ; என் ஆற்றலை நீ பார் ! என்பதாம்.

உற்றதைச் சொல் ! உடனே நான் படும் பாட்டை நேரே நீ பார்ப்பாய் ! என மன்னன் பின்னே உயிர் துடித்துத் தரையில் விழுவதையும் மறைமுகமாய் இது சுட்டி நிற்கின்றது.

"சொல்லிடு" என்று துரிதப்படுத்தியது அவள் உள்ளம் உவக்கும்படி தான் தொழில் செய்ய உறுதிபூண்டு நிற்கும் உரிமை யுணர என்க. அரசன் உள்ளம் தடுமாறி உரையாடுகின்றான் ஆதலால், சொல்லுக என நயமான வியங்கோள் வராமல் பயமான இடுமொழி வந்தது. வல்லிடி என அரசி சொல்லிடுதலும் இனிக் காணலாகும்.

இங்ஙனம் மன்னன் சொல்லவே அவள் மெல்ல வாய் திறந்தாள் ; இவன் உள்ளம் உவந்தான் ; அவள் சொல்லலானாள்.

"உங்களுக்கு என்மீது கள்ளமில்லாத நல்ல கருணையிருக்குமானால் முன்னம் தருவதாக உரைத்திருந்த இரண்டு வரங்களையும் இப்பொழுது தந்தருளுங்கள்" என்றாள். அவள் சொல்லிய படியை அடியில் பார்க்க.

"வண்டுளர் தாரவன் வாய்மை கேட்ட மங்கை
கொண்ட நெடுங்கணின் ஆலி கொங்கை கோப்ப
உண்டு கொலாம் அருள் என்கண் ? உன்கண் ஒக்கில்
பண்டைய இன்று பரிந்தளித்தி என்றாள்."

(கைகேசி சூழ்வினைப்படலம், 6)

அரசி மிகவும் சாகசத்தோடு இங்கே பேசியிருக்கிறாள்.

அழுத கண்ணீர் மார்பில் ஒழுகியிருந்தமையால் "ஆலி கொங்கை கோப்ப" என்றார். ஆலி=நீர்த்துளி. இப்பொழுது கச்சு இழந்து போயுள்ளமையால் கொங்கைகள்மேல் கண்ணீர் நேரே சேரலாயது.

இங்கே அழுவதற்குரிய துயரம் யாதும் அகத்தில் இல்லை ; இருந்தும் அழுதது கருதிய கருமம் கைக்கொள்ள என்க. கள்ள அழுகை அழுது மாயக் கண்ணீர் வடிப்பதில் பெண்கள் வல்லவர்

என்பது இதனால் அறியலாகும். "நீலிக்குக் கண்ணீர் நிமையிலே" என்னும் பழமொழியும் இங்கு நினைவுற வுரியது.

என்கண் என்றது ஒன்றும் தெரியாத பேதையான என் மேல் என்றவாறு. "சூது வாது யாதும் அறியாத பைத்திய காரி என்று கருதி அல்லவா நாளும் என்னை ஏமாற்றி நயவஞ்சக மாக நடத்தி வருகிறீர்கள்! என்பால் உங்களுக்குக் கருணை இல்லை என்பதை நான் நன்கு அறிவேன்; அது உண்டு என்று நீங்கள் மெய்ப்பிப்பீர்களானால் வேறு ஒன்றும் செய்ய வேண்டா; முன்பு எனக்குத் தருவதாகத் தாங்கள் உறுதிகூறியிருந்த வரங்களையாவது இன்று தந்தருளுங்கள்; உங்கள் தாராள சிந்தையைப் பார்க்கலாம்? அம்மா! அரசே! என்று சும்மா கொஞ்சிக் குலாவி என்னை வஞ்சிக்காதீர்கள்! இதுவரை நான் ஏமாந்திருந்தது போதும்" என இவ்வாறு கணவன் ஏமாறக்கரவோடு பேசினாள்.

என்னமோ, ஏதோ? என ஏங்கியிருந்த மன்னன் இந்த வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ச்சி மீக்கொண்டான். இவனை இங்கே "வண்டு உளர் தாரவன்" என்றது கண்டுணர வுள்ளது. தார்=மாலை. நல்ல சுகி ஆதலால் மெல்லிய மலர் மாலை புனைந்திருந்தான். அம்மலரிலுள்ள தேனை அவாவி வண்டுகள் சிறகர் விரித்து மொய்த்து முரன்றன என்பார் "வண்டு உளர் தார்" என்றார். உளரல்=அசைதல், ஒலித்தல், சிதறல். "களைத்து வண்டுளர்ந்த தார்க்காளை" (சிந்தாமணி. 707) என்புழி உளரல் உணர்த்தி நிற்றல் காண்க.

பூவின் சுவை விரும்பி வண்டு உளர்ந்தது; இவன் பூவைவாய் இன்பம் விழைந்து உளற வந்துள்ளான் என்பதாம். மாலையில் மால்கொண்டு வண்டு மயங்கியதைக் குறித்தது, அம்மாலையன் மையல் கொண்டுள்ள நிலைமையைக் கண்டு கொள்ள என்க.

காதல் கனிந்து ஆதரமீதூர்ந்து அரசன் கூறிய ஆர்வ மொழிகளைக் கேட்டபொழுது கள்ளமுடன் கலுழ்ந்து கிடந்தவள் உள்ளம் மிகவுவந்தாள்; கருதியதைப் பெறலாமென்று உறுதிமீக் கொண்டாள்; கொண்டும், எதிர் முகம் நோக்காமல் தலை கவிழ்ந்த படியே பதிலுரை பகர்ந்தாள்.

மகாராசரான தாங்கள் பேதையாகிய என்னிடம் அன் புரிமை காட்ட அமையாதாயினும் அருள்புரிய நேர்ந்தது அதி

சயம் என்பாள், உண்டு கொலாம் அருள்? என்று இண்டலோடு கூறினள். அருள் இல்லை என்று தான் எண்ணியுள்ளதாகக் கள்ளம்புரிகின்றாள் ஆதலால் இங்ஙனம் அரசன் உள்ளம் காண உரைத்தாள். அன்பு இல்லை என்பதை அனுபவத்தில் கண்டுள்ளேன்; அருள் உண்டு என்பது இன்று சொல்லளவில் தெரிய வந்தது; செயலில் காணவேண்டும் என்பது குறிப்பு.

அன்பு, ஒத்தவரிடம் உரிமை புரியும் உள்ளக் கனிவு.

அருள், எளிய பிராணிகள்பால் இரங்கியுதவும் இரக்கம்.

என்பால் தங்களுக்குக் கருணையிருந்தால் முன்பு தருவதாக வாக்குறுதி செய்திருந்த உதவி நலங்களை இப்பொழுது தந்தருளுங்கள் என்பாள், "பண்டைய இன்று பரிந்து அளித்தி" என்றாள். பரிந்து=இரங்கி. வேறொன்றும் விரிக்காமல் மிகவும் சுருக்கமாகப் "பண்டைய" என்று குறித்தது பழமையின் கிழமையும் வளமையும் தெரிந்து விரைந்து உளம் இசைய என்க. இந்த வார்த்தையைக் கேட்டவுடன் மன்னன் என்ன செய்தான்? யாது சொன்னான்? என யாரும் எண்ண நேர்வர்; அங்ஙனம் நுண்ணிதாக எண்ணி நோக்குவார்க்கு அவனுடைய செயலும் சொல்லும் அதிசயமாய்த் தோன்றும். அடியில் வருவது காண்க.

"கள்ளவிழ் கோதை கருத்துணர்ந்த மன்னன்
வெள்ள நெடுஞ்சுடர் மின்னின் மின்ன நக்கான்;
உள்ளம் உவந்துள செய்வனென்றும் லோபேன்
வள்ளல் இராமனுன் மைந்தன் ஆணை என்றான்."
(கைகேசி சூழ்வினைப் படலம், 7.)

தசரதன் உள்ளம் பறிபோய் இதில் உரையாடியிருத்தலை ஊன்றி நோக்குக.

கள் அவிழ் கோதை என்றது தேன்படிந்த கூந்தலையுடையாள் என்றவாறு. கோதை=மாலை, கூந்தல். மலர்மாலை துறந்து தலைவிரிகோலமாய் நிலைகுலைந்து கிடப்பவளை இங்ஙனம் உரைத்தது முன்பு சூடியிருந்த இன்பச் செவ்வி தோன்ற என்க. புனைந்து நின்ற மாலையிலிருந்து மது வழிந்து நனைந்துள்ளதையும், அந்த மணங்கமழ் கூந்தல் இப்பொழுது விரிந்து பரந்து கவிழ்ந்து கிடத்தலையும் நினைந்து கூறியபடியிது. இப்படிக் கள் அவிழ்

கோதையாயுள்ளமையினலேதான் அரசன் உள் அவிழ நேர்ந்தது என்பது குறிப்பு.

அவள் உரைத்த உரையிலிருந்து அவளுடைய விருப்பம் இன்னதுதான் என்று மேலெழுந்தபடியாகத் தெரிந்துகொண்டான்; கொள்ளவே "பண்டு குறித்ததை இன்று தருக" என்று கொண்ட கணவனிடம் கேட்பதற்காகவா இந்தக் கோலம் கொண்டு இப்படிச் செய்தாய்? அட பைத்தியமே! என்று பெருஞ் சிரிப்புச் சிரித்தான் ஆதலால் அந்த நகையின் மிகையைக் கவி நன்கு விளக்கியிருக்கிறார்.

கைகேசியின் சொல்லைக் கேட்டபொழுது தசரதன் உள்ளம் உவந்து உல்லாசமாய் எள்ளல் புரிந்து குலுங்கக் குலுங்கச் சிரித்தான்; அங்ஙனம் சிரிக்குங்கால் உடம்பிலணிந்திருந்த முத்து மாலைகளும் வயிர அணிகளும் அசைந்து பக்கம் எங்கணும் ஒளி பரப்பி நின்றன ஆதலால், "வெள்ள நெடுஞ்சுடர் மின்னின் மின்ன நக்கான்" என்றார். ஈண்டு அவன் புரிந்த நகையும் பூண்டிருந்த நகையும் ஒருங்கே தெரியவந்தன. இவ்வளவு பெரு நகைக்குக் காரணம் என்ன? இந்த நகை எந்த வகையைச் சேர்ந்தது?

"எள்ளல் இளமை பேதைமை மடனென்று
உள்ளப் பட்ட நகைநான் கென்ப."

(தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல் 4)

என ஆசிரியர் தொல்காப்பியனார் அருளியுள்ள நகைவகை நான்கனுள் மன்னனது இந்நகை என்ன நிலையது? எனின், எள்ளலும் மடனும் இடனாய் எழுந்தது என்க.

உள்ளத்தில் கிளைத்த உவகை எள்ளலில் படிந்து மடத்தில் படர்ந்து புறத்தே பொங்கி ஒளியோடு வெளிவந்துள்ளமையை ஊன்றி உணர்ந்துகொள்க. அவளது மடமையை நினைந்து நகைத்திருக்கும் இதில் இவனது மடமையும் இடைமிடைந்துள்ளது. மன்னன் செய்தது மடச் சிரிப்பு என்பது பின்னர்த் தெரியும்.

இவ்வாறு சிரித்தவன் அவளை ஆற்றிப் போற்றித் தேற்ற நேர்ந்தான். "நீ விரும்பியது எதுவாயினும் அதனை நான் விரைந்து செய்வேன்; உவந்து தருவேன்; ஒன்றையும் மறுத்

து உரையேன் ; ஒளித்து வையேன்" என இவ்வண்ணம் பல களித்து மொழிந்தான். மொழிந்தவன் பின்பு உள்ளம் மீறித் தன் பிள்ளைமேல் சத்தியம் செய்து கொடுக்கவும் துணிந்தான். "உள்ளம் உவந்துள செய்வன் ; ஒன்றும் உலோபேன்" என்று இந்த அளவில் நின்றிருக்கலாம் ; அங்ஙனம் நில்லாமல் மேலும்,

"வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை"

என்று சொல்லியிருக்கின்றான் ; இதில் இவன் பித்து எவ்வளவு நீண்டுள்ளது என்பது எளிது புலனும்.

நீ சொல்லுகின்றபடியே யாதும் தப்பாது செய்தருளுவேன் என்பான் இராமன் மீது இப்படி ஆணைகூறியருளினன். வள்ளல் என்றது யார் வந்து எதைக்கேட்டாலும் உள்ளம் உவந்து கொடுக்கும் குணவான் என்றவாறு. இத்தகைய பிள்ளையைப் பெற்றுள்ள நான் உனக்கு இல்லை என்று சொல்வேனு? ஏதாவது உலோபஞ் செய்வேனு? எண்ணிப்பார்! என்பதாம். மைந்தன் இயல்பால் தந்தை தன்மை யுணர்ந்து சிந்தை தெளிய இந்த வண்ணம் குறித்தான்.

உன் மைந்தன் என்றது உரிமை கனிந்து அவள் உள்ளம் இரங்க. உண்மையில் இராமனிடம் கைகேசி பேரன்புடையளாய்ப் பெருகியிருந்தாள். அவ்வாறே அவனும் இவளிடம் ஆர்வமும் அன்பும் ஆற்றி நீர்மை புரிந்து நின்றான். தனது இளம் பருவத்தில் பெரும்பாலும் இவளது உவளகத்திலேயே அவன் உரிமையுடன் வளர்ந்து வந்தான்.

"தாய்கையில் வளர்ந்திலன், வளர்த்தது தவத்தால்
கேகயன் மடந்தை" (கைகேசி சூழ்வினைப்படலம், 97)

என ஊரும் நாடும் உவந்து புகழ இராமனை இவள் பேரன்புடன் பேணி வந்திருக்கின்றாள். பெற்ற தாயாகிய கோசலையினும் வளர்ப்புத் தாயாகிய கைகேசியே அந்த அருமை மகனுடைய இனிய பண்புகளையெல்லாம் எளிது தெரிந்து உரிமை மீதூர்ந்திருந்தாள். இங்ஙனம் உள்ளன்பு சுரந்து சீராமனை ஆராமையோடு சீராட்டிப் பாராட்டி வந்துள்ளதைப் பலமுறையும் நேரே பார்த்து அநுபவித்திருத்தலால் "உன் மைந்தன்" என இவ்வாறு உருக்கமுடன் அரசன் உரைக்கலானன். உறவுரிமைகொண்டு

அவள் உள்ளம் உருக உரைத்த படியிது. இங்ஙனம் சொன்னவன் பின்னே மொழிந்தது பிழை என வந்தது.

மனைவியின் உள்ளத்தைத் தேற்றப் பிள்ளைமீது சத்தியம் செய்துகொடுக்கும் கணவனைக் காண்பது பெரிதும் அரிதாம். அந்த அரிய நிகழ்ச்சி இங்கே அநியாயமாக நிகழ்ந்திருக்கிறது.

உலகில் அடிக்கடி சத்தியம் செய்யத் துணிகின்றவர்கள் யார்? என்று உய்த்து நோக்கினால் ஓயாது பொய் பேசுபவர்களே என்பது எளிது புலனும். தன் சொல்லைப் பிறர் நம்பாமல் ஐயுறும்போதுதான் ஒருவன் துணிந்து ஆணைகூற நேர்வன். அந்த ஆணை மொழி அவனது மேன்மையைத் தாழ்த்துகின்றது. கோணலானவன்; பொய்யுரைகள் பல புகன்றுள்ளவன்; சொல்லியபடி காரியம் செய்யாதவன்; கரவும் வஞ்சமும் கைம்மிகப் பெற்றவன்; என இன்னவாறான இழி நிலைகளை அது வெளிப்

தாம் சொல்லுவது பொய்யன்று; மெய்யே என்னும் தெளிவு தோன்றும்படி தெய்வ சந்நிதியிலும் உண்ணும் சோற்றிலும் பருகும் பாலிலும் ஆணையிட்டுத் தருவது உலக வழக்கம். சாதாரணமான அந்த நிலையில் உயர்ந்த சக்கரவர்த்தி அயர்ந்து விழுந்தது அதிசயமாயுள்ளது.

என்றும் மெய்யே பேசி யாண்டும் நீதியுடன் ஆணை செலுத்தி வருகின்ற தசரதன் ஈண்டு தன் பெண்டாட்டிமுன் இங்ஙனம் இழிந்து ஆணைகூறித் தந்தது பித்தோ? பேதைமையோ? பண்டை வினைப்பயனோ? கண்டறிய வேண்டும்.

இப்படிச் சத்தியம் செய்து தரவா நீண்டகாலம் மலடிருந்து அரிய தவங்கள் புரிந்து இப்புத்திரனைப் பெற்றது?

எந்தப்படி ஒருவன் ஆணை கூறினானோ அந்தப்படியே செய்யாமல் சிறிது மாறுபடினும் வேறுபாடுறினும் கூறினானும் கூறப்பட்ட பொருளும் அவமடைய நேரும். அந்த அவல நிலைகள் அடுத்து வரவுள்ளன. பின்னே நிகழும் கெடு நிலைகளுக்கு முன்னறிகுறியாக மன்னன் வாயில் இன்னவாறு மறுமொழி வந்ததென்க. வாய்ச்சொல் வருநோய்க்கு எல்லை செய்தது.

இங்ஙனம் மொழியவே அவள் விழிநீர் துடைத்து நாயகனை நோக்கிக் குறித்த வரங்கள் இரண்டையும் கொடுத்தருளுங்கள் என்ருள். கருதியுள்ள விவரம் வெளியே தெளிவாக விளக்க வில்லை ஆதலால் தசரதன் 'சரி' என்று உவந்தான். "நான் உறுதி செய்துள்ளதைப் பெறுவதற்காக நீ இப்படிச் செய்திருக்க வேண்டா; அன்றே தந்ததை இன்று வரையும் சுமந்திருந்தது எனக்குப் பெரும் பாரமாயுள்ளது; விரைந்து பெற்றுக்கொள்; உனக்கு என்ன செய்யவேண்டும்; விளக்கமாகச் சொல்; இப் பொழுதே தந்துவிடுகின்றேன்" என்ருன். பாவம்! அவளது உள்ளத்தின் கள்ளத்தை உணராமையால் இவ்வள்ளல் இவ்வண்ணம் நேசமுடன் ஆசைமீதூர்ந்து பேசினன். பேசிய நிலையின் வாசி தெரியக் கவியை ஈண்டு வாசிக்கவேண்டும்.

"வரங்கொள இத்துணை மம்மர் அல்லல் எய்தி
இரங்கிட வேண்டுவதில்லை ஈவன் என்பால்
பரங்கெட இப்பொழு தேபகர்ந்தி டென்ருன்
உரங்கொள் மனத்தவள் வஞ்சம் ஓர்கிலாதான்."

களளம யாதும் கருதாமல் உளளம கனிந்து அரசன் இங்கே உரையாடியிருக்கிருன். கைகேசி அலங்கோலங்கொண்டு அடஞ் செய்திருத்தலை மனஞ்சகியாமல் கடிந்து நிற்கின்ருன். "இத்துணை வேண்டுவது இல்லை" என்றது அவள் துணியுடுத்தி, அணி விடுத்து, குழல் விரித்துக், கண்ணீர் உகுத்துத் தரையில் கிடந்து போலித்தனமாகச் செய்துள்ள நீலித்தனங்களையெல்லாம் நேரே சுட்டி நின்றது. தன் கருத்தை முடித்துக்கொள்ள இவ் வளவு துணைகளைக்கூட்டிக்கொண்டாள் என்பது குறிப்பாயுள்ளது.

வாக்களித்த வரங்கள் உரியவளிடம் கொடுக்கப்படாமல் தன்னிடமே தங்கியுள்ளமையான் அதனை ஒரு கொடிய கடனுக வும், பெரிய பாரமாகவும் கருதியிருந்தான் என்பது "பரங்கெட இப்பொழுதே பகர்ந்திடு" என்றதனுல் அறிய நின்றது.

பரம் கெட என்றது பாரம் நீங்க என்றவாறு.

என்னிடமிருந்து பரம்பொருளான இராமன் நீங்க எனவும் இது தொனித்துள்ளதை நுனித்துணர்ந்துகொள்க.

இப்படி அரசன் உரைத்த உரை பெருந்துயர்க்கு இடனுயுள்ளதே! கரவினை அறியாமல் உறவுரிமை கொண்டு உதவ இசைந்து உரையாடுகின்றனே! என்று கவி மிகவும் இங்கே இரங்கியிருக்கின்றார்; அந்தப் பரிவு நிலை, "உரங்கொள் மனத்தவள் வஞ்சம் ஓர்கிலாதான்" என்பதனால் அறியலாகும். உரம் கொள் மனம் என்றது அவளது கொடுமையான கடின சிந்தையை நிந்தித்து வந்தது. உரம்=வலி, திண்மை.

மகாவீரனான மன்னனுடைய உறுதி யுரங்களையும் கவர்ந்து கொண்டு அவனை வெறியனாக்கி வீறழிக்க வல்லது என அம்மனத்தின் பொல்லாத புலைநிலையைக் குறித்து நின்றது.

இப்பொழுதே தருகின்றேன் வேண்டியதை விரைந்து சொல் என்று நாயகன் உறுதி கூறும் வரையும் யாதொரு குறிப்பையும் வெளிப்படுத்தாமல் உள்ளே அடக்கியிருத்தலால் மனத்தவள் வஞ்சம் என்றார். வஞ்ச மனத்தளாய அவளது வாய் மொழியில் மயங்கி அரசன் நோயடைய நேர்ந்தான் என்பதாம்.

மம்மர் அல்லல் என்றது மாறுபட்டு மயங்கித் துன்பவேடம் பூண்டிருத்தலை. மம்மர்=மயக்கம், கலக்கம்.

பேராபத்தை ஓராமல் அரசன் இவ்வாறு கூறவே அவள் வெவ்வாய் திறந்தாள். அத்தீயவாய் கூறிய மாயமொழிகளை அடியில் பார்க்க.

கைகேசி கேட்ட வரங்கள்.

ஏய வரங்கள் இரண்டின் ஒன்றினால் என்
சேயரசாள்வது, சீதை கேள்வன் ஒன்றால்
போய் வனமாள்வதெனப் புகன்று நின்றாள்
தீயவை யாவையினுஞ் சிறந்த தீயாள்.

(கைகேசி சூழ்வினைப் படலம், 10)

பரதன் அரசு ஆளவும் இராமன் வனம் போகவும் வேண்டும் எனத் தன்னுடைய வரங்களின் குறிக்கோளைக் கைகேசி இங்கே தெளிவாக வெளிப்படுத்தியிருக்கிறாள்.

என்சேய் என்றதுபோல் கோசலை சேய் என்னாது சீதை கேள்வன் என இராமனைக் குறித்தது அவனது காதலையும் களிப்பையும் கருதி என்க. புதுமணம் புரிந்து வந்த இளமனைவியைப்

பிரிந்து பரதன் தூரதேசம் போயிருக்க இராமன் துணைவியுடன் அரண்மனையி லமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து வருகின்ற இனிய வைபவங்களைக் கண்டு மனம் புழுங்கியுள்ளமை இம் மொழியால் அறியலாகும்.

சேய் என்றதில் உள்ளன்பும் உயிருருக்கமும் மருவியிருக் கின்றன; கேள்வன் என்றதில் வெறுப்பும் வேற்றுமையும் விளைந் துள்ளன. கலியாணமாகுமுன் இராமன்மேல் இருந்த அன்பு ஆனபின் இல்லை என்று தெரிகின்றது.

வனம் ஆள்வது என்றது அங்கே போய் அவன் தங்கி யிருக்கும் தகைமை தெரிய வந்தது. காடு என்று கவலையுறு வகை நயமாகக் குறித்தபடியிது. நாட்டில் ஒரு ஆட்சியும் காட் டில் ஒரு ஆட்சியும் தன் கையில் தரும்படி சக்கரவர்த்தியிடம் வீட்டரசி இங்ஙனம் விழைந்து கேட்டாள் என்க.

வனமாள்வது என்னும் மொழித்தொடர் ஆள்வது மாள்வது என இருபொருள்களுக்கும் இடமாயுள்ளது. முன்னது மன்ன னது மனம் தேற்ற வந்ததாயினும் இராமனுடைய பேராண்மை ஊராண்மை யாவும் வனத்திலேயே விளங்கியுள்ளன. தரும ஆட்சியும் வீர ஆட்சியும் அங்கேதான் நன்கு புரிந்திருக்கிறான். அந்த வுண்மையை உய்த்துணர ஆள்வது வந்தது. மாள்வதோ? எனின், இராமன் வனவாசத்தில் பட்டுள்ள அல்லலெல்லாம் அறிய நின்றதென்க. அன்றியும் அவன் போனவுடனே முன் கானமாயிருந்த அவ் வனமானது தன்னுடைய நிலைமை மாறி இனிமை யடைந்துள்ளமையும் தெரியவந்தது.

"பற்றுடைய காடெல்லாம் நாடாகிப் போம்"

என இராமன் பக்கல் அன்பு பூண்டு மக்கள் தொடர்ந்துள்ள மையும் ஈண்டெண்ணத்தக்கது. "இராமன் போன இடம் அயோத்தி" என்ற பழமொழியும் காண்க.

எவரும் இரங்கி வருந்த இவ்வாறு வரங்களைக் கேட்டவளுக் குக் கவி புதிதாக ஒரு பெயரைச் சூட்டியிருக்கிறார்.

"தீயவை யாவையினும் சிறந்த தீயாள்"

என்னும் இதில் கவிநாயகனுடைய கோபமும் கொதிப்பும் புலனாயுள்ளன. தீயவை என்றது நஞ்சு பாம்பு தீ முதலியவற்

றைக் குறித்து நின்றது. குடித்தல் கடித்தல் தொடுதல்களைச் செய்தாலன்றி நஞ்சு முதலியன துன்பங்கள் செய்யா; அவ்வாறு செய்யினும் ஒருவாறு உய்தல் கூடும். இவள் எவ்வாற்றானும் உய்தியின்றிச் சொல்லால் கொல்ல நேர்ந்தாள் ஆதலால் தீயன எவற்றினும் தீயள் என நின்றாள்.

சிறந்த தீயாள் என்றது தீமையின் சிகரமாய் உயர்ந்து நிற்றலை உணர்த்தி நின்றது. விடம் முதலியன உருவிலும் கொடியன வாதலால் கண்டவுடனே அவற்றை அஞ்சி விலகலாம்; இவள் காட்சிக்கு இனியளாய்க் களிப்பூட்டி வந்து இதுபொழுது மாறுபட்டு அதிவிநயமாக உயிரழிவு செய்கின்றாள் ஆதலால் அந்த வேறுபாடு தெரியச் சிறந்த என்னும் அடை உறழ்ந்து வந்தது. கொடுமையைக் காணும்போது கவி கடுமையாகப் பாத்திரங்களை வைகின்றார். தம்மை மறந்து வெம்மை மொழிகளை விரைந்து வெளிவிடுகின்றார். இதனால் இவரது அருளுடைமையும் அறநலனும் உள்ளப்பண்பும் உணரலாகும்.

"உனக்கு வேண்டியது என்ன? விரைந்து சொல்! உவந்து தருகின்றேன்" என்று இனிது சொன்ன மன்னன் எதிரே கைகேசி இன்னவாறு இன்னுவுரை கூறினாள். இச் சொல்லைக் கேட்டவுடனே அவன் உள்ளம் துடித்து உயிர் பதைத்து அடியற்ற மரம் போல் தரையில் வீழ்ந்து அவசமாகி அவலமிக அடைந்தான். அன்று பட்டுள்ள அல்லற்பாடுகள் அளவிடலரியன. அத் துயரத் துடிப்புகளை யெல்லாம் கவிகளில் ஒருவாறு காணலாமேயன்றி வேறு வகையில் எளிதாக விளக்க இயலாது. மரண வேதனையான கொடிய துன்பக் கூறுபாடுகளைக் குறித்து வந்துள்ள கவிகள் அடியில் வருவன காண்க.

அரசன் அடைந்த அவலங்கள்

நாகம் எனுங்கொடியாள்தன் நாவின் ஈந்த
சோக விடந் தொடரத் துணுக்கம் எய்தா
ஆகம் அடங்கலும் வெந்த ழிந்த ராவின்
வேகம் அடங்கிய வேழம் என்ன வீழ்ந்தான். (1)

பூதல முற்ற தனிற் புரண்ட மன்னன்
மாதுய ரத்தினை யாவர் சொல்ல வல்லார்?
வேதனை முற்றிட வெந்து வெந்து கொல்லன்
ஊதுலை யிற்கனல் என்ன வெய் துயிர்த்தான். (2)

உலர்ந்தது நாவுயிர் ஓட லுற்ற துள்ளம்
புலர்ந்தது கண்கள் பொடித்த பொங்கு சோரி
சலந்தலை மிக்கது தக்க தென்கொல் என்றென்று
அலந்தலை யுற்ற அரும் புலன்கள் ஐந்தும். (3)

மேவி நிலத்தில் இருக்கும் நிற்கும் வீழும்
ஓவியம் ஒப்ப உயிர்ப்படங்கி ஓயும்
பாவியை உற்றெதிர் பற்றிஎற்ற எண்ணும்
ஆவி பதைப்ப அலக்கண் எய்து கின்றான். (4)

பெண்ணென வுற்ற பெரும்பழிக்கு நாணும்
உண்ணிறை வெப்பொ டுயிர்த்துயிர்த் துலாவும்
கண்ணினின் நோக்கும் அயர்க்குமிக்க கைவேல்
புண்ணுழை தைக்க வுழைக்கும்ஆனை போல்வான். (5)

கம்ப நெடுங்களி யானையன்ன மன்னன்
வெம்பி விழுந்தெழும்விம்மல்கண்டு வெய்துற்று
உம்பர் நடுங்கினர், ஊழி பேர்வ தொத்தது
அம்பன கண்ணவள் உள்ளம் அன்ன தேயால். (6)

(கைகேசி சூழ்வினைப் படலம், 11-16)

தசரதன் உயிர்துடித்து அலமந்துள்ள அவலநிலைகளை இவற்றுள் ஊன்றிப்பார்க்க. துன்பத்துடிப்புகள் எவ்வளவு! அவை எவ்வாறு விளக்கப்பட்டுள்ளன! புறத்தே புலனான இம்மெய்ப்பாடுகளால் அன்று அவனுடைய அகத்தே நிகழ்ந்துள்ள உயிர்க்கலக்கங்கள் எத்துணைய என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

## தசரதன் துயர நிலை.

முதல்வரம் குறித்தபொழுது மன்னன் மனங்கலங்கவில்லை; இரண்டாவதைச் சொன்னவுடனேதான் துள்ளித் துடித்து உள்ளம் பதைத்து மண்மேல் விழுந்து இன்னல் மிக வுழந்தான்.

இராமன் வனம் ஆள என்றசொல் இவன் உயிர் மாள நேர்ந்ததுபோல் செவியில் பாய்ந்தது ஆதலால், "நாகம் எனும் கொடியாள் நாவின் ஈந்த, சோகவிடம்" என வந்தது.

நாவின் விடம் என்றதனால் கைகேசி அன்று சொல்லியுள்ள சொல் உயிரைக் கொல்ல வல்லதோர் கொடுமையுடைய தென்பது

புலனும். விடம் என்றதற் கேற்ப அவள் நாகம் என நின்றாள். நாகம்=பாம்பு. பாம்புக்குப் பல்லிலே விடம் இவளுக்குச் சொல்லிலே விடம் என்க. சோகவிடம் என்றது உடனே சாக அடிக்கும் அதன் வேகம் தெரிய வந்தது.

அச்சொல் செவியில் பாய்ந்து உள்ளே புகுந்து உயிர் முழுதும் தோய்ந்து உணர்வழித்து நிலைகுலைத்து நேரே தரையில் சாய்த்து விரைவில் மாய்த்துவிட நேர்ந்தது என்பார் "விடம் தொடர வீழ்ந்தான்" என்றார்.

"மானை எடுக்கும் ஆனை" என முன்னம் மன்னனைக் குறித்துள்ளமையால் இங்கும் வேழம் என்றார். மான் என்று எடுத்தான்; அவள் பாம்பாய்க் கடித்தாள் என்பதாம். போராற்றலும் பெருமிதமும் பேராண்மையும் யாண்டும் நிலையாகவுடைய அவன் ஈண்டு ஒரு பெண்மொழியால் துடித்து மாண்டுவிழ நேர்ந்தான் ஆதலால், "அராவின் வேகமடங்கிய வேழம்" என வந்தான். பெரிய மதயானையையும் சிறிய பாம்பு கொன்று விடும் என்பது இதனால் அறியலாகும்.

"அஞ்சனக் கோலின் ஆற்றா நாகம் ஓர் அருவிக்குன்றிற்
குஞ்சரம் புலம்பி வீழக் கூர்நுதி எயிற்றிற் கொல்லும்
பஞ்சியின் மெல்லிதேனும் பகைசிறி தென்னவேண்டா
அஞ்சித்தற் காத்தல்வேண்டும் அரும்பொருளாக என்றான்."
(சீவக சிந்தாமணி, 1894)

சிறிய நாகமும் பெரிய யானையைக் கொல்லும்; அதுபோல் பகை சிறிதாயினும் பேரழிவு செய்யும் ஆதலால் அதனை முன்னறிந்து காக்க என இது உணர்த்தி நிற்றல் காண்க.

ஒரு கிழட்டுக் கூனியின் உட்பகையால் விளைந்திருக்கும் பெருங்கேட்டை ஈண்டு உணர்ந்துகொள்ளவேண்டும்.

தீயகூனியால் தீயளான கைகேசியின் மாயமொழியைக் கேட்டு மன்னன் மனம் பதைத்துத் தரையில் விழுந்தான்; தவித்துப் புரண்டான்; கொல்லன் ஊதும் உலைத் துருத்திபோல் நெருப்புச்சுவாலைவீச நெடுமூச்செறிந்தான். ஒரு மூச்சாக உழந்து துடித்தான்; அந்த அல்லல் நிலை சொல்லமுடியாது: நா உலர்ந்தது; உள்ளம் புலர்ந்தது; கண்கள் பொடிந்தன; உதி

ரம் பொங்கியது; சஞ்சலமிகுந்து நெஞ்சம் உடைந்தது; ஐம் புலன்களும் அலமந்துழந்தன; அங்ஙனம் உழந்தவன் அயர்ச்சி நீங்கி எழுந்தான்; உடனே அயர்ந்து விழுந்தான்; ஒரு துடிப்புமின்றி உயிர்ப்படங்கி ஓய்ந்தான்; உயிர் மெல்ல ஊச லாடியது; பின்பு உணர்வு வந்தது; அவளைக் கொல்லவேண்டும் என்று உள்ளம் துள்ளியெழுந்தது; பெண்என நினைந்து பெரும் பழிக்கு நாணினன்; உண்ணிறைந்த வெப்பம் எண்ணிறந்து கொதித்தது; கண் இமைத்தது; முகிழ்த்தது; மீண்டும் அயர்ந்து மாண்டவன்போல் கிடந்தான். இவனது அவலநிலைமையை நோக்கி அமரரும் நடுங்கினர்; ஊழிகாலம் நேர்ந்ததுபோல் ஆழி சூழுலகமும் அலமரலாயது; நீதி மன்னன் ஆதலால் பூதபௌதி கங்கள் யாவும் இவன் நிலைமைக்கு இரங்கி நிலைகுலையலாயின. இவ்வாறு எல்லாரும் எங்கும் அல்லல் அடையக் கைகேசி மட் டும் உள்ளம் கலங்காமல் உறுதி பூண்டு நின்றாள். அந்நிலையை நினைந்து கருமதேவதைகளும் வியந்தன; வெறுத்தன. அவி யாத ஒளியுடைய கவிநாயகன் நெஞ்சமும் இங்கே கலங்கியிருக் கிறது; கைகடந்து புலம்பிக் கைகேசியை வையவும் நேர்ந்தார். வைதுள்ளபடியை அடியில் காண்க.

"அஞ்சலள்; ஐயனது அல்லல் கண்டும் உள்ளம்
நஞ்சிலள்; நாணிலள்; என்ன நாணம் ஆமால்?
வஞ்சனை பண்டு மடந்தை வேடம் என்றே
தஞ்சென மாதரை உள்ள லார்கள் தக்கோர்."

கணவன் படுகின்ற துயரநிலைகளை நேரே கண்டிருந்தும் யாதும் அஞ்சாமல் நெஞ்சும் இரங்காமல் நீசத்தனமாய்க் கைகேசி நீண்டு நின்றநிலையை வெறுத்து முன் இரண்டடிகளில் குறித்தி ருக்கிறார். நஞ்சிலள்=நைதல் இலள்; உள்ளம் குழைந்து இரங்க வில்லை என்றவாறு. என்ன நாணம்! என்றது பெண்ணாய்ப் பிறந்தும் மென்னீர்மையின்றி இப்படிக் கொடுமையும் வன்மையும் மண்டிக் கொடூரமாய் நிற்கின்றாளே! இது என்ன வெட்கக்கேடு? என்று தம்முள்ளே வெள்கி யுரைத்த படியிது.

ஒருபாலும் கோடாமல் பொதுநிலையில் நின்று, காலகதியால் மறைந்து போயுள்ள உயிரினங்களை உணர்வோவியங்களாக வனைந்து காவியவுலகைத் தேவியல்பு திகழச் சிருட்டிக்கும் கவி

நாயகர் ஓரோவழித் தமது இயல்பையும் காட்டிவிடுகிறார். அங்ஙனம் காட்டுங்கால் பொறுப்பைத் தம்மேல் வைத்துக்கொள்ளாமல் தக்கவர் பக்கல் சேர்த்துக் கருத்தைப் பக்குவமாக உரைத்தருள்கின்றார்.

கொடிய வஞ்சனையே இனிய மடந்தையாய் வேடம் கொண்டுள்ளது; ஆதலால் மாதரைத் தஞ்சம் என்று மேலோர் நம்பார் என்றது கைகேசி மேல் உள்ள வெறுப்பினால் என்க.

நெடுநாளாக உடனிருந்து இனியளாய் உவகை விளைத்து வந்த அவள் இன்று திடீர் என்று மாறி நாயகனுக்கு உயிரழிவு செய்ய நேர்ந்தாள்; மரண வேதனையாய் அவன் துடிக்கின்ற துயர நிலைகளை யெல்லாம் கண்டும் ஒரு சிறிதும் உளம் இரங்காமல் கொடிய வயிரியாய்க் கொடுமை மண்டிநிற்கின்றாள்; நல்லகுல நிலையில் தலைமை அரசியாய் நிலவியுள்ள இவளே இவ்வாறாயின் வேறுமகளிரை எவ்வாறு நம்புவது? நெஞ்சிரங்காத வஞ்சக இயல்பினர்; அவரைத் தஞ்சமென நம்புதல் தவறு என்பதாம். இங்கே ஒருத்தி மீதெழுந்த வெறுப்பைப் பெண்கள் இனத்தின் மீதெல்லாம் எடுத்து வீசியிருக்கிறார்.

இங்ஙனம் வன்கண்மையுடன் நின்ற கைகேசியைத் தன் கண் திறந்து மெல்ல மன்னன் நோக்கினான். அவசமாய் அயர்ந்து கிடந்த இவன் சிறிது அயர்வு நீங்கி உயர நோக்கவே அவள் யாதொரு வருத்தமுமின்றி அடங்கொண்டே யிருந்தாள். அந்த இருப்பு அரசனுக்கு நெருப்பாயிருந்தது. தன் வெறுப்பை உள்ளடக்கிக்கொண்டு அவளோடு விருப்பமாய்ப் பேசலானான்.

*தசரதன்:*—கைகா! நீ இப்படி ஆவாய் என்று நான் கனவிலும் கருதவில்லையே! உனக்கு மதிமயக்கமா? மனக்கலக்கமா? அல்லது இது விதியின் கொடுமையா?

*கைகேசி:*— எனக்கு மதிமயக்கமுமில்லை; மனக்கலக்கமுங் கிடையாது; விதியினுடைய நிலையினை நான் அறியேன்.

*தசரதன்:*— உன் இச்சைப்படி பேசவில்லை; யாரோ உன்னை இவ்வாறு ஏவிவிட்டிருக்கிறார்? உள்ளதைச் சொல்!

கைகேசி:—என்னை ஏவுவாரும் இல்லை; கூவுவாரும் இல்லை; தாங்கள் முன்னம் தந்துள்ள வரத்தை இன்று எனக்குத் தருவதற்கு இந்தப்பாடு எதற்கு?

தசரதன்:— உனக்குக் கேட்பதற்கு வேறு பொருள்கள் இல்லையா?

கைகேசி:-எனக்கு வேண்டியதைத் தானே நான் கேட்பேன்.

தசரதன்:—நீ கேட்டதை நினைத்தாலும் நெஞ்சு வேகின்றதே! ஐயோ! உன் நெஞ்சு எப்படித் துணிந்தது?

கைகேசி:—இந்தப் பஞ்சப்பாட்டு எதற்கு? உண்டும் அல்லது இல்லை என்று இரண்டில் ஒன்றைச் சொல்லிவிடுங்கள்.

தசரதன்:—அடி பாதகி! என்குடியைக் கெடுக்கத் துணிந்து விட்டாயே; இந்தக் கொடு நீலித்தனம் உனக்கு எங்கிருந்து வந்தது? பெண்ணென நம்பினேன்; பேயாய் நிற்கின்றாயே!

கைகேசி:—வீணே என்னை வையாதீர்கள்! நீங்கள் வாக்களித்தபடி எனக்கு வரத்தைக் கொடுங்கள்; இல்லையானால், இப்பொழுதே என் உயிரை மாய்த்துக்கொள்வேன்; சொன்ன சொல் தவறாத மன்னன் என்னும் புகழோடு நீங்கள் உயிர் வாழ்ந்திருங்கள்; நான் போய்த் தொலைகின்றேன்.

இச் சொற்கள் காதில் விழவே பற்களைக் கடித்துப் பதைபதைத்து மறுபடியும் அரசன் தரையில் விழுந்து மறுகியுழந்தான். பரிதாபமான அந்த மறுக்கங்களைக் குறித்துள்ள பாடல்கள் அடியில் வருவன.

இந்த நெடுஞ்சொல் அவ்வேழை கூறுமுன்னே
வெந்த கொடும்புணில் வேல்நுழைந்த தொப்பச்
சிந்தை திரிந்து திகைத்தயர்ந்து வீழ்ந்தான்
மைந்த னலாதுயிர் வேறிலாத மன்னன். (1)

ஆ கொடியா! எனும் ஆவிகாலும் அந்தோ
ஓ கொடி தேயறம் என்னும் உண்மை ஒன்றும்
சாக எனாஎழும் மெய்த ளாடி வீழும்
மாகமும் நாகமும் மண்ணும் வென்ற வாளான். (2)

நாரியர் இல்லையிஞ் ஞாலம் ஏழும் என்னக்
கூரிய வாள்கொடு கொன்று நீக்கி யானும்
பூரியர் எண்ணிடை வீழ்வன் என்று பொங்கும்
வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான். (3)

கையொடு கையைப் புடைக்கும் வாய் கடிக்கும்
பொய்யுரை குற்றம் எனப் புழுங்கி வாடும்
நெய்யெரி யுற்றென நெஞ்ச ழிந்து சோரும்
வையக முற்றும் நடந்த வாய்மை மன்னன். (4)

(கைகேசி சூழ்வினைப் படலம், 20-23)

இந்தப் பாடல்களைக் கண்ணூன்றிப் படியுங்கள்! அரசர் பிரான் உயிர் பதைத்து உழந்திருக்கும் துன்பத்திரள்களை யுணர்ந்து கொள்ளலாம். மன்னனது உள்ளத்துடிப்பையும், உணர்வுத்திரிவுகளையும், உயிர்க்கலக்கங்களையும் என்னவாறு விளக்கிக் கவி வெளிப்படுத்தியிருக்கிறார்! முன்னும் பின்னும் தனித்தனி நுனித்து நோக்கவேண்டும். மனோதத்துவத்தின் நுட்பக்கலைகள் ஈண்டு உய்த்துணரவுள்ளன. உள்ளே வேதனை பொறுக்க முடியாமையால் கொடுமையானவுரைகள் வெளியே கொதித்துவரலாயின. ஓ அறம் கோடிதே! என்றது தான் யாதும் மீறமுடியாதபடி தருமம் தன்னைக் கட்டுப்படுத்தி நிற்றலால் அந்த முட்டுப்பாட்டில் முனிந்து கூறியபடி யிது.

கைகேசி கேட்ட வரங்கள் அநியாயமானவை; ஆயினும் முன்னதாகவே இன்னதென்று தெரியாமல் கொடுப்பதாக வாக்களித்துவிட்டான்; அதனை இப்பொழுது மறுத்துரைக்கமுடியவில்லை; அல்லலை அஞ்சி ஒரு வேளை இல்லையென்று சொல்லிவிடலாமே எனின், பொய்யன் என்னும் வெய்யபழிவருமே! வெம்பாவம் ஆமே! என்ற தருமவுணர்ச்சிவந்து தடைப்படுத்துகின்றது; அந்தக் தரும சங்கடத்தின் இடைப்பட்டு இன்னலுழந்தமையால் "அந்தோ அறம் கொடிதே!" என்று நொந்து கூறலானான். என்றும் இனிய அறம் இன்று கொடியதாய் என்னைக் கொல்லுகின்றதே! என்றவாறு. இதனால் இவனது தருமநிலைமையும் தகைமையும் அறிய வந்தன.

அறத்தை மீறமுடியாமலும், உரைத்ததை மறுக்கமாட்டாமலும் வருத்தமீதூர்ந்து மறுக்கமுற்றுழந்தவன் பின்பு கைகேசி

மீது உருத்தெழுகின்றான். ஒன்றானும் உய்தியின்றி உயிரைக் கொன்றொழிக்கின்றாளே! என்று அவள்மேல் கொதிப்பு மூண்ட வன் அளவுமீறிய வுரைகளை ஆர்த்து வீசினான். "இந்த ஏழு உலகங்களிலும் பெண்கள் என்னும் பேரே இல்லாதபடி என்னு டைய கூரிய வாளினால் கொன்று தொலைத்துப் பூரியனாகிப் போன்றிமுடிவேன்" என்று வீரியம் பேசினான். பூரியன்= இழிந்தோன். பெண்கொலை பெரும்பாவம் ஆயினும் இக் கொடும் பாதகி பிறந்துள்ளமையால் அக்குலத்தையே அழித்து நானும் நலத்தை யிழந்து நரகத்தில் ஆழ்வேன் என்பான், "பூரியர் எண் ணிடை வீழ்வன்" என்று பொங்கிப் புழுங்கினான்.

பெண்ணினத்தையெல்லாம் அழித்தொழிப்பேன் என்று மன்னன் இப்படிக் கொடுமையாய் இழித்துரைத்தது தன் பெண் டாட்டிமேல் மூண்டுள்ள கோபக்கொதிப்பின் எல்லையை வெளிப் படுத்தி நின்றது.

கைகேசி கொடுமையாக வேறு ஒன்றும் கூறிவிடவில்லையே! தன் மகனுக்கு அரசுரிமை தருக; இராமனை வனத்துக்கு அனுப் புக; என்று தானே கேட்டாள். இதற்கு இவ்வளவு துன்பமா? உள்ளம் குலைந்து உணர்விழந்து உயிர்குழைந்து தரையில்விழுந்து படைபதைத்து இப்படி ஒரு முடி மன்னன் படுதுயரடைய முடி யுமா? எனின், அதுதான் இங்கே அதிநுட்பமாயுள்ளது.

இராமனையே தனது உயிராகக் கனவிலும் நனவிலும்அரசன் கருதியிருக்கிறான். தன் ஆவியாயுள்ள அந்த அருமை மகனைக் காட்டுக்கு அனுப்புக என்றதைக் கேட்டவுடனே இடிவீழ்ந்த அரவுபோல் படி வீழ்ந்து மன்னன் பதைக்கலாயினான். ஆகவே பிள்ளைமீதுள்ள இவனது உள்ளன்பும் உயிருருக்கமும் உணர நின்றன. அந்நிலையினை நாம் நிலையாக அறிந்துகொள்ளும்படி அடிக்கடி கவி நினைவுறுத்தி வருகிறார்.

1. மைந்தன் அலாது உயிர் வேறு இலாத மன்னன் என முந்திய கவியின் இறுதியடியில் குறித்துள்ளதும்சிந்திக்கற்பாலது. ஈண்டு வந்துள்ள நான்கு கவிகளிலும் இறுதி அடிதோறும் தசர தனை வேறு வேறு பெயரால் கவிநாயகர் விளக்கியிருக்கும் நயம் விழைந்து நோக்கத்தக்கது.

2. மாகமும் நாகமும் மண்ணும் வென்ற வாளான்;

3. வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்;

4. வையகமுற்றும் நடந்த வாய்மை மன்னன்.

இந்த ஐயனது புத்திரப் பித்தும், வெற்றித்திறலும், வீரப்பாடும், சத்தியசீலமும் இவற்றுள் முறையே அறியலாகும். சத்திய விரதத்தில் உத்தம நிலையிலுள்ள இவன் இங்கே "மெய்யுரை குற்றம்" எனப் புழுங்கியிருக்கிறான். இதனை யீண்டு உய்த்துணரவேண்டும். உண்மையைச் சொல்லுதலால் தன் உயிருக்கு அழிவு வந்திருத்தலின் உள்ளம் தடுமாறி அதனை இங்ஙனம் எள்ள நேர்ந்தான். நேர்ந்தாலும் உண்மையை நிலைநிறுத்தி உயிரை விடுவானேயன்றி உரைத்தவுரை மாறான் என்பார், வாய்மை மன்னன் என்றார்.

மனிதன் அல்லலடைந்தபொழுது உள்ளம் குலைந்து நல்லதையும் இகழ்வான்; சொல்லாதனவும் சொல்வான்; சுயமதியும் இழந்துபோம் என்னும் உயிரியல்பு இங்கே உணரவுள்ளது.

மத்தேறி உடைதயிர் போல், மனமுடைந்து செயலழிந்து இங்ஙனம் மறுகி யுழந்த மன்னன் ஒரு வழியும் தெரியாமல் நிலை தடுமாறிப் பல பல எண்ணினான்; கைகேசி மேல் கடுங்கோபமாய் நெடுங்குழப்பமடைந்து நெஞ்சம் நீடினான்; நீடி நினைந்தன நெடுந்துயருடையன; சில அடியில் வருவன: "இவளைக் கொன்று விடலாமா? கொன்றால் பெண்பழி யாமே! கொடுத்த வரத்தை இல்லை என்று மறுத்துவிடுவோமா? மறுத்தால் வாய்மை தவறிப்போமே! இவளை அரண்மனையிலிருந்து துரத்தித் தொலைப்போமா? துரத்திவிடின் வையம் வையுமே! ஐயகோ! இனிநான்என்ன செய்வேன்? மனம் பொறுத்து இந்த வெய்யவளையே இன்னும் கெஞ்சிக்கேட்போம்; நெஞ்சம் இரங்கி நேர்படமாட்டாளா? படு நீலியாயிருக்கிறாளே! கெடுகாலியிடம் அகப்பட்டுத் தடுமாற நேர்ந்ததே! மன்னிப்புக் கேட்டுப் பார்ப்போம்" என்று இன்னவாறு இம் மன்னன் எண்ணி அவள் முகத்தைப் பார்த்துக் "கைகேசா!" என்றான். இங்ஙனம் கனிவு தோன்ற உரிமையுடன் உருகியுரைத்தும் அவள் யாதொரு பதிலும் பேசாமல் அகங்கரித்தே யிருந்தாள். பாவம்! முடிவில் அவளடியில் இவன்

நெடிது வீழ்ந்து பணிந்தான்; என்ன துயரம்! முடிமன்னர் அடிதொழ அரியணையில் வீற்றிருக்கின்ற அரசர் பெருமான் யாதொரு அவமதிப்பையும் எதிர்பாராமல் மனந்துணிந்து மனைவி காலில் விழுந்து மறுகிக்கிடந்தான்.

> "கோல்மேற் கொண்டும் குற்றமகற்றக் குறி கொண்டார்
> போல்மேலுற்ற துண்டெனின் நன்றும் பொறை என்னாக்
> கால்மேல் வீழ்ந்தான் கந்துகொல் யானைக் களிமன்னர்
> மேல்மேல் வந்து முந்திவணங்கி மிடை தாளான்."

கட்டுத்தறியை முறித்தெழுகின்ற மதயானைகளையுடைய மன்னர் பணியும் அடிகளையுடைய சக்கரவர்த்தி இங்கே ஒரு பெண்ணின் அடியில் விழுந்துள்ளானே என்னபரிதாபம்! எனக் கவி இரங்கி யிருத்தலால் இன்னவாறு சுட்டிக் கூறினர்.

தன்னை நியமிப்பார் எவருமின்றித் தானே உலகிற்கெல்லாம் உயர் பேரரசனாயிருந்தும் தனது அதிகாரத்தைச் செலுத்தி யடக்காமல் நேர்ந்த வழுவை நெறியோடமைந்து சாந்தமான முறையிலேயே பரிகரிக்கவேண்டும் என்று பணிய நேர்ந்தான் என்பார், "குற்றம் அகற்றக் குறிகொண்டார்போல் வீழ்ந்தான்" என்றார். குறிகொண்டார் என்றது காரிய சாதனையில் கருத்தூன்றி நின்றவர் என்றவாறு.

கருதிய குறிக்கோளை உறுதியுடன் பெறுதற்குப் பொறுதியே துணையென்று போற்றி இறுதியில் வணங்கினான் என்பதாம். வணங்காத முடிமன்னன் ஓர் அணங்கிடம் வணங்கியது பிணங்கியது நீக்கக் குணங்காண என்க. இங்ஙனம் இவன் வணங்கியும் அவள் இணங்கியருளவில்லை. ஆகவே உள்ளம் திருந்தச் சில உரைகள் ஆடினான்.

தசரதன் கைகேசியிடம் பரிந்து பேசல்

> "கொள்ளான் நின்சேய் இவ்வரசன்னான் கொண்டாலும்
> நள்ளாதிந்த நானிலம் ஞாலந்தனில் என்றும்
> உள்ளார் எல்லாம் ஓதவுவக்கும் புகழ் கொள்ளாய்
> எள்ளா நிற்கும் வன்பழி கொண்டென் பயனென்றான்.
>
> வானோர் கொள்ளார்; மண்ணவர் உய்யார்; இனிமற்றென்
> ஏனோர் செய்கை யாரொடு நீயிவ் வரசாள்வாய்
> யானே சொல்லக் கொள்ள விசைந்தான் முறையாலே
> தானே நல்கும் உன்மகனுக்கும் தரை என்றான்."

மாறுபட்டு மீறியுள்ள மனைவியைத் திருத்தித் தன்வசம் செய்துகொள்ள மன்னன் இன்னவாறு பேசியிருக்கிறான். இப் பேச்சில் பல காட்சிகள் கலந்திருக்கின்றன. கவிகளைக் கண்ணூன்றி முன்னதாக நோக்கிக்கொண்டு பின்பு அடியில்வரும் உரை நடையைக்காணவேண்டும்.

"கைகா! அரசுரிமையை என்னிடம் நீ வலிந்து கவர்ந்து கொடுத்தாலும் பரதன் அதனை விழைந்து ஏற்றுக்கொள்ளான்; வெறுத்தே தள்ளுவன்; ஒருவேளை உன் பிடிவாதத்திற்கும் அதிகாரத்திற்கும் அஞ்சி அரசை அவன் ஏற்றுக்கொண்டாலும், இந்த உலகம் அதனை உவந்து கொள்ளாது; எல்லா உயிர்களும் இகழ்ந்தே நிற்கும்; இப்படி உலகமெல்லாம் எள்ளி இகழும்படி நீ இழிந்து நிற்பதால் யாது பயன்? கொஞ்சம் தெளிந்து யோசித்தருள். நீ அவமானமடைந்து இளிந்து போகலாகாதே என்று நான் வருந்துகின்றேன்; உனக்கு இதத்தை நாடுவதில் என்னை விட உலகத்தில் யார் உரிமையானவர்? சிந்தித்துப்பார்! அந்தோ! யாரோ உன் சிந்தையைப் பேதித்திருக்கிறார்களே! என் கண்ணினும் இனியளாய்க் களிப்பூட்டி வந்த நீ இவ்வண்ணம் இழிந்து இளிப்பூட்ட நேர்ந்தது என்ன பேதைமை? பின்னல் விளைவதை யாதும் உணராமல் பிடிவாதமாய் நின்று பிழை புரிகின்றாயே! எல்லா உலகங்களும் பொல்லாதவள் என்று பழிக்கும்படி நீ புலையாடுவதை நினைந்து என்னுள்ளம் குலைகின்றது. உன் தீமையைக் கண்டு தேவர்களும் சிறி யிகழ்வார். எல்லார்க்கும் இனியனை இராமனை அநியாயமாக நீ காட்டுக்கு அனுப்பினல் நாட்டிலுள்ள யாவரும் நைந்து துடிப்பர்; எந்த மனிதனும் சிந்தைதேறி உய்ந்திருக்கமாட்டான். மண்ணும் விண்ணும் இவ்வாறாயின் நீ கருதிய கருமம் என்ன நிலையாம்? சிறிது எண்ணிப்பார்! ஊரும் உலகும் ஒருங்கே வெறுத்தால் நீ யாரோடு அமர்ந்து அரசு புரிவாய்? வேரோடு கெட வினையை விளையாதே! ஆதிமனு முதல் நீதிதவறுமல் நெறிமுறை புரிந்து நிலைத்து வருகின்ற இந்தத் தரும அரசில் தவறு புரியத் துணிந்தது உலகுக்கெல்லாம் ஒருங்கே துன்பமாம்; உனக்கு இருமையும் பழியாம். என்றும் உய்திபின்றி உழல நேர்கின்ற இந்த வெய்யதுயரை விளைப்பது ஐயோ பாவம்! நான் கருதியபடியே

முடிசூடி இராமன் அரசுரிமையை யடையின் உடனே அதனைப் பரதனுக்கே கொடுத்து விடுவன்; இலகுவாகவே உன் மகன் உலகம் ஆள்வதைக்கண்டு நீ உவகை மீக் கூர்வாய். தம்பி மேல் அவனுக்குள்ள அன்புரிமையை உணராமல் நீ இப்படி வம்பு பண்ணுகின்றாய்! என் சொல்லை நம்பியருள். பெருந்தன்மை நிறைந்த இந்த அரச குடும்பத்தை அவலமாக்கி என்னை அல்லற் படுத்தாதே! நானோ கிழவன்; எல்லாம் நீயே கவனிக்கவேண்டும். உன் பொறுப்பை உணர்ந்து பார்! இது உன் குடி; உன் அரசு; உன் மக்கள்; இதில் பின்னம் காணலாமா? காணின் என்னும்? எல்லாவற்றையும் எண்ணி நோக்கி இரங்கி யருள்! கைகா!'' என்று இன்னவாறு மன்னர்பிரான் உள்ளம் உருகி உரிமை கனிய வுரைத்தான்.

இங்ஙனம் உரைத்தும் அவள் யாதும் திருந்தாமல் ஏதும் வருந்தாமல் இருந்தபடியே இருந்தாள். தனது அடியில் விழுந்து பணிந்தும் அன்புரிமையுடன் அரசன் அறிவுரைகள் பகர்ந்தும் அக்கொடியவள் ஒரு சிறிதும் இரங்காமல் நெடுமரமாய் நிலைத்து நின்றதை எண்ணுந்தோறும் எவர்க்கும் நெஞ்சம் வருந்தும்.

வன்கண்மையுடன் இவ்வாறு புன்கண் புரிந்துள்ள அவளது முகத்தை மன்னன் மறுகி நோக்கினான். இரக்கமில்லாமை கண்டான். இறக்க நேர்ந்தவன்போல் மறுக்கமீக் கொண்டான். அவளை ஒறுத்தொழிக்க வுள்ளந் துணிந்தான். உருத்தெழுந்தான். உடனே இரக்க மீதூர்ந்து வருத்தமீக்கூர்ந்தான். மறுத்தும் திருத்த எண்ணினான். அவள் கருத்தை நினைந்து நினைந்து கண்ணீர் சொரிந்தான். மீண்டும் ஒருவாறு பொறுத்துவேண்டினான். அவ்வேண்டுகோளில் இவ்வாண்டகையின் பரிதாபநிலை நெடிதோங்கியுள்ளது. அடியில் வருவது காண்க.

''கண்ணே வேண்டும், என்னினும் ஈயக் கடவேன், என்
உண்ணே ராவி வேண்டினும் இன்றே உனதன்றோ?
பெண்ணே! வண்மைக் கைகயன் மானே! பெறுவாயேல்,
மண்ணே கொள்நீ, மற்றைய தொன்றும் மறவென்றான்.''

(கைகேசி சூழ்வினைப் படலம், 28)

மன்னனுடைய இன்னல் நிலைகளும் எண்ணங்களும் இதன் கண் என்னவாறு காட்டப்பட்டுள்ளன! கண்ணூன்றி நோக்கி

உண்ணீர்மைகளையும் உரை நிலைமைகளையும் நன்கு உணர்ந்து கொள்ளவேண்டும். கைகேசிக்குத் தன்னிடமுள்ள உரிமையுண்மையையும், அவள்பால் தனக்கிருக்கும் உள்ளன்பையும் விளக்கி உறவுநிலைகாட்டி அவள் உவந்து மனந்திரும்பும்படி அரசன் இங்கே நயமாக நயந்து பேசுகின்றான்.

"பொன்னே மணியோ வேறு உலகிலுள்ள அரிய பொருள்கள் எவையாயினும் அவற்றை உனக்கு நான் உவந்துகொடுப்பதில் வியப்பொன்றும் இல்லை; கைகா! என் கண்ணை வேண்டும் என்று கேட்டாலும் உடனே தோண்டிக்கொடுக்கின்றேன்; சோதித்துப் பார்! எனது உயிரை நீ விரும்பினும் இப்பொழுதே அது உன்னுடையதே; எடுத்துக்கொள்ளலாம். எப்பொழுது உன்னை மனைவியாக நான் கைப்பிடித்தேனே அப்பொழுதே என்னுயிரையும் உடலையும் உன்னிடம் ஒப்பித்துவிட்டேன்; இன்று அன்று; அன்றே எனது ஆவி உனதே; ஆகவே தேவி என்னும் பெயருடன் ஆவியும் அமுதமுமாய் நீ எனக்கு அமைந்திருக்கிறாய்! இருந்தும் எவளோ உன் நெஞ்சைக் கெடுத்து வஞ்சம் அறியாத உன்னைக் கொடிய நஞ்சமாக மாற்றி என் குலத்தைக் கெடுக்கக் குறிக்கொண்டிருக்கிறாள்! ஞான நலமுடைய நீ ஈனக்கோளுக்கு இடங் கொடுத்திருப்பது மானக்கேடாம். உறுதி கருதி உள்ளந் தெளிக. என் சொல்லை நம்பு; அல்லல் இல்லை; எல்லாம் நல்லதாம்" என்றான். இங்ஙனம் உரிமையோடு சொல்லியும் அவள் முகத்தில் மகிழ்ச்சிக்குறி தோன்றவில்லை. அதன் பின்பு பெண்ணே! என்று விளித்தான். இயல்பாகவே மென்மைத் தன்மை வாய்ந்த பெண்மை மரபில் நீ ஒரு பேராசியாய்ப் பிறந்திருக்கிறாய்! மெல்லிய அந்த இனிய நல்லியல்பை இழந்து வலிமையும், கொடுமையும் மண்டி வன்பழி கூட்டாதே என்றவாறு. ஆருயிர்க்காதலீ! பிராணசகி! என உரிமைதோன்ற உரைத்தபடியாயும் இது உருவாகியுள்ளது. இந்த உரையிலும் பயன்காணாமையால், பின்பு சேர்ந்த வகையைச் சுட்ட நேர்ந்தான்.

வண்மைக் கைகயன் மானே!

என்றது அவள் பிறந்த இடத்தின் பெருமை தெரிந்து உரிமை புரிய வந்தது. தான் பிறந்த வீட்டைக் குறித்துப்பேசினால் எந்தப் பெண்ணும் உவந்து கேட்பாள். மகளிருடைய

உவப்பைப் பெறுதற்கு அவரது பிறப்பகத்தைப்பற்றிப் பெருமையாகப் பேசுவதும் ஓர் உபாயமாகும். அந்த வகையில் வந்த படியிது.

திரு அறிவு திண்மை வீரங்களுள் வேறொன்றும் குறியாமல் வண்மை அடை கொடுத்தது அவளை எண்மையாக வசம் செய்து கொள்ளலாமென்று எண்ணி என்க.

யார்க்கும் யாதும் இல்லை என்னுமல் என்றும் அள்ளிக் கொடுக்கிற வள்ளல் வயிற்றில் பிறந்துள்ள நீ கொண்ட கணவன் குறித்துக் கேட்டதை மறுத்துரைக்கமாட்டாய்! என்பதாம். எதையும் கொடுத்துவிடுவதேயன்றி யாரிடமும் எடுத்துப்பழகாத வண்மைக் குடியில் வந்த பெண்மைக்குலக் கொடியே! உன் உண்மை நாயகனுடைய உரையினை மறுமல் உரிமையை யுணர்ந்து உதவி செய்தருள் என்பது குறிப்பு.

மாதே என்னுது மானே! என்றது அன்புவாசகம். தேனே! அமுதே! மயிலே! குயிலே! எனக் காதலிகளிடம் கொஞ்சிப் பேசுங்கால் காதலர் இங்ஙனம் ஆதரமீதூர்ந்து கூறநேர்வர். அந்த ஆர்வ நிலையில் இஃது அமைந்து வந்தது. நவ்வி என முதலில் உரைத்தார்; இடையிலும் குறித்தார்; ஈண்டும் சுட்டினர். என்ன சொன்னும் தெருளாமல் மருண்டு நிற்கும் அவளது மருட்சி நிலையை இது உணர்த்திநின்றது.

"என் ஆவி உனது அன்றோ?"

என்றது பிரியாத பிரியமும் உரியாத உரிமையும் உணர்ந்தருள. இங்ஙனம் அன்பு நலங்கனியப் பரிந்துகூறியும், ஆர்வம் விளையப் புகழ்ந்து பேசியும் அவள் யாதும் அசையாது அகம் திமிர்ந்தே யிருந்தாள். அந்நிலை தெரிந்து குலைகுலைந்து நெஞ்சங் கடுத்து வயிற்றெரிச்சலோடு முடிவில் ஒன்றைச் சொல்லித் தொலைக்க முடிவு செய்து,

"மண்ணே கொள்நீ மற்றையது ஒன்றும் மற"

என்றான். இது மிகவும் மறுக்க மீதூர்ந்து வந்தது.

அம்மா! இரண்டு வரங்களுள் நீ விரும்பியபடி ஒன்றை மட்டும் எடுத்துக்கொள்; மற்றொன்றைத் தயவுசெய்து மனத்தி

லும் நினையாமல் விட்டுவிடு என்று மன்னன் இங்கே பரிதபித்துச் சொல்லியிருக்கும் ஒலி நிலையை உய்த்துணர்ந்துகொள்க.

மண் என்றது அரசுரிமையை. பூமியை ஆளும் காணியாட்சியைக் கைக்கொள்க என்றவாறு. வெறுப்பும் வெகுளியும் இகழ்ச்சியும் கடுப்பும் உள்ளே மண்டியுள்ளமையை மண்ணே கோள் என்றதில் கண்டு கொள்ளலாம்.

மற்றையது என்றது ''சீதை கேள்வன் போய்வன மாள்வது'' என அவள் முன்னம் சொன்னதை. இராமன் வனம் போக என்று எண்ணியவுடனே உள்ளமும் உயிரும் நடுங்குகின்றன ஆதலால் அதனை வாய்திறந்து நேரே சொல்லமுடியாமல் அது என்று அருவருப்போடு சுட்டினான். நினைத்தாலும் நெஞ்சுவேம்; சொன்னாலும் நா வேம்; கேட்டாலும் காது வேம் என்பதாம்.

சொன்ன வாயும் கேட்ட காதும் கேடடையும்படியான அதிபாதகம் ஆதலால் அதனை இனி ஒருபோதும் நினையாதே என்பான் மற என்றான். நினைவிலிருந்தால் நீயும் கெடுவாய்; நானும் கெடுவேன்; உலகிற்கும் கேடாம் என்பது கருத்து.

இரண்டு வரங்களுள் ஒன்றைக் கொடுத்து விட்டேன்; மற்றொன்று உள்ளினும் உயிர் சுடும் உயர்துயருடையது; அதை உள்ளாதொழித்து என்னை மன்னித்தருள் என்று மன்னன் இங்கே பெரிதும் மறுகி மன்றாடிவேண்டுகின்றான்.

கண்ணும் உயிரும் உன்னுடையன என்று வேறு நோக்கில் உரிமைதோன்ற முன்னம் உரைத்தான்; குறித்தபடி கண்ணேயனைய மண்ணைக் கொடுத்தான்; இனிஉயிருக்கு மன்றாடுகின்றான்; ஆனல் முடிவில் கொடுத்து முடிவுறப் போகின்றான்; இம் முடிவினை முன்னதாகவே சொற்போக்கில் முடித்து வைத்திருக்கும் விதிநுட்பத்தையும் கவியின் மதிநுட்பத்தையும் அதிநுட்பமாக நுனித்து நோக்கி வினைவிளைவை யறிந்து கொள்க.

விடாப்பிடியாய் நின்ற கைகேசிக்குப் பாதியை விட்டுக் கொடுத்து மீதியை வேண்டாதுவிடும்படி அரசன்மிகவும் குழைந்து வேண்டுகின்றான்: அடியில் வருவது காண்க.

"வாய்தந் தேன்என் றேனினி யானோ அதுமாற்றேன்;
நோய்தந் தென்னை நோவன செய்து நுவலாதே!
தாய்தந் தென்னத் தன்னை யிரந்தால் தழல்வெங்கட்
பேய்தந் தீயும் நீயிது தந்தால் பிழையாமோ?"
(கைகேசி சூழ்வினைப் படலம், 29)

"கைகா! நீ விரும்பிய வரங்களைத் தருவதாக நான் முன்னமே உனக்கு உறுதி கூறிவிட்டேன்; இனி ஒரு போதும் மாறேன். என் இயல்பினை நீ நன்கு அறிவாய்! பொய் பேசாத புனிதக் குலத்தில் பிறந்தவன்; மெய்யே யன்றி ஐயோ! நான் வேறொன்றும் அறியேன்; உன் மூத்த மகனுக்கு முடி சூடுவதாக முன்னமே வாக்களித்துவிட்டேன்; அந்த வாக்கு மாறலமா? அதனை நோக்கியருள்! பொல்லாத வார்த்தைகளைச் சொல்லி உள்ளத்தையும் உயிரையும் துடிக்கச் செய்து என்னை வீணே கொல்லாதே! உன்னை மிகவும் கெஞ்சி வேண்டிக்கொள்கின்றேன். தன்னிடம் வந்து ஒருவன் வருந்திக்கேட்டால் பேயும் இரங்கித் தாய்போல் அவனுக்குத் தந்தருள்புரியுமே; நீ எனக்கு அருளலாகாதா? உரிமையுடன் அருளவேண்டும். நான் வேண்டுவதெல்லாம் வேறொன்றும் இல்லை; நம் ஆவி யனைய அருமைமகனைக் கானகம் போ என்று கட்டளையிடாமல் விட்டருள்க என்பதே உன்னை நான் விழைந்து வேண்டுவது; இதனை நீ தட்டாமல் தந்தருளவேண்டும்" என்று இந்தவாறு வேந்தன் மன்றாடி நின்றான்.

அவள் சொல்லில் இவனுடைய உள்ளமும் உயிரும் நடுங்கியுள்ளன ஆதலால், "நோவன செய்து நுவலாதே" என்றான். நுவலல் = சொல்லல்.

தழல்வெம் கண் என்றது பேயின் கொடுமையும் கோரமும் தெரியவந்தது. இரக்கமற்ற கொடிய பேயும் தன்னிடம் வந்து இரந்தவனுக்கு நெஞ்சம் இரங்கித் தாய்போல் உவந்து தந்தருளும் என்பான், "தாய் தந்து என்னப் பேய் தந்து ஈயும்" என்றான்.

பேயும் தாயாய் இரங்கி யருளும் என்றது நீயும் என்பால் நேயம் புரிந்தருளவேண்டும் என்பது குறிப்பு.

"பேயல்ல வோஒரு வேளை வரந்தந்து பேசிடும், கல்
லாயல்ல வோநின் மனங்கெட்டி யானது மற்புதந்தான்
நீயல்ல வோமது ரேசர்பங்குற்றவள் நீ எனக்குத்
தாயல்ல வோபிள்ளை நான் அல்ல வோசிவ சாம்பவியே."

என்று மீனாட்சியம்மையை நோக்கிச் சொக்கநாதப் புலவர் இப்படிப் பாடியிருக்கிறார். பேய் வரம் தருதலை இதில் குறித்திருத்தலறிக. வாய்திறந்து கெஞ்சினால் பேயும் இரங்கியருளும் என்பதாம்.

தாய்முன் பிள்ளை இரங்கிப் பேசுவதுபோல் பெண்டாட்டி எதிரே தசரதன் இங்கே உள்ளம் குழைந்து பேசியிருக்கின்றான்.

இன்னவாறு பலவகையாகப் பன்னியிரந்தும் அவள் ஒரு சிறிதும் இரங்காமல் உறுதியிருந்து, "முன்னே தந்ததைப் பின்னே மறுத்து மன்றாடல் மன்னர்க்கு அழகன்று; மரியாதையும் அல்ல; உலகம் தெரியாத பேதை நான்; மகா மேதையாகிய நீங்கள் இப்படிச் செப்படிவித்தைகள் செய்து என்னைச் சீரழிக்கவேண்டா; வாய் திறந்து வரந்தந்துவிட்டு நான் நோய் தந்ததாக நவன்று என் தாய் தந்தைகளுக்கு இழுக்கை உண்டாக்குகிறீர்கள்; பேயை எடுத்துக் காட்டுகிறீர்கள்; பேசாதனவெல்லாம் பேசுகிறீர்கள்; எல்லாப்பேச்சுகளும் என்னைப் பொல்லாதவளென்றே தூற்றுகின்றன. நீங்கள் நல்லவராயிருந்தால் சரியே; உள்ளே யிருந்து பொய்யைச் சொல்லுகிறது; வெளியே உலகம் அறியச் சத்தியவான் என்று துள்ளுகிறது. நல்ல குலமன்னரான நீங்களே இந்த வண்ணம் விந்தைகள் பண்ணினால் பிறரை நொந்துகொள்வதால் யாது பயன்?" என யாதும் கூசாமல் கூர்வேல் எறிந்ததுபோல் நேரே கூறி நின்றாள். அவ்வுரைகளைக் கேட்டு இவன் உள்ளம் அழுங்கி உயிர் புழுங்கி அயர்வுறலானான். அடியில் வருவனகாண்க.

அச்சொற் கேளா ஆவி புழுங்கா அயர்கின்றான்
பொய்ச்சொற் கேளா வாய்மொழி மன்னன் பொறைகூர
நச்சுத் தீயே பெண்ணுரு வன்றோ? என நாணு
முச்சற் றார்போல் பின்னும் இரந்தே மொழிகின்றான். (1)

நின்மகன் ஆள்வான் நீயினி தாள்வாய் நிலமெல்லாம்
உன்வய மாமே ஆளுதி தந்தேன் உரைகுன்றேன்;
என்மகன், என்கண், என்உயிர், எல்லா வுயிர்கட்கும்
நன்மகன் இந்த நாடிறவாமை நய என்றான். (2)

மெய்யே என்றன் வேரற நூறும் வினைநோக்கி
நையா நின்றேன் நாவும் உலர்ந்தேன் நளினம்போல்
கையான் இன்றென் கண்ணெதிர் நின்றும் கழிவானேல்
உய்யேன் நங்காய்! உன்னபயம் என் உயிரென்றான். (3)

(கைகேசி சூழ்வினைப்படலம், 31-33)

இராமனைக் காட்டுக்கு அனுப்பாமல் காத்தருள் என்று கேட்டதற்கு யாதும் இசையாமல் மீட்டும் வன்கண்மையே காட்டினாள் ஆதலால் அதனைக்கண்ட மன்னன் கருத்தழிந்து இங்ஙனம் உருத்து உழலலாயினான். புழுங்கா என்றதனால் அவன் உயிரடைந்துள்ள துயரம் உணரலாகும். புழுங்கல், ஒரு போக்குமின்றி யுள்ளே யழுங்கி வேதல்.

பொய்யுரையைக் காதாலும் கேட்டறியாத சத்திய சீலனான உத்தமன் ஆதலால் "வாய்மை தவறலாமா?" என்று அவள் குத்திக் கூறிய கொடுமொழியை நினைந்து உள்ளம் கொதித்தான். பொறை கூர என்றது அன்று இவன் பொறுத்து நின்ற பொறுமை மிகுதியை உணர்த்தி நின்றது.

நெஞ்சம் தாங்கமுடியாத அவளது வஞ்சக் கொடுமையை எண்ணி எரியிடைப்பட்ட புழுப்போல் உயிர் பரிதபித்துள்ளமையான், "நச்சுத்தீயே பெண் உரு" என்று நைந்து புலம்பினான். உள்ளக் கொதிப்பு இதில் உச்ச நிலையில் ஓங்கி யுள்ளது.

சுடு தீ செந்தீ என்னாது நச்சுத்தீ என்றது அதன் வேறுபாடு தெரிய. தீ தொட்டால் மட்டும் சுடும்; கட்டுக்கு அடங்கும். இவள் ஒரு வழியிலும் கட்டுப்படாமல் உயிரழியச் சுட்டு எரிக்கின்றாள்; இதனை நினைத்தாலே நெஞ்சு வேகின்றது; உணர்வழிகின்றது; உயிர் சுழிகின்றது. ஏழு நாவுடைய அதனினும் ஒரு நாவுடைய இது கொடிதாய் நிற்கின்றது. அது புகை அழல்களை அயலே வீசும்; இது பழி துயர்களை வெளியே வீசுகின்றது. இதன் ஒலி உயிர்ப்புகள் நெஞ்சம் அஞ்சும்படி நஞ்சுமிழ்ந்து வெளி வருகின்றன. இங்ஙனம் விடத்தீயாய் விடாது சுட்டெரித்தலால் "நச்சுத் தீயே" என்று நைந்து துடித்தான். தான் நெடுநாளாக இச்சை மண்டி நச்சியிருந்தது இன்று நச்சுத்தீ ஆயதென்க. உரை நுட்பம் உய்த்துணர்க. நஞ்சுதீ என நொந்து துடித்திருத்தலால் இவனது நெஞ்சத் துயரின் நிலை தெரியலாகும்.

"நச்சுத்தீயே; பெண் உருவு அன்று; ஓ!" என்று அச்சமீதூர்ந்து இவன் அலறிய படியை இதில் ஆய்ந்து பார்க்க. நாணு = நாணி. நாணியது, படுபாதகியான இக் கொடியவளோடு நெடுநாளாகக் கூடியிருந்து குடிவாழ நேர்ந்ததே! என்று உள்ளம் கூசியும், மீண்டும் முகம் பார்த்துப்பேச வெட்கியும் என்க.

முச்சற்றார் என்றது எளியவர், அடியவர் என்றவாறு. கழு பேரிழிவு காட்டியபடியிது. மூச்சு அற்றார் என்பது முதல் குறுகி இங்ஙனம் நின்றது. மூச்சு = ஆண்மை, உயிர்ப்பு, பலம்.

" இச்சைக் கேற்றன யான் செய்த இத்தனை காலம்
முச்சற்றன் கொலம் முழுமுத லோவென முனிந்தான்."
(உயுத்தகாண்டம், மந்திரப்படலம், 112)

இது விபீடணனை நோக்கி இராவணன் உரைத்தது. பரமனே இராமனாய் வந்துள்ளான் அவனோடு பகை ஆகாது என்று தம்பி பரிந்து சொன்னபோது அவன் எரிந்து கூறியது. அம் முழுமுதலோன் இத்தனைகாலம் மூச்சு அற்றான் கொல்? என்பது இங்கே முச்சற்றான் என வந்துள்ளமை காண்க.

" எச்சுறு துயரிடை எய்த, ஈத்துணை
முச்சிறு வாழ்க்கையின் மூண்டு ளோரென."
(படைத்தலைவர் வதைப்படலம், 46)

மூச்சு இறு என்பது முச்சிறு என இதன்கண்ணும் வந்திருத்தலறிக. " முச்சற்றார் " எனக் கவி முன்னம் குறித்துள்ள பொருளின் நிலைமை இவற்றால் நன்கு தெளிவாம்.

சொற்களை இப்படிச் சிதைத்துக்கொண்டால், பொருள் எளிதே புலப்படாது; இடர்ப்பாடுண்டாம்; ஆயினும் எதுகைமோனைகளை எதிர்நோக்கி மகாகவிகளுடைய வாக்கிலும் ஒரோவழி இவ்வாறு வந்துவிடுகின்றது; ஆதலால், நாம் நொந்து விடாமல் பொறுமையுடன் பொருளை நுனித்தறிந்து கொள்ளவேண்டும்.

இங்ஙனம் வருவதைச் செய்யுள் விகாரம் என இலக்கணமும் இசைந்துள்ளது.

" வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி."
(நன்னூல்)

என்னும் இயல்விதியும் ஈண்டு அறியத்தக்கது. இங்கே வந்துள்ளது குறுக்கல் என்னும் விகாரமாம்.

உள்ளம் குறுகி மன்னன் உணர்வழிந்து பேசுகின்றான் ஆதலால் சொல்லும் குறுக நேர்ந்தது. பின்னும் என்றது முன்னம் கெஞ்சி மொழிந்த பரிதாப நிலைகளை நெஞ்சு கொள்ள வந்தது.

நின்மகன் என்றது பரதனை. அவன் ஆள்வான் என்றதோடு அமையாமல், "நீ இனிது ஆள்வாய்!" என்றது அவனரசைத் தன்னரசாக்கொண்டு தனி நின்று நீயே ஆளலாம் என்றவாறு. ஒருவேளை அண்ணன் மீது அன்புமீதூர்ந்து அரசுவேண்டாம் என்று அவன் மாறுபட்டுப் போனாலும் நீயே பேரரசியாய் அமர்ந்து பாரெல்லாம் ஆள்க என அப் பதவியின் உயர்வுரிமைகளை உணர்ந்து உவகைகூர இவ்வாறு உரைக்கலானான்.

எல்லா அரசுரிமைகளையும் உனக்குத் தந்துவிட்டேன்; ஏக சக்கரவர்த்தினியாய் நீ நின்று வாழ்க; நான் ஒன்றும் மாறேன்; எனக்கு ஓர் வரம் மாத்திரம் தந்தருளவேண்டும் என்று நொந்து தவிக்கின்றான்.

"என் மகன், என்கண், என் உயிர், எல்லா உயிர்கட்கும்
நன்மகன் இந்த நாடு இறவாமை நய."

என்றதில் பிள்ளையை நினைந்து உள்ளமும் உயிரும் உருகி அரசன் உரையாடியிருக்கும் உருக்கத்தை ஊன்றி நோக்குக. ஆன்ம வுருக்கம் கனிந்து சொற்கள் அலமந்து வெளிவந்துள்ளன.

"என் மகன்" என்றதுடன் அமையாமல் கண், உயிர் என்றது இராமனுக்கு இடர் எண்ணுவது தன் கண்ணைப்பிடுங்கி உயிரைப் பறிப்பது போலாம் என அவள் உணர்ந்து இரங்க என்க. என் கண்ணும் உயிரும் உன்னுடையன என மன்னன் அவளிடம் உரிமை தோன்ற முன்னம் சொன்னான்; இங்கே அக்கண்ணினும் உயிரினும் இனியது இன்னதாம் என உண்மையுணர வுரைத்தான். தன் நிலைமையை அவள் எண்ணியிரங்கும்படி இன்னவாறு பரிதாபமாய் அரசன் பன்னி நின்றான்.

உலகிற்கெல்லாம் அரசியான நீ எல்லா வுயிர்கட்கும் இனியனை ஒருவனை உன் குடிகளைக் காக்கும் அரச முறைப்படி இனிது பேண வேண்டும் என இறுதியில் வேண்டினான்.

அரசு முடியைப் பறித்துக்கொண்டாய்! அவ்வளவே போதும்; மேலும் இராமனைக் காட்டுக்குப்போகும்படி விடாமல் இந்நாட்டிலேயே இருக்கும்மாறு செய் என்பான், "நாடு இறவாமை நய" என்றான். நய என்றது மனம் இரங்கி அருள்க

என்றவாறு. தன்பயந் தெளிய நயந்தருளும்படி இவ்வாறு நயந்து கூறினன். இறத்தல்=கடத்தல். நாடு கடத்தல் கூடாதென்பதாம். "அவன் நாடு கடந்தால் என் உயிர் இக்கூடு கடந்து போம்." என்பது குறிப்பு.

நகர் என்னது நாடு என்றது, உனது இராசதானியாகிய இந்தத் திருவயோத்தியில் இராமன் இருக்கக்கூடாது என்றாலும் கோசல நாட்டுள் எங்கேயாவது ஓரிடத்தில் இருக்கும்படியேனும் இசைந்தருளவேண்டும் என்பதாம்.

இங்ஙனம் பரிந்து மொழிந்தும் அவள் நயந்தருளாமையால் இவன் மயங்கி மறுகினன்; மனங்கொதித்தான்; சினந்து பல கருதினன். "இந்தக் கெடுகாலி கேட்ட கொடு வரம் உலகுக்கெல்லாம் பெருங்கேடு ஆதலால் அதனைக் கொடாது மறுத்து விடுவோமே" என்று உருத்து நினைந்தான்; நினைந்தவன் உடனே "ஐயோ! அது செய்யின் பொய்யாகுமே!" என்று புகைந்து அவலமீதூர்ந்தான். மெய்யால் நேர்ந்துள்ள வெய்ய துயர்களை ஓர்ந்து உய்யும் வழி காணமையால் உணர்வு கலங்கி அதனை வையலானன்.

"மெய்யே என்றன் வேர் அற நூறும் வினை நோக்கி, நையா நின்றேன்" என நைந்து புலம்பினன். என் வேர் என்றது என்னுடைய குலமூலத்தை என்றவாறு. நூறுதல்=நிலை தெரியா வகை அழித்து ஒழித்தல். இராமன் அரசு துறந்து நெடுவனம் போகும்படி தன் வாய்மையான வாக்குறுதி ஊக்கியுள்ளமையால் அதனை நோக்கி அரசன் இவ்வாறு நொந்து கூறினன். சத்தியத்தை மீற முடியாமல் தட்டழிந்து தவித்தபடியிது.

ஆணைக்குக் கட்டுப்பட்டு அலமருகின்றேன்; என் நிலைமையையறிந்து நெஞ்சிரங்கியருள் என்று இங்ஙனம் கெஞ்சலானன். நாவும் உலர்ந்தேன் என்றதனல் அவன் ஆவிதுடித்து அலமந்துள்ளமை உணர்கின்றது.

செந்தாமரை மலர் போன்ற அழகிய கைகளையுடைய இராமன் என் பார்வையிலிருந்து சிறிது நீங்கினலும் நான் பிழைத்திரேன்; செத்தே போவேன்; கைகேசி! என் உயிர் உன் அடைக்கலம்; என் பிள்ளையையும் என்னையும் காத்தருள் எனக் கதறினன். நளினம் என்றது கையின் எழில் நலங்களை எண்ணி.

மறுநாள் காலையில் இராமன் கை செங்கோல் ஏந்தும்; அதனைக் கண்டு மகிழலாமென்று கருதியிருந்தான் ஆதலால் அக் காட்சி கண்ணுள்ளிருந்தபடியே இவ்வண்ணம் மொழிந்தான்.

நங்காய்! என்றது பெண்ணரசியே என்றவாறு. பெண்களுள் சிறந்த பெண்மணியான நீ என் கண்மணியைக் கையகலா தருள் என்பதாம். உய்யேன் என்றது தனது உயிர்நிலையை உணர்ந்தருள என்க.

எங்கும் வெற்றி வீரனாய் விளங்கி நின்ற தசரதச் சக்கரவர்த்தி தன் வாழ்நாளில் அபலைபோல் அலமந்து இருவரிடமே அபயம் புகுந்திருக்கிறான். முன்னம் பரசுராமர்பாலும், இப்பொழுது கைகேசியிடமும் கையடையாயினான். ஈரிடங்களிலும் இராமனுக்காக வேதாழ்ந்து சரண்புகுந்திருக்கின்றான். ஆகவே அவன்பால் ஆழ்ந்துள்ள ஆருயிர்க்காதலும் பேராவலும் அறியலாகும். அந்தப் பரிவினாலே தான் உலையுறு மெழுகெனக் குலையுருகலானான். இங்ஙனம் பலவாறு பரிந்து வேண்டியும் அவள் சிறிதும் இரங்காமல் சீறியே நின்றாள்.

"இரந்தான் சொல்லும் இன்னுரை கொள்ளாள்; முனிவெஞ்சாள்;
மரந்தான் என்னும் நெஞ்சினள் நாணாள் வசைபாராள்
சரந்தா வில்லாய்! தந்த வரத்தைத் தவிர்கென்றல்
உரந்தான் அல்லால் நல்லற மாமோ? உரை என்றாள்."

(கைகேசி சூழ்வினைப்படலம், 34)

கைகேசி இரக்கமற்ற நெஞ்சளாய் இதில் உரைத்து நிற்றலை ஊன்றி நோக்குக. தசரதனை இரந்தான் என்றது உலகு புரந்து யாண்டும் ஈந்து வந்த கோமகன் ஈண்டு இவ்வாறு தாழ்ந்து வேண்டினான் என அவ்வாண்டகையின் பரிதாப நிலை தோன்ற என்க.

கணவன் கெஞ்சிக்கேட்டதற்கு இணங்காமலும், ஏறிய கோபம் இறங்காமலும் முரண்கொண்டு முருடு மண்டியிருந்தாள் ஆதலால், "மரம்தான் என்னும் நெஞ்சினள்" என இகழ்ந்து கூற நின்றாள். மரம் என்றதனால் உள்ளே வயிரம் பாய்ந்து அவள் உறுதி பூண்டு நிற்கும் உரனும் திண்மையும் உணரலாகும்.

மரம் போல் என்றது தான் என்றது மரமே நெஞ்சுருவாய் நெடிது நிலை பெற்றுள்ளதென்பதாம். அதன் வன்கொடுமை நன்கு தெரிய இங்ஙனம் கூறினர்.

இரக்கமற்ற கொடியரைக் குறித்துக் கூறுங்கால் கல் மரங்களோடு ஒப்பிட்டுக் கவிகள் அவரை இளித்துக் கூறுவர்.

"மரக்கண் ணோடியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்" (குறள், 576)

"வரக்கண்டும் நாணாதே வல்லையால் நெஞ்சே
மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்" (முத்தொள்ளாயிரம்)

கண்ணோட்டம் புரிந்து இரங்கியருளாதவர் மரங்களேயாவர் என இவற்றுள் இகழ்ந்திருத்தல் காண்க.

"இரும்பு போல் வலிய நெஞ்சம்" (திருமாலை, 17) என்றபடி கைகேசி நெஞ்சுக்கு இங்கே இரும்பை நேர் சொல்லாதது என்னை? எனின், இரும்பைத் தீயில் காய்ச்சினால் நீட்டலாம், வளைக்கலாம், குழைக்கலாம், உருட்டலாம்; இவள் நெஞ்சு எவ்வகையிலும் யாதும் இளகாமையால் அது இசையாது போயதென்க. கல்லைச் சொல்லலாகாதோ? எனின், "கல்லேனும் ஐய ஒரு காலத்தில் உருகும்" (தாயுமானவர்), "கல்லுருகும் காலம் கழுகு அறியும்" என்றவாறு ஒரோவழி நெகிழ்ந்து அது உருகி அமையும்; இவள் உள்ளம் எவ்வழியும் உருகாமையால் அந்த நல்லகல் இந்தப் பொல்லாத நெஞ்செதிர் நில்லாதென்க.

வெட்டி முறித்துச் சுட்டுப் பொசுக்கினாலும் கரியும் சாம்பலுமாய் மரம் கழிந்துபோமேயன்றி எளிதே உருகி நில்லாது; அதுபோல் சித்திரவதை செய்து கொன்று தொலைத்தாலும் பொன்றி முடிவாளே அன்றி ஒன்றும் இரங்காள் ஆதலால் மரம் இவள் நெஞ்சுக்கு இங்கே உவமையாய் வந்தது.

"மரங்கள் போல் வலிய நெஞ்சம்"

எனத் தொண்டரடிப்பொடியாழ்வார் சொல்லியுள்ளதும் அறிக.

கொண்டகணவன் தொழுது வேண்டுவதைக் கண்டும் கொஞ்சமும் கூசாமலும், மேல் விளைகின்ற பழியை எண்ணாமலும் வீறுடன் எதிர்நின்று அவன் நெஞ்சம் துடிக்க நேரே பேசினாள்.

சரம்தா வில்லாய்! என்றது அம்பு தாவிப்பாயும் வில்லை யுடையாய் என்றவாறு. வில் வீரனை நீ சொல் மாறலாகா தென்று சுட்டிக்கூறியபடியிது. உன் கையில் உள்ள வில் உமிழ் கின்ற பகழியும் கூடக் குறி தவறாமல் அடிக்குமே! வாயுமிழ்ந்த சொல் தவறலாமா? என்பது குறிப்பு.

தனக்கு வரம் தந்தது சரம் தாவிய போர்முனையில் ஆதலால் அந்த உரங்காண இவ்வாறு உரைத்தாள் என்க.

"அசுரரை வென்று விண்ணுலகை அமரருக்குத் தந்துதவிய மகா வீரரான தாங்கள் ஒரு பெண்ணிடம் தந்ததைத் தடை செய்து நிற்பது கொடையாண்மைக்குப் பெரும் பழியாகும்; அதுவுமன்றிப் பேதையை ஏமாற்றிய பாதகமுமாகும். ஆதலால் யாதும் தடைசொல்லாமல் நான் குறித்த வரத்தின்படியே முழுவதும் தாங்கள் உரைத்துவிடுவது நல்லது; ஒன்று தந்தேன்; மற்றொன்று மற என்று மரியாதையின்றி மன்றாடி யுழல்வது சரியாகாது" என இன்னவாறான கொடுமொழிகளை அவள் கூசாது கூறினாள். அக்கூற்று இவனுக்குக் கூற்றாயிருந்தது. குலைதுடித்து நிலமிசை வீழ்ந்தான். பல பல நினைந்து பரிந்து புலம்பினான். இவன் துடித்துப் புலம்பிய படியை அடியில் பார்க்க.

"கொடியாள் இன்ன கூறினள் கூறக் குலவேந்தன்
முடிசூடாமல் வெம்பரல் மொய்கா னிடை மெய்யே
நெடியான் நீங்க நீங்கும்என் ஆவி யினி என்று
இடியே றுண்ட மால்வரைபோல்மண் ணிடைவீழ்ந்தான். (1)

வீழ்ந்தான் வீழா வெந்துயரத்தின் கடல்வெள்ளத்
தாழ்ந்தான் ஆழ வக்கடலுக்கோர் கரைகாணான்
சூழ்ந்தாள் துன்பம் சொற்கொடியாள்சொற் கொடுநெஞ்சம்
போழ்ந்தாள் உள்ளப் புன்மையை நோக்கிப் புலர்கின்றான். (2)

ஒன்று நின்ற ஆருயி ரோடும் உயர் கேள்வர்
பொன்று முன்னம் பொன்றினர் என்னும் புகழல்லால்
இன்றோர் காறும் எல்லையார்தம் இறையோரைக்
கொன்றார் இல்லைக் கொல்லுதியோநீ கொடியாளே! (3)

ஏவம்பாராய் இனமுறை நோக்காய் அறம் எண்ணாய்
ஆ! வென் பாயோ வல்லை மனத்தால் அருள் கொன்றாய்
நாவம்பாலென் ஆருயிர் உண்டாய் இனிஞாலம்
பாவர்பாரா தின்றுயிர் கொள்ளப் படுகின்றாய்! (4)

ஏண்பால் ஓவா நாண்மடம் அச்சம் இவையேதம்
பூண்பால் ஆகக் காண்பவர் நல்லார் புகழ்பேணி
நாண்பால் ஓரா நங்கையர் தம்பால் நணுகாரே
ஆண்பா லாரே பெண்பா லாரோ டடைவம்மா? (5)

மண்ணாள் கின்றார் ஆகி வலத்தால் மதியால்வைத்
தெண்ணா நின்றார் யாரையும் எல்லா இகலாலும்
விண்ணோர் காறும் வென்ற எனக்கென் மனைவாழும்
பெண்ணால் வந்த தந்தரம் என்னப் பெறுவேனோ? (6)

என்றென் றுன்னும் பன்னி யிரக்கும் இடர்தோயும்
ஒன்றோன் றோவ்வா இன்ன லுழக்கும் உயிருண்டோ?
இன்றின் றென்னும் வண்ண மயங்கும் இழையும்பொற்
குன்றோன் றோன்றோடொன் றிய தென்னக் குவிதோளான்"(7)
(கைகேசி சூழ்வினைப்படலம் 35-41)

தசரதனுடைய துயர நிலைகளைத் தனித்தனியே இவற்றுள் நுனித்து நோக்குக. முன்னர் இருமுறை மறுகித் தெளிந்தான்; பின்னரும் பன்னியிடம் பலபன்னி யிரந்தான்; பலன் காணாமை யால் இப்பொழுது இங்கே நம்பிக்கை யிழந்து வெம்பிவிழுந்து வெந்துயரோடு இங்ஙனம் புலம்பலாயினன்.

கைகேசியுடைய சொல்லைக் கேட்டு நெஞ்சுடைந்து தரையில் வீழ்ந்த தசரதனை "இடியேறுண்ட மால்வரை" என்று குறித்திருக்கிறார். யாண்டும் நிலை குலையாமல் மேரு மலைபோல் தலைமை யுடன் நிலைத்திருந்த மகாவீரன் ஆதலால் மால்வரையோடு நேர் எண்ண நின்றான். என்றும் பேராற்றலுடைய இவன் ஓராற்றானு மூய்வின்றி ஆற்றாமை மீதூர்ந்து அன்று அலமந்து துடித்தது பெரும் பரிதாபமாய்ப் பெருகி யிருந்தமையால் அதனை உணர்ந்துருக உவமை குறித்தார். அவள் சொல்லை இடியேறு என்றதனால் அதன் கொடுமையும் கொலை நிலையும் புலனும். உவமானங்கள் உற்ற நிகழ்ச்சிகளை நன்குணர்த்திப் பொருள் நிலைகளை வியந்து நோக்க வெளிப்படுத்துகின்றன. இங்கே வியப்புடன் அச்சமும் அவலமும் உச்ச நிலையில் உணரவந்தன.

மண்ணிடை விழுந்தவன் எண்ணிடை யழுந்தி ஏங்கிப் பதைத்து இனைந்துள்ள நிலைகளை முன்னுற விளக்கியிருக்கிறார்.

"இனி இராமன் முடிசூடான்; நகர் நீங்குவான்; அவன் நீங்குமுன் என் உயிர் நீங்கும்; அந்தோ! என் முடிவு இப்படியா முடிந்தது! ஆ தெய்வமே!" என்று இவன் அலறி விழுந்தான். விழ்ந்தவன் துன்பக் கடலில் ஆழ்ந்தான். கரைகாணுமல் கலங்கி யுழன்ருன். உள்ளம் வேக உயிருசலாட அவள் சொல்லை நினைந்து துடித்துப் புரண்டு அல்லலிலயர்ந்து மெல்ல அசைந்தான். அப் பொல்லாதவளது போக்கை நோக்கிப் பொங்கிப் பொருமித் தனக்குவாய்த்த தீமையை வாய்வெருவிப் பிதற்றினுன்.

தங்கள் நாயகர்களுக்கு ஏதேனும் துன்பம் நேரின் மங்கையர் உள்ளம் பரிந்து உயிர் பதைத்து அத்துயரை நீக்கத் துடித்து நிற்பர்; முடியவில்லையாயின் அவர் உயிர் நீங்குமுன் தம்முயிரை நீக்கிக்கொள்வர். சிலர் தம் கணவர் உடனேயே இறந்துவடுவர். இங்ஙனம் சிறந்த பதிவிரதைகளாய் உயர்ந்து நின்று தாம் பிறந்த குடிக்கும் புகுந்த குடிக்கும் பெருங்கீர்த்தியை விளைத்துப் பெண்ணினத்துக்கெல்லாம் கண்ணியம் செய்துள்ள புண்ணியவதிகளைக் கதைகளில் கேட்டிருக்கிருேம்; கண்ணெதிரேயும் சிலரைக் கண்டிருக்கின்ருேம்; அங்ஙனமன்றிக் கொண்ட கணவனைக் கொன்ற கொடும்பாவி ஒருத்தி உண்டு என்று இந்நாள் வரையும் நான் எண்ணியறியேன்; நெஞ்சம் துடிக்கின்றேன்; அந்தோ! என் உள்ளம் பதைக்க என்னைக் கொல்லுகின்ருயே! என்று அவளுடைய உள்ளம் இரங்கச் சொல்லுகின்ருன் ஆதலால், "கொடியாளே! நீ கொல்லுதியோ?" என்று கூவியலறினுன்.

"கேள்வர் பொன்றுமுன்னம் பொன்றினர் என்னும் புகழ்" உடையாரை எதிரெடுத்துக் காட்டியது 'இவளுடைய பழிநிலை வெளியே தெளிவாகத் தெரிய என்க. பொன்றல் = இறத்தல்.

தம் காதலர் பொன்றினுர் என்று பொய்யாக வந்து ஒருவர் சொல்லினும் அதனையும் மெய்யாக நம்பி உடனே உயிர் பொன்றினரும் உளர். சயதேவர் மனைவியாராய பதுமாவதியார் இங்கே நன்கு சிந்திக்கத்தக்கவர். கேள்வர் பொன்றப் பொன்றினுர் பதும கோபனை முதலாயினேர்.

பாண்டியன் நெடுஞ்செழியன் பொன்றியபொழுதே அவனுடைய அருமைத் திருத்தேவியாகிய பெருங்கோப்பெண்டும் உடனே பொன்றினுள். அந்த அரசி பொன்றியது அதிசய முடையது.

" மன்னவன் செல்வுழிச் செல்க யானெனத்
தன்றுயிர் கொண்டவன் உயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்."
(சிலப்பதிகாரம்)

எனவரும் இதனை ஈண்டு ஆய்ந்துகொள்க.

பூதப்பாண்டியன் இறந்தவுடன் அவனது அருமை மனைவி கோப்பெருந்தேவியும் எரியிடைமூழ்கி இறக்கத் துணிந்தாள்; துணியவே மந்திரி முதலிய பெரியோர்கள் மறுகித்தடுத்தார்; அத்தடையையும் நீக்கிச் சுடலை நெருப்பில் தன் உடலை மாய்த்தாள்.

" பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்
நுமக்கு அரிதாகுக தில்ல எமக்கு எம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயும் ஓரற்றே." (புறம், 246)

என அக்கற்பரசி தீயுள் மாயுங்கால வாய்மொழிந்துள்ளமை காண்க. பெருங்காடு=சுடுகாடு. ஈமம்=விறகு.

" காதலர் இறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகின் உயிர்த்தகத் தடங்காது
இன்னுயிர் ஈவர்." (மணிமேகலை, 2)

இன்னவாறு பதிவிரதைகள் பலர் இந்நாட்டில் மன்னியிருந்துளார். இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் ஒரு வீரன் போரில் புகுந்து பொருது மாண்டான். இறந்தான் என்னும் அச் சொல்லைக் கேட்கு முன்னமே இல்லிலிருந்த அவள் மனைவியும் இறந்து விழுந்தாள். அதனை அறிந்தவரனைவரும் வியந்து புகழ்ந்தார். ஒரு உயிரே இரண்டு உடலில் மருவி இருந்தது என அந்த அதிசய நிலையை எங்கும் துதிசெய்து பாராட்டலாயினர். அடியில் வருவது காண்க.

" ஒருயிராக உணர்க உடன்கலந்தார்க்கு
ஈருயிர் என்பர் இடைதெரியார்—போரில்
விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கும்
உடனே உலந்த துயிர்." (புறப்பொருள்வெண்பாமாலை)

இதனால் கொழுநருடன் தழுவியுள்ள குலமகளிரின் உழுவலன்பும் உயர்காதலும் உயிரொருமையும் ஒருங்கே உணரலாகும்.

"நாகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்துள் ஓருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம்
ஏகத் தொருவன் இரும்பொழில் அம்பல வன்மலையில்
தோகைக்குந்தோன் றற்கும் ஒன்றாய்வரும்இன்பத்துன்பங்களே"
(திருக்கோவையார்.)

உழுவலன்புடைய காதலரது கெழுதகைமை இவ்வாறு விழுமிதாகப்புனைந்து போற்றப்பட்டுள்ளது. உள்ளப்பண்பொத்து இங்ஙனம் உயிர்க்காதல் மண்டியிருத்தலினாலேதான் இணைபிரிய லாற்றாது துணைவிகள் இறக்க நேர்கின்றனர். தம் உடலுயிர் யாவும் தமது கேள்வர்க்கே உரிமை செய்துள்ளமையால் வாழ்வி லும் தாழ்விலும் நிறையொத்து அவர் நெஞ்சுகப்ப நிறையுடை மகளிர் நிலைத்து நிற்கின்றார் என்க.

"சாமெனிற் சாதல், நோதல், தன்னவன் தணந்த காலைப்
பூமனும் புனைதலின்றிப் பொற்புடன் புலம்ப வைகிக்
காமனை என்றுஞ் சொல்லார் கணவற்கை தொழுது வாழ்வார்
தேமலர்த் திருவோ டொப்பார் சேர்ந்தவன் செல்லல்தீர்ப்பார்."
(சீவகசிந்தாமணி, 1598)

சேர்ந்தவர் செல்லல் தீர்க்கும் தெய்வத் திருவாட்டிகளாகிய இத்தகைய பதிவிரதைகள் இத்தரையில் முன்னர் இருந்துள்ள மையான் இன்னவாறு மன்னன் வாயிலாக நன்னயமுடன் நம் கவி நவிற்றினார் என்க. தம்மைக் காட்டாமல் தமது நாட்டின் நிலைமையைப் பாத்திரத்தின் மூலமாகக் காட்டியிருக்கின்றார்.

கைப்பிடித்த கணவர் உள்ளம் குளிர உயிர் மகிழ ஒழுகும் குலமகளிர் கண் முன்னே நீ கொண்ட கொழுநனைக் கொல்லு கின்றாயே! ஐயோ! இந்தக் கொடுமையை ஒழியவிடு கைகா! என அழிதுயரோடு அரசன் அலறியிருக்கின்றான்.

ஏவம்பாராய்! என்றது உனக்கு நேர்கின்ற பழியையும் கேட் டையும் உணரவில்லையே! என்றவாறு. ஏவம் = இளிவு, குற்றம். இனமுறை நோக்காய்! என்றது உறவுரிமை கருதாமல் ஒழிகின் றாயே என்றவாறு. நான் உன் உரிமைக் கணவன்; இராமன் உனது அருமைத் திருமகன். எங்கள் இருவரினும் இனியார் உனக்கு இனி யார்? இங்ஙனம் உன் பேரன்பிற்குரிய எங்கள் பால் நேர்மாறாய்த் துன்பம் புரிகின்றாயே! இது நீ பிறந்தகுலத்

திற்கும் பெண்ணினத்திற்கும் பிழையாகாதா? பின் விளைவதைச் சிறிதேனும் சிந்தித்துணரின் இந்தவாறு ஈனமான இடரில் நீ இழிந்துபடாய் என்பான் இனமுறையை எடுத்துக்காட்டினான்.

இன்முறை எனவும் பாடம். அங்ஙனம் கொள்ளின் இல் வாழ்க்கைக்குரிய நல்லியல்பை நீ நோக்கவில்லையே என்றுகொள்க.

ஏவம் பார்த்தல், இனமுறை நோக்கல், அறம் எண்ணல் முதலிய உயரியல்புகளை உணராதொழியினும் நெடுநாள் உடனிருந்த கணவன் உயிர் பதைத்துழல்கின்றானே என்று பரிந்து ஐயோ! என நீ உள்ளம் இரங்கி உருகவில்லையே என்பான், “ஆ! என்பாயோ அல்லை” என்றான்.

அவளுடைய சொல் கொடிய பாணம்போல் உயிரைத்துடிக்கச் செய்துள்ளமையால் “நா அம்பாலே என் ஆருயிர் உண்டாய்! என்று நைந்து மொழிந்தான். உண்டாய் என இறந்த காலத்தால் கூறியது தப்பாது இறந்துபடுதலை வலியுறுத்தி வந்தது.

பழியஞ்சாமல் என்னை நீ கொல்லுகின்றாய்! இனி உலகப் பாவம் பாராமல் உன்னைப் பழித்துக்கொல்லும்; உயிர்பதைக்கப் போகின்றாய் என்பான் படுகின்றாய்! என்றான்.

“நாணம் மடம் அச்சம் முதலிய நல்ல பெண்மைக் குணங்களில்லாத பொல்லா வீண மகளைக் கட்டிக்கொண்டதனால் நான் இவ்வாறு ஈனமடைய நேர்ந்தேன்; இப்படி இழி சாவு நேருமென்று கனவிலும் எண்ணவில்லையே! மண்ணும் விண்ணும் அடங்கவென்ற மகாவீரனாகிய நான் ஒரு பெண்ணால் இறந்தேன் என்னும் பிழை மிகப் பெற்றேனே. இப்பழி என்று தொலையும்? ஐயகோ”! என வெய்துயிர்த்து நொந்து மீண்டும் கைவிதிர்த்துக் கைகா! என்று கண்கலங்கலானான். சொல்லமுடியாதபடி அல்லல் பல மிகுந்து அலமந்துழந்தான்; ஆருயிர் அலமர அன்று இவன் அடைந்த துயரநிலைகள் அளவிடலரியன.

இடியும் என்றது மனமுடைந்து மறுகும் என்றவாறு. முன்னம் மால்வரை என்றதற் கேற்ப இங்கும் பொன்மலை என்னக் குவி தோளான் என்றார். நிலைதிரியாத மன்னன் இன்னவாறு நிலைகுலைந்து நெரிந்து துடித்தான் என்பதாம்.

உயிர் ஊசலாட இங்ஙனம் உளைந்து கிடந்த அரசனைநோக்கி அவள் சிறிதும் இரங்காமல் மேலும் சினந்துபேசினாள்: "இராமன் வனம்போக வரந்தந்தேன்" என்று வாய் திறந்து சொல்லுங்கள்! இல்லையானால் இப்பொழுதே என்உயிரை மாய்த்துக்கொள்வேன்; உடன் பழியோடு நீங்கள் பெருகி வாழுங்கள். இப்படிப் பகடித் தனங்கள் பேசிப் பாசாங்கு செய்வது வெறுக்கத் தக்கதாம். ஒரு புறவுக்காகத் தன் உடலை அரிந்துகொடுத்த பெருங்கொடை வள்ளல் மரபில் பிறந்திருந்தும் கொடுத்ததை மறுத்துரைப்பது குடிப் பழியாகும்; விரித்துப் பேசுவானேன்; உண்டுமா? இல்லையா? இரண்டில் ஒன்றைச் சொல்லிவிடுங்கள்; வேறொன் றும் இனிப் பேசக்கூடாது" என்று கொடுமையுடன் கூறிநின்றாள்.

## தசரதன் வரம் தந்து மயங்கியது.

அவ்வார்த்தையை அரசன் கேட்டான்; முடிவு நேர்ந்த தென்று முடிவுசெய்துகொண்டு அவளைச் சீறிப் பார்த்தான்; ஆ! பாதகி! என்று அலறினான்; உடனே, "ஈந்தேன் ஈந்தேன் என் சேய் வனமாள, நான் மாய்ந்தேன் மாய்ந்தேன்" என்று சொல்லி மயங்கி விழுந்து மூச்சடங்கினான். அவள் யாதும் கலங்காமல் கருதியது கைவந்ததென்று உறுதியோடு அகன்று போய் அமளிமிசை அமைதியுடன் படுத்துக்கொண்டாள்.

இந்த முடிவு இரவு இடை யாமம் கழிந்து ஏழு நாழிகை யளவில் முடிந்தது. தனது அருமை மகனுக்கு முடி சூட நினைந் ததும், மந்திராலோசனை செய்ததும், ஆயத்தங்கள் புரிந்ததும், அந்தப்புரம் வந்ததும் அவலத்துயர்கள் அடைந்ததும், அந்தமுற நேர்ந்ததும் அரசனுடைய சரிதையில் பெரிதும் சிந்தனைக்குரியன.

இந்தச் சோக நாடகத்தின் முதல்பாகம் இந்த நிலையில் முடிந்துள்ளது.

இனி அடுத்து நடந்த கதைநிகழ்ச்சிகளைத் தொடர்ந்துகாணு முன் இடையே சில இயற்கைக் காட்சிகள் எதிர்ப் படுகின்றன.

அதி பரிதாபமான துயரக் காட்சிகளை நீண்ட நேரம் கண்டு வந்த கண்களுக்கு நடுவே ஆறுதலாக வேறு சில இனிய உவகைக் காட்சிகளைச் சிறிது காட்டியருளும் அரிய நாடக முறையைக் கம்பர் இங்கே நன்கு கையாண்டிருக்கின்றார். பெரிய கலா

வினோதராகிய இவர் உலகநிலைகளை உயிர்களின் கண்ணெதிர் பல வகை நயப்பெற அலகிலின்பமா ஆட்டி யருள்கின்றார். உயர்ந்த ஆடலாசிரியரும் சிறந்த பாடலாசிரியரும் அருந் தவங் கிடந்தும் அடையமுடியாத அற்புத மேதை இவரிடம் அடைக்கலம் புகுந்திருக்கிறது. இவரது உணர்வொளி நவநவமாய் எழில் வீசிச் சுவை பயந்து வருகின்றது.

எஞ்சிநின்ற இரவின் கழிவை இனிமை கனியச் செய்திருக்கிறார். அந்த வைகறை வருணனைகளை இங்கே நாம் காண வருகின்றோம்.

இரவு கழிந்த இயல்பு.

"சேணு லாவிய நாளெ லாமுயிர் ஒன்று போல்வன செய்துபின்
ஏணு லாவிய தோளி னானிடர் எய்த ஒன்றும் இரங்கிலா
வாணி லாநகை மாத ராள்செயல் கண்டு மைந்தர்முன் நிற்கவும்
நாணி னாளென ஏகினாள்நளிர் கங்கு லாகிய நங்கையே."
(கைகேசி சூழ்வினைப் படலம், 46)

நெடுநாளாகத் தசரதனோடு ஒருயிர்போல் உடன் மருவியிருந்த கைகேசி இன்று அவன் அழிவுறும்படி பழிதுயர் செய்து ஒரு சிறிதும் இரங்காமல் உறுதிகொண்டு நிற்கும் அவளது வன்கண்மையைக் கண்டு பெண்ணினத்திற்கெல்லாம் இது ஒரு பெரு வசையாம் என உள்ளூற வருந்தி ஆடவர் எதிரே நிற்க நாணி இரவாகிய பெண் ஒதுங்கி மறைந்தாள் என்பதாம்.

காமபோகம் கனியச் செய்யும் காலமாதலால் இரவை மங்கையாக உருவகம் செய்தார். ஒருத்தி செய்த பிழை அக்குலத்திலுள்ள நல்லாரெல்லார்க்கும் நாணுத்தரும் ஆதலால் "கங்குலாகிய நங்கை நாணினாள்" என்க. நாணுதல் = தலைகவிழ்ந்து ஒதுங்கல். கங்குல் கழிந்தமையை இங்ஙனம் இங்கிதமாகக் கூறினார். கங்கு = எல்லை, வரம்பு. இருளின் எல்லையைக் குறித்து நிற்றலால் இரவு கங்குல் என வந்தது.

எந்நாளும் போலவே இயல்பாகக் கழிந்த இரவை அன்று நிகழ்ந்த கதை நிகழ்ச்சியோடிணைத்துச் சுவைப்படுத்தி இவ்வாறு செவ்விதாக விளக்கியிருக்கிறார்.

பெண்ணினமெல்லாம் பெரு நாணமடைந்து தலை கவிழும் படி பெரும்பழி செய்துள்ள கொடும்பாவி எனக் கைகேசியை வாயடக்கமாகக் கவி இதில் வைதிருக்கிறார். மேலும் வருவன காண்க.

கோழி கூவியது.

எண்ட ருங்கடை சென்ற யாமம் இயம்பு கின்றன ஏழையால்
வண்டு தங்கிய தொங்கல் மார்பன் மயங்கி விம்மிய வாறெலாம்
கண்டு நெஞ்சு கலங்கி யஞ்சிறை யான காமர் துணைக்கரம்
கொண்டு தம்வயி றெற்றி எற்றி விளிப்ப போன்றன கோழியே.

விடியற் காலம் கோழிகள் கூவுதலைக்குறித்து வருணித்தபடி யிது. ஒரு இரவு நான்கு சாமங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. நான்காவதான கடைசிச் சாமத்தில் சேவல்கள் ஏகமாகக் கூவும் ஆதலால் “எண்தரும் யாமம் கடைசென்ற இயம்புகின்றன” என்றார்.

சேவல்கள் கூவும்பொழுது சிறகுகளைத் தமது இரண்டு விலாப் புறங்களிலும் அடித்துக்கொண்டு கூவும்; அங்ஙனம் கூவியது, கைகேசி தசரதனுக்குச் செய்துள்ள கொடுமையைக் கண்டு சகிக்க மாட்டாமல் கைகளை வயிற்றில் அடித்துக்கொண்டு, “ஐயையோ! இந்தப் பழிகாரி செய்த அநியாயத்தைப் பார்த்தீர்களா! அந்தோ! வந்து பாருங்கள்! பாருங்கள்!!” என்று உலகத்தாரை நோக்கிப் பரிதாபமாய் ஓலமிட்டதுபோலிருந்ததென்பதாம்.

பெருந்துயரம் நேர்ந்தபொழுது வயிற்றிலும் மார்பிலும் கரங்களால் அறைந்துகொண்டு மக்கள் அலறுவது வழக்கமாதலால் அந்த அபாய இயல்பைக் கோழிமேல் ஏற்றி இங்ஙனம் கூறினார் என்க. காமர்=அழகு. துணை=இரண்டு.

விடியும் சமயத்தில் நாள்தோறும் இயல்பாகக் கூவுகின்ற கோழியை இந்தவாறு கதை நிகழ்ச்சியோடு இணைத்து அற்புதமாகக் கற்பனை செய்திருக்கிறார். இப்படிக் குறிப்பதை அலங்கார நூலார் தற்குறிப்பேற்றம் என்பர்.

“தையல் துயர்க்குத் தரியாது தஞ்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்.” (நளவெண்பா)

எனப் புகழேந்திப் புலவர் கூறியுள்ளதும் ஈண்டெண்ணத் தக்கது. முன் குறித்ததை அடியொற்றி இது வந்திருத்தலறிக.

உலகக் காட்சிகளைக் கவிகள் இவ்வாறு உணர்வுக் காட்சியில் ஒளிபெறச் செய்து உலகம் உவப்ப வெளியிடுகின்றார்.

நெஞ்சு கலங்கி, கரம்கொண்டு, வயிறு எற்றி, என்றதில் உறுப்புத் தொடர்பும் உள்ளத்துயரும் உருவக்காட்சியும் உயிர் ரக்கமும் ஒருங்கே வெளிப்பட்டுள்ளன.

கோழி கூவிப் பொழுது புலருங்கால் காக்கை குருவிகள் முதலிய பறவைகள் கா கூ என்று கலித்தெழும் ஆதலால் அதனை அடுத்து உரைக்கின்றார். அயலே வருவதை ஆய்ந்து காண்க.

பறவைகள் ஒலித்தல்.

தோய்கயத்து மரத்து மென்சிறை துள்ளி மீதெழு புள்ளெலாம்
தேய்கை யொத்த மருங்குல் மாதர் சிலம்பினின்று சிலம்புவ
கேகயத்தர சன்பயந்த விடத்தை யின்னதோர் கேடுசூழ்
மாகயத்தியை யுட்கொதித்து மனத்து வைவன போன்றவே.

நீர் நிலைகளிலும் மரங்களிலும் இரவு ஒடுங்கியிருந்த பறவை யினங்கள் அதிகாலையில் ஒலித்தெழுந்தன; பலவகையான அவ் வொலிகள் அன்று கொலை சூழ்ந்துள்ள கைகேசியைக் கொதித்து வைவனபோல் கலித்து நின்றன என்பதாம்.

தோய் கயம் என்றது மக்கள் தோய்ந்து நீராடுகின்ற வாவி களை. தோய்தல்=படிதல், குளித்தல். கயம்=ஆழமான நீருடை யது. கசம்எனவும் வரும். பொய்கை தடாகம் ஏரிகளிலுள்ள அன்னம் குருகு நாரை முதலியன நன்னீர்ப் பறவைகள் ஆதலின் அவை முன்னுற வந்தன.

அயோத்தி நகரைச் சூழ்ந்து இனிய நறு நீர் நிலைகளும் குளிர் பூம்பொழில்களும் இளமென் காவுகளும் எழில்சுரந்துள்ள மையால் புள்ளினங்களெல்லாம் அங்கே துள்ளி எழுந்தன என்க. புள்=பறவை. காலையில் எழும் சீலமுடைமையால் ஞாலமறிய வந்தது.

மருங்குல் மாதர் என்றது இடை சுருங்கிய உயர்குலமக ளிரை. அவர் காலில் அணிந்திருந்த சிலம்புகள்போலப் பறவை கள் சிலம்பின என்றதனால் ஊரின் சீர்மையும் நீர்மையும் ஒருங்கே

தெரியலாகும். சிலம்புதல் = ஒலித்தல். தங்கள் இனத்துக் கெல்லாம் வெம்பழியை விளைத்தலால் மாதர் காலிலுள்ள அணிக ளும் அவளைக்கடுத்து வெறுத்து வாய்விட்டு வைதன என்பதாம்.

இனிய பாற்கடலில் கொடிய விடம் பிறந்ததுபோல் நல்ல அரசகுலத்தில் பொல்லாத கைகேசி பிறந்துள்ளாள் என்பதை விடம் என்னும் சொல்லால் உணர்ந்துகொள்ளலாம். பயந்தவ னும் பயந்துபோய்க் கண்ணுக்கு எட்டாத தூரத்தே கைவிட்டுள் ளான் என்க. விட்ட இடத்தை விடம் பரந்து சுட்டெரிக்கின்றது.

இன்னமோர் கேடு என்றது மன்னன் உயிர்துடித்து மாண்டு போகும்படி மயங்கிக் கிடத்தலை. ஒரு வகையிலும் திருந்தா மல் பெருந் தீமை மண்டிக் கொடுங்கேடு சூழ்ந்திருக்கும் கொடிய கொலைகாரி என்பார் மாகயத்தியை என்றார். கயத்தி என்றது கீழ்மைக்குணமுள்ளவள் என்றவாறு. கயமை என்னும் பண் படியாய்ப் பிறந்த பெண்பாற்பெயர். ஆண்பா லாயின் கயவன் எனவரும். எவரும் அருவருத் தொதுக்கும் இழிகுண முடை யாரையே கயவர் என்பர்; எனவே கயத்தி என்றதனால் அவளது கசப்பு நிலையும் அவளை உலகம் வெறுத்திருக்கும் வகையும் உணரலாகும். யாவரும் வெறுக்கும் பாவகாரி என்பதாம்.

மனத்து வைவன என்றது, வெளிப்படையாக வைதால் தமக்கும் உயிர்க்கேடு செய்வாள் என உள்ளம்அஞ்சி உள்ளேயே வைது கொண்டன என்றவாறு. மென்மென மிழற்றிய புள் ளினங்களின் மெல்லிய ஒலிகளை இங்ஙனம் சொல்லியருளினர்.

பறவைகளைப் பார்த்தோம்; இனி விலங்குகளைப்பார்ப்போம்.

## யானைகள் எழுந்த விதம்.

சேமம் என்பன பற்றி யன்பு திருந்த வின்றுயில் செய்தபின்
வாம மேகலை மங்கையோடு வனத்துள் யாரும் மறக்கிலா
நாம நம்பி நடக்குமென்று நடுங்கு கின்ற மனத்தவாய்
யாமும் இம்மண் இறத்து மென்பனபோலெழுந்தன யானையே.

யானைகள் துயில்விட்டு எழுந்த இயல்பினை வருணித்த படி யிது. அதிகாலையில் மதயானைகள் அன்று விரைந்தெழுந்தகிலை,

"இராமன் வனம் போவான்; நாமும் உடன்போகவேண்டும்; இனி இங்கே இருக்கக்கூடாது" என்று உருக்கத்தோடு உறுதி கொண்டெழுந்தமைபோல் இருந்த தென்பதாம்.

சேமம் = யானை தங்கும் இடம்.

கம்பீரத்திலும் நடையழகிலும் இராமனுக்கு யானைகள் ஒப்பாதலால், "நம்பி நடக்கும்" என அந்நடையை உரிமையோடு சுட்டி உயர் கேண்மை கொண்டு தொடர நின்றன என்க.

நம்பிக்கு நேர்ந்துள்ள இடையூற்றை எண்ணுந் தோறும் தும்பிகள் துடித்தன என்பார், "நடுங்குகின்ற மனத்தவாய்" என்றார். தமது மனநிலைமையைக் கவி அமைய உணர்த்தினர்.

அங்ஙனம் மனம்நொந்த யானைகள் முன்பு வைத புள்ளினங் களைப்போன்று கைகேசியை ஏன் இங்கே எள்ளி வையவில்லை? எனின், இவை இராமனைப்போல் பெருந் தன்மை யுடையனவாத லால் புறந்தூற்றாது பொறுத்து நின்றன என்க.

மண்ணுலகில் சில நிகழ்ச்சிகளைக் காட்டினர்; மேல், விண் ணுலகிலும் காட்டுகின்றார். அடியில் வருவது காண்க.

நட்சத்திரங்கள் மறைந்த நிலை.

சிரித்த பங்கயம் ஒத்த செங்கண் இராமனைத்திரு மாலையக்
கரிக்க ரம்பொரு கைத்தலத்துயர் காப்பு நாணணி தற்குமுன்
வரித்த தண்கதிர் முத்ததாகியம் மண்ணனைத்து நிழற்றமேல்
விரித்த பந்தர் பிரித்ததாமென மீனொளித்தன வானமே.

அலர்ந்த செந்தாமரை மலர்போன்ற சிவந்த கண்களையுடைய இராமனது மகுடாபிடேக வைபவத்திற்காகப் போட்டிருந்த அழகிய பந்தலைப் பிரித்துவிட்டதுபோல் நட்சத்திரங்கள் ஒளி மழுங்கி மறைந்து போயின என்பதாம்.

அவனி முழுதும் ஆளும் சக்கரவர்த்தித் திருமகனுடைய பெருவிழாவாதலின் ஆகாயம் எங்கும் விரிந்த பந்தராய் விளங்கி நின்றது. அதனிடையே தோன்றிய உடுக்கணங்கள் முத்துச் சரங்கள் போல் அடுக்கடுக்காயமைந்து மிளிர்ந்தன. அங்ஙனம் எழிலொழுக ஒளிசெய்து நின்ற அவை உதயகாலத்தில் விழி களுக்குத்தெளிவாகப் புலனாகாமல் தேய்ந்துமறைந்தன; இயற்கை

பான அவ்வான நிலையைக் கவி இவ்வாறு கற்பனை செய்து காட்சி யளித்திருக்கிறார். மீன்=விண்மீன், நட்சத்திரம்.

மலர்ந்த தாமரையைச் சிரித்த பங்கயம் எனக்குறித்திருக் கும் அழகு பார்க்க. என்றும் மலர்ந்த முகத்துடன் எவரை யும் குளிர நோக்கும் அழகிய இனிய கருணைக் கண்ணன் ஆதலால் புதுமை மொழியால் இங்ஙனம் வருணித்துரைத்தார்.

சிரித்த கண்ணனுக்கு நேர்ந்துள்ள இடையூறு எல்லாரை யும் அழுங்கண்ணராக்க அமைந்து நின்றதென்பது குறிப்பு.

தீபங்கள் மழுங்கின.

வையம் ஏழுமோ ரேழும் ஆருயி ரோடு கூடவழங்குமம்
மெய்யன் வீரருள் வீரன் மாமகன் மேல்விளைந்ததோர் காதலால்
நைய நையநல் ஐம்புலன்கள் அவிந்த டங்கி நடுங்குவான்
தெய்வ மேனி படைத்த சேயொளி போன்மழுங்கின தீபமே.

கரணங்கள் யாவும் கலங்கி மரணவேதனையாய் மயங்கிக் கிடக்கின்ற தசரதனுடைய திருமேனிபோல் தீபங்கள் ஒளி மழுங்கி நின்றன என்பதாம்.

உயிர் நிலை குலைந்து இதுபொழுது உள்ளொடுங்கியிருத்தலான் உடல் எழில் சிதைந்து ஒளி குன்றியுள்ளதென்க.

இவனது மேனி எப்பொழுதும் மினு மினுப் புடையதாயிருந்தமையான் அது தீபத்திற்கு ஒப்புவமையாய் நின்றது. அந்நிலை இப்பொழுது மங்கியுள்ளது; ஆகவே அணைந்துபோகும் விளக்கோடு இணைந்து பேச நேர்ந்தது. போன ஒளி இனி மீளாதென்பது குறிப்பு. விடிவு கண்ட விளக்குப்போல அம் மேனி இன்று முடிவு கண்டதென்க.

தெய்வமேனி என்றது தேவதேவனை இராமனைப்பெற்றுக் கட்டியணைத்துக் கண் குளிர நோக்கி வையமெல்லாம் வணங்கத் திவ்விய போகங்களை நுகர்ந்து திசைகள் தோறும் இசைகள் பரவ நெடுங்காலம் சிறந்துநின்ற அந்நிலை தெரியவந்தது.

சேய்ஒளி=செவ்விய ஒளி. எனவே சிவந்த மேனியன் என்பது புலனும். நெடுந்தூரம் தேசுமிகப் பெற்றிருந்ததும் தெரியநின்றது. உணர்வொளி குணநலம் உடலெழில் அனைத்தும்

செம்மையில் செழித்துத் தூயநிலையில் சுடர்விட்டுள்ளமையால் சேயொளியாய தென்க.

சத்தியத்தின் பொருட்டு ஈரேழுலகையும் தன் ஆருயிரையும் ஒருங்கே வழங்கும் உறுதியுடையான் என்பதை முதலடியில் குறித்திருக்கிறார். தான் முன்னம் பராமுகமாயுரைத்த வாய்மைக்காக இன்று அரசையும் உயிரையும் கொடுத்திருக்கும் உண்மையை எடுத்துக்காட்டிய படியிது.

வீரருள் வீரன் என்றது விண்ணுலகிலும் மண்ணுலகிலும் விளங்கியுள்ள வீரர்களெல்லாரும் வியந்துபோற்றும் மகாவீரன் என்றவாறு. சத்தியவிரதனும் உத்தமவீரனுமாய் ஒளி சிறந்துள்ள இவன் புத்திரன்மேல் வைத்த காதலால் இத்திறம் சாதலடையலானன் என நோதலுடன் இரங்கி ஆதரம் கூர்ந்து அரசநிலையை உய்த்துணர வைத்திருக்கிறார்.

விளக்கொளியை வேந்தன் உடலொளியோடு ஒப்பவைத்து அவ்விரண்டும் தேய்ந்து மாய்ந்து போகும் திறனைக்கூர்ந்துணரும் படி விளக்கியிருக்கும் அழகை ஆய்ந்து பார்க்க.

குமுதங்கள் குவிந்தன.

சாயடங்க நலங்கலந்து தயங்கு தன்குல நன்மையும்
போயடங்க நெடுங்கொடும்பழி கொண்டரும்புகழ் சிந்துமத்
தீயடங்கிய சிந்தை யாள்செயல் கண்டு சீரிய நங்கைமார்
வாயடங்கின வென்ன வந்து குவிந்த வண்குமுதங்களே.

கைகேசி செய்திருக்கும் கொடும்பழியைக் கண்டு பெண்களுடைய வாய்கள் அடங்கி யுள்ளனபோல் குமுத மலர்கள் குவிந்துநின்றன என்பதாம். குமுதம்=செவ்வல்லிமலர். இது நீர்ப்பூ. பெண்கள் கண்களுக்குக் குவளைமலரை ஒப்புச்சொல்லுதல்போல் அவர் வாய்க்கு இந்த அல்லிமலரை உவமை கூறுவது கவி மரபாகும். இம்மலர் இரவில் மலர்ந்திருக்கும். பகலில் இதழ்கள் முகிழ்ந்து மூடி நிற்கும். அந்த இயல்பின்படி உதய காலம் வரவும் தாமாகவே அவை குவிந்து நின்றன. அந்நிலைமையைக் கவி இங்ஙனம் வருணித்திருக்கிறார்.

"கைப்பிடித்த கணவன் சாகும்படி இவள் இப்படிக் கொடுமை செய்திருத்தலால் பெண்ணாய்ப் பிறந்துள்ள நமக்கு

இனிமேல் உலகத்தில் வாய்திறக்க நீதியுண்டா?'' என்று மகளி ரெல்லாரும் உள்ளம் உட்கி யுளையுமாறு கைகேசி கடுந்தீமை விளைத்திருக்கிறாள் என்பதை அடிக்கடி யுணர்த்திவருகிறார்.

குமுதம் குவிதலை மங்கையர் செவ்வாயோடிணைத்து இட நிகழ்ச்சிக்கேற்ப இங்கே இனிமையுற வுரைத்தார். இவ்வாறே இன்னும் பல கற்பனைகளைச் செய்திருக்கிறார். விடியல் முடிவில் சூரிய வுதயத்தைக் குறித்துச் சொல்லி யிருப்பது அடியில் வருவது.

சூரியன் உதித்தது.

தூப முற்றிய காரிருட்பகை துள்ளி ஓடிட வுள்ளெழும்
தீப முற்றவும் நீர்த்த கன்றன சேயதாருயிர் தேய்தலால்
பாப முற்றிய பேதை செய்த பகைத் திறத்தினில் வெய்யவன்
கோப முற்றி மிகச் சிவந்தனன் ஒத்தனன்குணக் குன்றிலே.

இருள் நீங்கியது; விளக்கு ஒளிகள் தேய்ந்தன; கிழக்கே ஆதவன் உதயமாயினான்; வான சோதியான அது அன்று ஆனநிலையைக் கதையுடன் பொருத்திக் கவி இதில் வருணனை செய்திருக்கிறார். நீர்த்தல் = நெகிழ்ந்து தேய்தல்.

தன் குலக் கொழுந்தாகிய தசரதனுக்கு உயிர்க்கேடு செய் துள்ள பாபியாகிய கைகேசியைக் கோபித்துக் கண் சிவந்து கொதித்தெழுந்ததுபோல் சூரியன் கிழக்கே உதித்தான் என்ப தாம்.

குணக்குன்று என்றது உதயகிரியை. கீழ் திசையில் ஒளி உதயம் மலையிலிருந்து தொடங்குகின்றது என்பது புராண மரபு. குணக்கு = கிழக்கு. இத்திசைப் பெயர் ஈறு திரிந்து குன் றொடு புணர்ந்து குணக்குன்று என நின்றது.

"திசையொடு திசையும் பிறவும் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலுமாம் பிற." (நன்னூல்)

எனவரும் இயல்விதியை யீண்டு எண்ணிக்கொள்க.

சூரியன் உதயமாகும்போது வானம் சிவந்து தோன்றும்; அத்தோற்றம் அவனது சீற்றம் என வந்தது.

தசரதன் சூரிய குலத் தோன்றல் ஆதலால் தன் சேய் ஆகிய அவனுக்கு ஆபத்தைச் செய்தவள்மேல் கோபத்தைச் செய்து அன்று வெய்யவன் கொதித்து வந்தான் என்பதாம்.

இரவு நிகழ்ந்த நிகழ்ச்சிக் கிசைய இரவியின் எழுச்சியை உரிமைசெய் துரைத்திருக்கும் அருமை உணர்ந்துமகிழத்தக்கது.

புண்ணிய முற்றிய மேதையைக் கொல்ல வந்துள்ளாள் ஆதலால் பாபமுற்றிய பேதை எனக் கைகேசி இங்கே ஏச நின்றாள். குணக்குன்றில் நின்றவன் கோபமுற்றான் என்ற தொனிக்குறிப்பினால் குணக்கேடுடைய அவளது பிணக்கின் கொடுமை வெளிப்பட்டு நின்றது.

இதுவரை அருணோதயகால வருணனைகளை நாம் கண்டு வந்தோம். இத்தகைய பகுதிகளிலேதான் கவிகளுடைய கற்பனைத் திறங்கள் கதிர்விட்டு நிற்கின்றன. அவற்றுள் ஒளிர்கின்ற உணர்வு நலங்களால் அவர்களுடைய உயர்நிலைகள் அளக்கப்படுகின்றன. கதையை நடத்திவருங்கால் இடை இடையே இவ்வகையான இயற்கைக் காட்சிகளை நம்கவி இன்புறக் காட்டுகின்றனர். அக்காட்சியில் இவரது அற்புதமான அறிவுக்காட்சி அதிசயமாகவும் ஆனந்தமாகவும் தோன்றி விளங்குகின்றது.

இருள் ஏகுதல், கோழி கூவுதல், பறவைகள் ஒலித்தல், யானைகள் எழுதல், உடுக்கள் ஒளிதல், தீபங்கள்மழுங்கல், குமுதங்கள் குவிதல், சூரியன் உதித்தல் என்னும் இந்த உதயகால நிகழ்ச்சிகளைக் கதை நிகழ்ச்சியோடு கவினுறப் பிணைத்து உணர்ச்சிததும்ப உவகை பொங்க நம் கவிநாயகர் இங்கே உல்லாசமாய்ப் பாடியிருக்கிறார். சொற்பொருள் நயங்களும் உட்குறிப்புக்களும் விற்பனமிகுந்து அற்புத நிலையில் விளைந்திருக்கின்றன. கலைபுணர்வாளர் எவரும் வியந்து நயந்து விழைந்து நுழைந்து உவந்து நுகர்ந்து உளங்களிக்கும்படி சுவைகள் எங்கணும் சுரந்திருத்தலால் இப்பகுதி சுவைக் களஞ்சியம் எனச் சொலித்து நிற்கின்றது.

தன் மூத்த பிள்ளையின் முடிசூட்டுவிழாவை இளைய மனைவியிடம் சொல்லி உளமிகமகிழலாம் என்று இடையாமத்தில் பள்ளியறைக்கு வந்த சக்கரவர்த்தி அத்தேவி வாய்ச்சொல்லால் ஆவி பதைத்து அலமந்து கிடந்தான். அவன் அங்ஙனம் கிடக்கக் கடை யாமம் இங்ஙனம் கழிந்தது. காலை புகுந்தது.

காலையில் நிகழ்ந்தது.

சூரியன் உதயமானவுடனே நாடும் நகரமும் பேராவலோடு பெருகி எழுந்தன. இராமனுடைய மகுடதாரண வைபவங்களைக் கண்டு மகிழலாம் என்னும் காதல் எங்கும் மண்டி எழுந்தது. கண்பெற்ற பயன் இன்றே பெற்றோம் என உள்ளம் களித்து அரசர் முதல் அனைவரும் பரசி நெருங்கினர். மகளிரும் மைந்தரும் தொகை தொகையாகத் திரண்டு வந்தனர். அலங்காரங்களும் ஆரவாரங்களும் யாண்டும் பேருவகையுடன் பெருகி நிமிர்ந்தன. அபிடேகத்திற்கு வேண்டிய மங்கலப் பொருள்கள் யாவும் அணி யணியாக மணிமண்டபத்தில் நிறைந்திருந்தன. அருமறைகள் துறைபோய அந்தணர் குழாங்களுடன் வசிட்ட முனிவர் வந்தார். மாளிகையுள் புகுந்தார். "மன்னர் பிரான் ஏன் இன்னமும் வரவில்லை?" என்று மறுகி எண்ணி, அருகே நின்ற சுமந்திரனை நோக்கினார். "நாழிகை ஆகின்றதே! அரசைக் காணோமே! அழைத்து வருக" என்றார். கைகேசி மனையை நோக்கி மந்திரி விரைந்து சென்றான். ஆசார வாசலை யடைந்தான்; தாதியர்க ளிடம் மொழிந்தான்; அவர் புகுந்து புகலக் கைகேசி விரைந்து நேர்வந்து "இராமனை இங்கே அழைத்து வருக" என்றாள். நிலைமை தெரியாமையால் அரச கட்டளை போலும் என்று உள மகிழ்ந்துமீண்டான். அந்தப்புரத்தை யடைந்து இராமனை வணங்கி உற்றதை யுரைத்தான். அங்கே குதூகலத்தோடு குழுமியிருந்த கூட்டத்தை யெல்லாம் விட்டு அக்கோமகன் விரைந்தெழுந்து தேர்மீதேறிக் கைகேசி அரண்மனைக்கு வந்தான். எழுபடிக்கட்டு களையும் கடந்து உள்ளே புகுந்தான்; தந்தையைக் காணோமே என்று அங்கும் இங்கும் தயங்கி நோக்கினான். நோக்கவே உள்ளே யிருந்து கைகேசி எதிரேவந்தாள். வரவே அவளடியில் விழுந்து பணிந்தெழுந்து வாய்புதைத்து இவன் வணங்கி நின்றான். அழகு தவழ அன்பு கனியப் பணிவுடன் நின்ற இக் குலமகனைக் கண்டும் அவள் ஒரு சிறிதும் இரங்காமல், "இராமா! பரதன் அரசை ஆள வும், நீ தவவேடம் புனைந்து பதினான்கு வருடம் வனவாசம் செய்யவும் உன் தந்தை உத்தரவு செய்திருக்கிறார்; நேரே சொல் லக்கூசி என்னிடம் கூறி விடுத்தார்" என்று அப் படுநீலி யாதும் கூசாமல் நேரே கூறி நின்றாள். கேட்ட குலமகன் வாட்டம் யாதுமின்றி, "அம்மா! அய்யா கட்டளை என்று சொல்வானேன்;

தாங்களே சொன்னாலும் நான் தட்டிவிடுவேனா? தாய்வார்த்தை கேளான் என்று என்மேல் இவ்வளவு சந்தேகம் கொள்ளலாமா? தாங்கள் காலால் இட்ட பணியை நான் தலையால் செய்வேன்; தங்கள் மனம்போல் வனம் போகின்றேன்; விடைபெற்றுக் கொண்டேன்" என்று இரண்டு கரங்களையும் சிரமீது கூப்பித் தொழுதுவிட்டு மீண்டுவந்தான். தலைவாசலையடைந்ததும் சுமந்திரன் நிகழ்ந்ததையறிந்து நெஞ்சம் துடித்தான். இவன் நகைமுகத்தனாய்த் தன் தாயாகிய கோசலையரண்மனையையடைந்தான். முடிபுனை கோலத்துடன் தனது அருமைத் திருமகன் தன்பால் வருவான் என்று அன்பால் உருகி ஆவலோடு இருந்த அத்தாய் இச்சேயைக் கண்டதும் "ஐயா! என்னை" என ஏங்கிக் கேட்டாள். இவன் உற்றதை யுரைத்தான். அவள் உள்ளம் பதைத்து உருண்டு புரண்டாள். தெளிந்தெழுந்தாள். பிராண நாயகனிடம் பிள்ளையைக் காட்டுக்கு அனுப்பாதருளும்படி கேட்கவேண்டும் என்று வேட்கை மூண்டு விரைந்து வந்தாள். கைகேசி அரண்மனைக்குள் புகுந்தாள். அயர்ந்து கிடக்கும் அரசைக் கண்டாள். அலறி விழுந்தாள். "ஆ! தெய்வமே!" என்று அழுது தவித்தாள். அந்தப்புரத்தில் நிகழ்ந்த இந்த அழுகையொலி வெளியே பரவியது. அரச குமாரர்கள் திகைத்தனர். முடிபுனை மண்டபத்தில் கடிகையை எதிர் நோக்கியிருந்த வசிட்டர் விரைந்தெழுந்துவந்தார். அரசனுடைய அவல நிலையை நோக்கிக் கவலைமீதூர்ந்து கைகேசியைப் பார்த்து, "என்னை நிகழ்ந்தது?" என்றார். அவள் உண்மையைச் சொன்னாள். முனிவர் உள்ளே முனிந்தார். தம் கைகளால் தசரதனை மெள்ளத் தடவித் தண்ணீர் தெளித்துத் தெளியச் செய்தார்; அதன் பின்பு கைகேசியை அன்போடு பார்த்து, "அம்மா! அரசுபடுந் துயர் கண்டு அருள் செய்யவேண்டும்; உங்கள் மனம் போன படியே பேசலாகாது; இராமனை வனம் போ என்று நீங்கள் வாய் திறந்து சொன்னது, வையமெல்லாம் உயிர் போக என ஊன்றி வைதபடியாம்" என்று முனிவர் இவ்வாறு சொல்லவே, தசரதன் "ஐயோ!" என்று அலறி விழுந்தான். இராமனைக் காட்டுக்குப் போகும்படி உத்தரவிட்டிருப்பதை முனிவர் வாய் மொழியால் இப்பொழுதுதான் அறிந்தான் ஆதலால் வெப்பமும் வெகுளியும் மண்டி ஆவேசத்துடன் எழுந்து கைகேசியைக்

கடுத்து நோக்கி, "அடி படுபாவி என் உயிரைக் கொடுவனத்துக்கு அனுப்பி விட்டாயா? ஆ! குடிகேடி!" என்று குலை துடித்தான். கொதித்து வைதான். அந்தக் கொதிப்பொலிகள் அரசனுடைய உயிர்த் துயரங்களை உணர்த்தி நிற்கின்றன. அடியில் வருவன காண்க.

கண்டேன் நெஞ்சம் கனிவாய்க் கனிவாய் விடம்நான் நெடுநாள்
உண்டேன் அதனால் நீயென் னுயிரை முதலோ டுண்டாய்!
பண்டே எரிமுன் உன்னைப் பாவி! தேவி யாகக்
கொண்டேன் அல்லேன் வேறோர் கூற்றம் தேடிக்கொண்டேன்.

விழிக்குங் கண்வே றில்லா வெங்கான் என்கான் முளையைச்
சுழிக்கும் வினையால் ஏகச் சூழ்வாய்! என்னைப் போழ்வாய்!
இழிக்கும் நாணாய்! மாணாப் பாவி இனியென் பலவுன்
கழுத்தின் நாணுன் மகற்குக் காப்பின் நாணும் என்றான். (2)

இன்னே பலவும் பகர்வான் இரங்கா தாளை நோக்கிச்
சொன்னேன் இன்றே இவளென் தாரம் அல்லள் துறந்தேன்;
மன்னே யாவான் வருமப் பரதன் தனையும் மகனென்
றுன்னேன் முனிவா! அவனும் ஆகா னுரிமைக்கென்றான். (3)

(நகர் நீங்கு படலம், 48-50)

தசரதனுடைய மனக்கொதிப்பையும் சினக் குறிப்பையும் வெளிப்படுத்தி வந்திருக்கும் இந்த உரைகளின் உருவங்களை ஊன்றி நோக்கி அவன் உயிரடைந்துள்ள துயரநிலைகளை யுணர்ந்து கொள்ளவேண்டும்.

கைகேசியினுடைய கொடிய மனநிலையை முடிவாகத் தெரிந்துகொண்டேன் என்பான், "கண்டேன் நெஞ்சம்" என்றான். நினைப்பின் வேகம் தெரிய வினைச்சொல் முன் வந்தது. முன்னமே காணாமல் போனேனே என்னும் கழிவிரக்கம் இதில் கரந்துள்ளமை காண்க.

கனிவாய் விடம் என்றது இதழ் ஊறலை. அந்த அதரபானத்தை அவன் உண்டு வந்த நிலையைக் கனிவு ஆய் என்றதனால் கண்டுகொள்ளலாகும். கனிவு=மகிழ்ச்சி, களிப்பு.

பரவசமாய் உருகிப் பருகி மருவிவந்துள்ளபடியை மறுகி நொந்து மனவேதனையோடு வெறுத்து உரைத்த படியிது.

இந்த நிலையிலும் அவளது வாயழகிலீடுபட்டுக் கனிவாய் என்றான். கனி=கொவ்வைப்பழம். இனிமை கனியச் சுவைத்த சுவை இன்னமும் நெஞ்சை விட்டகலாமையால் இன்னவாறு மன்னன் வாய்மொழி வஞ்சமின்றி வெளிவர நேர்ந்தது.

கனிவாய்க் கனிவாய் என்றதிலுள்ள சொல்லின் கனிவை உள்ளம் கனிய ஊன்றிக் காண்க.

மணம் புரிந்த நாள் முதலாக இணைபிரியாது இது காறும் நுகர்ந்து வந்துள்ளமையால் "நெடு நாள் உண்டேன்" என்றான். அன்று இரவு மட்டும் கனிவாய்நாடி அங்கு வராதிருந்தால் இந்த இழவு வந்திராதே!

வாலெயிறு ஊறிய நீரைப் பாலொடு தேன்கலந்ததாக மால் கொண்டு நான் மயங்கி யுண்டேன்; அதற்குப் பதிலாக என் ஆருயிரை அடியோடு நீ உண்டு தொலைக்கின்றாயே! என்பான், "என் உயிரை முதலோடு உண்டாய்!" என்றான். இறந்த காலத்தால் குறித்தது இறந்துபடுதலை உறுதியாக நினைந்து. முதல் என்றது இராமனையும் குறிக்கும். குலமுதலாகவும் முழு முதலாகவும் அவனை இவன் கருதியுள்ளமையும் அறிக. அமிர்தம் என்று உண்டேன் அது இன்று நஞ்சாய் என்னைக்கொன்று நாசப்படுத்துகின்றதே என்பான் "விடம்" என்றான்.

பாவி! உன்னை நான் தேவியாகக் கொண்டேன்; நீ என் ஆவி போக்கும் எமனாய் நின்றாய்! கொண்ட என்மேலன்றி உன்மேல் யாதும் குறைகூற வழியில்லை என்று இறுதியில் நெஞ்சம் குமிறி உரைத்தான்.

கலியாணச் சடங்கில் அக்கினி சாட்சியாக மனைவியைக் கைப் பிடித்தல் வழக்கம் ஆதலால் அந்தப் பழைய நிலைமையை நினைவு கூர்ந்துழைந்து எரிமுன் கொண்டேன் என்றான்.

வேறு ஓர் கூற்றம் என்றது என்றும் நிலையான கூற்றுவன் ஒருவன் இருக்கக் கொலைகாரியான உன்னை நானே வலியத்தேடிக் கொண்டேனே! என்றவாறு. கொடிய எமனே கைகேசி என்னும் பேரோடு பெண்ணுருவம் கொண்டு என் கண்ணுருவை யிழந்து நான் கடிது முடியும்படி இங்கே குடி புகுந்துள்ளான் என்பதாம்.

2. விழிக்குங்கண் வேறு இல்லா என்றது விழித்து எதிர் நோக்கும் மனித சஞ்சாரம் யாதும் இல்லாத என்றவாறு. கண்ட இடமெல்லாம் குன்றும் மரமும் கொடியும் செடியும் புதர்களும் நிறைந்திருக்குமேயன்றி மனித வாழ்க்கை மருவியிராதுஆதலால் காட்டின் நிலைமையை இங்ஙனம் காட்டியருளினர்.

விழித்து நோக்கிய திசையெல்லாம் வெப்பமே மிகுந்துள்ள கொடிய கானகத்துக்கு இனிய அரசிளங்குமரனை எப்படி மனம் ஒப்பி இப்பாதகி அனுப்பினளோ! என்று பரிதபித்த படியிது.

காட்டின் கொடுமையும் வன்மையும் தெரிய வெங்கான் என்றான். பிள்ளையின் இனிமையும் இளமையும் அருமையும் பெருமையும் உணர என் கான்முளை என்றான். கால்முளை = மகன், சந்ததி. வழி முறையில் முளைத்து வருவது என்பதாம். முளை என்றது அன்பு வாசகமாய் இளமை சுட்டி நின்றது. என் குலக் கிளைக்கெல்லாம் மூலமுளையாயுள்ளதைச் சமூலமாகக் கிள்ளித் தூர எறிகின்றனே! என்று இங்ஙனம் துடித்திருக்கின்றான்.

சுழிக்கும் வினை என்றது தந்திரமாகத் தன்னிடம் வரம் வாங்கியிருக்கும் வஞ்சகச் செயலை. அவளது சூழ்ச்சி, மன்னன் உயிரைப் பிளந்து சித்திர வதை செய்துள்ளமையால் "சூழ்வாய்! என்னைப் போழ்வாய்!" என்றான்.

துள்ளத் துடிக்கப் பிள்ளையைத் திருகியெறிந்து, புருடனைக் கொல்லும் பொல்லாப் பதகி என்பான் "மாணுப் பாவி" என்றான். மாண்பு ஏதுமில்லாத கொடிய தீயள் என்பதாம்.

உள்ளம் தவித்து உணர்வு நிலைகுலைந்து பல பல புலம்பி மனமும் வாயும் சலித்து முடிவில் முடிவாக வெறுத்துப் படு பாவி! உன் தாலியை அறுத்து உன் மகன் கையில் காப்பு நாணுகக் கட்டிக்கொள் என்று கனன்று திட்டிக் கடிந்து துடித்தான்.

"இனி பல என்? உன் கழுத்தின் நாண் உன் மகற்குக் காப்பு நாண்" என்றதில் அரசனது உள்ளக் கொதிப்பையும் உயிர்ச் சலிப்பையும் ஊன்றிப் பார்க்க.

"கைகேசி! உன் மகனுகிய பரதனுக்குப் பட்டம் கட்டுதற்கு நல்லநாள் பார்த்து சுபமுகூர்த்தத்தில் மங்கலக் குறியாகக் கையில் காப்புக் கட்டவேண்டுமே, அதற்கு வேறு மஞ்சட் கயிறு தேட

வேண்டா; உன் கழுத்திலுள்ள தாலியை அறுத்தே கட்டிக் கொள்ளலாம்" என்று இங்ஙனம் கடுத்து முடித்தான். தனக்கு முடிவு விரைந்துள்ளதென்பதை இவ்வாறு முடித்துக் காட்டியிருக்

என் மகன் வனம் போனமையால் நான் இனி உயிரோ டிரேன்; செத்தே போவேன்; நீ முண்டையாயிருந்து மூட யரசாளுக என்றபடியிது. இப்படி வெப்பமோடு சொல்லிவிட்டு அயலே நின்ற வசிட்டரை அரசன் பார்த்தான்; தம்மை நோக்கி வார்த்தையாடத் தொடங்கினமையால் அவர் ஆர்த்தியுடன் அருகு நெருங்கி உருகி நின்றார். இவன் மறுகி மொழிந்தான்.

"முனிநாதா! வெய்யவளான இக்கைகேசி என் மனைவி யல்லள்; இவள் வயிற்றில் பிறந்த பரதனும் எனக்கு மகன் ஆகான்; நான் இறந்த பின்பு தகனநிலை முதலிய அபரக்கிரியைகள் யாதொன்றும் அவன் எனக்குச் செய்யக்கூடாது" என்று சொல்லி முடித்து மெல்லத் திரும்பினான். அப்பொழுதுதான் தன் பக்கத்தே கண்ணீர் சோரக் கருத்தழிந்திருந்த கௌசலையைக் கண்டான். "ஆ கோசலா!" என்று அவள் கையைப் பிடித்து மார்பில் வைத்துக்கொண்டு மன்னன் விம்மி விம்மி அழுதான். "ஐயோ! என் கண்மணியான இராமன் என்னைக் காணாமல் போனானே! உன்னையாவது வந்து கண்டானா? இப்பொழுது எங்கே யிருக்கிறான்? நான் அயர்ந்து கிடக்கும்பொழுது எனக்குத் தெரியாமல் அவனைக் கூப்பிட்டு இந்தப் பாதகி என்ன வார்த்தை சொன்னாளோ? தெரியவில்லையே! அந்தோ! அந்தச் சுகுண சுந்தரன் சிந்தையில் என்னைக் குறித்து என்ன நினைத்தானோ? ஆ! எனது இன்னுயிர் நீங்கியும் இன்னா உயிர் போக மாட்டாமல் இன்னலுறுகின்றதே! அன்னோ! ஈதென்னே!" என இன்னவாறு மன்னன் புலம்பி மறுகித் தவித்தான்.

தன் சேயை வனம் போகும்படி செய்துள்ள உத்தரவை மாற்றியருளும்படி நாயகனை வணங்கிக் கேட்டு இணங்கச் செய்ய வேண்டும் என்று மனந்துடித்து வந்த கோசலைக்கு இப்பொழுது தான் இரவு நிகழ்ந்திருக்கும் நிலைமை நேரே தெரிய வந்தது. மாற்றவள் செய்த சதியால் மன்னன் ஏமாற்றமடைந்து மறுகின்றான் என அறிந்து அவள் உருகியழுது உள்ளங் குழைந்து

இரு கைகளாலும் ஆரத் தழுவி அரசை யெடுத்துத் தன் மடிமீது தலையை வைத்துத் தடவித் தேற்றினாள். அந்த அற்புதக் கற்பரசியின் உழுவலன்பையும் உயர் குண நிலையையும் நினைந்து நினைந்து அரசன் நெஞ்சமுருகினான். அவளது திருமுகத்தை இனிது நோக்கினான். "புண்ணியவதியான உன்னை மறந்து பாபியான இக்கொடு நீலியிடம் கடுங் காதல் கொண்டு நெடுங் காலமாக நான் செய்துவந்த பாவப்பலனை இன்று அனுபவிக் கின்றேன் கோசலா!" என்று குமிறி யழுதான். அவள் அழுகையை அமர்த்தியும் ஆற்றாது புலம்பினான். "உன் திரு வயிற்றில் பிறந்த அக்குலமகனை ஒரு கணமும் பிரிந்து நான் உயிர்தரித்திரேன்" என உருண்டு கதறினான். இராமனை எண்ணி எண்ணிக் கண்ணீர் சொரிந்து மன்னன் மறுகிப் புலம்பியன மறக்க மிகவுடையன. அந்த அவல நிலைகளை அடியில் வரும் கவிகளில் காண்க.

## இராமனை நினைந்து தசரதன் புலம்பல்.

கண்ணும் நீராய் உயிரும் ஒழுகக் கழியா நின்றேன்
நானும் நீர்நான் மறையோர் எரிமுன் நின்மேற் சொரிய
மண்ணும் நீராய் வந்த புனலை மகனே! வினையேற்கு
உண்ணும் நீராய் உதவி உயர்கான் அடைவாய் என்றான்; (1)

படைமான் அரசைப் பலகால் பழுவாய் மழுவால் எறிவான்
இடைமா வலிதான் அனையான் வில்லால் அடுமா வல்லாய்!
உடைமா மகுடம் புனையென் றுரையா வுடனே கொடியேன்
சடைமா மகுடம் புனையத் தந்தேன் அந்தோ! என்றான்; (2)

கறுத்தாய் உருவம் மனமும் கண்ணும் கையும் செய்ய
பொறுத்தாய் பொறையே இறைவன் புரமூன்றெரித்தபோர்வில்
இறுத்தாய் தமியேன் என்னா தென்னை யிம்மூப் பிடையே
வெறுத்தாய் இனிநான் வாழ்நாள் வேண்டேன் வேண்டேன் என்றான்; (3)

பொன்னின் முன்னம் ஒளிரும் பொன்னே! புகழின் புகழே!
மின்னின் மின்னும் வரிவிற் குமரா! மெய்யின் மெய்யே!
என்னின் முன்னம் வனநீ யடைதற் கெளியேன் அல்லேன்
உன்னின் முன்னம் புகுவேன் உயர்வா னகம்யான் என்றான்;

நெகுதற் கொத்த நெஞ்சும் நேயத்தாலே ஆவி
உகுதற் கொத்த வுடலும் உடையேன் உன்போல் அல்லேன்
தகுதற் கொத்த சனகன் தையல் கையைப் பற்றிப்
புகுதற் கண்ட கண்ணால் போகக் காணேன் என்றான். (5)

எற்றே பகர்வேன் இனியான் என்னை உன்னிற் பிரிய
வற்றே உலகம் எனினும் வானே வருந்தா தெனினும்
பொற்றோர் அரசே! தமியேன் புகழே! உயிரே! உன்னைப்
பெற்றேன் அருமை அறிவேன் பிழையேன் பிழையேன்என்றான்;

அள்ளற் பள்ளப் புனல்சூழ் அகன்மா நிலமும் அரசும்
கொள்ளக் குறையா நிதியின் குவையும் முதலாம் எவையும்
கள்ளக் கைகேசிக்கே உதவிப் புகழ்கைக் கொண்ட
வள்ளற் றனமென் றுயிரை மாய்க்கும் மாய்க்கும் என்றான்; (7)

ஒலியார் கடல்சூழ் உலகத் துயர்வானிடை நாகரினும்
பொலியா நின்றார் உன்னைப் போல்வார் உளரோ? பொன்னே!
வலியா ருடையா ரென்றான் மழுவா ளுடையான் வரவும்
சலியா நிலையா யென்றால் தவிர்வார் உளரோ? என்றான்; (8)

கேட்டே யிருந்தேன் எனினும் கிளர்வான் இன்றே யடைய
மாட்டே னாகி லன்றோ வன்கண் என்கண் மைந்தா!
காட்டே யுறைவாய் நீயிக் கைகே சியையும் கண்டிந்
நாட்டே யுறைவேன் என்றால் நன்றென் தன்மை என்றான்; (9)

மெய்யார் தவமே செய்துன் மிடல்மார் பரிதிற் பெற்ற
செய்யாள் என்னும் பொன்னும் நிலமாதென்னும் திருவும்
உய்யார் உய்யார் கெடுவேன் உன்னைப் பிரியின் வினையேன்
அய்யா கைகே சியைநே ராகே னோநான்? என்றான்; (10)

பூணா ரணியும் முடியும் பொன்னா சனமும் குடையும்
சேணார் மார்பும் திருவும் தெரியக் காணத் திரிவேன்
மாணா மரவுற் கலையும் மானின் தோலும் அவை நான்
காணா தொழிந்தேன் என்றால் நன்றாய்த் தன்றோ கருமம். (11)

(நகர் நீங்குபடலம், 56-66)

புத்திர சோகத்தால் பரிதபித்துப் புலம்பித் தசரதன் பட்டுள்ள துயரநிலைகளை இப்பாசுரங்களில் ஊன்றியுணர்ந்துகொள்ள வேண்டும். உள்ளத் துன்பங்களை யுணர்த்தக் கவி இங்கே துள்ளலோசையில் சொல்லைத் தொடுத்திருக்கிறார். தொடையும் நடையும் சொல்லும் பொருளும் உடையவனுடைய உயிர்க்கலக்கங்களை வெளிப்படுத்தி யாரும் அளிசெய்தய ஒளிசெய்து நிற்கின்றன.

"கண்ணும் நீராய், உயிரும் ஒழுக" என்றதில் என்ன பொருள்கள் மருவி உள்ளன? எண்ணி யறியுங்கள். வெறும் துன்பமாயிருந்தால் உயிர் இடிந்து மடிந்துபோம்; இங்கே உழுவ லன்பு தழுவியுள்ளமையால் கண்ணும் உயிரும் நீராய் உருகி ஒழுக நேர்ந்தன என்க.

"நீராளமாயுருக உள்ளன்பு தந்ததும்" (தாயுமானவர்) என வந்துள்ளதும் இங்கே சிந்திக்க வுரியது.

கணந்தோறும் உயிர் தேய்ந்து மாய்ந்து போய்க்கொண்டே யிருத்தலான், "ஒழுகக் கழியா நின்றேன்" என்றான். அழியா வாய்மையுடைய அரசனது உயிர் அழிந்து கழிந்து ஒழிந்துபோகும் நிலைமையை உணர்ந்து வருந்தி உரைத்த படியிது.

மண்ணும் நீர் என்றது இராமனது அபிடேகத்திற்காகக் கங்கை முதலிய நதிகளிலிருந்து கொண்டு வந்துள்ள தீர்த்தங்களை. மண்ணுதல்=கழுவுதல்.

மனிதர் இறக்கும் சமயத்தில் உயிர் உடலை விட்டு விரைவில் போகாமல் ஊசலாடி உயிர்ப்பு உளைந்துகொண்டு கிடந்தால் அவருக்கு மிகவும் அன்புடைய உரிமையானவரைக் கொண்டு பாலேனும் நீரேனும் வாயில் ஒழுக்கச்செய்வர்; அங்ஙனம் ஒழுக்கின் அவ்வுயிர் வேதனையின்றி விரைந்து நீங்கிவிடும் என்பது கருத்து. அந்த உலக வழக்கத்தை நினைவுறுத்தி, "மண்ணும் நீராய் வந்த புனலை மகனே! எனக்கு உண்ணும் நீராய் உதவி" அதன் பின் வனம் போ என்று மனம் கசந்து மொழிந்தான்.

இறந்த பின்னர்த் தந்தையைக் குறித்து அந்திமக் கிரியையில் மைந்தர் எள்ளோடு இறைக்கும் தண்ணீரையும் இவ்வுண்ணீர் குறிக்குமாயினும், முன்னைய பொருளே மிகவும் சிறந்தது; மன்னன் எண்ணியதும் அதுவே.

இராமையா! உன் உடல் கழுவ வந்த நீரால் என் உயிரைக் கழுவி விட்டுப் போ என்று கண்ணீர் விட்டு மன்னன் கதறியிருக்கிறான். மகனே! என்ற வாசகம் அன்பு கனிந்து அகமுருகி

தான் கருதியபடி தனது அருமை மகன் மணி மகுடம் புனைந்து அரியணையில் வீற்றிருக்கும் அற்புதக் காட்சியைக்கண்டு

மகிழும் பாக்கியம் தனக்கு இல்லாமல் போயதே என்று உள்ளே நொந்து கொள்ளுகின்றான் ஆதலால் வினையேன் என்றான். இடையே பாலனைப் பிரிந்து நான் இவ்வாறு சாக நேர்ந்தது என் தீவினைப் பயனேயாம்; இதற்கு வாய் புலம்பி வருந்தி என்செய? என்பதாம்.

உயர்கான் என்றது குளிர் பூம்பொழில்களுடைய இனிய வனம் என்றவாறு. சுகுமாரனை இவன் வனம் போனாலும் அங்கே சுகமாயிருக்கவேண்டுமே என்னும் ஆவலால் மொழிந்த ஆர்வ மொழி யிது.

இழிந்த காடும் இராமன் புகுந்தால் அது உயர்ந்த கானக மாய்ச் சிறந்து விளங்கும் என்பது தொனிக்குறிப்பு.

இன்னவாறே முன்ன முள்ள பத்துக் கவிகளிலும் மன்னனு னுடைய மறுக்கங்களைத் தனித்தனியே படித்துப் பொருட் குறிப்புகளை நுனித்து அறிந்துகொள்க. உரைவரையின் விரியு மென்றஞ்சி விடுகின்றேன். பின்னே நிகழ்ந்துள்ள கதையைத் தொடர்ந்து காண்போம்.

இவ்வண்ணம் புலம்பிநின்றபொழுது அதிசோகமுடையனாய் மன்னன் மதிமயங்கினான். அந்நிலைமையைக் கண்டு கோசலை நெஞ்சம் பதறி அலறி அழுதாள். வசிட்டர் விரைந்து வந்து தசரதன் நெற்றியைப் பிடித்துக்கொண்டு, "அரசே! அரசே!" என்று மறுகி அழைத்தார். மன்னன் கண்ணை விழித்து மெல்ல நோக்கினான்.

"பிரபோ! நீங்கள் யாதும் வருந்தவேண்டா; இராமனைக் காட்டுக்குப் போகாதபடி நான் நிறுத்திவிடுகிறேன்; குருமொழி மறாத குணசீலன் ஆதலால் என் வார்த்தையைத் தட்டாமல் கேட்டு இங்கேயே தங்கி நிற்பான். உள்ளங்கலங்கி நீங்கள் உளையாதிருங்கள்" என முனிவர் உறுதி கூறினார். அதனைக் கேட்டு அரசன் சிறிது தேறுதலடைந்தான்; முனிவரை இனிது நோக்கி, "குருநாத! என் குலக் கொழுந்தைக் கொண்டு வந்து விடுவீர்களா? விரைந்து போங்கள்" என்று விடைகொடுத்தான்.

அவர் வெளியே போனார். போகவே இராமனையே நினைந்து கொண்டு அரசன் உயிர் மயங்கினான். மாதவர் உரையால்

கொஞ்சம் ஆதரவடைந்து கிடந்த நிலையை அடியில் வரும் கவியில் காண்க.

"முனிவன் சொல்லும் அளவில் முடியுங் கொல்? என் றரசன்
தனி நின் றுழல்தன் னுயிரைச் சிறிதே தகைவான் இந்தப்
புனிதன் போனால் இவனால் போகா தொழிவான் என்னு
மனிதன் வடிவம் கொண்ட மனுவும் தன்னை மறந்தான்."

முனிவர் மொழியிலேயும் பூரண நம்பிக்கையில்லாமல் இவன் அலமந்துள்ளமை இதில் அறிந்துகொள்ளலாம். "மனிதன் வடிவம் கொண்ட மனு" எனத் தசரதனுக்கு இங்கே கவி நாயகன இட்டிருக்கும் பெயரழகைப் பார்க்க.

இங்ஙனம் மீண்டும் மயங்கிப் பேச்சின்றிக் கிடக்கவே கோசலை குலைதுடித்து அலறினாள். அவன் மெல்ல அசைந்தான். அசையவே தேவி அவனுக்கு ஆறுதல் கூறித் தேற்றினாள்.

கோசலை அரசனைத் தேற்றுதல்.

"மெய்யின் மெய்யே! உலகின் வேந்தர்க் கெல்லாம் வேந்தே!
உய்யும் வகை நின் உயிரை ஓம்பா திங்ஙன் தேம்பின்,
வையம் முழுதும் துயரால் மறுகும் முனிவன் னுடன்ம்
ஐயன் வரினும் வருமால் அயரேல் அரசே! என்றாள். (1)

மன்னன் அவளிடம் மறுகி மொழிந்தது.

என்றென் றரசன் மெய்யும் இருதா ளிணையும் முகனும்
தன்றன் செய்ய கையால் தைவந் திடுகோ சலையை
ஒன்றும் தெரியா மம்மர் உள்ளத் தரசன் மெள்ள
வன்றின் சிலைநம் குரிசில் வருமே? வருமே? என்றான். (2)

வன்மா யக்கை கேசி வரத்தால் என்ற னுயிரை
முன்மாய் விப்பத் துணிந்தா ளேனும் கூனி மொழியால்
தன்மா மகனும் தானும் தரணி பெறுமா றன்றி
என்மா மகனைக் கானே கென்றாள்! என்றாள்! என்றான்."
(நகர் நீங்கு படலம், 70—72) (3)

தன்னை ஆற்றித் தேற்றிய கோசலையை நோக்கித் தசரதன் ஆற்றாமை மீதூர்ந்து இங்ஙனம் புலம்பியிருக்கிறான். "கோசலா! நமது இராமனை வனம் போகாமல் முனிவர் செய்துவிடுவாரா?

அவரோடு மீண்டு இராமன் இங்கே வருவானா? ஐயோ! நம் ஐயன் வருவானா? கோசலா! அந்தச் சண்டாளி கைகேசி கூனி வார்த்தையைக் கேட்டுத் தன் மகனுக்கு அரசைக் கட்டிக்கொள்வதோடு அமையாமல் என் மகனைக் காட்டுக்குப் போகும்படி சொன்னாளே; இது என்ன கொடுமை! என்ன பாவம்! என்ன வஞ்சம்! ஆ அந்தப் பழிகாரியின் நெஞ்சு நிலைதான் என்னே?" என மன்னன் இங்கே இன்னல்மீதூர்ந்து இனைந்துள்ளமை காண்க.

புத்திர வாஞ்சையால் தசரதன் துடித்திருக்கும் இந்தப் பகுதி முன்னோர் பலரையும் மனத்தையுருக்கியிருக்கிறது. சேரர் வேந்தாய்ச் செங்கோல் செலுத்தி வந்த குலசேகரப் பெருமானார் தம்மையே தசரதனாகப் பாவித்துக்கொண்டு இராமனை நினைந்துருகிப் பாடியிருக்கிறார். அப்பகுதி திவ்வியப் பிரபந்தத்தில் பெருமாள் திருமொழி என்னும் பேரால் இடம்பெற்றுள்ளது.

தனயன்கான்புகத் தசரதன் புலம்புதல் என்னும் தலைப்பின் கீழ் அப்பாசுரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அவை யீண்டு அறியத்தக்கன அடியில் வருவன காண்க.

"வன்தாளி னிணைவணங்கி வளநகரம்
தொழுதேத்த மன்னனாவான்
நின்றாயை அரியணைமேல் இருந்தாயை
நெடுங்கானம் படரப்போகு
என்றாள் எம்இராமாவோ! உனைப் பயந்த
கைகேசி தன்சொற்கேட்டு
நன்றாக நானிலத்தை யாள்வித்தேன்
நன்மகனே! உன்னை நானே, (1)

வெவ்வாயேன் வெவ்வுரைகேட்டு இருநிலத்தை
வேண்டாதே விரைந்து வென்றி
மைவாய களிறொழிந்து தேரொழிந்து
மாவொழிந்து வனமே மேவி
நெய்வாய வேல்நெடுங்கண் நேரிழையும்
இளங்கோவும் பின்புபோக
எவ்வாறு நடந்தனை? எம் மிராமாவோ!
எம்பெருமான்! என்செய்கேனே! (2)

கொல்லணைவேல் வரிநெடுங்கண் கௌசலைதன்
குலமதலாய் ! குனிவில்லேந்தும்
மல்லணைந்த வரைத்தோளா ! வல்வினையேன்
மனமுருக்கும் வகையே கற்றாய்
மெல்லணைமேல் முன்துயின்றாய் இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண்துயிலக் கற்றனையோ ?
காகுத்தா ! கரியகோவே ! (3)

வாபோகு வா இன்னம் வந்தொருகால்
கண்டுபோ மலராள் கூந்தல்
வேய்போலு எழில்தோளி தன்பொருட்டா
விடையோன்றன் வில்லைச் செற்றாய்!
மாபோகு நெடுங்கானம் வல்வினையேன்
மனமுருக்கும் மகனே ! இன்று
நீபோக என்னெஞ்சம் இருபிளவாய்ப்
போகாதே நிற்கு மாறே ! (4)

பொருந்தார்கை வேல்நுதிபோல் பரல்பாய
மெல்லடிகள் குருதி சோர
விரும்பாத கான்விரும்பி வெயிலுறைப்ப
வெம்பசிநோய் கூர இன்று
பெரும்பாவி யேன்மகனே ! போகின்றாய்
கேகயர்கோன் மகளாய்ப் பெற்ற
அரும்பாவி சொற்கேட்ட அருவினையேன்
என் செய்கேன் ? அந்தோ ! யானே. (5)

அம்மாவென் றுகந்தழைக்கும் ஆர்வச்சொல்
கேளாதே அணிசேர் மார்வம்
என்மார்வத் திடையழுந்தத் தழுவாதே
முழுவாதே மோவா துச்சி
கைம்மாவின் நடையன்ன மென்னடையும்
கமலம்போல் முகமும் காணாது
எம்மானை என்மகனை இழந்திட்ட
இழிதகையேன் இருக்கின்றேனே. (6)

பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப்
புனைந்துபூந் துகில்சேரல்குல்
காமரெழில் விழலுடுத்துக் கலனணியாது
அங்கங்கள் அழகு மாறி

ஏமருதோள் என்புதல்வன் யான்இன்று
செலத்தக்க வனம்தான் சேர்தல்
தூமறையீர்! இதுதகவோ? சுமந்திரனே!
வசிட்டனே! சொல்லீர் நீரே. (7)

பொன்பெற்றார் எழில்வேதப் புதல்வனையும்
தம்பியையும் பூவை போலும்
மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியலென்
மருகியையும் வனத்திற் போக்கி
நின்பற்றா நின்மகன்மேல் பழிவிளைத்திட்டு
என்னையும்நீள் வானில் போக்க
என்பெற்றாய்? கைகேசி! இருநிலத்தில்
இனிதாக இருக்கின்றாயே. (8)

முன்னொருநாள் மழுவாளி சிலைவாங்கி
அவன்தவத்தை முற்றும் செற்றாய்
உன்னையும் உன் னருமையையும் உன்மோயின்
வருத்தமும் ஒன்றாகக் கொள்ளாது
என்னையும் என்மெய்யுரையும் மெய்யாகக்
கொண்டு வனம்புக்க எந்தாய்!
நின்னையே மகனாகப் பெறப்பெறுவேன்
ஏழ்பிறப்பும் நெடுந்தோள் வேந்தே! (9)

தேனகுமா மலர்க்கூந்தல் கௌசலையும்
சுமித்திரையும் சிந்தைநோவ
கூனுருவின் கொடுந்தொழுத்தை சொற்கேட்ட
கொடியவள்தன் சொற்கொண் டின்று
கானகமே மிகவிரும்பி நீதுறந்த
வளநகரைத் துறந்து நானும்
வானகமே மிகவிரும்பிப் போகின்றேன்
மனுகுலத்தார் தங்கள் கோவே.!" (10)

(பெருமாள் திருமொழி)

தசரதன் புதல்வனைப் பிரிந்து வருந்திப் புலம்பியபடியை அடியொற்றிக் குலசேகராழ்வார் இவ்வாறு பாடி முடிவில் பல சுருதியும் கூறியிருக்கிறார். இந்த ஆழ்வார் பாடல்களில் அமைந்துள்ள சொல்லும் பொருளும் சோகநிலைமையும் நம் கவியின் பாக்களில் எவ்வகையில் இசைந்திருக்கின்றன? என்பதை ஊன்றி நோக்கி உள்ளுருக்கங்களை ஆராய்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்க.

இராமன் கானகம் போகவும் தசரதன் வானகம் போகவும் நேர்ந்துள்ள இந்தப் பாகம் ஆன்மவுருக்கம் கனிந்து ஆர்வமீ தூர்ந்து மிகவும் மேன்மை சுரந்துள்ளமையால் யாவரும் ஈடுபாடு டையராய் இதனைப் பாடி வருகின்றார்.

உள்ளம் உருகி உரை தடுமாறிப் பிள்ளைக்காதலால் இங்ஙனம் பெருமூச்செறிந்து கிடந்த தசரதனைக் கோசலை பரிவுகூர்ந்து பல வகையிலும் உறுதி கூறித் தேற்றினாள். "தரும நாயகா! குருநாதர் போயிருக்கிறார்; நமது அருமை மகனை அடவி போகாதபடி தடை செய்து நிறுத்திவிடுவார்; அழைத்து வருவார்; அவர் மொழியை இராமன் யாதும் தட்டமாட்டான் ஆதலால் அவருடன் இங்கே சிறிது நேரத்துள் வந்தருளுவான்; நீங்கள் நொந்து தவிக்க வேண்டா; இந்தவாறு பதைத்தால் என் சிந்தை எப்படிச் சகிக்கும்? வீரமூர்த்தியே! கொஞ்சம் ஆறி யிருங்கள்" என்று அக்குலமகள் பலபல கூறி நாயகனை ஆற்றிப் போற்றி ஆகம் தடவி அலமந்திருந்தாள். பட்டத்துத் தேவியான அந்தக் கற்பரசியின் கைகளைப் பிடித்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டு மன்னன் கண்ணீர் சொரிந்து கதறினான். அவளது பெண்ணீர்மையையும் உண்ணீர்மையையும் ஒருவிக் கைகேயி யிடம் தான் நெடுங்காலம் கடுங்காதல் கொண்டிருந்தமைக்குத் தன்னை நொந்துகொண்டான். கோப்பெருந்தேவியின் பெருந் தன்மையை நினைந்து நினைந்து நெஞ்சுருகிய தசரதன் கண்ணீர் ததும்ப அவளைக் கனிந்து நோக்கினான். "கோசலை! நீ தரும குணசீலை! உனது அருமை மகன் வருவான் என்று உறுதி கூறி என்னைத் தேற்றுகின்றாய்! எனக்கு நம்பிக்கையில்லை; எனது குல தீபமான அந்த மரகதப் பசுஞ்சோதி இன்னும் ஒருமுறை என் கண்ணில் படுமென்று எண்ணில் படவில்லை. என்னுடைய நிலைமை மிகவும் பரிதாபமாயுள்ளது. உள்ளம் உலைகின்றது. உயிர் துடிக்கின்றது. முடிவு நேர்ந்ததென்றே முடிவு செய்கின் றேன். விதியினை யாரும் வெல்லுதலரிது. எனது பழவினை இப்பொழுது பலனுக்கு வந்திருக்கின்றது. ஆதலால் இராமன் வனம் போகாமல் இரான்; இனி என் உயிர் போகாமலும் இராது. இளமையில் எனக்கு நேர்ந்துள்ள முனிவர் சாபமும் மூண்டு நிற்கின்றது. விபரீதமான காட்சிகளும் இடையிடையே

தோன்றி மறைகின்றன. மீண்டும் என் மகனைக் கண்டு ஈண்டு நான் உயிர் பிழைத்திரேன். வருந்திப் பயனில்லை கோசலா! அன்று அருந்தவர் சபித்தபடியே இன்று நிகழ்ந்திருக்கின்றது" என்று இன்னவாறு மன்னவன் மறுகி மொழிந்தான்.

அவ்வுரைகளைக் கேட்டு உள்ளம் பதைத்த கோசலை கண்ணீர் சிந்திக் கரைந்து நின்று, "அந்தோ! அது என்ன சாபம்? நாதா!" என்று ஏங்கி வினவினள். வேந்தன் மெல்லச் சொல்லத் தொடங்கினன். அந்தக் கதை வரலாற்றை அடியில் காண்க.

தசரதன் கோசலையிடம் தனது சாப நிலையைக் கூறுதல்.

"வெய்ய கானத் திடையே வேட்டை வேட்கை மிகவே
அய்ய சென்று கரியோ டரிகள் துருவித் திரிவேன்
கையார் சிலையும் கணையும் கொடுகார் மிருகம் வருமோர்
செய்ய நதியின் கரைவாய்ச் சென்றே மறைய நின்றேன். (1)

ஒருமா முனிவன் மனையோ டொளியோன் றிலவாய் நயனம்
திருமா மகனே துணையாய்த் தவமே புரிபோழ் தினில்வாய்
அருமா மகனே புனல்கொண் டகல்வான் வருமா றறியேன்
பொருமா கணைவிட் டிடலும் புவிமீ தலறிப் புரள. (2)

புக்குப் பெருநீர் நுகரும் பொருபோ தகமென் றொலிமேல்
கைக்கட் கணைசென் றதலால் கண்ணில் தெரியக் காணேன்
அக்கைக் கரியின் குரலே யன்றீ தென்ன வெருவா
மக்கட் குரலென் றயர்வேன் மனம்நொந் தவண்வந் தனென்றல். (3)

கையுங் கடமும் நெகிழக் கணையோ டுருள்வோற் காணு
மெய்யும் தறுவும் மனனும் வெறிதே கிடமேல் வீழா
ஐயன் நீதான் யாவன் அந்தோ அருள்கென் றயரப்
பொய்யொன் றறியா மைந்தன் கேணீ என்னப் புகல்வான். (4)

முனி மகன் மொழிந்தது.

இருகண் களுமின் றியதாய் தந்தைக் கும்மீங் கவர்கள்
பருகும் புனல்கொண் டகல்வான் படர்ந்தேன் பழுதா யினதால்
இருதன் றனைய புயத்தாய்! இபமென் றுணரா தெய்தாய்!
உருகும் துயரம் தவிர்நீ யூழின் செயலீ தென்றே. (5)

உன்னீர் வேட்கை மிகவே உயங்கும் எந்தைக் கொருநீ
தண்ணீர் கொடுபோய் அளித்தென் சாவும் உரைத்தும் புதல்வன்
விண்மீ தடைவான் தொழுதான் எனவும் மவர்பால் விளம்பென்
றெண்ணிர் மையினுன் விண்ணோர் எதிர்கொண் டிடஏகினுல்

மைந்தன் வரவே நோக்கும் வளமா தவன்பால் மகவோடு
அந்தண் புனல்கொண் டணுக ஐயா! இதுபோ தளவாய்
வந்திங் கணுகா தென்னே வந்த தென்றே நொந்தேம்
சந்தங் கமழும் தோளாய்! தழுவிக் கொள்வா எனவே. (7)

ஐயா! யானோர் அரசன் அயோத்தி நகரத் துள்ளேன்;
மையார் களபம் துருவி மறைந்தே வதிந்தேன் இருள்வாய்ப்
பொய்யா வாய்மைப் புதல்வன் புனல்மொண் டிடுமோ தையின்மேல்
கையார் கணைசென் றதலால் கண்ணில் தெரியக் காணேன். (8)

வீட்டுண் டலறுங் குரலால் வேழக் குரலன் றெனவே
ஓட்டந் தெதிரா நீயார் எனவுற் றவெலாம் உரையா
வாட்டந் தருநெஞ் சினனாய் நின்றான் வணங்கா வானோர்
ஈட்டம் எதிர்வந் திடவே இறந்தே கினன்விண் ணிடையே. (9)

அறத்தாய் கணையால் எனவே அடியேன் தன்னை ஐயா!
கறுத்தே அருளா யானோ கண்ணிற் கண்டேன் அல்லேன்
மறுத்தான் இல்லான் வனமொண்டிடுமோ தையின் எய்ததலால்
பொறுத்தே அருள்வாய் என்று இருதாள் சென்னி புனைந்தேன்.

பெற்றோர் துடித்தது.

வீழ்ந்தார் அயர்ந்தார் புரண்டார் விழிபோயிற்றின் றென்றார்
ஆழ்ந்தார் துன்பக் கடலுள் ஐயா! ஐயா! என்றார்
போழ்ந்தாய் நெஞ்சை என்றார் பொன்னு டதனிற் போய்நீ
வாழ்ந்தே இருப்பத் தரியேம் வந்தேம் வந்தேம் இனியே. (11)

என்றென் றயரும் தவரை இருதாள் வணங்கி யானே
இன்றும் புதல்வன் இனிநீர் ஏவும் பணிசெய் திடுவேன்
ஒன்றும் தளர்வுற் றயரீர்! ஒழிமின் னிடரென் றிடலும்
வன்றின் சிலையாய்! கேண்மோ எனவே ஒருசொல் வகுத்தார்.

சாபம் கொடுத்தது.

கன்றுள் மணிபோல் மகவை இழந்தும் உயிர்கா தலியா
உன்று எண்ணி இருந்தால் உலகோர் என்னென் றுரையார்?
விண்ணின் தலைசே ருதும்யாம் எம்போல் விடலை பிரியப்
பண்ணும் பரிமா வுடையாய்! அடைவாய் படர்வான் என்று. (13)

தாவா தொளிரும் குடையாய் ! தவறிங் கிதுநின் சரணம்
காவாய் என்றாய் அதனால் கடிய சாபம் கருதேம்
ஏவா மகவைப் பிரிந்தின் றெம்போல் இடருற் றனைநீ
போவாய் அகல்வான் என்னாப் பொன்னாட் டிடைபோ யினரால்.

சிந்தை தளர்வுற் றயர்தல் சிறிதும் இலனாய் இன்சொல்
மைந்தன் உளனென் றதனால் மகிழ்வோ டிவண்வந் தனனால்
அந்த முனிசொற் றமையும் அண்ணல் வனமே குதலும்
என்றா னுயிர்வீ குதலும் இறையும் தவறா என்றான்,'' (15)

(நகர் நீங்கு படலம், 74—88)

இன்னவாறு மன்னன் கூறியிருக்கின்றான். தனது முன்னைய நிகழ்ச்சிகளை மூத்த மனைவியிடம் இன்னல் நிலையில் உரைத்துள்ள இதில் பல சிந்தனைகள் நிறைந்திருக்கின்றன. பாடல்கள் முழுமையும் படித்து நேர்ந்துள்ள சம்பவத்தின் நிலைகளை நன்கு ஊன்றி நோக்கி உணர்ந்துகொள்ளவேண்டும்.

தசரதன் ஒருநாள் வேட்டை மேல் விருப்பமாய்க் காட்டுக்குப் போனான். நல்ல காளைப் பருவம். ஏறிச்சென்ற இரதத்தை அயலே நிறுத்திவிட்டு வில்லும் கையுமாய் அடர்ந்த கானுள் புகுந்து வேட்ட நாட்டமாய்த் தொடர்ந்து திரிந்தான். அன்று கொடிய மிருகங்கள் எதிர்ப்படவில்லை. சிறிய மான், பன்றி முதலியன கண்ணெதிர் வரினும் அவற்றை ஒன்றும் செய்யாமல் விட்டுச் சிங்கங்களையும் யானைகளையுமே தேடியலைந்தான்.

“ கரியோடு அரிகள் துருவித் திரிவேன் ”

என்ற இந்த வாக்கியம் இங்கே சிந்திக்கத் தக்கது.

மதயானைகளையும் மடங்கலேறுகளையும் அடங்க வெல்லுதலையே அவாவி யுள்ளமையான் இவனது அருந்திறலாண்மையும் பெருந்தகைமையும் நன்கு அறிய நின்றன. முயல் புல்வாய் முதலிய எளியபிராணிகளின்மேல் கொடிய கடிநாய்களைஏவிவிட்டு அவை காலோய்ந்து வீழுங்கால் மேலோடிப் பாய்ந்து விரைந்து கொன்று வெறியாட்டுடன் இந்நாட்டில் இன்றுள்ள வேட்டையாளராய் வீறுகொண்டு நிமிர்ந்து நிற்கும் வெறு வீரர்கள் இப் பெரு வீரனை நினைந்து தம் பிழைதீரவேண்டும்.

## சுரோசனன் கதை.

இவ்வாறு வெய்ய விலங்குகளை எய்ய விரும்பிக் கையும் கணையுமாய் உலாவி வந்தும் கருதியபடி வேட்டம் வாயாமையால் வாட்டம் அடைந்து அங்கே ஒரு நதியின் கரையில் பெரிய குளிர் மர நிழல் தங்கி மன்னன் தகையாறியிருந்தான். வெயில் வெப்ப மாறி மாலை வேளை சார்ந்தது. அப்பொழுது ஓர் இளைஞன் கையில் மண் கலசத்தோடு அந்நதியில் நீர் எடுத்துப் போக வந்தான். காளைப் பருவத்தன். வயது இருபத்து நான்கு தொடங்கியுள்ளது. சுரோசனன் என்னும் பெயரினன். சிறந்த மதிமான். சாந்தகுண சீலன். அவனுடைய தந்தை பெயர் சலபோசனன் என்பது. தாய் சாலினி. அவ்விருவருக்கும் கண்கள் தெரியா. குருடர்களான அந்தத் தந்தையையும் தாயையும் இம்மைந்தனே மிகவும் உரிமையோடு பாதுகாத்து வந்தான். உணவு சமைத்து ஊட்டியும், கனிகாய் கிழங்குகளை உதவியும் இனிது பேணி இணை பிரியாது பணிவிடை புரிந்திருந்தான். அவரும் விரத ஒழுக்கங்கள் நிறைந்து தவநெறியில் சிறந்து அமைதியுடன் அமர்ந்திருந்தனர். துறவியரும் இருடி கணங்களும் அவரை உவகையுடன் புகழ்ந்து வந்தனர். அத்தகைய முதியவர் இருவரையும் அன்று சரயு நதியில் நீராட்டி ஓர் ஆலமர நிழலில் அமர்த்திப் பகலில் உணவூட்டி இக்குமரன் பணியாற்றி நின்றான். மாலையில் தந்தைக்குத் தாகம் அதிகரித்தமையால் தண்ணீர் கொண்டுவர விரும்பி உண்ணீர்க் கலத்துடன் மன்னன் நிற்கும் அத்தெண்ணீர் நதியருகே இப்புண்ணியப் புதல்வன் வந்தான். எண்ணிவந்தபடியே இனிய நீர்நிலையைக் கண்டு உவகைமீக் கொண்டு விரைந்து புகுந்து நீரை முகந்தான். கலசத்தில் இவன் நீரை மொண்டுகொண்டிருக்குங்கால் கரைமேல் பொழில் மறைவி லிருந்த தசரதன் இந்த ஒலியைக் கேட்டான். யானை வந்து தண்ணீர் குடிக்கின்றதென்று மாறாக எண்ணி அவ்வொலி வழியே ஒரு பகழியை எய்து விட்டான். விட்ட அம்பு வேகமாய் வந்து பையன் ஆகத்தில் பட்டது. "ஐயோ!" என்று அலறி விழுந்தான். கையிலிருந்த கலசம் அயலே புரண்டுருள அவன் தரையிலுருண்டான். இந்தக் குரலைக் கேட்டதும் "யானை அன்று; மனிதனே" என்று அரசன் மறுகித் துடித்து விரைவாக ஓடி வந்தான்.

குமரன் நிலைமையைக்கண்டு குலை நடுங்கி, "அந்தோ! நீ யார்? அப்பா!" என்று அலறிக் கேட்டான்.

"கையும் கடமும் நெகிழக் கணையோடு உருள்வோற் காணு
மெய்யும் தனுவும் மனனும் வெறி தேகிட மேல் வீழா"

என்றதனால் அந்த அருமை மகனது பரிதாப நிலையும், அதனைப் பார்த்தவுடன் உள்ளமுடைந்து உயிர் பதைத்து மதி மயங்கி அதி சோகமாய் அரசன் அலமந்து நின்றதும் அறியலாகும். பிடித்திருந்த கலசம் அடுத்துருளத், தொடுத்த கணை மார்பில் மடுத்துருவ, எடுத்த குரலோடு அச்சிறுவன் துடித்துருளும் கோரக் காட்சியையும், அவனைக் கண்டபோது வேந்தன் நெஞ்சழிந்து நிலைகுலைந்து சிலையிழந்து தெருமந்து தவித்ததையும் கவி இதில் எழுதிக் காட்டியிருக்கிறார். காணும் தோறும் கண்ணும் உயிரும் கரைந்துருக இந்தத் துயரச் சித்திரம் உயிர் பெற்று நின்று உலகை என்றும் உருக்கி வருகின்றது.

உதிரம் சோரப் பகழியோடு உருண்டு துடிக்கும் அக் குமரனை நோக்கி "ஐயோ! யார்? நீ!" என்று அவல நெஞ்சனுய் மன்னன் வினவியபோது, அவன் சொன்ன உரைகளின் சுகுண நிலைகளை உன்னியுணர்ந்து உருகலாமேயன்றி இன்னபடி என்று தெளிவாக முழுதும் எழுதிக் காட்ட இயலாது.

உடலில் இருப்பதா? போவதா? என்று உயிர் போராடிக் கொண்டிருக்கின்ற அதி பரிதாபமான துயர வேளையில் இக் குமரன் பேசியிருக்கும் அமைதியும் அடக்கமும் அதிசய நிலையின.

"இருகண்களும் இன்றிய தாய்தந்தைக்கும் ஈங்கு அவர்கள்
பருகும் புனல்கொண்டு அகல்வான் படர்ந்தேன்"

என்றதனால் பெற்றோருடைய நிலைமையும் அவரை இவன் பேணி வரும் தலைமையும் தெரிய வந்தன. தாய்க்கு இரண்டு கண்களும் தெரியா; அவ்வாறே தந்தைக்கும் என்க. கண்ணை முதலில் குறியாமல் இரு என எண்ணைக் குறித்தது ஒரு கண்ணும் கூடத் தெரியாதே என்று பரிதாபம் தோன்ற வந்தது.

ஒளி ஒன்றிலவாய் நயனம் என முன்னம் குறித்திருத்தலினுல் விழிகண் குருடு என்பது வெளியாம். கண் இரண்டும் தெரியாத கபோதிகளை என ஈண்டுறை எண்ணி யுருகி யிருக்கிறுன்.

அவர் சுடுந்தாக முடையவரா யிருக்கிறார். உண்ணீர் வேட்கை யுடைய அவர்க்குத் தண்ணீர் மொண்டு கொண்டுபோக இந்த திக்கு வந்தேன் என்பான், "பருகும் புனல்கொண்டு அகல்வான் படர்ந்தேன்" என்றான். இவன் ஆவலோடு விரைந்து வந்துள்ளமை "படர்ந்தேன்" என்றதனால் விளங்கி நின்றது.

அகல்வான் போந்தவன் அகல்வான் போக நேர்ந்துள்ளமை யால், புனல்கொண்டு மீண்டு அவர்பால் போகமுடியாமையை நினைந்து நினைந்து நெஞ்சம் மிகவும் புழுங்கியிருக்கிறான்.

தந்தை தாயர் நிலையையும் தான் வந்த வகையையும் இந்த வாறு உரைத்தான். வந்த இடத்தில் தனக்குவந்த இடையூற்றை எந்தவாறு குறித்தான்? "பழுது ஆயினதால்" என்றான். இந்த வார்த்தை அவனது அந்தக் கரணத்தின் அந்தரங்க அமைதியை உணர்த்தியுள்ளது. பழுது = குற்றம், தீங்கு, கேடு.

"பழுது புரிந்தாய்!" என்று அரசனைச் சினந்து வையாமல் "ஆயினது" என அவ்வாயில் வந்துள்ள இந்த அமைதி மொழி ஆயும் தோறும் அறிஞர் அதிசயிக்க வுரியது.

பழுது தானாக உண்டாகாது; அது உண்டாதற்கு ஏதேனும் ஓர் ஏது வேண்டும்; ஒருவனுடைய பழுதான வினையிலிருந்து தான் பழுது விளையும் ஆதலால் அவ்வினைவிளைவினை உளேவோடு உரைத்திருக்கிறான்.

தனது முன்னை வினைப்பயனே மன்னன் முன்னிலையாக இன்னவாறு தனக்கு உயிர்க்கேடு புரிந்துள்ளது என உணர்ந்து அடங்கி உளம் பரிந்து மொழிந்தபடி யிது.

எய்த அம்பால் உயிரழிவு நேர்ந்திருந்தும் அரசனைநோக்கி ஒரு பழியும் கூறாமல் மிகவும் பொறுமையுடன் இங்ஙனம் புகன்றிருத்தலால் அம்மகனது மனப்பண்பும் மதிநலமும் அதிசயமுடையனவாய் எண்ணுந்தோறும் வியப்பை விளைக்கின்றன.

"பழுதாயினது" என்று பொதுவாகக் கூறியிருத்தலால் தன்னையும் அரசனையும் பெற்றோரையும் அப்பழுது பற்றியுள்ளது.

தாய் தந்தையர்க்குத் தண்ணீர் கொண்டு போகவிடாமல் தன்னுயிர்க்குப் பழுது நேர்ந்தது; மன்னனுக்குப் பாவமும் சாப

மும் ஆயின ; இருமுது குரவரும் மகனை யிழந்து மரணமடைய நேர்ந்தனர் என்க.

தன்னருகே வந்து மறுகி மயங்கித் தவறு செய்துவிட்டோமே! என்று அவலமிகுந்து பரபரப்புடன் பரிதபித்து நிற்கின்ற அரசனை இம்மகன் மலர்ந்து நோக்கினான். வில்லுங் கையுமாய் அகன்ற மார்புடன் நிமிர்ந்து நின்று கவன்று துடிக்கின்ற அந்தக் கம்பீரக் கட்டழகனது கவலை நிலைகளை யுணர்ந்து இவன் ஆறுதல் கூறலானான்.

"இருகுன்றனைய புயத்தாய் ! இபம் என்று உணராது எய்தாய் !
உருகும் துயரம் தவிர்நீ, ஊழின் செயல் ஈது"

என இக் குலமகன் கூறியிருக்கும் இதில் எவ்வளவு குண நலங்கள் குலாவி நிற்கின்றன. பெயர் தெரியாது ஆதலால் "புயத்தாய்!" என்று விளித்தான். தோள்களின் உருட்சியும் திரட்சியும் எடுப்பும் எழிலும் இவனுடைய கண்களைக் கவர்ந்துள்ளமை "இருகுன்று" என்றதனால் அறிய நின்றது.

இவ்வாறு பரிவுடன் பார்த்து, "அரசே! நீங்கள் வருந்த வேண்டா; பிழையாகப் பிழைநேர்ந்துவிட்டது ; நான் நீர் முகந்த ஒலியை யானை வந்து நுகர்கின்றதென்று மாறாகக் கருதி அம்பை எய்து விட்டீர்கள் என்று தெரிகின்றது. எனது ஊழ்வினைப் பயன் இவ்வாறு முடிந்துள்ளது. விதிவிளைவுக்கு மாறாக யாராலும் யாதும் செய்ய இயலாது ; நீங்கள் கவலாதீர்கள்!" என்று அத்தவமகன் ஆறுதல் கூறியிருக்கும் நீர்மையும் நிலைமையும் நினைக்குந்தோறும் நெஞ்சை உருக்குகின்றன.

"உருகும் துயரம் தவிர்நீ, ஈது ஊழின் செயல்;" என்னும் இந்த உரையில், நேர்ந்த பிழையை நினைந்து நெஞ்சங்குலைந்து வேந்தன் உயிர் பதைத்துள்ளதும், அந்தப் பரிதாபத்தைக் கண்டு பரிவு கூர்ந்து இவன் உறுதி கூறியிருத்தலும் நன்கு உணரலாகும்.

தன் உயிர்க்கு அழிவு செய்து நிற்கின்ற ஒருவனைப் பார்த்து இங்ஙனம் அளியோடு உரையாடியிருப்பது எவ்வளவு அருமையை உணர்த்தி நிற்கின்றது? அவனது மனவமைதியும் மதிமாண்பும் மனித இனத்திற்குப் புனித உணர்ச்சியை உதவி நிற்கின்றன. இவ்வண்ணம் பிழை நேர்ந்த இடத்தில், "அடபாவி! என்னை

அநியாயமாகக் கொன்றுவிட்டாயே! நீ விளங்குவாயா?'' என யாரும் உளங்கனன்று குய்யோ முறையோ என்று கூவிக் கொதித்து வைவாரேயன்றி இவ்வாறு குணநலத்துடன் பொறுத்தருள்வாரைக் காண்டல் யாண்டும் பெரிதும் அரிதாம். இந்தக் குலமகனது காட்சி உலகில் ஒரு தனிநிலையில் உயர்ந்து நிற்கின்றது.

இங்ஙனம் சொன்னவன் மறுபடியும் மன்னனை நோக்கி "அண்ணலே! என்னுடைய தாயும் தந்தையும் தாகத்தால் தவித்துக்கொண்டிருப்பார்கள். தாங்கள் கொஞ்சம் தயவுசெய்து இந்தக் கலசத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டுபோய் அதோ தெரிகின்றதே அந்தச் சோலையிலுள்ள அவர்களுக்குக் கொடுத்தருளுங்கள். தாக சாந்தியானபின் நான் இங்கே சாக நேர்ந்ததை அறிவியுங்கள். சாகும்பொழுது அவர்களைத் திசை நோக்கிக் கைகூப்பி நான் தொழுததாகச் சொல்லுங்கள். ஐயோ! என் மாதா பிதாக்களுக்குப் பக்கமிருந்து பணிவிடை செய்யாமல் போகின்றேனே! கபோதிகளாய் வயதுமுதிர்ந்துள்ள அவர்களை யார் இனிஆதரிப்பார்? ஆ! தெய்வமே! காத்தருள்'' என்று இவ்வார்த்தை சொல்லவும் அவன் உயிர்போய்விட்டது.

அந்நிலையைக் கண்டு மன்னன் மறுகி உருகினான். கண்ணீர் பெருகி வந்தது. உள்ளத்தை உறுதி செய்துகொண்டு உயிர் போன அவ்வுடலைச் சலகலசத்தோடு அரசன் எடுத்து வந்தான். இருமுது குரவரை அணுகவும் உடம்பை அயலே கிடத்திவிட்டு அருகே நெருங்கினான். இவன் இவ்வாறு நெருங்க அவர் இருந்த இருப்பு அலமரலுடையதாய் ஆவலடைந்து நின்றது. கண்ணில்லாத அவர் தம் மகனை எண்ணி எண்ணி யுளைந்து ஏங்கியிருந்தனர்.

"தண்ணீர் எடுக்கப்போன பிள்ளை இன்னமும் வரவில்லையே! போன நெடுநேரமாகின்றதே! ஒருநாளும் இப்படி இரானே! போன இடத்தில் என்ன நிகழ்ந்ததோ? ஏது நேர்ந்ததோ?'' என இன்னவாறு பல பல எண்ணிப் பருவரலடைந்து பிள்ளைமீது பேராவலோடு உள்ளம் பதைத்திருந்த அவர் இவனது அடி ஓசையைக் கேட்டதும், மகன்தான் வருகின்றான் என்று நினைந்து "ஐயா! இவ்வளவு நேரம் என்னே? கண்மணியே வா! தழுவிக்கொள்'' எனக் கைகளை நீட்டி உழுவலன்புடன் உருகி யழைத்தார்.

அதனைக்கேட்ட அரசன் அவலமிகவுடையனாய், "ஐயா யான் ஓர் அரசன்; அயோத்தி நகரத் துள்ளேன்." என்றான். அது சொல்லுமுன்னமே "ஐயோ! எம் பிள்ளை எங்கே?" என்று உள்ளம் பதறி துள்ளித் தவித்தார். மன்னன் உற்றதையெல்லாம் ஒளியாது உரைத்தான். அப்பொழுது அவர் பட்ட துயரங்களை யார் சொல்லவல்லார்? "ஐயையோ!" என்று அலறிவிழுந்து அவசமாயினர். பின்பு அயர்ச்சி தெளிந்து முகத்திலும் தலையிலும் அடித்துக்கொண்டு மண்ணில் கிடந்து மறுகித் துடித்தார். உயிரை போய்ப் பாதவிக்கும் உடலேபோல் உருண்டு புரண்டு ஐயோ! மகனே! மகனே! என்று பெருங் குரலோடு கதறியழுதார். 'குழந்தாய்! உன்னைப் பிரிந்து ஒரு கணமும் உயிர் வாழ்ந்திரோம்! உன் பின்னே இதோ வருகின்றோம்! வருகின்றோம்!" என்று குலை துடித்து உயிர்விடத் துணித்தார். துக்க சாகரத்துள் ஆழ்ந்து புழுவாய்த் துடித்து முடிவுற நேர்ந்த அப்பெற்றோர்கள் அடியில் சக்கரவர்த்தி நெடிதுவீழ்ந்து பணிந்து, "ஐயன்மீர்! நான் இன்று முதல் உங்கள் பிள்ளை. அண்ணலைக் காட்டிலும் நான் உங்களை இனிது பேணி வருவேன்; இப்பொழுதே அரண்மனைக்கு இரதத்தில் வைத்து அழைத்துப்போகின்றேன். இரவும் பகலும் அருகேயிருந்து யாதொரு குறைவும் நேராமல் கண்ணூன்றிப் பாதுகாத்து வருகின்றேன். அறியாமல் நேர்ந்த பிழையை மன்னித்து அருள்புரிந்து என்னை ஆதரிக்கவேண்டும். எனக்குத் தந்தையும் தாயும் நீரே" என்று வந்தனை வழிபாடுகளுடன் மன்னன் மறுகி வேண்டினன். அதற்கு அவர் சிறிதும் இசையாமல், "அந்தோ! கண்மணி யனைய எங்கள் அருமைப் புதல்வனை இழந்துவிட்டு உன் பின்னே வந்து உண்டு வாழ்ந்து இருக்கவா? உலகில் இனி ஒரு கணமும் உயிர் தரித்திரோம்; நீ ஒரு பெரிய அரசனாயிருந்தும், செய்த பிழைக்கு இரங்கி நேரே வருந்தி வந்து வணங்கி வேண்டினமையால், உனது நீர்மையும் சீர்மையும் சிறிது ஆறுதலருளின; ஆயினும் பிள்ளைப் பிரிவு எங்கள் உள்ளத்தையும் உயிரையும் சுட்டெரிக்கின்றது. ஆதலால் எம்மைப் போலவே, "விடலை பிரிய நீ சுடலை அடைவாய்!" என்று சொல்லிவிட்டு உடனே அவர் உயிரைவிட்டார்.

புத்திர சோகத்தால் மாண்டு மடிந்த அந்த அருந்தவரது அப்பரிதாப நிலைமையை நேரே கண்டு நின்ற மன்னன் நெடுந் திகில்

கொண்டான். நெஞ்சம் கலங்கினும் விதிநிலையை வியந்து அதிசய பரவசனாய் உள்ளந்தேறினான். பின்பு தேரிலேறி ஊரை யடைந்தான்.

வேட்டைக்குப் போனநாள் காட்டில் நேர்ந்த கதை இது.

இந்தச் சரித்திரம் எவ்வளவு விசித்திரமாக அமைந்துள்ளது? வினையின் விளைவை எவ்வாறு விளக்கிநிற்கின்றது? இதில் கருதி புணரவேண்டிய உறுதிநலங்கள் யாவை? பொறுதியாக ஆராய வேண்டும்.

இக்கதை நிகழ்ச்சியில் மூன்றுவகை நிலைகள் ஊன்றி உணர உரியன. முதலாவது கொலையுண்ட குலமகனைக் கவனிப்போம்.

1. சுரோசனன்: இந்த அருமை மகனுடைய குணநலனும் மனவமைதியும் உயர் மாண்புடையன. பெற்றோரைப்பேணி வழிபடுகின்ற உத்தம சற்புத்திரர்களெல்லாருக்கும் இவன் ஓர் உதாரண புருடனாய் ஒளிசெய்து நிற்கின்றான். இராமனுக்கு நேரான மூலகாரணமாய் இவன் நேர்ந்திருக்கிறான். ஈன்றவர் பால் ஆன்ற மதிப்பும் ஆர்வமும் உடையவன். அமைதியாளன். தன்னைக் கொலைபுரிந்தவனிடத்தும் நிலை திரியாமல் நெஞ்சிரங்கி யிருக்கிறான். ஒரு சுடுமொழியும் சொல்லாமல் சுமுகமாய்இவன் உரையாடியிருப்பது மனித நிலைமையை மிஞ்சியுள்ளது. தான் சாகும்போதும் தந்தையின் தாகநிலையை நினைந்து தவித்திருக்கிறான். தன்னுயிர்க்கு இரங்காமல் பெற்றோர் தனிமைக்கே பேதுற்றுளைந்துள்ளான். கரணங்கள் கலங்கி மரணமடையும் போதும் அவரைத் திசை நோக்கித் தொழுதே உயிர் போயிருக்கிறான்.

இனி, கொன்ற அரசனைக் குறித்து நோக்குவோம்.

2. தசரதன்: வேட்டைக்கு வந்த இம் மன்னர்பிரான் மதயானை என்று தவறாக எண்ணிக் கையிலிருந்த அம்பைக் கடுத்து விட்டான். அதுபட்டுருண்டு மகன் அலறியபோது இவன் பதறி ஓடி வந்து பார்த்தான். உற்றதை யுணர்ந்து உள்ளந் துடித்துப் பரிதாபமீதூர்ந்து பாதவித்தான். அக்குமரன் சொன்னபடியே கலசத்தில் தண்ணீரை மொண்டு கொண்டு அம்முதியவரிடம் சென்று உண்மையை ஒளியாதுரைத்து அடியில் விழுந்து

தொழுது "இனி நானே உங்களுக்குப் பிள்ளை; அண்ணலினும் கண்ணும் கருத்துமாய்ப் பேணிவருவேன்; சென்றதை நினைந்து சிந்தை கலங்கவேண்டா; என்னுடன் வந்தருளுங்கள்; இரதத்தில் ஏற்றிக்கொண்டு போகின்றேன்; அரண்மனையில் வைத்து அல்லும் பகலும் அருகிருந்து ஆதரிக்கின்றேன்" என்று இங்ஙனம் பணிந்து போற்றிப் பரிந்து பேசியிருக்கிறான். தான் ஒரு சக்கரவர்த்தியாயிருந்தும் காட்டில் கைப்பிசகாய் நடந்ததற்கு இப்படி அடங்கி மொழிந்துள்ளான். இது, அவனது நீதி நிலையையும் நெஞ்சின் நேர்மையையும் உலகமறிய உணர்த்தி நிற்கின்றது. தான் இட்டது சட்டமாய்த் தலைமையோடு இருக்கத்தக்க ஒருவன் இவ்வாறு பொறையும் பணிவும் பூண்டு போற்றி வேண்டியிருப்பது எவ்வளவு போற்றுதலுக்கு உரியது? ஊரிடையே ஒருவன் தம் காரில் அடிபட்டுக் கடிது மாண்டாலும் ஒரு சிறிதும் உணராமல் நேர்மையாதுமின்றி ஓடி ஒளியும் பீடுடையார் பெருகியுள்ள இக்காலத்தில் இப் பேரரசு செய்துள்ளதை எண்ணுந்தோறும் இறும்பூதுண்டாகின்றது. தம் நெஞ்சே சான்றாய் மேலோர் நிலைத்திருக்கின்றார்; உத்தமனுக்குத் தன் உள்ளமே சட்டமாயுள்ளது என்பதை ஈண்டு இவ்வரசர் பிரான் உணர்த்தி நிற்கின்றான்.

இனி, மூன்றாவது அம் முதியவரைக் காண்போம்.

3. சலபோசனன், சாலினி: இத்தம்பதிகள் இருவரும் தவவொழுக்கங்களில் சிறந்தவர். கண்ணிரண்டும் தெரியாத கபோதிகள். தம் ஒரு மகனே தமக்கு உயிராதாரமாகக் கொண்டிருந்தவர். தன் கைப்பிழையால் மகன் இறந்து பட்டான் என்று மன்னன் வந்து சொன்னபொழுது இவரடைந்த துயர நிலைகள் எவருடைய உள்ளத்தையும் உருகச் செய்யும்.

"வீழ்ந்தார் அயர்ந்தார் புரண்டார் விழிபோயிற்று இன்று"

என்று துடித்திருத்தலினால் இவரது பிள்ளைக்காதலும், உள்ள நிலையும் உணரலாகும். "கண்ணுள் மணிபோல் மகவு" என்று கதறியிருக்கின்றார். தமக்கு முன்னமே கண்போயிருந்தாலும் தமது அருமை மகனுடைய ஆதரவினால் யாதொரு கவலையும் தோன்றாமல் அமர்ந்து வந்தார்; அன்று அவன் இறந்துபோனமையால், "இன்று விழி போயிற்று" என்றார். "அரச போகங்

னோடு அரண்மனையில் அமர்ந்திருக்கலாம்; இந்த அடவியல் திரியவேண்டா; என்பின்னே வந்தருளுங்கள்; நான் மைந்தனாய் நின்று பாதுகாக்கின்றேன்" என்று அரசன் எவ்வளவோ கூறி மன்றாடி வேண்டியும் இவர் யாதும் இசையாமல் இறந்துபோகவே துணிந்தார். தம் பிள்ளை செத்தாலும், சிறிது பொருள்வரின் உள்ளமுவந்து வாழும் பெற்றோருக்கும் இவருக்கும் உள்ள வேற்றுமையை ஈண்டு ஓர்ந்து உணரவேண்டும். செய்த பிழையை ஒத்துக்கொண்டு உண்மையை ஒளியாது வந்து சொன்னமையால் மன்னன்மீது சிறிது மனம் இரங்கியிருக்கிறார். ஆயினும் மகனை இழந்த துயரம் பொறுக்க முடியாமையால் உள்ளங்கொதித்து அரசனுக்குச் சாபம் கொடுத்துள்ளார்.

"ஏவா மகவைப் பிரிந்து எம்போல் இடருற்று நீ போவாய்!"

என்று சபித்து அவர் உயிர் போயொழிந்தார். இந்தச் சாப மொழியில் "மகவை இழந்து" என்னாமல் பிரிந்து என்றது அறிந்து மகிழவுரியது. இழந்து என்று விழுந்திருந்தால் இராமன் இறந்திருப்பான். எங்கள் பிள்ளையைச் சாகக் கொடுத்து நாங்கள் இன்று சாவது போல் நீயும் உன் பிள்ளையை இழந்து சாகவேண்டும் என்று சொல்லவேண்டியவர் யாருடைய யோகமோ இவ்வாறு சொல்லியிருக்கிறார். மகவைப் பிரிந்து என்றது இழந்து என்று சொல்லியிருந்தால் மேலே கதை நடந்திராது; நாமும் இராமாயணத்தை இழந்து போயிருப்போம். அந்தப் பேரிழவு நேராமல் ஓரளவில் இந்தப் பிரிவு நேர்ந்துள்ளமை பெருமகிழ்வுக்கிடமாயது. உரைகளிடையே உணர்வுறுதிகள் உய்த்துணரவுள்ளன. கதை நிகழ்ச்சியில் புதைபொருள்கள் பொதிந்து கிடக்கின்றன.

தசரதனது வில்லாற்றலும், முனிவரது சொல்லாற்றலும் பல சிந்தனைகளுக்குரியனவாய் இதன்கண் நிகழ்ந்திருக்கின்றன. கண் எதிரே பாராமல் ஓசை வழியே ஓர்ந்து குறியைத் தவறாது அடிப்பது என்றால், அது எவ்வளவு அதிசயம்? அந்த அற்புத வித்தையில் இவன் தலை சிறந்து நிற்கின்றான். ஒலி நிலையை உணர்ந்து எய்யும் நிலைமைக்குச் சில வேதத்தில் * சத்த வேதி என்று பெயர் வைத்திருக்கின்றனர். அதில் இவனை ஒத்தவர் எக்காலத்திலும் எவரும் இலர். எல்லாரும் வியந்து போற்ற

* இந்நூல் பக்கம் 198, வரி 18 பார்க்க.

வில்லாண்மையில் இங்ஙனம் இவன் விளங்கி யுள்ளமையினாலே தான் பின்னையும் மகா வில்வீரனாய்த் துலங்கி நின்றான் என்பர். விளையாட்டாக வேட்டைக்கு வந்தான்; அங்கே வினை விளைந்தது. கொலை நோக்கோடு கருதிச் செய்யாமையால் அக்கருமம் நிலை நோக்கி மிருதுவாக வந்து வளைந்தது. தான் செய்த வினை எவ்வகையினும் தப்பாமல் புகுந்து தன்னை வருத்தும் ஆதலால் தீய வினைகளை மனிதன் யாண்டும் தீண்டாமல் தூயனாய் ஒழுகவேண்டும் என்பதை இது உணர்த்தியுள்ளது.

முனிவர் சாபம் பருவம் எதிர்நோக்கிப் பொறுதியாய் நின்றது. எந்த வயதில் தம் மைந்தன் இறந்தானோ அந்த வயதை இராமனடையவும் தந்தையை அது வந்து பிடித்தது. வினையின் விளைவு நினைவருந்தகையது. அதிநுட்பமானது; எவரும் கடக்க முடியாத திட்பமிக வுடையது.

இந்தப் பரிதாப நிகழ்ச்சியில் பாத்திரங்களுடைய இயல்பும் ஏற்றமும் தகவும் தெளிவாக வெளிப்பட்டுள்ளன. ஒன்றோடொன்று உயர்வு தோன்ற உறழ்ந்து கிடக்கின்றன.

இக்கதையில் தோன்றியுள்ள சுரோசனன், தசரதன், சலபோசனன் என்னும் இம் மூன்று பேர்களுடைய நிலைகளும் வியந்து போற்றுதற்குரியன. ஆயினும் அவற்றுள் பெருவியப்புக்கும் உயர் மதிப்புக்கும் உரியது எது? தனித்தனியே நுனித்து நோக்கித் தகுதியின் மிகுதியை ஓர்ந்து உணர்ந்துகொள்ளுக.

தனக்குச் சாபம் நேர்ந்துள்ள வகையினைக் கோசலையிடம் தசரதன் இவ்வாறு கூறி முடித்துத் தனது முடிவினை உறுதி செய்து மறுகி அயர்ந்தான். அப்பதிவிரதை பரிதாப மீதூர்ந்து ஒருவகையும் தெரியாமல் பரதவித்துக் கிடந்தாள்.

இவரை இந்த அளவில் நிறுத்திவிட்டு மேலே புதல்வனைக் குறித்துக் கவி விரிவாக உரையாடிச் செல்கின்றார்.

கைகேசியிடம் விடைபெற்று வெளியேறிய இராமன் வனம் போக நேர்ந்த நிலை இதிலிருந்து காவியத்தில் தொடர்ந்து நடைபெறுகின்றது. இந்தப் பாகம் பெரிதும் பரிதாபமுடையது.

அக்கோமகன் கானகம் போதல் தெரிந்து சுமித்திரை வருந்தி அழுதல், இலக்குவன்சீறி எழுதல், அத்தம்பியை ஆறுதல் செய்து அழைத்துக்கொண்டு அந்தப்புரம் புகுதல், சீதை தொடர்தல், மூவரும் வெளியேறல், யாவரும் கண்டு அலறி விழுந்து அழுது புலம்பல், வசிட்டர் வந்து தடுத்தல், அவரை ஆற்றியிருத்தி இராமன் அகலல், குடிசனங்களெல்லாரும் குலை நடுங்கி அலறல், முடிவில் நகரமாந்தரனைவரும் உடன் தொடர்தல், அவரைத் தடுத்தும் கேளாமல் அடுத்து நெருங்கல், அக் கூட்டத்தைக் கடந்து போக முடியாதென்று சுமந்திரனைத் தேர்கொண்டு வரச்சொல்லுதல், அத்தேரிலேறிப் போதல், தென்திசை நோக்கி இரண்டு யோசனை தூரம் வந்து மாலையில் அங்கோர் சோலையில் தங்குதல், எல்லாரும் புடைசூழ்ந்து பருவரலுடன் தரையில் கிடத்தல், விடிந்துபோனால் இக்கூட்டம் தொடருமென்று கருதிக் கடையாமத்தில் எழுந்து சுமந்திரனை நயந்து தம்பியையும் மனைவியையும் உடன்கொண்டு ஒருவருக்கும் தெரியாமல் இராமன் வனம் புகுந்து போதல், அவன் அங்ஙனம் போகவே வேறொரு வழியாகத் தேரைத் திருப்பிப் பெருந்துயருடன் மந்திரி மீளல், முதலிய பரிபவ நிகழ்ச்சிகளை உள்ளமும் உயிரும் உருகி அயரக் கவி உரைத்திருக்கிறார். உரைகள் யாவும் உருக்கமிக வுடையன.

மீண்டுவந்த இரதம் அரண்மனை முன்றிலை அடையவும் உள்ளே அரசைச் சூழ்ந்து மறுகி நின்ற அமைச்சர், "ஒரு வேளை இளவரசு திரும்பி வந்திருக்குமோ?" என்று விரைந்து வந்து வெளியே பார்த்தார். வெறுந் தேரைக் கண்டார்; பெருந்துயர் மண்டிப் பேதுற்று நின்றார்.

"தேர்கொண்டு வள்ளல் வந்தான் என்றுதஞ் சிந்தை யுந்த
ஊர்கொண்ட திங்களென்ன மன்னனை உழையர் சுற்றிக்
கார்கொண்ட மேனியானைக் கண்டிலர்; கண்ணில் வற்றா
நீர்கொண்டநெடுந்தேர்ப்பாகன்நிலைகண்டேநிலையில் தீர்ந்தார்."
(தைலமாட்டு படலம், 57)

வள்ளல் வந்தான் என்று உள்ளங் களித்து வெளிவந்த மந்திரிகள் தேரின் வெறுமையைக் கண்டு சிந்தை நிலைகுலைந்து தெருமந்து நின்றதும், பருவரலுடன் கண்ணீர் சோரச் சுமந்திரன் உள்ளே வந்ததும், அங்கே யிருந்த யாவரும் அலமாலடைந்து அவலமீதூர்ந்ததும் இதன்கண் ஓவிய உருவங்களாய் ஒளிர்தல் காண்க.

ஊர் என்றது ஊர்கோளை. சூரியனையும் சந்திரனையும் சில சமயங்களில் ஒரு தனி வட்டம் சூழ்ந்திருக்கும். அந்த ஒளி வட்டத்திற்கு ஊர்கோள் என்று பெயர். பரிவேடம் எனவும் கூறப்படும்.

"பொன்னும் வெள்ளியும் மணியினும் பொலிந்து வெண்மதியைத்
தன்னை ஊர்கோண்ட தகையன" (சிந்தாமணி, 2162)

இதில் ஊர் உணர்த்தி நிற்கும் பொருளை யறிக.

பூரண சந்திரனை ஊர்கோள் சூழ்ந்திருத்தல் போலத் தசரதனை மந்திரிகள் சூழ்ந்து நின்றனர் என்பதாம். அதுபொழுது அங்குநேர்ந்துள்ள அமைதி தெரிய இவ்வுவமை வந்தது. விரைந்து பிரிந்து போதலையும் உள்ளுற இஃது உணர்த்தி யுள்ளது.

"கண்ணில் வற்றா நீர்கொண்டபாகன்" என்றது சுமந்திரனை. இராமனை வனத்தில் விடுத்து மனத்துயருடன் அவன் அழுது வந்திருக்கும் அவலநிலை இதனால் அறியலாகும்.

அவன் வந்து சேரவே, "தேர்வந்துவிட்டது என்று அங்கே நின்றவர் ஒருவரோடு ஒருவர் மெல்லப் பேசிய சத்தம் தசரதன் காதில் விழுந்தது. அதி சோகமாய் மதிமயங்கிக் கிடந்தவன் அவ்வொலியைக் கேட்டவுடனே பளீர் என்று விழித்தான். அருகே நின்ற வசிட்டரைக் கண்டான். "ஐயன் வந்துள்ளானா?" என்று பைய வினவினான். அவர் யாதும் சொல்லமாட்டாமல் உள்ளங் கலங்கிக் கண்ணீர் மல்கி விம்மி நின்றார். அந்த நிலையைப் பார்த்து நேர்ந்துள்ள நிலைமை தெரிந்து நெஞ்சந் துடித்து அரசன் நெடிது சோர்ந்தான். ஒரு பேச்சுமின்றி நெடுமூச்செறிந்து மன்னன் பரதவிப்பதைக் கண்டு முனிவர் மனஞ் சகியாமல் விழி நீர் சோர அயலெழுந்து போனார். அந்த நிலைகளை எழுதிக்காட்டி யுள்ள கவிப்படங்கள் அடியில் வருவன காண்க.

"இரதம்வந் துற்ற தென்றங் கியாவரும் இயம்ப லோடும்
வரதன்வந் துற்றான் என்ன மன்னனும் மயக்கம் தீர்ந்தான்
புரைதபு கமல நாட்டம் பொருக்கென விழித்து நோக்கி
விரதமா தவனைக் கண்டான் வீரன்வந் தானோ? என்றான்.

இல்லையென் றுரைக்க லாற்றான் ஏங்கினன் முனிவன் நின்றான்
நல்லவன் முகமே நம்பி நடந்திலன் என்னும் மாற்றம்
சொல்லலும் அரசன் சோர்ந்தான்; துயருறு முனிவன் நான்இவ்
அல்லல்கா ணகில்லேன் என்று ஆண்டுநின் றகலப்போனான்."
(தைலமாட்டு படலம், 58, 59)

அயலே விளம்பிய உரைகளைக் கேட்டு உணர்வு தெளிந்து அரசன் விழித்ததும், முனிவரிடம் வினவியதும், அவர் ஒரு பதிலும் சொல்லாமல் உள்ளத்துயருடன் ஒதுங்கிப்போனதும், உருவங்கள் கொண்டு நடிப்பன போல் இவற்றுள் உணர்த்தப்பட்டுள்ளன. மெய்ப்பாடுகள் வியப்பும் நயப்பும் விளைத்து நிற்கின்றன. சொல்லோவியங்களில் புதைந்தொளிர்கின்ற உள்ளுணர்ச்சிகளை ஊன்றிநோக்கி உளநிலைகளை ஓர்ந்துகொள்ளவேண்டும்.

"இராமனை வனம் போகாமல் நிறுத்திவிடுகிறேன்" என்று முன்னம் வசிட்டர் உறுதிகூறியிருந்தார் ஆதலால் அவருடைய உரையால் ஒரு வேளை குமரன் திரும்பி வந்திருப்பான் என நினைந்து மன்னவன் மயக்கம் தெளிந்தான். தெளியவே கண் திறந்தது; எதிரே முனிவர் நின்றார்; அவரை இனிது நோக்கி, "வீரன் வந்தானோ?" என்று பேராவலோடு கேட்டான். மாதவர் பேதுறலானார்; "இல்லை" என்று சொன்னால் அரசன் உயிர் உடனே போய்விடுமே! என அவர் உள்ளம் பதைத்தார். அந்தப் பரிதாப நிலையை நேரே பார்த்து நிற்கமுடியாமல் நிலை குலைந்து தலைகவிழ்ந்து கண்ணீர் சிந்தி அயலே ஒதுங்கி அலமந்து நின்றார்.

"நான் இவ் அல்லல் காண்கில்லேன் என்னா ஆண்டு நின்று அகலப்போனான்" என்ற இதில் முனிவரது உள்ளப் பான்மை உணரவுள்ளது. பிறவுயிர்கள் வருந்துவதைத் தம் கண்ணால் காணச் சகியாத தண்ணளியுடையவர் என்பது இதனால் அறிய நின்றது. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுவதே அந்தணத் தன்மையாதலால் அறவோருக்குரிய அந்த உயரிய இயல்பு இவர்பால் மிகவும் பெருகி யிருந்ததென்க.

தமக்கு அதிக உறவுரிமையுடையவர் கொடிய துயரால் துடிக்க நேர்ந்தால் அதனை அடுத்து நின்று காணப் பெரும்பாலும் யாருக்கும் சகிக்கமுடியாதாதலால் இயற்கையான அந்த மனித சுபாவமும் இங்கே இனிதறிய வந்தது.

தான் வினவியதற்கு ஒரு பதிலும் சொல்லாமல் முனிவர் துனியுடன் நின்றதைக் கண்டே புதல்வன் வனம் போய்விட்டான் என்று உணர்ந்துகொண்டான்; கொள்ளவே உள்ளம் குலைந்தது; உணர்விழந்து மன்னன் உயிர் மயங்கினான்.

அயலே நின்றவர் அஞ்சி அலமந்து அலறலானர். சுமந்திரன் விரைந்து வந்து அருகே நின்று "ஐயோ! தெய்வமே!" என்று அபயமிட்டான். அந்த ஒலியைக் கேட்டதும் மறுபடியும் மன்னன் கண்ணைத் திறந்தான். அவனைக் கண்டான்; இமைகொட்டாமல் சிறிது நேரம் கனிந்து பார்த்தான். பின்பு ஆர்த்திமிகுந்து, "நம்பி சேயனே? அணியனே?" என அமைதியாக வினவினன். மந்திரி மனமிக மறுகி "இதற்குள் வெகு தூரம் போயிருக்கும்" என்றான். அந்த வார்த்தை முடியு முன்னமே அரசன் உயிர்போய்விட்டது. என்னே மன்னர்பிரான் முடிவு!

தசரதன் முடிந்தது.

நாயகன் பின்னும் தன்தேர்ப் பாகனை நோக்கி நம்பி
சேயனோ? அணியனோ? என் றுரைத்தலும், அனையான் செய்ய
வேயுயர் கானம் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும்
போயினன் என்றான் என்ற பொழ்தத்தே ஆவி போனான்.

(தைலமாட்டுபடலம், 60)

தசரதன் இறந்திருக்கும் நிலைமையை இது படம் பிடித்துக் காட்டியிருக்கிறது. காட்சியைக் கண்ணூன்றிக் காண்க.

பின்னும் என்றது முன்னம் வசிட்டரோடு வினவினதைச் சுட்டி நின்றது. உம்மை இறந்தது தழுவிய எச்சமாய் இரக்கம் தழுவியுள்ளது. இராமன் வனம் போய்விட்டான் என்பது தெரிந்துகொண்டமையால் அதைக் குறித்து ஐயுறாமல் போன வழியினளவைப் போக்கின்றி வினவினன். தனது அருமைக் குமரன் எவ்வளவு தூரம் போயிருப்பானோ? என்று ஏங்கியிருக்கின்றான். "சேயனோ? அணியனோ?" என்றதில் அரசனது ஆராமையும் ஆற்றாமையும் அறிய நின்றன. நம்பி என்றது மரியாதை கனிந்த அன்பு வாசகம். மனித மரபிலேயே என்றும் உயர்ந்த புனிதன் என்றவாறு. சேய்மை = நெடுந் தூரம். அணிமை = சமீபம்.

தன் சேய் சேயன் என்றவுடனேயே மன்னனது ஆவி போயது என்றால், அப்பிள்ளையோடு பிணைப்புற்றிருக்கும் உள்ளக் காதலும் உயிர்க்கிழமையும் எவ்வளவு ஆழமுடையன? என்பதை எண்ணியறியவேண்டும்.

தலைமைப் புதல்வனை இராமன் பின்பு தம்பியும் மனைவியும் தொடர்ந்துபோயுள்ளார் என்றதை அறியவும் நானும் கூடப்

போகின்றேன் என்பது போல் தந்தை உயிரும் விரைந்துபோனதென்க. இச்சாதல் காதலால் நேர்ந்தது.

சீதையை இங்கே மிதிலைப்பொன் என்று குறித்திருக்கும் அழகைப் பார்க்க. அருமையும் பெருமையும் தெரிய வந்த தாயினும் காட்டில் போன் பின்னே களவு போவதையும் முன்னே இது காட்டி நின்றது.

கானம் போனவர் மூவராயிருப்பினும் அப்போக்குஇராமன் ஒருவனையே தலைமையாக நோக்கியுள்ளமையான் போயினன் என்றான்.

"திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்
மிகவினும் இழிவினும் ஒருமுடி பினவே" (நன்னூல்).

எனவரும் இயல்விதியும் ஈண்டு எண்ணிக்கொள்க. இங்கே முடிந்துள்ளது சிறப்பினால் என்க.

போயினன் என்ற சொல் செவியில் விழுந்தவுடனேயே அரசன் இறந்துபோனான் ஆதலால், "என்ற போழ்தத்தே ஆவி போனான்" என்றார்.

சீவன் பிரிந்த நிலைமை இதனால் அறிய நின்றது.

அறுபதினாயிரம் ஆண்டுகள் வாழ்ந்துவந்த சக்கரவர்த்தி மாண்டுபோன செய்தி ஈண்டு இப்படலத்தில் அறுபதாவது செய்யுளில் அமைந்திருப்பது மிகவும் அதிசயமாயுள்ளது.

இங்ஙனம் முடிந்த மன்னர்பிரான் பின்னர் என்ன கதி அடைந்தான்? என யாவரும் அறிய ஆவலுறுவர் ஆதலால் கவி அதனை அடுத்து விளக்கியிருக்கிறார். அயலே வருவது காண்க.

தசரதன் பரமபதம் அடைந்தது.

*இந்திரன் முதல்வ ராய கடவுளர் யாரும் ஈண்டிச்*
*சந்திரன் அனைய தாங்கோர் மானத்தின் தலையில்தாங்கி*
*வந்தனன் எந்தை தந்தை எனமனங் களித்து வள்ளல்*
*உந்தியான் உலகின் உம்பர் மீள்கிலா வுலகத் துய்த்தார்.*

(தைலமாட்டுபடலம், 61)

தசரதன் என்னும் பேரோடு சீரும் சிறப்பும் மிகுந்து ஈண்டு நிலவியிருந்த ஆன்மா உரிய உடலை ஒருவி உயர்கதி அடைந்த நிலையை உரைத்த படியிது. உந்தியான்=பிரமதேவன்.

இந்தச் சிவன் இங்கிருந்து சென்றபொழுது இந்திரன் முதலிய இமையவர் யாவரும் ஒருங்கே திரண்டு எதிர்கொண்டு வந்து உவந்து வணங்கி இதனைத் திவ்விய விமானத்திலேற்றித் தாமே சுமந்து சென்று பரமபதமாகிய வைகுண்டத்தில் வைத்து வாழ்த்தி மீண்டார் என்பதாம்.

எந்தை என்றது திருமாலை. அமரர்கள் அதிபதியாதலின் அப்பெருமானை அவர் இங்ஙனம் உரிமையுடன் உரைத்தார். அத் திருமாலே தசரதனுக்குப் பிள்ளையாய் இராமன் என வந்து பிறந்திருக்கின்றான் ஆதலால், ''எந்தை தந்தை வந்தனன்'' என இவன் வரவில் ஆர்த்திமிகுந்து அவர் இவ்வாறு ஏத்திப் போற்றினர்.

இதனால் மன்னர்பிரானது மகிமையும் மாண்பும் தனிநிலையின என்பது இனிதறியலாகும். இங்கே இருந்தபொழுது உலகம் புகழ உயர்ந்து நின்றான்; இறந்த பின்பு வானமெல்லாம் வணங்கி வாழ்த்த விளங்கியுள்ளான்.

தன்னை யடைந்தவர் மீண்டு பிறவியில் வாராத பெருநலமுடையது ஆதலால் அப்பரமபதம் மீள்கிலா வுலகம் என நின்றது.

'' மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே '' (திருவாசகம்)

என மாணிக்க வாசகர் முத்திநிலையைக் குறித்துள்ளதுங் காண்க. பிறவி அறவே தீர்ந்த பேராளன் என்பதாம்.

பேரின்பப் பெருநிலையமாகிய முத்தித் தலத்தில் நித்திய முத்தனாய்ச் சக்கரவர்த்தி நிலவியிருந்தான் என்பது கருத்து.

தான் தந்தை என்று அழைக்க நின்றவனைப் பிறனொருவன் தந்தை எனப் பிழைக்கவிடாமல் தன் பதத்தில் தலைமையுடன் திருமால் நிலைபெற வைத்தான் என்க.

ஆதிமூலப் பொருளாகிய பரமனையே பிள்ளையாகப் பெற்றெடுத்தவன் பிறருக்கு ஒரு பிள்ளையாகப் போய்ப் பிறவாமல் என்றும் பிறவாத நிலையைப் பெற்றுத் தசரதன் பெருமகிழ்வுற்றிருந்தான் என்பதாம். ஆகவே அவனது யோகம் அறிய நின்றது.

அவன் உயிர் இவ்வாறு உயர்கதி யடைந்தது; அதற்கு இனிய இடமாயிருந்த உடலின் நிலைமையை இனிமேல் காண்போம்.

அரசன் உயிர் பிரிந்ததை ஒருவரும் அறிந்திலர். சிறிது பொழுது கழிந்தபின் அருகிருந்த கோசலை ஐயம்மிக எய்திக் கையையும் மார்பையும் தொட்டுப் பார்த்தாள்; குளிர்ந்திருந்தன. மூக்கின் அருகே உற்று நோக்கினாள்; மூச்சு இல்லை; சுவாசம் நின்றுவிட்டதென்று தெரிந்ததும் "ஐயகோ!" என்று அலறி விழுந்தாள். அவள் பதைத்தழுத பரிதாபநிலைகள் உரைக்கஇயலா.

"உயிர்ப்பிலன் துடிப்பும் இல்லன் என்றுணர்ந் துருவந் தீண்டி
அயிர்த்தனள் நோக்கி மன்னற் காருயிர் இன்மை தேறி
மயிற்குல மனையநங்கை கோசலை மறுகி வீழ்ந்தாள்
வெயிற்சுடு கோடை தன்னில் என்பிலா உயிரின் வேவாள்."

தனது அருமை நாயகன் இறந்துபோனமை தெரிந்து தலைமைத்தேவி குலைதுடித்து மறுகிவீழ்ந்து உருகி யழுதிருக்கும் நிலையை இது உணர்த்தியுள்ளமை காண்க.

குலமயில் என்றது அரசியின் தலைமையான நிலைமை தெரிய. உயிர்ப்பு=மூச்சுக் காற்று. மூக்கில் உயிர்ப்பும், மார்பில் துடிப்பும், உடலில் உயிர் உண்மைக்கு அடையாளங்களாதலால் அவை ஈண்டு பரிசோதிக்க வந்தன. சுவாசம் இல்லாமையால் உயிர் போய்விட்டது என்று உணர்ந்து உள்ளம் பதைத்து உருண்டு தவித்தாள். வேனில் காலத்தில் கொடிய சுடு வெயிலிடைப்பட்ட புழு என அழி துயரோடு அலமந்து துடித்தாள்.

"வெயிற்சுடு கோடை தன்னில் என்பிலா உயிரின் வேவாள்" என்றதனால் இத்தேவி வெந்து தவித்திருக்கும் துன்ப நிலை யுணரலாம். கணவனைப் பிரிந்த துயரம் உயிரைச் சுட்டெரிக்க இவள் இங்ஙனம் உழந்து பதைத்தாள். என்பு இலா உயிர்=புழு.

*"என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்." (குறள், 77)

என்றதும் ஈண்டு அறியத் தக்கது.

* என்பில்லாத புழு உடம்பை வெயில் சுடுவதுபோல அன்பில்லாதவர் உயிரை அறக்கடவுள் சுடும் என்பதாம். பிறவுயிர்கள்பால் இரங்கி அன்பு செய்யாதவர் தாமாகவே அல்லலிலுழந்து அலமந்து துடிப்பர் என்பது கருத்து. அன்பு புரிபவர் துன்பம் ஒருவி என்றும் இன்பமுறுவர் ஆதலால் யாண்டும் அது செய்து உய்க என்பது குறிப்பு.

அன்பினால் அலமருகின்ற அரசிக்கு என்பிலா உயிரை இங்ஙனம் எடுத்துக் காட்டியது பாதுகாப்பின்றிப் பரிதவிக்கின்ற அப் பரிதாப நிலை தெரிய என்க.

பெற்ற பிள்ளை காட்டுக்குப் போய்விட்டது; உற்ற கணவனோ இறந்துபோய்விட்டான்; ஆகவே பற்றுக்கோடு ஒன்றுமின்றிப் பரிதபிக்கிறாள் ஆதலால் உடல் வலியின்றிச் சுடு வெயிலிடைப்பட்டுத் துடிக்கும் புழுவோடு சுட்ட நின்றாள்.

கோப்பெருந் தேவி இங்ஙனம் குலைந்தழவே சுமித்திரை புகுந்து துடித்தலறினாள். அந்தப்புரங்களிலிருந்த மற்றைத் தேவிமாரெல்லாரும் வந்து விழுந்து மறுகியழுதார். அழுதவர் உடனே தாமும் அரசனோடு இறந்துபோகவேண்டும் என்று உளந் துணிந்துகொண்டார்; ஆதலால் வெளியே யாதும் அலறியழாமல் அருந்துயருடன் அமைதியாய் நின்றார். அந்த நிலைமையை அடியில் வரும் கவிகளில் காண்க.

ஆழி வேந்தன் பெருந்தேவி அன்ன பன்னி அழுதரற்றத்
தோழி யன்ன சுமித்திரையும் துளங்கி யேங்கி உயிர்சோர,
ஊழி திரிவ தெனக்கோயில் உலையும்வேலை மற்றெழுந்த
மாழை யுண்கட் டேவியரும் மயிலின் குழாத்தின் வந்திரைத்தார். (1)

நுஞ்சி னானைத் தம்முயிரின் துணையைக் கண்டார் துணுக்கத்தால்
நஞ்சு கவர்ந்தால் எனவுடலும் நடுங்கா நின்றார் என்றாலும்
அஞ்சி யழுங்கி விழுந்திலரால் அன்பிற் றறுகண் பிறிதுண்டோ !
வஞ்ச மில்லா மனத்தானை வானில் தொடர்வான் மனம்வலித்தார். (2)

அளம்கொள் அளக்கர் இரும்பரப்பில் அண்டருலகில் அப்புறத்தில்
விளங்கு மாதர் கற்பினார் இவரின் யாவர்? என நின்றார்
களங்கம் நீத்த மதிமுகத்தார் கானவெள்ளம் கால்கோப்பத்
துளங்கல் இல்லாத் தவக்குன்றில் தொக்க மயிலிற் சூழ்ந்திருந்தார். (3)

கைத்த சொல்லால் உயிரிழந்தும் புதல்வற் பிரிந்தும் கடையோட
மெய்த்த வேந்தன் திருவுடம்பைப் பிரியாதரற்றி விட்டிலரால்
பித்த மயக்காம் சுறவெறியும் பிறவிப் பெரிய கடல்கடக்க
உய்த்து மீண்ட நாவாயில் தாமும் போவார் ஒக்கின்றார். (4)

(தைலமாட்டு படலம், 70-73)

இறந்துபோன அரசனது திருமேனியைச் சூழ்ந்துகொண்டு ஆழ்ந்த துயருடன் அலறிவிழுந்து தேவிமார் அலமந்தழுது அவலமடைந்திருக்கும் நிலைகளை இவற்றுள் ஊன்றி நோக்குக.

1. என்றும் இன்ப நிலையமாய்க் களிமிகுந்திருந்த அரண்மனை அன்று எங்கும் அழுகையொலியாய் அவலம் நிறைந்து நின்றது. அந்தத் துயர நிலைகள் உலகமுடிவு வந்ததுபோல் உயிர்கள் துடிக்க எழுந்தன. "ஊழி திரிவது எனக்கோயில் உலையும்வேலை" என்றதனால் அதன் நிலைமையும் உலைவும் ஓர்ந்துகொள்ளலாகும். கோயில்=அரண்மனை. கோ எழுந்தருளியுள்ள இல்லம் ஆதலால் கோயில் என்றார். கோ=அரசன். யுகப் பிரளயம் நேர்ந்ததுபோல் அன்று மிகப் பெருந் துயரங்களும் தடுமாற்றங்களும் அங்கு மிடைந்தெழுந்தன ஆதலால் "ஊழி திரிவது" உவமையாய் வந்தது. யாதும் நிலைகுலையாமல் தலைமையோடு நிலைத்து நின்றது நிலைகுலைய நேர்ந்ததே என நெஞ்சிரக்கம் தோன்ற வுரைத்தார். "மாழை உண்கண்" என்றதனால் தேவியருடைய அழகமைதிகள் அறிய நின்றன.

மாழை=மாவடு, அழகு. இரைத்தல்=அலறியழுதல்.

2. கணவன் இறந்ததைக் கண்டவுடன் நஞ்சு நுகர்ந்தவர்போல் நெஞ்சம் கலங்கி நெடுந்துயர் கொண்ட மனைவியர் வாய் புலம்பி அழுதலுறாமல் மனமடங்கி மருங்கே நின்றார். அங்ஙனம் நின்றமைக்குக் காரணம் தாமும் உடன் சாகவேண்டும் என்று உறுதி கொண்டமையால் என்க.

பின்னும் சிலநாள் வாழவிரும்பின், ஆற்றாமைதீர அழுவார்; அக்கணமே மாளத் துணிந்தமையால் பக்கம் அறிய அழாமல் துக்கத்தை யடக்கிக்கொண்டு சூழ்ந்து நின்றார் என்ற இதனால் துயர நிலைகளின் இயல்பும் வகையும் செயலும் புலனும். கொழுநன் பிரிவைச் சகிக்கமாட்டாமல் உழுவலன்பினால் இறக்கத் துணிந்தார் ஆதலால் அன்பில் தறுகண் பிறிதுண்டோ? என்று அவரது உள்ளப் பான்மையை வியந்து கூறினார். தறுகண்=வீரம். அஃதாவது உறுதுயர்க்கு அஞ்சாத உறுதி என்க.

சாவது என்றால் யாவரும் அஞ்சுவர்; அந்த அச்சத்தை அறவே நீக்கி அஞ்சாமையை விளைத்துள்ளமையான் அன்புசிறந்த தறுகண்மையாக வியந்துபுகழ நின்றது. மனித இயல்பை நுனித் . . . . இடந்தோறும் கவி அதனை நயமாக விளக்கிச் . . .த அன்பு துணிந்த வீரமாய்த் துலங்கி நின்றது,

வஞ்சம் இல்லா மனத்தான் எனத் தசரதனை இங்கே குறித்திருக்கிறார். கபடநெஞ்சன் ஆனால் கைகேசியின் வஞ்சனையில் சிக்காமல் காரியம் சாதித்திருப்பன். அவனது நெஞ்சு நேர்மையே இங்ஙனம் துஞ்ச நேர்ந்தான் என்க. கள்ளம் அறியாத அந்த உள்ளப் பான்மையை நம் உள்ளம் உணர உணர்த்தியபடியிது.

3. மண்ணுலகிலும் விண்ணுலகிலும் உள்ள பெண்ணினங்களெல்லாம் வியந்து போற்றக் கற்பு நலங் கனிந்து மன்னன் தேவியர் தம் இன்னுயிர் நீக்கத் துணிந்து நின்றார் ஆதலால், "இவர் யாவர் கற்பினார்?" என்றார். உயர்ந்த மணி மாளிகையில் கணவனைச் சூழ்ந்து அவர் குழுமியிருந்தது சிறந்த மலையில் நிறைந்த மயில்கள் நிலவியுள்ளதுபோல் இலகி நின்றதென்பதாம்.

மன்னன் திருமேனியை மருவி இன்னலுழந்து அவர் இருந்த இருப்பைக் கவி மிகவும் இனிமையாக இறுதியில் வருணித்திருக்கிறார். வருணனை உணர்வு நலங் கனிந்து உவகை விளைத்துள்ளது.

4. கைகேசியுடைய கொடிய சூழ்ச்சியால் தனது அருமை மகனைப் பிரிந்தும் உயிரிழக்க நேர்ந்தும் தான் உரைத்த மொழி பொய்க்காமல் சத்தியத்தைப் பாதுகாத்துச் செத்தான் ஆதலால், "கைத்த சொல்லால் உயிரிழந்தும் புதல்வற் பிரிந்தும் கடையோட, மெய்த்த வேந்தன்" எனத் தசரதன் வியந்து போற்ற நின்றான்.

அந்த மெய்யனுடைய மெய்யைப் பற்றிக்கொண்டு சுற்றியிருந்த மனைவியர் பிறவிக் கடலைக் கடந்து முத்திக்கரை சேரத் தக்கதொரு தோணிமேல் ஒக்க ஏறிப் போபவர்போல் உறுதி பூண்டு நின்றார் என்பதாம்.

நதியில் வெள்ளம் பெருகி வரும்பொழுது ஒரு கரையிலுள்ள சனங்களை மற்றொரு கரைக்குக் கொண்டுவந்து இறக்கிவிட்டு, அங்கிருந்தவர்களை ஏற்றிக்கொண்டுபோய் அக்கரையில் சேர்க்கும் தோணிக் காட்சியைக் கவி இங்கே காட்டியிருக்கிறார்.

"உய்த்து மீண்ட நாவாயில் தாமும் போவார் ஒக்கின்றார்" என்றது கண்டு உய்த்துணரற்பாலது. நாவாய் = தோணி.

" வதமிகுத்துவரு கோபவடவன்னி யுளதாய்க்
விதமளப்பரு விரோதநதி விழவுளதாய்க்
சுதமுறப்படு சுகத்திவலை வீசி யுளதாய்
மதமெனப்படு மகாமகரம் வாழ்வதுளதாய். (1)

அவசமாகவிடு காமமெனும் ஆலம் உளதாய்
நவைசெய் போகமெனும் வேகவிடநாகம் உளதாய்ப்
சுவைசெய் துன்றுவிடு சுற்றமெனும் அட்டையுளதாய்ச்
பவமகோததி பகுப்பவர் பகர்ந்துமுடிவார்? " (2)

(குறுந்திரட்டு)

பிறவியைக் கடலாக உருவகம் செய்துவந்துள்ள இப்பாடல்களின் உட்குறிப்புக்களை நன்கு ஓர்ந்து உணர்ந்து கொள்க.

யாண்டும் அச்சங்கள் நிரம்பி அளவிடலரியதாய் நீண்டு நிற்றலால் பிறப்பினைக் கடல் எனக் கவிஞர் பலரும் உரைத்திருக்கின்றனர்.

இந்தப் பிறவிப் பெருங்கடலைத் தாண்டி தசரதன் பேரின்ப நிலையை அடைந்தான். அவனுடைய மனைவியரும் அவனைப்பின் தொடர்ந்துபோக உறுதி பூண்டு நின்றார். மன்னன் இறந்தமையை நினைந்து மறுகிநின்ற வசிட்டர், அருகிருந்த அமைச்சர் சிலருடன் ஆலோசித்துப் புதல்வர் ஒருவரும் இல்லாமையால் பரதன் வந்த பிறகே உடலைத் தகனம் செய்யவேண்டும் என்று உறுதி செய்தார். உள்ளே வந்தார்; அங்கே ஆறாத்துயருடன் குழுமியிருந்த தேவியரனைவரையும் அயலகலும்படி பணித்தார். அந்தத் திருமேனியை அலங்கரித்து நெடுநாள் வரையும் பதம் கெடாமல் பாதுகாக்க வல்ல ஒரு வகை நல்ல தைலத்தொட்டியில் கிடப்பித்தார். அவர் கருதிச் செய்த காரிய நிலைகளை அடியில்வரும் கவியில் காண்க.

" செய்யக் கடவ செயற்குரிய சிறுவர் அண்மை யாரல்லர்;
எய்தக் கடவ பொருள்எய்தா திகவா தென்ன இயல்பென்ன
மையற்கொடியாள் மகன்கொண்டு வந்தால் முடித்துமாற்றென்னாத்
தையற் கடலில் கிடந்தானைத் தைலக் கடலின் தலையுய்த்தார். "

(தைலமாட்டு படலம், 76)

இப்படலப் பெயர்க்குக் காரணம் இதனால் அறியலாகும். முனிவர் எண்ணிச் செய்திருக்கும் வண்ணங்களையும், வகைகளையும், இதன்கண் நுண்ணிதாக ஆய்ந்து அறிந்து கொள்க.

தைலம் என்ற பேர் திலத்திலிருந்து வந்தது என்னும் ஏதுவான் இசைந்தது. திலம்=எள். எள் நெய் எண்ணெய் என நின்றது. நெகிழ்ந்து நெய்வடிவாயுள்ள மருந்து நீர் இங்கே தைலம் என வந்தது.

உயிர்நீங்கிய உடல்களை நெடுநாள் வரையும் பதனழியாமல் புதுமை செய்தருளும் அரிய தைலங்கள் இந்நாட்டில் அந்நாள் இருந்துள்ளதென்பதை இதனால் அறிந்துகொள்ளலாம்.

தையல் கடல் என்றது மனைவியரின் தொகைமிகுதி தெரிய. பட்டத்துத்தேவியர் மூவர் தவிர வேறு அறுபதினாயிரம் பேர் மன்னனுக்கு மனைவியராயிருந்தனர். இது அதிசய முடையது. அறுபதினாயிரம் ஆண்டுகள் அரசு ஆண்டான்; அமைச்சர் அறுபதினாயிரம்; மனைவியர் அறுபதினாயிரம்; சேனைத்திரளான அக்குரோணிகள் அறுபதினாயிரம் என இங்ஙனம் ஒரே வகையான எண்ணங்கள் இம் மன்னனுக்குரிமையாக எண்ணப்பட்டுள்ளன. இந்த எண்ணத்திற்கு மூலகாரணம் நன்கு தெரியவில்லை; இவ் வண்ணம் நூல்கள் நுவன்று வருகின்றன. வியப்பும் விம்மிதமும் விளையக் காவிய முறையில் இங்ஙனம் புனைந்து கூறியுள்ளதென நவீன நிலையில் நினைந்து கொள்ளவும் அமையும். அரசனது அரிய போக வைபவங்களும் இன்ப நலங்களும் வளம்பல சுரந்து அதிசய நிலையில் இவ்வாறு அமைந்திருந்தன என்க.

மையற் கொடியாள் என்றது கைகேசியை. மன்னன் மாண்டு முடியும்படியான மையலை யுடையாள் என்பதாம். தான் படியாளும்படி நினைந்து இப்படியான பாரிழவைக் கொடுமையாகச் செய்துகொண்டாள் ஆதலால் கொடியாள் எனநின்றாள். முனிக்கு அவள் மேலுள்ள முனிவை இம்மொழியால் அறியலாகும்.

அரசனது உடலை இவ்வாறு சேமஞ் செய்து வைத்த பின்பு பரதனை அழைத்துவரும்படி முடங்கல் ஒன்று விரகுடன் எழுதிக் கொடுத்து கேகய தேசத்துக்கு முனிவர் ஆள் அனுப்பினார். அசோகன், சயன், சித்தார்த்தன், விசயன், என்னும் தூதர் நால்வரும் கேகயம் நோக்கி வேகமோடு போயினர்.

மன்னன் முடிவும், இன்னல்நிலையும் இன்னவாறாயின.

என்று இராமன் அயோத்தியை விட்டு வனம் போனானோ அன்று இரவு வைகறையில் தசரதன் இறந்துபோனான். பொழுது விடிந்தது. சூரியன் உதயமானான். அந்த உதயம் நம் கவியிடம் எவ்வாறு உதயமாயுள்ளது? அடியில் வருவது காண்க.

## சூரியன் தோன்றல்.

மீனீர் வேலை முரசியம்ப விண்ணோர் ஏத்த மண்ணிறைஞ்சத்
தூநீர் ஒளிவாள் புடையிலங்கச் சுடர்த்தேர் ஏறித்தோன்றினான்
வானே புக்கான் அரும்புதல்வன் மக்கள் அகன்றார் வருமளவும்
யானே காப்பன் இவ்வுலகை என்பான் போல எறிகதிரோன்.
(தைலமாட்டுபடலம், 79)

ஓர் அரசன் எழுங்கால் முரசம் முழங்கும், மக்கள் இறைஞ்சுவர், வானவர் புகழ்வர், உடைவாள் புடை ஒளிர உயர்தேரேறி எழிலோடு அவன்வருவன் ஆகலான் அந்தஅரசகோலாகலத்தைக் கதிரவன்மேல் ஏற்றி உருவகம் செய்து வருணித்தபடியிது.

தூநீர் ஒளி என்றது பரிசுத்தமான கிரணங்களை. தூய நீர்மையான இளங்கதிர்கள் ஒளி வீசுதலை உடைவாள் ஒளியோடு ஒப்பவைத்தார். ஓர் உருளையுடைய திவ்விய இரதத்திலமர்ந்து சூரியன் வருவான் என்பது புராண மரபு ஆதலால், "கதிரோன் தேர் ஏறித் தோன்றினான்" என்றார்.

புதல்வன் என்றது தசரதனை. அருமை அவனது மகிமையுணர வந்தது. "எனது குலத்தோன்றலாகிய தசரதன் சுவர்க்கம் புகுந்தான்; அவனுடைய பிள்ளைகள் நால்வரும் ஊரில் இல்லை; ஆதலால் அந்த அரசிளங் குமரர்கள் வரும் வரையும் நானே உலகத்தைப் பாதுகாத்தருளுவேன்" என்று உரிமையுடன் உறுதிசெய்து வந்தவன்போல் சூரியன் அன்று உதயமாயினான் என்பதாம்.

இடம் காலங்களுக்கு ஏற்ப இயற்கை நிகழ்ச்சிகளைக் கதையோடு இணைத்துக் கவி புனைந்து செல்லும் திறங்கள் இடங்கள் தோறும் நினைந்து மகிழவுள்ளன.

சூரியன் போல் மண்ணும் விண்ணும் தொழத் தசரதன் உலகிற்கு ஒளி செய்திருந்தான் என்பதை இதில் உய்த்துணர வைத்திருக்கிறார்.

இறந்துபோன பின்னரும் மன்னர்பிரானை மறந்துவிடாமல் இடையிடையே நினைப்பூட்டி வருகிறார்.

இராமன் வனம் புகுந்து கங்கைக் கரையை அடைந்தான்; வடகரையில் தங்கியிருந்தான். மாலையில் குகன் வந்து சந்தித்தான்; உள்ளன்புடன் உருகிச் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தான். பொழுதடைந்தது. அன்று சூரியன் மறைந்ததைக் குறித்து நம் கவிஞர்பிரான் கூறியிருப்பது அடியில் வருவது.

சூரியன் அத்தமித்த நிலை.

விரியிருட் பகையை யோட்டித் திசைகளை வென்று மேனின்று
ஒருதனித் திகிரி யுந்தி யுயர்புகழ் நிறுவி நாளும்
இருநிலத் தேவர்க்கும் உள்ளத் திருந்தருள் புரிந்து வீய்ந்த
செருவலி வீரன் என்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்.
(கங்கைப் படலம், 29)

பகையை ஓட்டி, திசைகளை வென்று, திகிரி உந்தி, புகழ் நிறுவி, அருள் புரிந்து வீய்ந்த வீரன் எனத் தசரதனை இதில் சுட்டியிருக்கும் அழகைப் பார்க்க. வீய்தல்=மாய்தல். செரு= போர்க்களம். சூரியனோடு நேரெதிர் வைத்து யாண்டும் பாராட்டி வருதலால் இப்பேரரசனது சீரும் சிறப்பும் செங்கோல் முறையும் தெரியலாகும். கதிரவனை இழந்த விண்ணகம் போல் இம் மன்னவனை இழந்து மண்ணகம் மறுகியிருந்ததென்பதாம். இவனது மறைவு உலகுக்கு ஒரு பெரிய குறையாயதென்பது குறிப்பு.

"வெல்புகழ் மன்னவன் விளங்கிய ஒழுக்கத்தால்
நல்லாற்றின் உயிர்காத்து நடுக்கறத் தான் செய்த
தொல்வினைப் பயன்துய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போல்
பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர." (கலி, 118)

"சீரரசாண்டுதன் செங்கோல் சிலநாள் செலீஇக் கழிந்த
பாரரசொத்து மறைந்தது நாயிறு." (திருவிருத்தம், 80)

செங்கோலரசர் மறைவுக்குச் செங்கதிர் மறைவை இவையும் ஒப்புரைத்துள்ளமை காண்க. இறந்தும் மன்னன் இங்ஙனம் சிறந்து போற்ற நின்றான். இவனது உயர்வு ஒளிமிகுந்துள்ளது.

இது இவ்வாறு நிற்க; இனிமேலே பார்ப்போம்.

தூதுவர் போனபின் கேகய நாட்டிலிருந்து பரதன்வந்தான்; நிகழ்ந்ததை யறிந்தான். நெஞ்சம் பதைத்தான். தந்தையின் திருமேனியைக் கண்டு தவித்துத் துடித்தான். அவனுடைய பரிதாப நிலைகள் பகர்தலரியன. தனியே காண வரியன. வசிட்டர் முதலிய மாதவர்கள் அவனை ஆற்றியமர்த்தி அரசன் உடலை அலங்கரித்து அழகிய விமானத்தில் வைத்துப் பரிவாரங்கள் புடைசூழ அரிய மரியாதைகளுடன் கொண்டுப்போய்ச் சரயு நதியில் சந்தன இந்தனங்களில் கிடத்தித் தகனம் செய்தருளினர்.

தேவியர் அறுபதினாயிரவரும் தீயுள் மூழ்கி ஆவி நீங்கிக் கற்புலகம் புக்கு அற்புதப் பேறடைந்தனர்.

"இழையும் ஆரமும் இடையும் மின்னிடக்
குழையும் மாமலர்க் கொம்ப னார்கள்தம்
தழையின் மூண்டகம் தழுவு கானிடை
மழையின் மஞ்ஞைபோல் எரியுள் மூழ்கினார்.

அங்கி நீரினும் குளிர அம்புயத்
திங்கள் வாண்முகம் திருவிளங் குறச்
சங்கை தீர்ந்துதம் கணவர் பின்செலும்
நங்கை மார்புகும் உலகம் நண்ணினார்."

என அவர் மண்ணகம் ஒருவி விண்ணகம் மருவியதை இங்ஙனம் குறித்திருக்கிறார்.

கோசலையும், சுமித்திரையும் தேசநலம் கருதியும், புதல்வர் நிலை குறித்தும், வசிட்டர் தடுத்தமையால் உயிர்ப்பொறையாற்றி யிருந்தனர். அவரது இருப்பு அருமைப்பாடுடையது.

"அன்பினின் அவலித் தாற்றாது அழுவதும் எளிது, நங்கள்
என்பினின் ஆவி நீங்க இறுவதும் எளிது, சேர்ந்த
துன்பத்தால் துகைக்கப்பட்டார் துகைத்தஅத் துன்பம் தாங்கி
இன்பமென் றிருத்தல்போலும் அரியதிவ் வுலகில்" (சிந்தாமணி)

என்றபடி கணவனை இழந்து, புதல்வரைப் பிரிந்து அருந்துயருழந்து பெரும் பரிதாபமாய் இவர் ஆவிதாங்கி நின்றார். அரசு இல்லாமையால் நாடும் நகரமும் பீடு இழந்திருந்தன.

சக்கரவர்த்தி சரிதம் இப்படி முடிந்திருக்கின்றது.

மேலும், காவியத்தின் இடையே சடாயு, வாலி முதலானவர் வாய்மொழிகளாலும் இவனது பெருமை சிறிது பேசப்பட்டுள்ளது. யாண்டும் சத்தியசீலன் என்று பாராட்டப்பட்டுள்ளான்.

முடிவில் இராமன் இராவண வேட்டையாடிப் போர்க்களத்தில் வெற்றிக்கோலத்துடன் விளங்கி நின்று சீதையை அக்கினி முழுகிவரச் செய்து அமரர் புகழ அமர்ந்திருக்கும்பொழுது தசரதன் திவ்விய விமான மூர்ந்து தெய்வ வுருவில் வந்து தனது அருமை மகனைக் கண்டு ஆனந்தம் அடைந்தான். அந்தக் காட்சியை இங்கே நாம் கண்டு மகிழ்வோம்.

தசரதன் மேலிருந்து வருதல்.

"ஆதி யான்பணி அருள்பெற்ற அரசருக் கரசன்
காதல் மைந்தனைக் காணிய உவந்ததோர் கருத்தால்
பூதலத்திடைப் புக்கனன் புகுதலும் பொருவில்
வேத வேத்தனும் அவன்மலர்த் தாள்மிசை வீழ்ந்தான்.

இராமனைத் தழுவி மகிழ்தல்.

வீழ்ந்த மைந்தனை எடுத்துத்தன் விலங்கலாகத்தின்
ஆழ்ந்த முந்திடத் தழுவித்தன் கண்ணினீராட்டி
வாழ்ந்த சிந்தையின் மனங்களும் களிப்புற மன்னன்
போழ்ந்த துன்பங்கள் புறப்பட நின்றிவை புகன்றான்."

(உயுத்தகாண்டம், மீட்சிப்படலம், 116, 117)

பிள்ளைப்பிரிவால் இறந்துபோன தசரதன் மறுபடியும் வைகுண்டத்திலிருந்து திரும்பி வந்து தனது அருமை மைந்தனைக் கண்டு ஆனந்த பரவசனாய் அள்ளியணைத்து உள்ளம் உருகி நிற்கும் அன்புக்காட்சியை ஈண்டு நாம் இன்புறக் காண்கின்றோம்.

சிவபெருமானே தசரதனை உரிமையுடன் நோக்கி, "உலகம் நலமுற உயர் வில்லேந்திய உனது குலமகனை இன்று செருமுகத்தில் நீ போய்ப் பார்த்து வருக" என்று ஆர்த்தியோடு அனுப்பினார் ஆதலால், "ஆதியான்பணி அருள் பெற்ற அரசருக்கு அரசன்" என நின்றான். பரமபதத்தில் இப்பொழுது நித்திய முத்தனாய் நிலவி நின்றாலும் பழைய சக்கரவர்த்தி நிலையிலேயே மகன்பால் அன்பால் இன்பம் நுகர வந்திருக்கிறான் ஆகையால் "அரசருக்கு அரசன்" என அந்த ஆட்சியின் மாட்சியையே நாம் காட்சிபெற உரைத்தார். பழமையின் கிழமை உளமறிய உணர்த்தியபடி யிது.

"மீள்கிலா வுலகில் உய்த்தார்" என மன்னனை முன்னம் குறித்தார்; ஈண்டு அவன்மீண்டுள்ளானே! ஈது என்னை? எனின், நித்திய முத்தரானவர் மீளவும் வந்து பிறவியில் பிறந்துழலாரேயன்றி, வேண்டுமிடங்களுக்கு ஒரோவழி வேண்டிய வுருவில் சென்று மீளுவர் ஆதலால் ஆண்டு உரைத்ததற்கு மாறுபாடாக யாதொரு வேறுபாடும் ஈண்டு இல்லை என்க.

காதல் மைந்தன் என்றது எவனைக் காணுமையால் காதல் மீக்கொண்டு சோதலுழந்து சாதலடைந்தானே அந்த ஆசை மகனை என்றவாறு.

காணிய = காணும் பொருட்டு. பேரின்ப மயமான பரம பதத்தையும் விட்டுப் புதல்வனைக் கண்டு மகிழவேண்டும் என்னும் ஒரே குறிக்கோளுடன் வந்துள்ளான் ஆதலால், "காணிய உவந்ததோர் கருத்தால்" என்றார். வேறே யாதொரு கருத்தும் இல்லை என்பதாம். "பூதலத்திடைப் புக்கனன்" என்றது மீதலத்திடை அவன் மேன்மை மிக்குள்ளமை தெரியவந்தது.

"பொருவில் வேத வேத்தனும்" என்றது இராமனை. பொருவு = ஒப்பு. அழகு குணம் அறிவு வீரங்களில் எவரும் தனக்கு நிகரில்லாதவன் என்பதாம். வேத்தன் = அறிந்தவன். வேதங்களை நன்கு தெரிந்தவன் என்க. வேதங்களால் தெளியப் பட்டவன் எனவுமாம். வேந்தன் எனவும் பாடம். பொருவில் என்பது பொருகின்ற வில்லையுடைய மேதை என்றும் பொருள் கொள்ளவுள்ளது.

பேரறிவும் போர் வீரமும் ஒருங்கே நிறைந்த பெருந் தகையாகிய இராமன், தந்தையைக் கண்டதும் மனம் மிகமகிழ்ந்து விரைந்து புகுந்து அவன் தாள்களில் விழுந்து வணங்கினான்.

2. வீழ்ந்து பணிந்த அம்மைந்தனை வாரி யெடுத்து மார் போடு அணைத்து ஆர்வமீதூர்ந்து இறுக இறுகத் தழுவி உச்சி மோந்து உள்ளமுருகி நின்றான். கண்களிலிருந்து வெள்ளம் பெருகி யோடியது. உள்ளமும் உயிரும் உவகையில் ஓங்கின. முன் அடைந்திருந்த துயரங்கள் யாவும் ஒருங்கே தொலைந்து போயின. நிலையான மகிழ்ச்சிகள் அகத்தே நிலைத்தெழுந்தன என்க.

மன்னன் நெஞ்சத்தே பொங்கியெழுந்த அன்பும் ஆனந்தமும் அளவிடலரியன. அவை அவனுடைய கண்ணீரினால் காணநின்றன. அந்நீர் தாரை தாரையாகப் பெருகி வழிந்து தழுவியுள்ள இராமனது திருமேனி முழுவதும் முழுகச் செய்தது ஆதலால், "கண்ணின் நீர் ஆட்டி" என்றார். இந்த ஆனந்தக் கண்ணீரின் அளவினால் அரசனது ஆராமையும் பேராவலும் அறிய வந்தன.

எடுத்து, தழுவி, ஆட்டி, நின்று, புகன்றான் என்னும் இவ் வினை நிலைகளால் அவனது மனநிலைகளும் செயலியல்புகளும் தெரியலாகும். மெய்ப்பாடுகள் உய்த்துணர்வுடையன.

இராமனை முன்பு பிரிந்த துன்பத்தால் உள்ளம் உடைந்து உயிர் தவித்து இறந்தான்; இப்பொழுது அவனை நேரில் கண்டு அள்ளியணைக்கவே உள்ளே புதைந்து கிடந்த துன்பங்களெல்லாம் வெளியே ஓடிப்போயின ஆதலால், "போழ்ந்த துன்பங்கள் புறப்பட" நின்றான் என்றார். அகப்பட்டுக் கிடந்தன புறப்பட்டுப் போகவே புளகாங்கித மடைந்து பூரித்து நின்றான் என்பதாம்.

கைகேசி இராமனை வனம் போக்கச் சூழ்ச்சிசெய்து வரம் வாங்கியபொழுது "பாவி! என் கான்முளையை வெங்கான் ஏகச் சூழ்வாய் என்னைப் போழ்வாய்" என்று புலம்பித் துடித்தான் ஆதலால் அதனை நினைந்துகொள்ளப் "போழ்ந்த துன்பங்கள்" என்றார். போழ்வாய் என இறக்குமுன் எதிர்காலமாய் நின்றது இறந்தபின் அது இறந்தகாலமாய் வந்தது. துன்பங்கள் என்று பன்மையில் கூறியது பிள்ளை பிரிய நேர்ந்த பொழுது மன்னன் உள்ளம் உழந்த துயரக் கூறுகள் பல ஆதலின் அந் நிலைமை தெரிய என்க.

விரிந்து பரந்து வண்மையும் திண்மையு மருவிக் கலங்கா நெஞ்சம் என்னும்படி வலங்கண்டு நலங் கொண்டுள்ளமையான் மார்பு விலங்கலாகம் என வந்தது. விலங்கல்=மலை. ஆகம் =மார்பு. இந்த உறுப்பை விதந்து முந்துறக் குறித்தது பிள்ளையை முழுதும் தழுவும் பாக்கியம் பெற்றுள்ளமையான் என்க.

உழுவலன்புடன் இங்ஙனம் தழுவிநின்ற அரசன் கையை நெகிழ்த்தி முகத்தோடணைத்து எதிர் நிறுத்திக் குமரனை நோக்கிச் சில மொழிகள் கூறினான். அவ்வுரைகள் அடியில் வருவன.

தசரதன் உரைகள்.

" அன்று கேகயன் மகள்கொண்ட வரமெனும் அயில்வேல்
இன்று காறுமென் னிதயத்தி னிடைநின்றது ; என்னைக்
கொன்றும் நீங்கலது ; இப்பொழுதகன்றதுன் குலப்பூண்
மன்ற லாகமாங் காந்தமா மணி இன்று வாங்க. (1)

மைந்தரைப் பெற்று வானுயர் தோற்றத்து மலர்ந்தார்
சுந்தரப்பெருந் தோளினுய்! என்றுணைத் தாளின்
பைந்துகட்களும் ஒக்கில ராமெனப் படைத்தாய்!
உய்ந்தவர்க்கருந் துறக்கமும் புகழும்பெற் றுயர்ந்தேன். (2)

பண்டு நான்தொழும் தேவரும் முனிவரும் பாராய்!
கண்டு கண்டெனைக் கைத்தலங் குவிக்கின்ற காட்சி
புண்ட ரீகத்துப் புராதனன்தன்னொடும் பொருந்தி
அண்ட மூலத்தொ ராசனத் திருத்தினை அழக." (3)

(மீட்சிப்படலம், 118-120)

தெய்வ பதவியை அடைந்து வந்த தசரதன் தனது புதல்வனை நோக்கிப் பேசியிருக்கும் இவற்றுள் உருக்கமும் உவகைப் பெருக்கும் உணர்வு நலங்களும் நிறைந்திருக்கின்றன.

அன்று என்றது பதினன்கு ஆண்டுகளுக்கு முன்பு அயோத்தியில் அந்தப் புரத்தில் வைத்துத் தன்னிடம் கைகேசி வரம் வாங்கிய அச்சமயத்தை.

" இவள் என் தாரம் அல்லள் " என்று மனம் கசந்து மன்னன் முன்னம் வெறுத்துள்ளான் ஆதலால் அந்த வெறுப்பும் கடுப்பும் வேற்றுமையும் தெரியக், கேகயன்மகள் என்றான். அந்தப் பாவி மகளால் என் ஆவி போயதே! என்று அழுதிருக்கின்றான்.

கொண்ட என்றது வஞ்சமாக வலிந்து கவர்ந்துகொண்ட என்றவாறு. இராமன் வனம்போக என்று கைகேசி அன்று கொண்ட வரம் தசரதனுடைய உயிரைப் போக்கியுள்ளமையான் அவ்வரம் வேல் என நின்றது. அது தன் உயிரைத் துளைத்துக் கிழித்துப்படுத்தியிருக்கும் துயரநிலைதெரிய அயில்வேல்என்றான்.

பிள்ளையைக் காட்டுக்கு அனுப்பிவிட்டாளே என்று எண்ணி எண்ணித் துடித்து மன்னன் இறந்திருக்கிறான். இறக்கும் பொழு

திருந்த அந்தத் துயர நினைப்பு உயிர் பிரிந்த பின்னரும் ஒழியாது உள்ளே புதைந்து கிடந்தது ஆதலால், "இன்று காறும் என் இதயத்தின் இடை நின்றது" என்றான்.

வேலானது ஒருவன் உடலில் பாய்ந்து அவன் உயிரைப் போக்கிவிட்டால் அதுவும் உடலோடு நீங்கிப் போகும்; வரம் எனும் இவ்வேலோ தசரதனைக் கொன்றொழித்தும் தொலையாமல் குலையில் நிலைபெற்றிருந்தமையான், "கொன்றும் நீங்கலது" என்றான். கொலைபுரிந்தும் நீங்காமல் ஊடுருவி நின்ற அக்கூர் வேல் குமரன் மார்பைத் தழுவிய வுடனே ஒழிந்துபோயது ஆக லான் "இப்பொழுது அகன்றது" என்றான்.

அன்று இராமனைப் பிரிந்த துயரம் இதுவரையும் தசரதன் உயிரைத் தபித்து நின்றது; இன்று அவனைக் கண்டவுடனே அத் துயர் நீங்கி உயர் பேரின்பம் உற்றான் என்பதாம்.

"மன்றல் ஆகமாம் காந்தமா மணி"

என இராமனது திருமார்பை உருவகித்திருக்கும் இது உவகை விளைத்துள்ளது. மன்றல் = மணம். மார்பின் நிலை தெரிய நின்றது.

வரத்தை வேல் என்றதனால் அதற்கு இயைய மார்பு காந்தம் எனவந்தது. காந்தம் என்பது இரும்பைக் கவர்ந்துகொள்வதோர் அற்புதப் பொருள். இந்தக் காந்தக்கல் அருகே நெருங்கிய வுடனே இருப்பு தானாகவே இதனிடம் வந்து ஒட்டிக்கொள்ளும். வேல் இரும்பு வடிவமானபடியால் மார்பாகிய இக்காந்தம் மருவவே அது இடம் பெயர்ந்து இதனுடன் போந்தது என்க.

எந்த வரத்தினால் யாரைப் பிரிந்து மன்னன் இறந்தானோ அந்த மகனைக் காணவே அத்தாபம் நீங்கி இன்பமீதூர்ந்தான் ஆகையால் அதனை இந்த வகையாக உரைத்திருக்கிறான்.

காந்தம் என்னாது காந்தமாமணி என்றது இரும்பைக்கவரும் இயல்பினையுடைய அதனை அழகான வடிவில் அமைத்து வைத் துள்ள செயல் நிலை தெரிய. மார்பின் எழிலில் ஆர்வமீதூர்ந்து கூறியபடி யிது.

"இன்று வாங்க" என்றதனால் மகனை என்று காண்போமோ? என்று அவன் ஏங்கியிருந்தமை புலனாம். தந்தை மார்பில்

உறைந்து கிடந்த துயரம் மைந்தன் மார்பை மருவவே அடியோடு அகன்று போயதென்பதாம்.

காந்தத்தை நேர்காணின் இருப்பு இருப்பிடம் பெயர்ந்து தானாகவே துடித்துவீழும் ஆகலான் பிள்ளையை எதிர்கண்டு உள்ளத்துயர் ஒழிந்தமைக்கு அது உவமையாய் வந்தது.

"காந்தமதை எதிர்காணின் கருந்தாது செல்லுமந்தக்
  காந்தத்து ஒன்றாது
ஏய்ந்தவிடம் எங்கேதான் அங்கேதான் சலிப்பறவும்
  இருக்கு மாபோல்
சாந்தபதப் பரம்பொருளே! பற்றுபொருளிருக்கு மத்தால்
  சலிக்கும் சித்தம்
வாய்ந்த பொருள் இல்லைஎனின் பேசாமை நின்றநிலை
  வாய்க்கு மன்றே." (தாயுமானவர்)

காந்தத்தின் எதிரே இரும்பு சலித்தல் போலப் பொருட்பற்றால் உள்ளம் சலிக்கும் என இஃது உணர்த்தியுள்ளமைகாண்க. கருந்தாது=இரும்பு.

"இரும்பைக் காந்தம் இழுக்கின்ற வாறெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமல் திருவடிக்
கரும்பைத் தந்துகண் ணீர்கம் பலையெலாம்
அரும்பச் செய்யென தன்னையொப் பாமனே"

எனத் தாயுமானவர் பரமனை நோக்கி வேண்டியிருக்கும் இதன் கண்ணும் இரும்பும் காந்தமும் ஈண்டியிருத்தலறிக. உலகப் பற்றில் வீழ்ந்து உழலாமல் உன் திருவருளாம்காந்தமாமணியால் என் இரும்பனைய உள்ளத்தை ஈர்த்தருள் என்பது கருத்து.

"என்வச மாகநில் லாதநெஞ் சாமிரும்பைக் குழைத்துத்
தன்வச மாக்கொண் டிழுக்கின்ற தால்தொண்டர் தம்மையருள்
மன்வச மாகச் செயுமாசி லாமணி மாமணிக்குப்
பொன்வச மாகச்செய் காந்தமென் றேசொல்லப் போந்ததுவே."
(பண்டாரமும்மணிக் கோவை)

இன்னவாறு காந்தம் நூல்களில் எண்ணப்பட்டுள்ளது. பொன் என்றது இங்கே இரும்பினை. எவரையும் தன்வசமாக்கி இன்புறுத்தவல்ல பண்புடையாளன் இராமன் என்பதை ஈண்டுக் காட்டியுள்ள காந்தமணி உவமையால் கண்டு கொள்ளலாம்.

தன் பிள்ளையைத் தழுவி உள்ளத் துயரொழிந்து உவகை மீதூர்ந்து நின்ற தசரதன் உரிமைகூர்ந்து உரைத்திருக்கும் இதில் இரும்பு காந்தங்களுடைய இயற்கை நிலைகளும் உணர்த்தப்பட்டுள்ளன.

சாந்தமூர்த்தியாகிய இராமனை நினைந்தால் மாந்தரது மனக் கவலைகள் யாவும் காந்தம் கண்ட இரும்புத் துகள் போல் கழிந்தொழிந்துபோம் என்பதும் ஈண்டுக் குறிப்பாக உணர்ந்துகொள்ள வந்தது.

"மணி வாங்க, வேல் அகன்றது" என்று அணி நலந் தோன்ற நவின்றது ஆனந்தத்தால் என்க. அகத்தில் ஆழ்ந்திருந்த அவலம் அகன்று ஒழிந்ததெனை இங்ஙனம் உவந்து மொழிந்த மன்னன் பின்னர்ப் பரத்தில் தான் அடைந்துள்ளதை உரைக்க நேர்ந்தான்.

**2.** உலகில் நல்ல சற்புத்திரர்களைப்பெற்று அப்பேற்றால் உயர்ந்த பதவியை எய்தியுள்ள தந்தையர் எவரினும் தான் பெரிதும் சிறந்துள்ளபடியை மைந்தனிடம் வேந்தன் இங்கே மகிழ்ந்து கூறியிருப்பது வியந்து போற்றவுரியது.

சுந்தரப் பெருந் தோளினாய்! என்றது அழகு குடிகொண்ட விழுமிய தோள்களையுடையாய் என்றவாறு. கெழுதகைமை யோடு இவ்வாறு குறித்தது மகனுடைய எழில்வீரங்களில் ஈடுபாடுகொண்டென்க. பகையடங்கவென்று வெற்றித்திருவிளங்கக் கொற்ற வில்லோடு குலாவி நிற்கும் கோலம் கருதி இங்ஙனம் கூறலாயினன்.

"வான் உயர் தோற்றத்தின் மலர்ந்தார்" என்றது மிகவும் உயர்ந்த கீர்த்தியால் விளங்கிநின்றவர் என்றவாறு. எல்லையற்ற உயர்ச்சிக்கு வானை எதிரெடுத்துக் காட்டினன். "வானுயர் தோற்றம்" (குறள் 272) என வள்ளுவப் பெருந்தகையும் வழங்கியுள்ளமை காண்க. மலர்தல்=விளங்குதல். புகழ் பூத்துப் புண்ணியம் பழுத்து விண்ணிலுயர்ந்து விளங்கியுள்ளவர் என்க.

மார்க்கண்டன், பகீரதன் முதலிய அருமைப் புதல்வர்களைப் பெற்றுப் பெருமைமிக்குள்ள பேராளரெல்லாரும் இராமன் தந்தையாகிய தசரதன் நேர்வரின் சூரியன் முன்னே மின்மினி

போலவும் அண்டத்தயலே அணுவைப்போலவும் அறவும் சிறிய ராய் அவமதிக்கப்படுவர் என்பதை இங்கே அறிவுறுத்தி யிருக்கிறார். மகன் தந்தைக்கு உதவியிருக்கும் தகைமை யுணர வந்தது.

"மைந்தரைப் பெற்று வானுயர் தோற்றத்து மலர்ந்தார், என் துணைத்தாளின் பைந்துகட்களும் ஒக்கிலர்" என்னும் இதில் அரசனது உள்ளக் களிப்பு அளவுமீறி வெளிப்பட்டுள்ளது.

"பிள்ளைப் பேற்றால் பெருமையடைந்துள்ளவர் ஏவராயினும் என் காலில் ஒட்டிய ஒரு சிறு தூசிக்கு நிகராவாரா?" என்று அறை கூவி ஆரவாரித்தபடியாய் வார்த்தைகளை இதன் கண் வழங்கியிருக்கிறான். தனது அருமைப் புதல்வனால் தான் அடைந்துள்ள பெருமைப் பேற்றைப் பெருமித நிலையில் நின்று பேசிய படியிது. தன்உரைகளால் வரையறைசெய்து நிறுத்தினால் தற்புகழ்ச்சியாம் என்று கருதிப் பிறர் வாய்பாட்டில் வைத்துச் சாதுரியமாகப் பேசிமுடித்திருக்கிறான்.

"மைந்தரைப் பெற்று மலர்ந்தார், என்தாள் துகள்களும் ஒக்கிலாம்" என உலகமெல்லாம் உவந்து புகழும்படி நீ எனக்கு உயர்வு தந்துள்ளாய் என்பான், "படைத்தாய்" என்றான்.

மக்கட் பேற்றால் மாட்சிமை பெற்றுள்ள பிதாக்களுள் தான் ஒருவனை மிகவும் தலைசிறந்துள்ளதாக நினைந்து நினைந்து அரசன் உளமகிழ்ந்துள்ளமை இதனால் உணரலாகும்.

சகலகுண சம்பன்னனான இராமனுக்கு இணையாக நிலைமையிலும் தலைமையிலும் உலகில் ஒரு மகனும் இலன்; அத்தகைய உயர் பெருங் குரிசிலைத் தான் புதல்வனாகப் பெற்றுள்ளமையால் தன் பேற்றினை மகிழ்ந்து இங்ஙனம் போற்றிப் புகழ்ந்தான்.

அரிய தவங்கள் புரிந்து ஞான யோகங்களில் சிறந்து பிறவியைக் கடந்துபோய் உயர்பதம் அடைந்திருக்கும் முத்தர்களும் காணமுடியாத பேரின்ப நிலையில் தான் முதன்மை பெற்றுள்ளமையைத் தன் புதல்வனிடம் உரிமையோடு தெரியப்படுத்தினான். அவன் பிரியப்படும்படி பெருமகிழ்வுடன் மேலும் பல பேசினான்.

3. "முன்னம் நான் தொழுது வணங்கிய தேவர்கள் யாவரும் இப்பொழுது என்னைக் கைகூப்பித் தொழுகின்றார். இது என்ன ஆச்சரியம்! உன்னைப் பெற்ற பாக்கியத்தால் நான்

அடைந்துள்ள மகிமையை யார் அளந்துசொல்லவல்லார்? இராம நாதா! உன்னைச் சிறுபொழுதில் என் பிள்ளை என்று பிழைபட்டு நின்றுள்ளேன்; உனது பெருமையை அதுபொழுது அறியாது போயினேன்; அகில வுலகங்களும் உனது அருளாடலால் நிலவி நிற்கின்றன. "எந்தை தந்தை" என்று தேவகணங்கள் என்னை ஆவலுடன் சூழ்ந்து வந்தனை செய்த பொழுதுதான் என் சிந்தை தெளிந்து உனது திவ்விய மகிமையை உணர்ந்தேன். நான் பெற்றபேறை வான்பெற்ற பேரும் வணங்கி வாழ்த்தி வியந்து போற்றுகின்றார். என்னைக் காணுந்தோறும் அவர் கைகுவித் தெழுகின்றார். இப்பொழுதும் இதோ பார்! மேலே சூழ்ந்து நின்று என்பால் அன்பால் ஏத்தித்தொழுது ஆர்த்திகூர்கின்றார்" என இன்னவாறு மன்னர்பிரான் மகனைத் தழுவி நின்று மகிழ்ச்சி மீதூர்ந்து உரைத்து வந்தான்.

"பண்டு நான் தொழும் தேவரும் முனிவரும் பாராய்!
கண்டு கண்டெனைக் கைத்தலங் குவிக்கின்ற காட்சி"

என்ற இதில் தனக்குக் கிடைத்துள்ள மாட்சியை மன்னன் மனமுருகி உரைத்திருக்கிறான். இரண களத்தில் தசரதன் இராமனைத் தழுவி நிற்கும்பொழுது அமரகணங்கள் ஆகாயத்தே நின்று கைகளைக் கூப்பித் தொழுது களிப்பூர்ந்துள்ளமை இதன் கண் வெளிப்பட்டுள்ளது. கண்டு கண்டு என்றதனால் இவனது காட்சியில் அன்று அமரர் கொண்டிருந்த ஆர்வ நிலை புலனும்.

"கைத்தலம் குவிக்கின்ற காட்சி பாராய்!" என்றது தனக்குக் கிடைத்துள்ள பெருமையை இராமன் நேரே கண்டு மகிழவேண்டும் என்னும் காதலால் என்க.

புண்டரீகத்துப் புராதனன் என்றது பிரமனை. புண்டரீகம்= தாமரை. திருமாலின் உந்திக் கமலத்தில் உதித்துள்ளதையும், தாமரை மலரில் அவன் வீற்றிருத்தலையும் உணர்த்தி நின்றது.

சத்தியலோகத்தில் தசரதனைத் தன்னுடன் ஒரே ஆதனத்தில் ஒக்க இருத்திப் பிரமா உபசரித்துள்ளான்; அவ்வுண்மை,

"அண்டமூலத்து ஓர் ஆதனத்து இருத்தினை அழக!" என்றமையால் அறியவந்தது. எவரும் அடைய முடியாத உயர்பதந்

கலையெல்லாம் ஒருங்கே உதவித்தன்னை உன்னத நிலையில் உய்த் தருளியுள்ளான் எனத் தன் புத்திரன் முன்னிலையில் இத்திறம் பல புகன்று மன்னன் இன்பமீதூர்ந்தான். பின்னர் அயலே நின்ற சீதையை அணுகினன். தோழியர் புடைசூழ அந்தப் புரத்திலே உயர் மாண்புடன் உல்லாசமாய் அமர்ந்திருக்கத் தக்க அக்கற்பரசியை அயலிடத்தே அமர்க்களத்தில் அவல நிலையில் காண நேர்ந்ததை நினைந்து மன்னன் கவலைமிகுந்து கண்ணீர் மல்கிக் கனிந்து நோக்கினன். அருமை மாமன் என்னும் உரிமை யினல் அத்திருவின் செல்வி அவனடியில் விழுந்து தொழுதாள். தொழுத அவளை 'எழுக' என்று இருகையாலும் எடுத்து நிறுத் திக்கெழுதகைமையுடன் உளமிக உருகி உறுதிமொழிகள் சில உரைக்கலானன். ஆர்வமீதூர்ந்து ஆராமையால் இராமனைப் பல முறையும் ஆரத்தழுவி அருகணைத்துக்கொண்டு மருமகள் முன் நின்று தசரதன் ஆறுதலாக அறிவுரைகள் ஆடிய காட்சி பெரு மகிழ்ச்சியாய் உரிமை சுரந்துள்ளது. அடியில் வருவது காண்க.

தசரதனைச் சீதை வணங்குதல்.

என்று மைந்தனை எடுத்தெடுத் திறுகுறத் தழுவிக்
குன்று போன்றுள தோளினன் சீதையைக் குறுகத்
தன்றுணைக் கழல் வணங்கலும் கருணையால் தழுவி
நின்று மற்றிவை நிகழ்த்தினன் நிகழ்த்தரும் புகழோன். (1)

தசரதன் சீதைக்கு அறிவுரை பகர்தல்.

நங்கை மற்றுநின் கற்பினை உலகுக்கு நாட்ட
அங்கி புக்கிடென் றுணர்த்திய அதுமனத் தடையேல்;
சங்கை யுற்றவர் பெறுவதும் உண்டது சரதம்
கங்கை நாடுடைக் கணவனை முனிவுறக் கருதேல். (2)

பொன்னைத் தீயிடைப் பெய்தலப் பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற் கென்பது மனக்கொளல் தகுதி
உன்னைக் காட்டினன் கற்பினுக் கரசியென் றுலகில்
பின்னைக் காட்டுதற் கரியதென் றெண்ணியப் பெரியோன்.

பெண் பிறந்தவர் அருந்ததி யேமுதற் பெருமைப்
பண்பிறந்தவர்க் கருங்கல மாகிய பாவாய்!
மண்பிறந்தகம் உனக்குநீ வானின்றும் வந்தாய்
எண்பிறந்தநின் குணங்களுக் கினியிழுக் கிலையால்.
(மீட்சிப்படலம், 121—124) (4)

தசரதன் தனது அருமை மருமகளை அருள் சுரந்து நோக்கி ஆறுதல் கூறியிருக்கும் திறங்களை இவற்றுள் ஆய்ந்து பார்க்க. மகனைத் தழுவி நிறுத்தி மருகியருகு வரவே அவள் மாமன் அடியில் பணிந்து தொழுதாள். தொழுதவளைக் கெழுதகைமையுடன் எடுத்து எதிர்நிறுத்தி இதமொழிகள் இனிது புகலலாயினன்.

நிகழ்த்தரும் புகழோன் எனத் தசரதனைக்கவி இதில் நிகழ்த்தியிருக்கிறார். அவனது கீர்த்தி எல்லையற்றது; சொல்லுதற் கரியது; என்று நல்லியல்பு தெரியச் சொல்லியபடியிது. சத்தியவான் என இத்தரையில் எத்திசையும் புகழ நின்றான்; இறந்துபோன பின் பிரமனைப் பெற்ற திருமாலையும் தனக்கு ஒரு பிள்ளையாகப் பெற்றெடுத்த பெருமான் என்று உம்பரெல்லாம் உள்ளம்உவந்து போற்ற உயர்ந்து விளங்கினன் ஆதலால் அவ்வுயர் நிலையை உணர்ந்து மகிழக் கவி இவ்வாறு உரைத்தருளினர்.

தேவதேவனான திருமாலும் அவனது அருமைத் தேவியாகிய திருமகளும் மகனும் மருகியுமாய் அடிதொழுது வணங்கி அருகே நிற்கும் பெருமையுடையனாய் மன்னர்பிரான் இங்கே மருவியுள்ள மாட்சியை வியந்து அவனுடைய புகழ் நீட்சி இங்ஙனம் புகழ்ந்து போற்றப்பட்டது.

மருமகளுக்கு முதலில் புத்திமதி சொல்லத் தொடங்கிய மன்னன் என்ன சொல்லியிருக்கிறான்? அருகே பாருங்கள்!

2. "கங்கை நாடுடைக் கணவனை முனிவுறக் கருதேல்" என இங்ஙனம் கூறியுள்ளான். முனிவுற என்றதனால் ஏதோ துனி விளைந்துள்ளதென்பது தெரிகின்றது. அச்சமயத்தில் நிகழ்ந்துள்ளமையை இது நினைந்துகொள்ள வந்தது.

இராமன் வெற்றிக் கோலத்துடன் போர்க்களத்தில் இருந்துகொண்டு சீதையை அழைத்துவரச் சொன்னான். அனுமான் போய் அசோக வனத்திலிருந்த அவளை அழைத்து வந்தான். வந்தவளை இராமன் வெகுண்டவன்போல் வீறுடன் விரைந்து நோக்கி, "நீ பத்து மாத காலம் அன்னியனுடைய நகரில் இருந்திருக்கிறாய்; உன்னுடைய உத்தம நிலையை நான் எப்படி நம்புவது? நீ தூயவளாயின் தீயுள் மூழ்கிவரவேண்டும்" என்று வாய் மொழிந்தான். அவ்வாறே அவள் நெருப்பில் குளித்துவந்தாள்.

" தன்னுடைய குல நிலையையும் குணநலனையும் நன்றாகத் தெரிந்திருந்தும், கொண்ட கணவன் இப்படிக் கூறினனே! " என்று அவள் வெப்பமிகுந்திருப்பாள் ஆதலால் அதனை ஆற்றும் பொருட்டு அரசர்பிரான் இவ்வாறு சாற்றினன் என்க.

" அம்மா! சீதை, நீ சும்மா வருந்தாதே! உன் நாயகன் உன்பால் வைத்துள்ள பேரன்பால் உன்னை நெருப்பில் முழுகிவரச் சொன்னன்; உனது அற்புதக் கற்புநிலையை உலகிற்கு மெய்ப்பித்துக் காட்டும் பொருட்டு இப்படிச் செய்திருக்கிறன் ; உன் பான்மையை விளக்கித் தன் மேன்மையை வெளிப்படுத்திக் கொண்டான் ; அந்த உண்மையை நீ உணர்ந்து கொள்ளவேண்டும்; அவன் சினந்து பேசியதை நினைந்து கவலாதே ; அதனை மறந்துவிடு" என்பான், "அங்கி புக்கிடு என்று உணர்த்திய அது மனத்து அடையேல் " என ஆறுதல் கூறினன். இதில் உரைத்தது என்னது உணர்த்திய என்றது அவ்வுரைகள் உய்த்துணர்வு தோன்ற நுட்பமாக வெளி வந்துள்ளமை தெரிய என்க. அங்கி = அக்கினி. இங்கே அது தண்மை மிகுந்திருந்தமையான் பேரினும் மென்மையடைந்து நின்றது.

கங்கை நாடுடையான் என இராமனை மன்னன் இங்கே குறித்தது அந்த இனிய நாட்டையுடைய கோமகன் கொடிய காட்டிடைத் திரிய நேர்ந்ததே என்னும் பரிவினல் என்க.

தான் தந்த நாடாட்சி காடாட்சியாய் முடிந்திருந்தது; அம் முடிவு தீர்ந்தது; இனிக் கடிதுபோய் முடிபுனைந்து படிபுரந்தருளும் என அரசன் நெடிதுவந்து கூறியபடியிது. தன் ஆசையெல்லாம் இராமனை முடி மன்னனுக்கிப் பார்க்கவேண்டுமென்றே மூண்டு நின்றமையான் ஈண்டும் அவ்வாசனையே மண்டி வார்த்தைகள்

தனது அருமை மனைவியைச் சமயமறிந்து விநயமாகப் புனிதமுடையளென உலகமறியக் காட்டினன் ஆதலால் அந்த நாகரீகமும் தெரிய நாடுடைமைகூட வந்தது.

பரிசுத்தமான கங்கை பாயும் நாடனுக்குப் பரம பரிசுத்தையான நங்கையும் நாயகியாக வாய்த்தாள் என்க. இங்ஙனம் புறத்தும் அகத்தும் பரமபாக்கியவானன அவன் அந்தரங்க ஆதரவாய்

அதிசாதுரியமாகச் செய்த சோதனையில் மருமகள் வேதனை யடைந்திருப்பள் என்று கருதி "முனிவுறக்கருதேல்" என்றான். முனிந்திட என்னாது முனிவுற என்றது சித்த சுத்தியும் புத்தித் ...டைய அவள் எத்திறத்தும் நாயகனை ...யாள ஆயினும் ஒரோ வழி மன மறுக்கத்தால் சினமுற நேரினும் அதனையும் பொறுத்து ஆராய்ந்து அறவே நீக்கியருள்க என்ற வாறு. எண்ணத்தினும் கருத்து மிகவும் ஆழமுடையது ஆத லால் கருதேல் என்றான். உன் உள்ளத்தில் ஒரு அணுவளவு முனிவும் அவ்வள்ளல்மீது நீ கொள்ளலாகாதென்பது குறிப்பு.

பிள்ளை செய்த பிழையை எண்ணி மருகி மறுகாதபடி மாமன் உறுதி கூறியிருக்கும் உரிமை நிலையும், உள்ளப் பண்பும், உயர்பேரன்பும் இதில் உவகை நிலையமாயுள்ளன.

இராமன் செய்த காரியம் மிகவும் புனிதமானது; அவன் மேல் முனிவுறலாகாது என்று இனிது மொழிந்த மன்னன் பின் னரும் சில பேசலானான். தனது உறுதிமொழிகளைத் ...றுத்த உவமானம் ஒன்றை இதமாக வழங்கியிருக்கிறான். அருமை மருமகளிடம் உரிமையுடன் அவன் உரையாடியிருப்பது உணர்வு நலம் சுரந்துள்ளது.

3. "அம்மா! சானகி, நீ நல்ல ஞானமுடையவள்; புண் ணியவதி; எதையும் நுண்ணிதாக எண்ணி யறியும் இயல்பினள். பொன்னைத் தீயிடை இடுவது எதற்காக? அதன் ஒளியும் மாற் றும் அதிகமாகி யாவராலும் போற்றப்பெறவே யல்லவா? உன் னுடைய நாயகன் உன்னை இங்ஙனே அவ்வாறு செய்திருக்கிறான்; இதில் என்ன பிழையுளது? எண்ணிப்பார்!" என மிகவும் அண்ணிப்பாக அரசன் உரை செய்திருக்கிறான். அவனது பொன் னுரை அடியில் வருவது.

"பொன்னைத் தீயிடைப் பெய்தல் அப்பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற்கு என்பது மனக்கொளல் தகுதி"

என மன்னன் இங்ஙனம் மருகிமுன் உரைத்துளான்.

பொன்னை எடுத்துக் காட்டியது தன்னையும் தனது தவ நிலை யையும் சீதை எண்ணி மகிழ. பொன் என்பது இலக்குமிக்குப் பெயர். அவளது அவதாரமாகிய சனகியும் பொன் எனநின்

றாள். "*மிதிலைப் போன்" என்று மரணத் தறுவாயில் சுமந்திரன் வந்து சொன்னது மன்னன் மனத்தில் பதிந்திருந்தது; அது இன்னவாறு வெளிவந்தது. பத்து மாதம் அருந்தவநிலையில் இருந்தவள் ஆதலால் தவத்தீயோடு புவித்தீயும் தபிக்கநேர்ந்தது. இப்புனித சோதனையில் அவளது புகழொளி உலகமெங்கணும் பரவியுயர்ந்து ஒளி வீசி நின்றது.

"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற்பவர்க்கு" (குறள், 267)

என வள்ளுவப் பெருந்தகை சொல்லியுள்ளதும் ஈண்டு உள்ளி யுணரத் தக்கது. முன் குறித்த கவி இந்த அருமைத் திருக்குறளை அடியொற்றி வந்துள்ளது.

துன்பங்கள் உயிரை வாட்டும் ஆதலால் அவற்றை ஆற்றியிருந்து நோற்றுவருபவர் யாவரும்போற்ற உயர்ந்து ஏற்றமிகுந்து யாண்டும் இனிது விளங்குவர் என்பதாம். அவ்விளக்கத்தைக் கண்கூடாக நன்கு தெளிவுறுத்தச் "சுடச் சுடரும் பொன்" இதன்கண் உவமையாய்வந்தது. இங்ஙனம் சுடப்பட்ட பொன்னைப் புடமிட்ட தங்கம் என்பர்.

பொன்னும் தங்கமும்.

தங்கம் என்று இக்காலத்தில் எங்கும் பெருவழக்காய் வழங்கிவருகின்ற சொல் பண்டைக்காலத்தில் இல்லை என்று தெரிகின்றது. சங்கநூல்களில் யாண்டும் தங்கம் காணேம். இன்ன இன்ன பெயரெல்லாம் பொன்னுக்கு உண்டு என்று அதன் பெயர்களை ஒருங்கே தொகுத்துக் குறித்த பிங்கலமுனிவரும் தங்கம் குறிக்கவில்லை.

பொன்னின் பெயர்

"ஆடகம் வேங்கை அரிசெந் தாது
காணம் தேசிகம் காஞ்சனம் கர்ப்பூரம்
காரம் தொடுக்கம் கனகம் சாமீகரம்
ஈழம் சுவணம் இரணியம் ஏமம்
ஆசை செங்கொல் ஆக்கம் கோவம்
பீதகம் மாழை ஈகை சாக்குப்
பந்தம் தமனியம் அத்தம் பூரி
சந்திரம் வித்தம் நிதியே வெறுக்கை
இந்த வகைப்பெயர் எல்லாம் பொன்னே." (பிங்கலந்தை)

* இந்நூல் பக்கம் 636, வரி 13 பார்க்க.

இங்கே பொன்னுக்கு முப்பத்திரண்டு பெயர்கள் வந்திருக்கின்றன. தங்கம் வரவில்லை. ஆகவே அக்காலத்தில் இச்சொல் தமிழில் வழங்கப்படவில்லை என்பது நன்கு புலனுகின்றது.

பிற்காலத்தில் உலோகப் பொருள்களின் பேர்களை விரிவாக ஆராய்ந்து வரையறை செய்து நிகண்டு இயற்றிய மண்டல புருடரும் தங்கம் கண்டிலர்.

"மாசை பீதகமே பீதம் மாடையே மாடு வேங்கை
ஆசையே சுவணம் காரம் அருத்தம் காஞ்சனமே காணம்
தேசிகம் கனகம் கைத்துச் செந்தாது பொலமே அத்தம்
பேசிய சாமி வித்தம் பெருந்தனம் உடலே பண்டம்; (1)

இரணியம் நிதி வெறுக்கை ஈகை கல்யாணம் ஏமம்
பொருள்உரை சந்திரம் சாம்பூனதம் பூரி ஈழம்
திரவியம் சாதரூபம் செங்கொல்லும் நிதானம் மாழை
அரிதபனியம் ஆறேழும் செம்பொன் ஆடகமு மாமே." (2)
(நிகண்டு)

பொன்னின் பேர்களாக வந்துள்ள இந்த நாற்பத்து மூன்றுள்ளும் தங்கம் காணும்.

இங்ஙனம் பழங் காலத்தில் வழங்கப்படாத இச்சொல் இக்காலத்தில் பெரிதும் பெருமையுடன் வழங்கப்படுகின்றது. அன்று உயர்ந்த நிலையில் வழங்கிவந்த பொன் இன்று குறைந்த மதிப்பில் குறிக்கப்பட்டுள்ளது.

சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என முன்னம் பொன் நான்கு வகையாப் பகுக்கப்பட்டு ஒன்றினும் ஒன்று சிறந்து முறையே உயர்வு தோன்ற நின்றது. அந்த மாற்றுயர்ந்த பசும்பொன்கள் இன்று தோற்றமின்றியுள்ளன.

இங்கே சீதையைப் பொன் என்று சுட்டியது அருமை பெருமை அழகு தூய்மை முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கே கருதி என்க.

"பொன்னைத் தீயில் இட்டதுபோல் இராமன் உன்னைத் தீயில் இட்டான்; அது உனது புனித மேன்மையை இனிது விளக்கியுள்ளது. இந்த நல்ல சமயத்தைத் தவறவிட்டால் பின்

னர் உன்னுடைய பெருமையை இப் பேதை யுலகம் எதுந் தெரிந்துகொள்ளாதுபோம் என்று கருதியே அம்மேதை இது பொழுது இம்மாதிரி வெம்மையுடன் நின்று விரகுபுரிந்தான்; அம்மா! உன்பால் அவன் வைத்துள்ள உள்ளன்பும், உயர் காதலும் அளவிடலரியன; அவனது அந்தரங்கமான உள நிலையை உணர்ந்து நீ உவகை கூர்ந்தருள்'' எனத் தசரதன் சீதையிடம் ஏதுக்களை எடுத்துக் காட்டி இனிமையுற மொழிந்தான்.

"உன்னைக் காட்டினன் கற்பினுக்கு அரசி என்று உலகில்
பின்னைக் காட்டுதற்கு அரியதென்றெண்ணி இப்பெரியோன்"

என்றதில் பருவமறிந்து தக்க இடத்தில் பக்குவமாகத் தன் கணவன் காரியம் புரிந்துள்ளான் என்பதை மனைவிகண்டு தெளிய இங்ஙனம் காட்டியருளினுன். பொற்பினுக்கு அரசியாயிருந்த உன்னைக் கற்பினுக்கு அரசி யாகவும் விளக்கித் தனது அற்புதப் பேற்றினை வெளிபிட்டுக்கொண்டான் என்பதாம்.

"ஒரு குலமகளைப் பலர் நடுவே நிறுத்தி, உன்மீது ஐயமுடையேன்'' என்று கொண்ட கணவன் வெய்யமொழிபகர்ந்து இப்படிக் கொடுமையாக அவமானம் செய்யலாமா? மாமா!'' என்று மருமகள் மறுகி வினவியதற்கு உரிமையுடன் பதிலுரைத்த படியாய் இவ்வுரைகள் வெளிவந்துள்ளன.

தன் பிள்ளையைப் பெரியோன் என்று தசரதன் இங்கே பேசியிருக்கிறுன். பெருமைக் குணங்களுக்கெல்லாம் பேரெல்லையாயுள்ளவன்; அவனுடைய அருமைச் செயல்களின் சிறுமை காணலாகாதென்று அறிவுறுத்தியபடி யிது. இவனினும் பெரியவன் அவனியில் ஒருவனும் இலன் என்பதாம். எவனால் அமரரும் புகழ்ந்து போற்றும் பெருமை தனக்கு அமைந்துள்ளதோ அவனை இவ்வாறு அரசன் உவகையோடு உரைத்தான் என்க.

தானும் பெரியனுய் நின்று தன்னை அடுத்தவரெவரையும் பெருமைப்படுத்தும் பெருந்தகை ஆதலால் அந்த அருந்திறலாளன் தான் பொருந்திய மனைவியை யாதும் சிறுமைப்படுத்தான்; அம்மா! அவனது உழுவலன்பினையும் உள்ளப் பண்பினையும் வழுவற வுணர்ந்து நீ தெளிவுறவேண்டும் என்பது குறிப்பு.

இவ்வாறு நாயகனது நயத்தகு தன்மையை உரைத்து முடித்து முடிவில் அத்தூயவளது இயல்பான உயர்வையும் மகிமையையும் வியந்து பாராட்டினன்.

"பெண் பிறந்தவர் அருந்ததியே முதற் பெருமைப்
பண்பிறந்தவர்க்கு அருங்கல மாகிய பாவாய் !"

என இதில் விளித்திருக்கும் விளிநிலையை விழியூன்றிப் பார்க்க. பெண்ணுகப் பிறந்தவர்களுக்குள்ளே சிறந்த பதிவிரதைகளாய் உயர்ந்து விளங்குகின்ற அருந்ததி முதலானவர்களும் வியந்து புகழ்ந்து திசை நோக்கித் தொழத்தக்க திவ்விய மகிமையுடையவள் சீதை என்றதனல் அவளது தெய்வக் கற்புநிலை தெரியலாகும்.

பண்பு இறந்தவர் என்றது குணங்களால் உயர்ந்தவர் என்றவாறு. இறத்தல்=எல்லை கடந்து நிற்றல். வார்த்தைகளால் வரைந்து சொல்லமுடியாத உயர்ந்த குணங்களையுடையவர் என்பதாம். முதல் என்றது அநசூயை சாவித்திரி முதலானவர்களை.

மகாபதிவிரதையான அருந்ததி முதலிய பெருங்குலக் கற்பினரெவர்க்கும் சீதை ஓர் அரிய அணிகலமாய் அழகு செய்து நின்ருள் என்பான், "அருங்கலமாகிய பாவாய் !" என்ருன்.

சீலத்திலும் ஞானத்திலும் சிறந்து ஞாலத்திலுயர்ந்துள்ள கற்புடை மாதர் எவரினும் சீதை சிறந்தவள் என்றது அவளது சீர்மை நீர்மைகளும், பதியின் பான்மை மேன்மைகளும் அதிசய நிலையில் அமைந்துள்ளமை கருதி.

கொடுமையான பரிசோதனைகளில் யாதொரு பழுதுமின்றி முழுதும் தேறி அவள் முதன்மை எய்தி யுள்ளமையான் பெண் பிறந்தவர்க்கெல்லாம் பெரும் புகழ்விளைத்துப் பேரழகு செய்துள்ளாள் என்க. இப்புண்ணியவதியால் பெண்ணுலகம் கண்ணியம் மிகப் பெற்றதென்பதாம்.

இவ்வாறு அவளது சிறப்பும் சீர்மையும் புகழ்ந்து பின்பு பிறப்பின் நீர்மை புகன்ருன்.

"உனக்கு மண் பிறந்தகம் ; நீ வான் நின்றும் வந்தாய் !"

என்றது அவளுடைய பிறப்பும் இருப்பும் தெரிய வந்தது.

பிறர்போல் ஒருத்தியின் வயிற்றிலிருந்து பிறவாமல் தானே பூமியிலிருந்து தோன்றினுள் ஆதலால் அத்தோற்றத்தின் ஏற்றந் தெரியவுரைத்தான். பிறந்த அகம் என்பது பிறந்தகம் என அகரம் தொக்குநின்றது. அகம்=மனை, இடம்.

தாய் வீட்டைப் "பிறந்தகம்" எனச் சொல்லும் இக்கால வழக்கு இதில் விளங்கியுள்ளமை காண்க.

வான் நின்றும் வந்தாய் என்றது பரமபதத்திலிருந்து வந்துள்ளாய் என்றவாறு. வானிலிருந்து தானாகவே வந்து, மண்ணில் பிறந்ததுபோல் உலகத்தார் கண்ணில் பரந்து, பெண் குலத்திற்கும் என் குலத்திற்கும் ஓர் பெருமையை விளைத்து, யாரும் எண்ணியளவிடமுடியாத குணநலங்களுடன் புண்ணிய வதியாய்ப் புகழோங்கி நிற்கும் உனது புனித நிலைமையால் மனிதவுலகமெங்கணும் மாண்படைந்துள்ள தென்பதாம்.

இங்ஙனம் மருமகளை உபசரித்து அரசன் ஆறுதல் கூறி விட்டு, அயலே நின்ற இலக்குவனைக்கண்டான். ஏக்கமீக்கொண்டு விழைந்து விரைந்து இருகைகளாலும் அவனை அள்ளி அணைத்து உழுவலன்புடன் தழுவி உளமுருகி நின்றான். அந்த இளவலை இத் தந்தை மருவிச் சிந்தை மகிழ்ந்து உரிமை கனிந்து உரைகள் பகர்ந்த அருமை நிலைகளை அடியில் பார்க்க.

### தசரதன் இலக்குவனைத் தழுவுதல்.

"என்னச் சொல்லியவ் வேந்திழை திருமனத்து யாதும்
உன்னச் செய்வதோர் முனிவின்மை மனங்கொளா உவந்தான்;
பின்னைச் செம்மலவ் விளவலை உள்ளன்பு பிணிப்பத்
தன்னைத் தானெனத் தழுவினன் கண்கள்நீர் ததும்ப. (1)

### உவகையுரை பகர்தல்.

கன்னி நீர்ப்பெருந் தாரைமற் றவன்சடைக் கற்றை
மன்னி நீத்தபொத் திழிதரத் தழீஇநின்று மைந்த
என்னி னிக்கரும் பிறவியும் என்னெஞ்சின் இறந்த
புண்ணும் நீக்கினை உமையனைத் தொடர்ந்துடன் போந்தாய்!

உம்பர் நிலை கூறல்.

*புரந்தரன்பெரும் பகைஞனைப் போர்வென்ற உன்றன்*
*பரந்துயர்ந்த தோள்ஆற்றலே தேவரும் பலரும்*
*நிரந்தரம் புகல்கின்றது நீயிந்த உலகின்*
*அரந்தை யாம்பகை துடைத்தறம் நிறுத்தினை ஐய!" (3)*
(மீட்சிப்படலம், 125-127)

தனது இளைய மகனைத் தழுவி நின்று தசரதன் உரையாடி யிருக்கும் காட்சியை இதில் கண்ணூன்றிக் காண்க. முன்னதாக ஒன்று சிந்திக்கவேண்டும். தந்தை, மாமன் என்ற அன்புரிமையினால் மிகவும் மரியாதையுடன் இராமனும் சீதையும் தசரதனுடைய அடியில் விழுந்து தொழுது முறையே வணங்கி நின்றனர். இலக்குவனோ ஒரு சிறிதும் வணங்கவில்லை. பிள்ளை யென்னும் ஆசையால் அள்ளியெடுத்து அரசனே இவனை வலிந்து தழுவிக்கொண்டான். இங்கே இளையவனது உள்ளம் உய்த்துணர வுள்ளது.

"பெண்டாட்டி பேச்சைக் கேட்டுக்கொண்டு என் அண்ணனை அநியாயமாகக் காட்டுக்கு ஓட்டினனே இந்தக் கிழவன்" என்று மன்னன்மேல் கடுங்கோபமாய் உள்ளங்கொதித்து இத்தம்பி உறுத்தே நின்றான். தனது மனக்கொதிப்பினைப் பல முறையும் வெளிப்படுத்தியிருக்கின்றான். தந்தையைக் குறித்து நிந்தனையாகச் சுடுமொழிகள் பல சொல்லியுள்ளான். "பெற்ற பிதாவை இப்படிப் பேசலாமா?" என்று இராமன் தடுத்து நிறுத்தியும் தன் கடுப்பு மாறாமல் கனன்றிருக்கிறான். கனன்றபோதெல்லாம் தம்பியை யணைத்து, "ஐயாவை வையாதே ஐயா!" என்று அந்நம்பி நயமொழி கூறியுள்ளான். கூறியதையும் கேளாமல் தன்னுடைய அண்ணன்மேலுள்ள ஆர்வத்தால் ஆத்திரம் பொங்கி அவலமான வார்த்தைகளை இவன் வாரி வீசியிருக்கிறான்.

"ஐயோ! அண்ணா! உன்னை இந்த வண்ணம் செய்தவனைத் தகப்பனாக நான் எண்ணலாமா? எனக்குத் தந்தையும் நீயே! தாயும் நீயே! தெய்வமும் நீயே! வேறெவனையும் சொந்தமாகவோ, தந்தையாகவோ நான் சிந்தனை செய்யேன்" என்று இந்தவாறு பலதடவையும் நொந்து கவித்திருக்கிறான். அத்தகைய தாபமும் கோபமும் ஊறிக்கிடந்த நெஞ்சினன் ஆதலால்வெளியே

ஒப்புக்குக் கூட வணக்கம் காட்டாமல் தந்தைமுன் இப்படி நின்றான் என்க. இந்நிலையை அதிநுட்பமாகக் கவி இங்கே உய்த்துணர வைத்திருக்கிறார்.

இந்த இளஞ்சிங்கத்தின் இராம பத்தி வீரசத்தி முதலிய இயல்புகளையெல்லாம் நம் கவிச் சிங்கம் அளந்தறிந்து இடங்கள் தோறும் இன்புறக் காட்டியுள்ளது. அவற்றையெல்லாம் அதன் சரிதம் வருங்கால் காணலாகும்.

இந்தப் பாத்திரத்தின் இயற்கை நிலையை நுனித்துணரும்படி வணக்கமின்மையை நுணுக்கமாக இங்ஙனம் இணைத்திருக்கிறார்.

இந்தப் பிள்ளையினுடைய இயல்பெல்லாம் பெற்ற தகப்பனுக்கு நன்கு தெரியும்; தன் அண்ணன் ஒருவனையே இன்னுயிரினும் இனியனாக மதித்துக் கண்ணும் கருத்துமாய்க் காத்துவருவதை எண்ணி எண்ணி இன்புற்றிருந்தான் ஆதலால் அன்புமீக்கூர்ந்து இவனை வாரியணைத்து மார்பிறுகத் தழுவிக் கண்ணீர் சொரிந்து கசிந்துருகி நின்றான்.

“ தன்னைத் தான் எனத் தழுவினன் கண்கள் நீர் ததும்ப” என்றது என்ன சுவை! கண்ணூன்றி எண்ணிச் சுவைக்க.

“ தகப்பன் எங்கே என்று சர்வாங்கமும் அப்படியே உரித்துக்கொண்டு வந்திருக்கிறான் பையன்” என்னும் உலக வதந்தியின்படி இலக்குவன் வடிவழகில் தசரதனை முழுவதும் அடியொற்றியிருந்தான் என்பதை இவ்வாறு அறிவித்திருக்கிறார். தன்னைத் தானே ஒருவன் தழுவிக்கொண்டதுபோல் யாதொரு பின்னமும் தோன்றாமல் அத் தழுவல் உழுவலன்பு கனிந்து இருந்ததென்பதாம். ஈருடலும் ஓருடலென்னும்படி இறுகத் தழுவி நின்ற நிலையும் அறிய வந்தது.

ஆர்வமீதூர்ந்து மார்பிறுக இங்ஙனம் புல்லி நின்ற மன்னன் உள்ளம் உருகி உயிர் கனிந்துள்ள நிலையை அவனது கண்ணின் நீரினால் கவி அளந்து காட்டியிருக்கிறார்.

2. தசரதன் கண்களிலிருந்து சொரிந்த நீர் இலக்குவனுடைய தலையிலிருந்து வழிந்து அவனுடல் முழுவதையும் நனைத்து அடியிலிழிந்து பெருகி ஓடியதென்றதனால் அவனது அன்புருக்

கமும் ஆனந்தப்பெருக்கும் அறியலாகும். இந்த மைந்தனை இவ்வளவு பரவசத்துடன் இப்பொழுதுதான் தழுவியிருக்கின்றான். அரசனுடைய ஆயுள் நாளில் அமர்ந்திருந்ததினும் கழிபேருவகை மிஞ்சி இங்கே இவன்பால் இன்று கனிந்து நிற்கின்றான். இக் கனிவு மகன் என்னும் உரிமையினால் மட்டும் விளைந்த தன்று; மூத்தவன்பால் ஆர்வமீதூர்ந்து தொடர்ந்துபோய் அவன் ஆற்றியிருக்கும் அருஞ் செயல்களை நினைந்து நினைந்து உள்ளமுருகி இங்ஙனம் உவந்துள்ளான் என்க.

"எண்ணின் நீக்கரும் பிறவியும், என் நெஞ்சின் இறந்த
புண்ணும் நீக்கினை உமையனைத் தொடர்ந்துடன் போந்தாய்!"

எனப் புகன்றிருக்கும் இதில் மன்னனுடைய மனக்களிப்பும் அதற்குரிய காரணங்களும் உணர்த்தப்பட்டுள்ளன. உமையன் என்றது உன் தமையன் என்றவாறு. "இலக்குவா! நீ உன் அண்ணனைப் பின்தொடர்ந்துபோய் அடவிபுகுந்து என்னுடைய கொடிய பிறவியையும், நெஞ்சின் கொடிய புண்ணையும் நீக்கியருளினாய்!" எனப் பிள்ளையை நோக்கிப் பிதா பேசியிருக்கும் இதில் இவனது உள்ளக்குறிப்பும் உவகைப்பெருக்கும் உணர நின்றன. நீக்கரும் என்னும் அடையைப் பிறவிக்கும் புண்ணுக்கும் கூட்டி நோக்குக. எவராலும் நீக்குதற்கரிய வினைப்பிறவியையும், மனத் துயரையும் அடியோடு நீக்கியருளினாய் என்பதாம். உயிர்ப்பிணியும் உள்ளப்பிணியும் ஒருங்கே ஒழிந்தன என்று உணர்த்தியபடி யிது. பிறவிநீக்கம் இலக்குவனுக்கும் இலக்காம்படி சொற்கள் இயங்கியுள்ளன. இறந்த என்றது மிகுந்த என்றவாறு. உள்ளத் துயரம் எல்லைமீறியிருந்தமையால் இறந்த புண் என்றான். தான் இறந்து படும்படி உள்ளே புகுந்த புண்ணை மன்னன் இங்ஙனம் உரைத்திருக்கின்றான். கைகேசி வஞ்சச் சூழ்ச்சி செய்து இராமனை வனத்திற்கு அனுப்பிய அக்கொடுந்துயரம் நினைத்தபோதெல்லாம் அரசன் உள்ளத்தைச் சுட்டெரித்து உயிர்க்கேடு புரிந்தும் ஓயாத கொடு நோயாய் உள்ளே ஓங்கிநின்றது ஆதலால் "என் நெஞ்சின் இறந்த புண்" என்றான். அந்தத் துன்ப நிலையெல்லாம் அடியோடு தொலைந்து இப்பொழுது இன்ப மீதூர்ந்திருக்கிறேன்; இந்த இன்பப்பேற்றையெல்லாம் உன்னைப் பெற்ற பாக்கியத்தால் நான் ஒருங்கே பெற்றேன் என்பதாம்.

ஒரு தம்பி அண்ணனைப் பின் தொடர்ந்துபோனுன்; அத ஞல் அவன் தந்தையடைந்த இன்பப் பேறுகள் இவையென இறும்பூதுடன் எடுத்துக்காட்டியபடியிது.

தன்னுடைய உயிரோ யனைய இராமன் வனம் போனுன்; அவனைப் பின்தொடர்ந்து போகமுடியாமல் பிரிவுத்துயரால் தசரதன் இறந்துபோனுன். போனவன் இன்பமயமான வானகம் புகுந்தான்; புகுந்தும், கானகம் போன தன் புதல்வனையே நினை ந்து தனிமைக்கு இரங்கித் தவித்திருந்தான்; அங்ஙனம் தவிக்கும் போதெல்லாம் அத்தலைமகனுக்கு ஆதாவாய் இளையமகன் இருந்து வருவதை எண்ணி எண்ணி ஆறுதலடைந்து வந்தான்; வந்தவன் முடிவில் காரியவெற்றியுடன் அவனைநேரே கண்டான்; காணவே உள்ளே ஊறிக்கிடந்த உவகை நிலையை இவ்வாறு கூறலானுன் என்க. உயிர் வாசனைகள் உரைகளால் வெளி வீசுகின்றன.

இராமனைத் தொடர்ந்து போன ஒன்றிஞலேயே இலக்கு வன் தசரதனுக்கு இன்பப்பேருய் இசைந்துள்ளான் என்பது "உமையனைத் தொடர்ந்துடன் போந்தாய்" என்ற அவனது உரைக் குறிப்பிஞல் உணர்ந்துகொள்ளலாம். ஆகவே அம் முன் னவனை மன்னவன் கருதி நின்றதும், அன்னவனைப் பேணிப் பின் னவன் பெருகியுள்ளதும், ஒருங்கே தெரியவந்தன.

நான் உன் அண்ணனை வனம் போக்கினேன்; நீ உடன் போயிருந்து அவனுக்கு உதவி புரிந்தாய்; உனது ஊழியம் ஊழி யும் போற்றத்தக்கது; அது எனக்கு ஆனந்தப்பேற்றை யருளி யுள்ளதென அரசன் உளமிக உருகிப் பாவசமாகியுள்ளான்.

இராமனது காட்டுவாழ்க்கை இலக்குவனது கூட்டுறவால் இன்புறத்தப்பெற்றது என அவனது அன்புரிமையையும் அரு மைத் துணைமையையும் அறிவுறுத்தியிருக்கிருன்.

சடைக்கற்றை என இளையவனது அழகிய மயிர்முடியைச் சுட்டியது, காடு புகுந்தபின் தனது உடல் நிலையை ஒரு சிறிதும் பேணுமல் அண்ணனையே கண்ணும்கருத்துமாய்க் காத்துக் கடுந் தவநிலையில் உறைந்திருந்த அவனது உறுதிநிலை தெரிய என்க. தன் கண்ணீர்த்தாரை மைந்தன் சடைமுடி மருவி உடல் முழு

தும் கழுவி மண்ணீராயிழிய உண்ணீர்மை பெருகி இவ்வாறு உரையாடிய மன்னன் பின்னர் அப்பின்னவன் அடைந்துள்ள வீரவெற்றிகளைக் குறித்து வியந்து பேசினன்.

3. இலக்குமணா! உன்னுடைய வீரப் பிரதாபங்கள் புத்தேளுலக மெங்கணும் எத்தேவர்களாலும் புகழ்ந்து போற்றப்படுகின்றன. உன் கீர்த்தி எல்லாருடைய வார்த்தைகளிலும் நாளும் வளர்ந்து வருகின்றது. சிறந்த வில் வீரனாய் மந்திரசத்தியிலுயர்ந்த இந்திரசித்தனோடு போர்க்களத்தில் நீ நெடிது போராடி நின்ற நிலைகளையும், முடிவில் வென்று விளங்கிய வெற்றித் திறலையும் தேவர்கள் முதல் யாவரும் ஆவல் மீக்கொண்டு வியந்து வியந்து பாராட்டுகின்றனர். இந்திரனையும் வென்று இலங்கையில் கொண்டுபோய்ச் சிறையில் வைத்து அதனால் இந்திரசித்தன் என இசைதிசைபரவி விசயமிகப் பெற்ற மகா வீரனையும் வென்ற வீரசூடாமணியே! என்று தன் பிள்ளையை உள்ளம் உவந்து அரசன் இங்கே உரையாடியிருக்கின்றான். புரந்தரன் பெரும் பகைஞன் என்றது இந்திரசித்தனை. புரந்தரன் = இந்திரன். புரந்தரன் என்பதற்கு அடுத்தவரைப் புரப்பவன், எதிர்த்தவர் உடம்பைப் பிளப்பவன் என்பது பொருள். புரம்=உடம்பு. இங்ஙனம் சத்துருசங்காரனாய் விசித்திரப்பேர் பெற்று நின்ற புரந்தரனைப் பாசத்தால் விசித்துச் செயத்தம்பம் நாட்டி நிரந்தரமான சீர்த்தியோடு நிலவியுள்ள அவனது தலைமை தெரிய இவ்வாறு வார்த்தைகளால் வரைந்து காட்டினான். இந்திரசித்தை இலக்குவன் வென்றபொழுது திருமால் முதலிய தேவ தேவர்களும் ஆவலோடு அமர்க்களத்தை யடைந்து அதிசய வீரனாய் விளங்கி நின்ற இளையவனை வியந்து நோக்கி உளமிக மகிழ்ந்தார்.

"வரந்தரு முதல்வன் மற்றை மான்மறிக் கரத்துவள்ளல்
புரந்தரன் முதல்வராய நான்மறைப் புலவர் பாரில்
நிரந்தரந் தோன்றி நின்றார் அருளினால் நிறைந்த நெஞ்சர்
கரந்திலர் அவரை யாக்கை கண்டன குரங்கும் கண்ணால்"

(இந்திரசித்து வதைப்படலம், 57)

இலக்குவனது அமராற்றலைக்கண்டு மகிழ்ந்து அமராதிபதிகள் அதிசயித்து நின்ற நிலை இதனால் அறியலாகும். அற்புதமான அந்த வீரக்காட்சியைக் காண வந்த தலைமைத் தேவர்கள் தமது

நிலைமையை மறந்து எவரும் தம்மை எளிது காணும்படி வெளியே தோன்றி அதிசய பரவசராய் நின்றார் ஆகலான், "அவரைக் குரங்கும் கண்ணால் கண்டன" என்றார். யாவரும் காணமுடியாத தேவநாயகர் இலக்குவனைக் காண வந்ததும் களிப்புற்று நின்றதும் இதில் வெளிப்பட்டுள்ளன. இங்ஙனம் சிறந்த வெற்றி வீரனாய் விளங்கியுள்ளமையால் யாவரும் "நிரந்தரம் புகழ" இவன் நிலவி நின்றான். இவனது வீரப்பிரதாபம் வானும் வையமும் வியந்து போற்ற மேன்மையுடன் விளங்கி நின்றது.

நல்லோரைக் காத்துத் தீயோரைத் தொலைத்துத் தருமத்தை நிலை நிறுத்தினாய் என்பான், "அரந்தையாம் பகை துடைத்து அறம் நிறுத்தினை ஐய!" என்றான். அரந்தை = துன்பம், அல்லல். களை கடிந்து புலங்காக்கும் நல்லுழவன்போல் இவ்வில் லுழவன் துயர் களைந்து நிலம் காத்தான் என்பதாம்.

புண்ணிய நிலையில் மன்னன் உள்ளம் பதிந்துள்ளமை நுண்ணிதாக இறுதியில் அறிய வந்தது. நல்ல சுத்தவீரன் ஆதலால் தன் பிள்ளையின் வெற்றித்திறத்தை இங்ஙனம் வியந்து பாராட்டினான். கொற்றவன் குலநிலை புலனுற நின்றது.

தனது இளைய மகனை இவ்வாறு உளமகிழ்வுடன் தழுவி நிறுத்திவிட்டு மறுபடியும் இராமனை அருகணைத்து அரசன் உருகி நின்றான். தான் இதுபொழுது தெய்வபதவியை அடைந்துள்ளமையால் ஏதாவது ஒரு அரிய வரத்தைத் தன் மகனுக்கு உதவ வேண்டும் என்று உரிமையுடன் மன்னன் உவந்து கேட்டான். தந்தை கேட்டதும் மைந்தன் பதிலுரைத்ததும் அடியில் வருவன காண்க.

"என்று பின்னரும் இராமனை யானுனக்கு ஈவது
ஒன்று கூறுதி உயர்குணத் தோய்! என, உனையான்
சென்று வானிடைக் கண்டிடர் தீர்வெனென் றிருந்தேன்
இன்று காணப்பெற்றேன் இனிப் பெறுவது என்? என்றான்."
(மீட்சிப்படலம், 128)

தன்பால் ஒருவரம் பெறும்படி தசரதன் அன்பால் உரைத்ததும், அதற்கு இராமன் பதில் சொன்னதும் இதில் அறிய வந்தன. உரைகளில் உணர்வு நலங்களும் விநயவளங்களும் விரவியுள்ளன. பிதாவும் பிள்ளையும் ஆர்வமீதூர்ந்து பேசுகின்றனர்.

உயர்குணத்தோய்! என இராமனை இங்கே உளமுருகி விளித்தது அவனுடைய குணநலங்களின் உயர்நிலைகளை வியந்து. யாரையும் ஒப்பாக அயலே கூறமுடியாத உயர்குணக் குரிசில் என்பதாம். அறிவு வீரம் அழகு முதலியவற்றுள் ஏதேனும் ஒன்றைக் குறித்துக் கூறாமல் குணத்தைச் சுட்டியதனால் அது மன்னனது மனத்தைக் கவர்ந்துள்ளமை வெளிப்பட்டு நின்றது. தன்னை வெறுத்துவிடுதற்குரிய விபரீதங்களை விளைத்திருந்தும் அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல் பொறுத்தருளி யாண்டும் அன்பும் பணிவும் உடையனாய் இன்புறுத்தி வருகின்றான் ஆதலால் அப் பண்புடைமையை நினைந்து நினைந்து அரசன் பரவசமாயுள்ளான் என்க. பிள்ளைப்பருவமுதல் நாளும் நாளும் நவ நவமாய் மேலும் மேலும் குணகணங்களால் உயர்ந்து தந்தையின் உள்ளங் கவர்ந்து சிராமன் ஒளிசெய்துள்ளமை உணர வந்தது.

"ஈன்றாள் மனங்களிக்க ஏன்றதந்தை இன்பமுற
ஆன்ற வுலகம் அகமகிழத்—தோன்றும்
மனிதவினம் எங்கும் மகனிவனே என்றும்
புனிதனென நின்றான் புரிந்து."

என்றபடியே இனிய பண்புகள் அமைந்து யாண்டும் எடுத்துக்காட்டாக இராமன் தனியுயர்ந்து நிற்கின்றான். அந்நிலைமையைத் தாதையும் அனுபவித்து இங்ஙனம் ஓதலானான்.

"யான் உனக்கு ஈவது ஒன்று கூறுதி"

எனத் தந்தை மைந்தனைக்
அவனது நெஞ்சினிலையைக் காட்டி நிற்கின்றது.

தான் முன்பு தந்த அரசுரிமை கைகூடாமல் தவறிவிட்டது; விடவே, தன் பிள்ளைக்கு ஒன்றும் கொடுக்கவில்லையே என்று மன்னன் உள்ளங் கவன்று உளைந்து நின்றான். வாய்மொழிந்து வழுவிய கடனை ஏதாவது ஒரு வகையில் இப்பொழுதேனும் தீர்த்துவிடுவோம் என்னும் ஆர்த்தியுடன் வார்த்தைகளாடி யுள்ளான். பெரிய கொடைவள்ளல் ஆதலால் கொடுப்பதிலேயே குறிக்கோளுடன் களிப்பூர்ந்து நின்றான். இது பொழுது பரம பதவியை அடைந்துள்ளமையால் வரம் அருள உரமுடையனாயினன்.

இங்ஙனம் உளமுருகி உரிமை மீதூர்ந்து, "உனக்கு வேண்டியதை வாங்கிக்கொள்" என்று அந்தந்தை வேண்டி நின்ற பொழுது இம்மைந்தன் சொன்ன மறுமொழி என்ன?

"சென்று வானிடைக் கண்டிடர் தீர்வன் என்று இருந்தேன்;
இன்று காணப் பெற்றேன் இனிப் பெறுவது என்?"

என முன்னம் மன்னன் வினவியதற்கு விடையாக மகன் எதிர்வினவியிருக்கும் விநயம் வியந்து நோக்கத்தக்கது.

"ஐயா, உங்களை நான் அங்கே நேரே வந்து கண்டு தரிசிக்க வேண்டுமென்று காதல் கொண்டிருந்தேன்; நீங்களே இங்கே வலியவந்து எளிதாக எனக்குக் காட்சி தந்தருளியிருக்கிறீர்கள்; எந்தப் பொருளைக் காணக் கருதி நான் வேணவாவுடனிருந்தேனோ, அதனை இன்று நன்கு காணப் பெற்றேன்; இதைக் காட்டிலும் நான் பெறத்தக்கபேறு வேறு ஒன்றும் இல்லை; தங்கள் தரிசனமே எனக்குப் பேரின்பக் காட்சியாம்" என்று இராமன் பேசியிருக்கிறான்.

பிதாவின்பால் தான் கொண்டுள்ள ஆசை அன்புகளை மகன் இவ்வளவு மரியாதையாக விளக்கியிருக்கிறான்! இந்த வார்த்தைகள் அந்தத் தந்தைக்கு எவ்வளவு களிப்பை விளைத்திருக்கும்?

"வானிடைக் கண்டு இடர் தீர்வன் என்று இருந்தேன்" என்றது தந்தை மண்ணிடை இறக்கும்பொழுது உடனிருக்கவில்லையே! என்ற பரிதாபம் உள்ளே உறைந்து கிடந்தது; வனவாசம் முடிந்தபின் வானம் புகுந்து தந்தையைத் தரிசித்துச் சிந்தைத்துயர் தீரச் சிந்தித்திருந்தான் ஆதலால் அந்தச் சிந்தனையை இந்த வண்ணம் தெரியப்படுத்தினான். விரும்பியதை வேண்டிக்கொள் என்று பிதா விழைந்து வேண்டியும் இவ்வாண்டகை யாதொன்றையும் விழையாது நிராசையொடு நின்றான்.

கொடுத்தே மகிழ்ந்த நல்ல கொடையாளியின் பிள்ளை ஆதலால் எதனையும் எடுத்துக்கொள்ள இசையவில்லை என்க.

உங்களைக் கண்டதே பேரின்பம்; வேறு ஒன்றும் எனக்கு வேண்டியதில்லை என்று துடுக்காகச் சொல்லாமல், 'இனிப் பெறுவது என்?" என இதமாக உரைத்தான். இவனுடைய

உள்ளக்கனிவும் உரையினிமையும் விநயமும் சாதுரியமும் நினை வருந் தகையன.

ஐயா, உங்களைத் தரிசித்ததனுலேயே எல்லா இன்பப் பேறுகளையும் நான் அடைந்தவனுயினேன் ; இனி வேறே நான் பெறத் தக்கது யாதுளது ? உங்கள் கிருபையால் சகல பாக்கியங் களும் எனக்கு நிறைந்திருக்கின்றன ; யாதொரு தேவையும் இல்லையே ! என்று ஆதரவோடு கூறினன் ; கூறியும் தந்தை ஆறுதலடையவில்லை. “ஏதாவது ஒன்று கேள்” என்று மேலும் வற்புறுத்தினன். உடனே இராமனுக்கு ஒரு புதிய நினைவு ஒன்று தோன்றியது. பெருமகிழ்வடைந்தான். இரு வரங்கள் கேட்டான்.

அரசனது இறுதி உரையும், அதற்கு இராமன் வேண்டிய உறுதிமொழியும் அதி நயமுடையன. அடியில் வருவன.

தசரதனிடம் இராமன் கேட்ட வரம்.

ஆயினும் உனக்கு அமைந்தது ஒன்று உரை என, அழகன்
தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரந் தருகெனத் தாழ்ந்தான்
வாய்திறந் தெழுந் தார்த்தன உயிரெலாம் வழுத்தி. (1)

அரசன் ஒரு வரம் தந்து மறுவரம் மறுத்தது.

வரந்தகேள்எனத் தயரதன் உரைசெய்வான் மறுவில்
பரதன் அன்னது பெறுகதான் முடியினைப் பறித்திவ்
விரத வேடமற்றுதவிய பாவிமேல் விளிவு
சரதம் நீங்கல தாமென்றான் தழீஇயகை தளர. (2)

முழுதும் தரும்படி இராமன் தொழுது நின்றது.

ஊன்பிழைக்கிலா உயிர்நெடி தளிக்கு [illegible]
வான்பிழைக்கிது முதலெனு தாள்வுற மறித்து
யான்பிழைத்த தல்லால் என்னை ஈன்றஎம் பிராட்டி.
தான்பிழைத்த துண்டோவென்றான் அவன்சலம் தவிர்த்தான்.

மைந்தன் உரைக்கு மகிழ்ந்து தந்தை தந்தது.

எவ்வரங்களும் கடந்தவன் அப்பொருள் இசைப்பத்
தெவ்வரம்பறு கானிடைச் செலுத்தினெட் டிக்க
அவ்வரங்களும் இரண்டு ; அவை ஆற்றினேற் கிங்ஙே
இவ்வரங்களும் இரண்டென்றார் தேவரும் இரங்க. (4)

தசரதன் மீண்டு பரமபதம் சென்றது

வரம் இரண்டளித்து அழகனை இளவலை மலர்மேல்
விரவு பொன்னினை மண்ணிடை நிறுத்தி விண்ணிடையே
உரவு மானமீ தேகினன் உம்பரும் உலகும்
பரவு மெய்யினுக்கு உயிரளித் துறுபுகழ்படைத்தோன்(5)
(மீட்சிப்படலம், 129-133)

இந்த ஐந்து பாசுரங்களையும் மூன்முற முழுதும் நோக்கிப் பொருட் குறிப்புகளை நன்கு சிந்தனை செய்து கொள்ளவேண்டும். இருவர் உள்ளங்களும் உரைகளில் வெளியாய் ஒளிசெய்துள்ளன.

தன்னைக் காணப் பெற்றதே போதும் வேறொன்றும் “எனக்கு வேண்டா” என்று இராமன் சொன்னமையால் மன்னன் மறுத்து, “ஆயினும் உனக்கு அமைந்தது ஒன்று உரை” என்றான். என்றவுடனே இராமன் கண் விழித்து எண்ணி இரண்டு வரங்களை எய்த விரும்பினான். விரும்பி வேண்டியது என்ன? திரும்பிப் பாருங்கள்!

“தீயள் என்று நீ துறந்த என்தெய்வமும், மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம் தருக”

எனத் தாழ்ந்து வணங்கினான். வணங்கவே உலகமெங்கணும் ஆ ஆ என்ற ஓர் அதிசய ஒலி இராமனைத் துதி செய்து எழுந்தது; இயற்கைத் தெய்வத்தின் அந்த அற்புதமான தூய அதிர்ச்சி இச்சேயது நெஞ்சின் செம்மையை நினைந்து நிமிர்ந்தது.

“வாய்திறந்து எழுந்து ஆர்த்தன உயிரெலாம் வழுத்தி”

என்ற இது அழுத்தமாக ஆராயத்தக்கது. மன நிலைகளையும், கதை நிகழ்ச்சிகளையும், எண்ணங்களின் நுணுக்கங்களையும் கவி இங்கே அதி விசித்திரமாக விளக்கியிருக்கிறார்.

முன்னதாக ஒன்று ஈண்டு எண்ணவேண்டும்.

தசரதன் இறக்கும் சமயத்தில் தனக்கு நேர்ந்த மனத் துயரினால் “*கைகேசி என் மனைவி அல்லள்; அவள் வயிற்றில் பிறந்த பரதனும் எனக்கு மகன் ஆகான்” என்று வெறுப்பு

* இந்நூல் பக்கம் 607, வரி 15 பார்க்க.

மீக்கொண்டு இருவரையும் விலக்கியிருக்கிறான். இந்த விலக்கு அப்படியே நிலைத்து நின்றால் இராமன் அயோத்தியை அடைந்த பொழுது அவ்விருவரையும் எப்படி அழைப்பான்? கைகேசியைத் தாய் என்றோ, பரதனைத் தம்பி என்றோ நினைத்தாலும் வாய் திறந்து சொன்னாலும் பிதிர்வாக்கிய பரிபாலனத்துக்குப் பிழை செய்தவனாகின்றான்; என்னை? தன் தந்தை தனது உரிமையிலிருந்து எள்ளித் தள்ளி விட்டவரை மைந்தன் உறவுகொண்டாடின், தந்தை சொல்லைக்கடந்து நடந்த நிந்தையை அடைவான்; ஆகவே இந்தத் தரும சங்கடத்திலிருந்து நீங்கித் தனது அருமைத் தம்பியையும், அவனைப் பெற்ற மாதாவையும் இராமன் உரிமையுடன் போற்றிக்கொள்ள உறுதிபூண்டு தந்தையிடம் இந்தவாறு இருவரங்களையும் தந்தருளும்படி தாழ்ந்து வேண்டினான் என்க. வேண்டும்பொழுதும் சொற்பிழை நேராதபடி அற்புதமாகப் பேசியிருக்கிறான். தந்தை வாய் திறந்து வரந் தந்தாலொழிய முந்துறத் தாய் தம்பி என்னும் முறைப் பெயரைத் தான் உரைக்கலாகாதென்று கருதி "என் தெய்வமும், மகனும்" என்றான். கைகேசியையும் பரதனையும் முறையே

உரை நுட்பங்களின் அழகும் அருமையும் உணர்ந்து மகிழத்தக்கன. இவ்வள்ளலுடைய உள்ளமும் உணர்வுரைகளும் உயர் நீர்மையுடையன. எவரும் எளிதே அளவிடலரியன.

நீங்கள் எல்லை மீறி என்மேல் வைத்த பிள்ளைக் காதலால் உள்ளந் திரிந்து நல்லவர்களையும் பொல்லாதவர்கள் எனப் புரையாய் எண்ணி அநியாயமாகத் தள்ளி வைத்திருக்கிறீர்கள் என்பான் "நீ துறந்த என் தெய்வம்" என்றான். நீ என்றதனால் நான் ஒரு சிறிதும் மறந்தும் அவர்களைத் துறந்தறியேன் என்பது உணர்ந்துகொள்ள நின்றது.

நான் திசை நோக்கித் தொழுது வழிபடத்தக்க விழுமியோரைப் பழிபட வைக்கலாகாதென்பதாம்.

தனது அரசுரிமையைப் பறித்து அடவியில் விடுத்த கொடுமைகளை யெல்லாம் அறவே மறந்து கைகேசிபால் பேரன்பு பூண்டு இராமன் இங்கே பேசியிருக்கும் பெருந்தகைமையை நினைந்தபோதெல்லாம் எவர் நெஞ்சந்தான் வியந்து மகிழாது? யார்தாம் புகழ்ந்து போற்றார்கள்? விண்ணும் வியக்க இது விளைந்துள்ளது.

அதிசய நிலையில் இக் குலமகன் இங்ஙனம் தலைமை எய்தி யுள்ளமையான் உலகமெல்லாம் வழுத்தி ஒலி செய்து நின்றன. இந்நீதிமானுடையநிலைமையில் பூதபௌதிகங்களும் வியப்புறநேர்ந்தன என்பதை இறுதியடியில் கவி நளினமாக விளக்கியிருக்கிறார்.

இராமனை இங்கே அழகன் என்றது உளமகிழ உரியது. அவனுடைய உருவம் குணம் செயல் உரை முதலிய யாவும் இனிமை மிகுந்து எல்லாரையும் இன்புறுத்தி வருதலால் என்றும் அவன் “அழகன்” என நின்றான்.

தனக்கு இடரிழைத்த கைகேசியையும் பெருந்தகைமையுடன் புகழ்ந்து பாராட்டியிருத்தலால் அந்நீர்மை நிலைதெரிய இப்பெயரால் சுட்டினார். “ஆளைப்பார்த்தால் அழகு; வேலையைப் பார்த்தால் இழவு” என்னும் பழமொழிப்படி வடிவம் அழகுற்றும் கொடியராயிருப்பின் அவர் அழகர் எனப்படார். அழகு என்பது என்றும் எவர்க்கும் இன்பம் பயக்கும்.

“A thing of beauty is a joy for ever;
Its loveliness increases; it will never
Pass into nothingness.” (Keats)

“அழகுடைய பொருள் என்றும் பெருமகிழ்வு தரும்; அதன் இனிமை வளர்ந்துவரும்; யாண்டும் அது பழுதுபடாத விழுமிய நிலையது” என ஆங்கிலக் கவிஞராகிய கீட்ஸ் என்பவர் கூறியிருக்கும் இது ஈண்டு அறிய உரியது.

யாவரும் விழைவு கூர்ந்து வியந்து நோக்கத்தக்க அழகிய காரியங்களை நேர்மை செய்ய நேர்ந்தனன் ஆதலால் அந்த வகைவழிய அழகன் என்றார். அறனைச் செய்வது அழகு என்க.

2. இங்ஙனங்களை இராமன் முதலில் வேண்டவில்லை; விலக்கியுள்ள வினை முடிவினை நினைக்கவும் இல்லை. எதாவது பெற்றுக்கொள் என்று மன்னன் பன்னிப் பன்னிச் சொன்ன பொழுது தான் இவ் அன்னையை வழுத்தது; அழுகை பின்புடை போர்த்தகை நினைந்து பெரிதும் வருந்தி உறுதி தெளிந்து உரிமை மீக்கூர்ந்து உவந்து வேண்டினான். வேண்டியபடியே பெருகத் தொடாமல் பெரிதும் அரசன் பீழையை ஒழித்தான்.

"மறுவில் பரதன் அன்னது பெறுக" என்றதில் மன்னனது மனநிலை அறிய நின்றது. இராமன் வனம் போன பின்பு பரதன் வந்து அரசு புரிவான் என்று அரசன் தவறாக எண்ணியிருந்தான் ஆதலால், "மன்னே ஆவான் வரும்அப் பரதன்தனையும் மகன் என்று உன்னேன்; அவனும் உரிமைக்கு ஆகான்" என்று அநியாயமாக அப் புனிதனைப் புறந்தள்ளி நின்றான். பின்னர் அவன் இராமனை உருகி நினைந்து விரதங்கொண்டுள்ளமையை யுணர்ந்து உள்ள மிரங்கி முன்னம் எண்ணியது தவறென மன்னன் இனைந்திருந்தான்.

ஆவான் என்று கருத நின்றவன் அரசன் ஆகாமையோடு இரவும் பகலும் இராமனையே கருதி அரிய தவநிலையில் பரம பரிசுத்தனாய் நிலவியுள்ளமையால் "மறுவில் பரதன்" என அவனது மாட்சியை உருகி உரைத்தான். அன்னது என்றது இராமனுக்குத் தம்பி என்னும் உரிமையை. அவன் சொன்னதை மறுபடியும் விரித்துச்சொல்லாமல் சுருக்கமாகச் சுட்டியருளினான். மறுவானாயின் வரம் அருளேன் என்பது குறிப்பு. இவ்வாறு ஒரு வரம் கொடுத்தான். அடுத்ததை அறவே மறுத்தான். "முடியினைப் பறித்து, இவ்விரத வேடம் உதவிய பாவிமேல் விளிவு சாரும் நீங்கலது" என்று உறுதியாக உரைத்து நின்றான். இதில் அவனது சீற்றமும் செற்றமும் தெரிய நின்றன. இவ் வேடம் என்றது இராமனது தவக்கோலத்தை. அரசகோலத்துடன் அரியாசனத்தில் இருக்க வேண்டிய உன்னை இப் பரதேசிக் கோலத்தில் பார்க்க வைத்தாளே படுபாவி என்று பரிதபித்திருக்கின்றான்.

"மணிமுடியைப் பறித்துக்கொண்டு துணியை உடுப்பித்து மரவுரி கொடுத்து என் அருமை மகனைப் பரதேசியாக்கிக் காட்டுக்கு ஓட்டிய அப்படு பாதகியைக் குறித்து ஒரு சிறிதும் பேசலாகாது; அக்கொடும்பாவி பேரைக் கேட்டாலும் என் நெஞ்சு வேகின்றது; நஞ்சனைய அவளை நம் இனத்தில் சேர்க்கக்கூடாது ஐயா! உன்னை வனத்தில் விடுத்த கொடுமையை நினைக்கும்போதெல்லாம் அது என் மனத்தைச் சுட்டெரிக்கின்றது; அவளைச் சாதியில் ஒட்டவைக்கலாகாது; கனவிலும் நினையாமல் எட்டாத் தொலையில் விட்டொழிக்கவேண்டும்" என்று உள்ளக்கடுப்புடன் இப்படி உருத்துக் கைகேசியை வெறுத்து நின்றான். அவள் மேல்

கொண்டுள்ள கோபதாபங்களால் இங்ஙனம் கொதித்துப் பேசுங்கால் இராமனை அணைத்திருந்த கைகளும் அகல நேர்ந்தன ஆதலால் "தழீஇயகை தளர" என்றார். இங்கே அவன் உள்ளம் கொதிக்க உடல் துடிக்கப் படபடப்புடன் உரையாடியிருக்கும் நிலை தெரியவந்தது. உழுவலன்புடன் தன் அருமை மைந்தனைத் தழுவியிருந்த கையும் தளர என்றதனால் அதுபொழுது அவனுளமடைந்த துயரமும் உயிர்நிலையும் உணரலாகும்.

சரதம்=உண்மை, சத்தியம். விளிவு=கோபம். கைகேசி மேல் சினமீக்கொண்டுள்ள தன் மனவுறுதியை மகன் அறிந்து கொள்ள இவ்வண்ணம் ஆணைமொழியை ஆக்கிக் கூறினன்.

இந்த வரத்தை இராமன் கேட்பான் என்று தெரிந்திருந்தால் தசரதன் ஒன்றும் உரையாமல் போயிருப்பான். அவன் முந்துற உரைத்துள்ளதில் ஒரு குறிப்பு இருக்கின்றது.

"பரதனை மகன் என்று உன்னேன்" என்று முன்னமே மன்னன் தள்ளி வைத்திருந்தான்; பின்பு அது தவறு என்று தெளிந்தான். வருந்தி இரங்கினன். "தீயவள் வயிற்றில் பிறந்த தொடர்பினால் அத் தூயவனை இப்படி வாய்வந்தபடி வைதுவிட்டோமே! விலக்கி வைத்துள்ள அக்குலக்குமாரனை அணைத்துக் கொள்ளவேண்டும்; கொள்ளாதிருப்பின் இராமன் ஊருக்குப் போனவுடன் பரதனும் அவனும் உளமுருகி ஆவலோடு அளவளாவுவர்; அங்ஙனம் தழுவநேருங்கால் நான் தள்ளிவைத்துள்ள வழுவினை அறியநேரின் இருவரும் அழுது தவிப்பர்; ஒருவரை ஒருவர் முறைகூற முடியாமல் குறை கூர்ந்து துடிப்பர். இராமன் பரதனைத் தம்பி என்று தழுவவும், அவன் அண்ணா என்று சொல்லவும் அஞ்சி நொந்து இருவரும் அலமாலுறுவர். தந்தை மொழி கடவாத சற்புத்திரர் ஆதலால் கோபத்தில் யான் சொன்ன கொடிய மொழியையும் நெடிய வேதமாக நினைந்து நிலைதடுமாறுவர்; அத்தடுமாற்றத்தை எப்படியும் ஒழித்துவிட வேண்டும்" என்று உள்ளந்துணிந்த தசரதன் ஆர்த்தியோடு அணைத்து நின்ற மூத்தபிள்ளையைப் பார்த்து, "ஐயா, என்னிடம் ஏதாவது ஒரு வரங்கேள்! தருகின்றேன்" என்று அதிவினயமாக வுரைத்தான். அதற்கு அவன் ஒன்றையும் விரும்பாமல் "தங்களைக் கண்டதே போதும்" என்று கைதொழுது நின்றான்.

நின்றவனை மறுபடியும் ஒன்றுகேள் என்று வற்புறுத்தினன். இங்கே அவ்வுரை நிலைமையை நுட்பமாக உய்த்துணர வேண்டும்.

"உனக்கு அமைந்தது ஒன்று; உரை" என்ற இந்த வாக்கியத்தில் அரசனது உள்ளக் குறிப்பு ஒளிவிட்டுள்ளது. ஒன்று என்று சுட்டி நிறுத்தியது ஒட்டியுணர. "இராமா! உனக்கு அவசியம் வேண்டியது ஒன்று உளதே; அதனை வேண்டாம் என்கின்றாயே! இங்கே வேண்டாது போனால் அங்கே போய் அலமர நேருமே!" என்று அந்நிலவரங்களை யெல்லாம் நினைவுறுத்தி நலமுறத்தூண்டியுரைத்தபடியிது. ஒன்றுதான் உனக்கு அமைந்தது; மற்றது அமையாது; அதனை உரையாதே என்பது குறிப்பு. ஒன்று! என்று உணர்த்தவே, அம்மதிமான் உணர்ந்துகொண்டு இரண்டையும் ஒருங்கே தரும்படி உரைத்து நின்றான். "உங்கள் கருத்தில் அமைந்தது ஒன்று; என் கருத்தில் அமைந்தன இரண்டு" என்று சுட்டியமைத்துக் குட்டியோடு தாயையும் சேர்த்துக் கூட்டி நேயமுடன் கேட்டான்.

கேட்கவே, "என் தூய குலமணியே! அத்தீயவளைத் தாய் என நினையாதே; அவள் கொடிய பாவி; அவளை நம் இனத்தில் ஏற்றக்கூடாது" என்று மன்னன் சினக் குறிப்புடன் உரைத்தான். உரைக்கவே, "அவள் என்ன பிழை செய்தாள்?" என்று தந்தையை இராமன் கேட்டான். "ஐயோ! உன்னைக் காட்டுக்கு அனுப்பினளே! ஐயா," என அவன் கண்கலங்கி மொழிந்தான்.

இராமன் தந்தைக்கு ஆறுதல் கூறுதல்.

"நான் நாட்டுக்கு அரசனாக வந்ததனாலே தான் அத் தெய்வம் என்னைக் காட்டுக்கு அனுப்பியது; வாரதிருந்தால் அது யாதொன்றும் செய்திராது; மனுநீதி முறைப்படி தேவரீர் இனிதாக அரசாண்டு வருங்கால் துனியாக இடையே யான் புகுந்தது பெருந் தவறு; தங்கள் ஆட்சித் திறத்தின் மாட்சியை அப்பேரரசி நன்கு தெரிந்தவள். நிலவரசின் நிலைமையை அக்குலவாசி நலமுற ஆராய்ந்திருந்தாள். நாயகர் பிள்ளைக் காதலால் பிழைபடுகின்றாரே! என்று உள்ளங் கவன்றாள். என்னை அரசு முடிசூட்டத் தாங்கள் விரசி நிற்பதை அறிந்தாள். வருந்தினள். 'அரிய பெரிய ஒரு ஆட்சிப் பொறுப்பை இச்சிறியவன் தலையில்

சுமத்துகின்றீரே!'' என்று என்பால் இரங்கி அன்பு மீதூர்ந்து உங்களிடம் வந்து இதமாகச் சொல்லிப் பதமாக என்னை அரச பாரத்தினின்றும் நீக்கி அருந்தவர்களிடம் போயிருந்து பெருந் தகவடைந்து வரும்படி பேணி விடுத்தாள். இளமையில் சீராட்டிப் பாராட்டி வளர்த்துப் பருவம் வந்தவுடன் பேரும் புகழும் பெற்று நான் பெருமையடையுமாறு சீரும் சிறப்பும் செய்தருளிய அந்தத் தெய்வச் சீமாட்டியை ஐயா! நீங்கள் வைதுவருவது வருந்தந் தருகின்றது. உங்களைச் சத்தியவானாக்கி, என்னை ஒரு யுத்த வீரனாக்கி உலகமெங்கும் புகழோங்கும்படி உயர்த்தி வைத்திருக்கும் அவ்வுத்தமியை உள்ளுந்தோறும் என் உள்ளம் உருகுகின்றது. உறவுதைஉணராமல் பேராசையால் அரசிடை நுழைந்தது என்னுடைய தவறேயன்றி அன்னையிடை யாதொரு பிழையும் இல்லை அப்பா! இதனை நன்றாக எண்ணி ஆராய்ந்து இரங்கியருளுங்கள்'' என்று இன்னவாறு நன்னயமாக இதமொழிகள் பல கூறி மன்னன் மனத்தை மகன் திருத்தினான்.

> ''யான் பிழைத்தது அல்லால் என்னை ஈன்ற எம்பிராட்டி
> தான் பிழைத்தது உண்டோ?''

என்ற இதில் இராமபிரானுடைய பெருந்தகைமைகள் எவ்வளவு பெருகியிருக்கின்றன? நினைந்து நினைந்து நெஞ்சுருகும்படி இக் குலமகனுடைய அருமைப் பண்புகள் காவியம் எங்கணும் கனிந்து கதிரொளி வீசி மதிநலஞ் சுரந்து மாண்பமைந்திருக்கின்றன.

இப்பிள்ளை மொழிகளைக் கேட்டுத் தசரதன் உள்ளம் உருகினான். உவகை மீக்கூர்ந்தான். கைகேசிமீது கொண்டிருந்த கோபமெல்லாம் தீர்ந்தான். ''ஐயா, நீ குறித்தபடியே இரண்டு வரங்களும் கொடுத்தேன். தாயும் மக்களும் ஒக்கலுமாகிய நீங்களெல்லாரும் சுகமாய் உரிமையுடனுறைந்து உயர்நலங்கள் நிறைந்து இன்புற்று வாழுங்கள்'' என்று அன்புற்று வாழ்த்தினான்.

தசரதன் முன்னம் கைகேசிக்கு இரண்டு வரங்கள் ஈந்தான்; இப்பொழுது இங்கே இராமனுக்கு இரண்டு தந்தான். இந்த இருவகை வரங்களையும் குறித்து அமரர்கள் ஒருவரோடு ஒருவர் வியந்தும் நயந்தும் புகழ்ந்தும் பேசினார். அப்பேச்சில் அரச குலத்தின் நிலைமைகள் பலபடியாகப் பாராட்டப்பட்டன.

"அவ்வரங்களும் இரண்டு அவை ஆற்றினற்கு ஈந்த
இவ்வரங்களும் இரண்டென்ருர் தேவரும் இரங்கி"

என்றதனல் இவ்வரநிலைகளை நினைந்து யாவரும் அன்று போற்றி நின்றமை புலனும். தேவர் இரங்கியது இவ்வரங்களால் நேர்ந்த விளைவுகளை ஓர்ந்தென்க. உம்மை அவரது உயர்வு தோன்ற வந்தது.

அவ்வரங்கள் தாயோடு பிள்ளை தலைக்கூட ஒட்டாமல் நோ போடு தொடர்ந்து ஒக்கலையும் மக்களையும் பக்கம் பிரித்துக் குடும் பத்தை நிலைகுலைத்துக் கொடுந்துயர் புரிந்தன.

இவ்வரங்கள் பிரிந்தவரனைவரையும் ஒருங்கே சேர்த்து உற வுரிமையை வளர்த்துக் குடியும் குலமும் குலாவி மகிழப் படி முழுதும் புகழ நெடிதமைந்து நின்றன.

அவ்வரம் ஈயுங்கால் மன்னன் துடித்து மண்ணிடை மடிந் தான். இவற்றை அருளுங்கால் விண்ணிடை யமர்ந்து மெய்யின்ப மடைந்தான்.

இங்ஙனம் வரங்களை யுதவிய மன்னன் மறுபடியும் மக்களை மகிழ்ந்து தழுவி மருமகளை வாழ்த்தி உழுவலன்போடு பலமுறை யும் உவந்து உவந்து நோக்கி முடிவில் விமானமேறிப் பரமபதம் போனன். அவனுடைய அருமை பெருமைகளையும் அடைந் துள்ள பேற்றையும் அமரர் முதலனைவரும் வியந்து போற்றினர்.

பரவு மெய்யினுக்கு உயிர் அளித்து உறுபுகழ் படைத்தோன் எனத் தசரதனை இங்கே குறித்திருக்கும் அழகைப் பார்க்க.

இச்சக்கரவர்த்தி யாண்டும் எவ்வகையினும் வாய்மை தவறு மல் சத்தியசீலனய் ஒழுகி வந்தான்; முடிவில் கைகேசிக்குக் கொடுத்த வரத்தால் உயிரழியும்படி நேர்ந்தது; நேர்ந்தும் தான் உரைத்த வாக்கு மாருமல் உயிரை விட்டான். அதனல் இவன் புகழ் உலகமெங்கும் ஓங்கி இன்றும் ஒளிவீசியுள்ளது. மெய்யின் மெய்யன் என வையம் துதிக்க இவ்வையன் விளங்கியுள்ளமை யால் உயிரளித்துப் புகழ்படைத்தோன் என்ருர். கவி இங்கே இவனுக்கு இப்படிப் பெயர் படைத்திருக்கிருர்.

உரை மாருமல் உயிரை மாற்றினமையால் எல்லாருடைய உரைகளிலும் எங்கும் என்றும் இவன் நின்று நிலவலாயினன்.

மெய்யினுக்கு உயிர் அளித்து என்றது சொன்ன மொழி தப்பாமல் சத்தியத்திற்காக உயிரை விட்டான் என்பதாம். உயிர்க்கு மெய்யளிக்கும் உலகில் மெய்க்கு இவன் உயிர் அளித்தான் என்க. இதிலுள்ள நயத்தை நயந்து பார்க்க.

உடலெடுத்து உழலும் உயிரினங்கள் புகழெடுத்து உயர விரும்பின் மெய்யை மெய்யாக அவை மேவிக்கொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

புகழ் நிறைந்து புண்ணியம் மிகுந்து மண்ணும் விண்ணும் தொழ இம்மன்னர் பிரான் மன்னியுள்ளமையை இன்னவண்ணம் கவி உணர்த்தியருளினர்.

காவியத்தில் பல இடங்களிலும் பலர் வாயிலாகவும் இந்த அரசர் பெருமானை இரசமாக வெளிப்படுத்தியிருக்கிறார். சில அடியில் வருவன.

" புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை தன் புகழில் பூத்த, அறனென்று திருமனத்தான்" (உரோமபதன்)
(பாலகாண்டம், திருவவதாரப்படலம், 65)

" திறையோடும் அரசிறைஞ்சும் செறிகழற்கால் தசரதனும் பொறையோடுந் தொடர் மனத்தான்" (விசுவாமித்திரர்)
(பால, குலமுறைகிளத்து படலம், 24)

" புண்ணியந்தொடர் வேள்விகள் யாவையும் புரிந்த அண்ணல்" (வசிட்டர்) (அயோத்தி, மந்திர, 36)

" திரையார் கடல்சூழுலகின் தவமே! திருவின்திருவே!
நிறையார் கலையின் கடலே! நெறியார் மறையின் நிலையே!"
(கோசலை) (அயோத்தி, நகர், 33)

" உருளுடை நேமியால் உலகை ஓம்பிய
பொருளுடை மன்னவன்" (தண்டகவாசிகள்)
(ஆரணிய, அகத்திய, 16)

" புரவலர்தம் புரவலனே! பொய்ப்பகையே! மெய்க்கணியே! புகழின்வாழ்வே" (சடாயு) (ஆரணிய, சடாயுகாண் படலம், 21)

" தரையளித்த தனிநேமித் தயரதன்றன் புதல்வர்யாம்"
(இராமன்) (ஆரணிய, சூர்ப்பணகைப்படலம், 136)

" இயல்தரும் புலமைச் செங்கோல் மனுமுதல் யாரும் ஒவ்வாத் தயரதன்" (இலக்குவன்) (கிட்கிந்தா, அனுமப்படலம், 30)

"சூழிமால் யானையார் தொழுகழல் தயரதன்
பாழியால் உலகெலாம் ஒருவழிப் படர வாழ்
ஆழியான்" (அனுமான்) (கிட்கிந்தா, நட்பு, 4)

"வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளல்
தூயவன்" (வாலி) (கிட்கிந்தா, வாலிவதைப்படலம், 76)

"முடியா முடி மன்னவன்" (சீதை)
(சுந்தரகாண்டம், உருக்காட்டு, 9)

"சம்பரப் பெயருடைத் தானவர்க் கிறைவனைத் தனுவலத்தால்
அம்பரத் தும்பர் புக்கு அமரிடைத் தலைதுமித் தமரருய்ய
உம்பருக் கிறைவனுக் கரசளித் துதவினுன் ஒருவனேமி
இம்பரிற் பணிசெயத் தயரதப் பெயரினுன் இசைவளர்த்தான்"
(விபீடணன்) (உயுத்தகாண்டம், மந்திர, 82)

"யானும் மெய்யினுக்கு இன்னுயிர் ஈந்துபோய்
வானுள் எய்திய மன்னவன் மைந்தனுல்" (பரதன்)
(உயுத்தகாண்டம், மீட்சி, 237)

இன்னவாறு தசரதன் பலரானும் போற்றப்பட்டிருக்கிறுன். இப் பேரரசனது பிறப்பும் இருப்பும் சிறப்பும் பாரரசர்களுக் கெல்லாம் எடுத்துக் காட்டாக இனிதமைந்துள்ளன. இவன் நிலைமையை முதலிலிருந்து முழுதும் சிந்தித்துவரின் உறுதி நலங்கள் பல ஒளி பெற்றுவரும்.

எங்கும் இசை பரப்பிச் செங்கோல் வேந்தனுய்ச் சிறந்திருந்த இவன் மகப்பிரிவால் மறுகியிறந்ததும், உயர் பதம் அடைந்ததும், யாவரும் புகழ அங்கு மேவி யிருந்ததும், தேவ தேவர் தூண்டத் திவ்விய விமான மூர்ந்து இலங்கையருகே பொருகளம் புகுந்ததும், தனது அருமை மகனைக் கண்டு ஆவலோடு தழுவி அறிவுரைகளாடியதும், மருமகளையும் இளவலையும் உளமகிழ்ந் தெடுத்து உரிமைகள் கூறியதும், தலைமகனுக்கு நலமுறும்படி இருவரங்கள் உதவியதும், மறுபடியும் அழகனை, இளவலை, மருகியை வாழ்த்தி மண்ணிடை நிறுத்தி விண்ணிடைப் போனதும் ஓர் அரிய நாடகக் காட்சியாய்ப் பெரிதும் சுவை சுரந்துள்ளன.

இவன் அரசர்க்கு அரசன்; அருந்திறலாளன்; உயர்ந்த நீதிமான்; சிறந்த கொடையாளி; சத்தியவாக்கி; அரிய வில்லாளன்; பெரிய போர்வீரன்; பேரறிவாளன்; நல்ல சொல்லாளி;

எல்லா வுயிர்களிடத்தும் இரக்கமிக வுடையவன்; யாவருக்கும் தாய்போல் நின்று தண்ணளி புரிந்தவன்; உயிர்க்கு உடல்போல் உலகுக்கு இவன் உரிமையுற்றிருந்தான்; பிள்ளைக்காதலில் பெருகி நின்றவன்; அப்பிரிவினாலேயே உள்ளம் பறிபோய் உயிர் துறந்தான்; உயர் பதம் அடைந்தான்; அடைந்தும் மறுபடியும் வந்து மகனைத் தழுவி மகிழ்ந்து பேரின்பத்தினும் ஓரின்பமாக அதனை உவந்து நின்றான்; அவனுக்கு இனிய வரங்கள் உதவித் தனி எழுந்து போனான்; உய்பரும் போற்ற உயர்ந்து நித்திய முத்தனாய் நிறைபேரின்பம் துய்த்து என்றும் நிலையாயுள்ளான் என்பன இவன் சரிதசாரமாயறிய வந்தன.

தம் காவிய நாயகனுக்குத் தந்தையாதலால் இம் மன்னர் பிரானை முன்னதாக இன்னவாறு நம் கவிநாயகர் நமக்குக்காட்டியருளினர். இதுகாறும் நாம் கண்டுவந்தோம்.

இனி நமது காவ்ய ஜீவனான இராம சரிதத்தைக் காண வருகின்றோம். காணுமுன் அவனைப் பெற்ற தாயைத் தரிசிக்க நேர்கின்றோம்.

இராமன் தந்தை தாயரைத் தெய்வங்களினும் சிறந்தவராக எண்ணியொழுகிய புண்ணியசீலன்; அதனால், "பிதிர்வாக்கிய பரிபாலனன், மாதுருவாக்கிய பரிபாலனன்" என உலகம் புகழ அவன் ஒளிபெற்றுள்ளான். ஆகையால் அவனைத் தந்த தந்தையை முந்துற அறிந்தோம்; தாயையும் தெரிந்துகொண்டு பின்பு அக்குலமகனைக் நலமுறக் கண்டு மகிழ்வோம்.

இதுவரை வரைந்து வந்த சக்கரவர்த்தி வரலாற்றில் நிறைந்துள்ள கலை நுட்பங்களையும் காவியச் சுவைகளையும் உலகப் பண்புகளையும் உணர்வு நலங்களையும் உறுதிநிலைகளையும் மீளவும் சிந்தித்து உரிமையுடன் உணர்ந்து கொள்ளுதல் பெரிதும் நலமாம்.

5-வது தசரதன் தன்மை முற்றிற்று.

# ஆறுவது அதிகாரம்

## கோசலை

வாச மலரென மாநில மகிழ்ந்து
பேச மலர்ந்த பெருமையள்
கோசலை சரிதம் தேசுற வருமே.

கோசலை என்பவள் குசலமன் என்னும் கோசல தேசத்து அரசனுடைய அருமைத் திருமகள். கோசலம் என்ற பேரினை யுடைய தேசங்கள் இரண்டு அக்காலத்தில் விளங்கியிருந்தன. ஒன்று கங்கையின் வடபால் பரவியிருந்தது. அது தான் சூரியகுல மன்னர்க்குப் பரம்பரை உரிமையாய் வளம்பெற்று வந்தது. தசரதனுடைய செங்கோல் நிலையமாய்ச் சிறந்திருந்த அதனை முதலில் நாட்டுநிலையில் நாம் அறிந்திருக்கிறோம். மற்றொன்று அதன் தென்பால் இருந்தது. முன்னது உத்தரகோசலம் எனப் படும். பின்னதைத் தென்கோசலம் என்பர்.

இந்தத் தேசாதிபதியின் புண்ணியப் புதல்வியாய் நமது பெண்ணரசி பிறந்திருந்தாள். தாய் பெயர் விசாலை. அருந்தவங் கிடந்து அரிதிற் பெற்ற அருமை மகளை இருமுது குரவரும் உரிமை மீதூர்ந்து உவகை கூர்ந்து போற்றி வந்தனர். பருவம் வந்தது. தேவகன்னியரும் ஆவலோடு வியந்து நோக்கக் கன்னிமை கனிந்து இக்குலமகள் மன்னியிருந்தாள். பேரழகும் பெருங் குணங்களும் ஒருங்கே நிறைந்திருந்த இவ் அரசிளங்குமரியைத் தசரதன் விழைந்து வந்து மணந்து கொண்டான். அந்தச் சக்கரவர்த்திக்குத் தக்க சக்கரவர்த்தினியாய் மிக்க மேன்மையுடன் மேவியிருந்தாள். பட்டத்துத் தேவியாதலால் பாரரசிகள் யாவரும் பணிந்து போற்றி இப் பேரரசிபால் பேரன்புகூர்ந்து வந்தனர். பெருமித நிலையில் பெருகியிருந்தாலும் அடக்கம் பொறுமை அமைதி முதலிய குணநலங்களெல்லாம் இவளிடம் குடிகொண் டிருந்தன. இவள் அருந்தவக் கற்பினள்; பெருந்தகைமை நிறைந்தவள். இப்பெண்ணமுதத்தின் திருவயிற்றிலிருந்து தான் இராமன் பிறந்துள்ளான் ஆதலால் விண்ணவரும் மண்ணவரும்

இவளது புண்ணியப் பேற்றைப் புகழ்ந்து போற்றியிருக்கின்றனர். "என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள்" என்று ஞானயோகிகளும் மோன முனிவரும் வானவர்களும் இவளைக் குறித்து இவ்வாறு வியந்து பேசியிருக்கின்றனர். நல்ல பிள்ளைகளைப் பெற்று உலகம் மகிழத் தந்துள்ள புண்ணியவதிகளுக்குள்ளே இவள் முன்னணியில் நிற்கின்றாள். பெண்ணுலகில் ஒருவிண்ணொளியாய் இவள் விளங்கி மிளிர்கின்றாள். இவளுடைய பெயர் எங்கும் புனிதமாக இன்றும் பொற்றப்பட்டு வருகின்றது. இவள் மறைந்து பல்லாயிரம் ஆண்டுகளாயின; ஆயினும் கோசலை என்னும் இவள் பெயர் மாயிரு ஞாலமெங்கணும் பரந்து இனிது பரவியுள்ளது. மங்கையர் குழு இந்நாமத்தை மாண்புடன் மதித்து வருகின்றது. இந்நாட்டில் மிகுதியும் வழங்கப்படுகின்றது. இவளைப் போன்று பிள்ளைப்பேறு இலராயினும் இவள் பேரைப் போற்றி வருகின்றார். "கோசலை பெற்றதே பேறு" என்று மக்களைப் பெற்ற மாதாக்களெல்லாரும் திக்கு நோக்கித் தொழ மிக்க சீர்த்தியுடன் இவள் மேவியிருக்கின்றாள்.

இங்ஙனம் ஈன்ற தாய்மாருள் ஆன்ற பெருமை வாய்ந்து சான்றோர் புகழத் தலைசிறந்து நிற்கின்ற இக்குலமகளை இங்கே காவியத்தில் நாம் கண்டு மகிழ வந்திருக்கின்றோம். இக்குணவதியின் பிறப்பு இருப்பு திருமணம் முதலிய இளமை நிலைகளைப் பற்றிக் கவி யாதும் குறிக்கவில்லை. தம் கதா நாயகனைப் பெற்றருளியதிலிருந்தே இப்பேரரசியைப் பாரறியும்படி தொடங்கியிருக்கிறார். உலகமுய்ய ஒரு புதல்வனை இக்குலவரசி கருவுயிர்த்தருளினாள். அந்நிலைமையைக் கவி அறிவுறுத்தியிருக்கும் அழகு பெருமகிழ்வுடையது. அடியில் வருவது காண்க.

ஒருபகல் உலகெலாம் உதரத்துட் பொதிந்து
அருமறைக் குணர்வரும் அவனை, அஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை.

(திருவவதாரப்படலம், 104)

கோசலை இராமனைப் பெற்றாள் என்பதை இப்படிக் குறித்திருக்கிறார். இப்பாடலிலுள்ள சொல்லும் பொருளும் உள்ளுந்தோறும் உணர்வு சுரந்து உவகை கனிந்து ஒளி மிகுந்துள்ளன.

இராமனது அவதாரம் இங்கே அவதரித்துள்ளது.

கோசலை பயந்தனள்; யாரை? அவனை, சோதியை என்க. எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்கள் இதில் இங்ஙனம் முறையே வெளிப்பட்டுள்ளன. இவற்றை அடுத்து வந்துள்ள அடைமொழிகளையும் தொடை நிலைகளையும் உட்குறிப்புகளையும் தனித்தனியே நுனித்தறிந்து கொள்க. வினைமுதலை முடிவிலேந்தி முடிந்துள்ள இக்கவியின் வடிவும் வனப்பும் நெடிது நோக்கி நினைந்து மகிழத்தக்கன.

ஒரு பகல் என்றது ஊழியில் நேர்ந்த பொழுதினை. பல உலகங்களும் பல உயிர்களும் நிலை குலையாமல் என்றும் நிலையாய் வாழ்ந்து வருதற்கு உறுதி நிலையமாய் உரிமை எய்தியிருந்த அந்த அருமையும் முதன்மையும் கருதி ஒருபகல் என்றார். பல பகல்களை உயிரினங்கள் காண உதவிநின்ற தனி மகிமையுடைய தென்க. உலகு எலாம் என்றது அகில அண்டங்களும் அடங்க.

உதரம்=வயிறு. வைத்து என்றது போதிந்து என்றது உதராக்கினியால் உயிர்த்தொகுதிகள் யாதும் வருந்தாதபடி பாது காத்துநின்ற பான்மை தெரியவந்தது.

முன்னொருகாலத்தில் கடல்கள் யாவும் கரைபுரண்டெழுந்து மழையொடு மருவி எங்கும் பெருவெள்ளமாய்ப்பெருகி யோங் கின; அந்தப் பிரளயத்தில் அண்டங்களெல்லாம் அழிந்துபோக நேர்ந்தன; அதுபொழுது காத்தற் கடவுளாகிய திருமால் எல்லா வுலகங்களையும் தன்னுள் அடக்கி இனிது பேணி யருளினன்; அந்த அருள்நிலை தெரிய இப்பொருள் மொழிகள் வந்தன. முன்பு காத்த அப்பேரருளாளனே இப்பொழுதும் ஆரருள் புரியப் பாருலகில் வந்துள்ளான் என்பதாம்.

அண்டங்களை யெல்லாம் உள்ளடக்கி நின்றமையால் இவன் வடிவம் பிரமாண்டமாயிருக்குமே? எனின், அங்ஙனமன்று; யாரும் அறியமுடியாத அணுவினும் அணுவாய் நுணுகி யிருந் தான் என்பார், “அருமறைக்கு உணர்வரும் அவன்” என்றார். அவனது அற்புத லீலைகள் அளவிடலரியன என்பதாம்.

அண்டங்கள் எல்லாம் அணுக்களாகப் பெரிதாயும், அணுக் களெல்லாம் அண்டங்கள் எனும்படி சிறிதாயும் உருவுகொண்டு

உலாவ வல்லவன் என்றவாறு. பண்டுபுரிந்த பாதுகாப்பையும் பரம கருணையையும் பாத்துவ நிலையையும் முன் இரண்டடிகளில் உரைத்தார்; அதன்பின் அப்பரமனது உருவநிலையை உவமை உருவகங்களால் உணர்த்தியருளினர். கருமுகில் என்றது நீருண்டு சூல்கொண்ட காளமேகத்தை. கார்காலத்தில் மழைபொழியக் கவிந்தபொழுது வானில் பரந்து சுரந்து கனிந்திருக்கும் மேகத்தின் பூங்கொழுந்து போல்வதெனத் தேகத்தின் நிறப்பண்பைக் குறித்தார். அந்நிறத்தில் அதிசயமான ஒரு பேரழகும் பேரொளியும் பெருகியுள்ளன என்பார், எழில் காட்டும் சோதி என்றார். வெறும் ஒளியை மட்டும் வெளியே வீசி எழில் காட்டாத சோதிகள் பல உள ஆதலால் அவற்றினும் வேறுபாடு தெரிய இதன் இயற்கை நலங்களை இங்ஙனம் இசைத்தார். கருமுகில், கொழுந்து, எழில், சோதி என்னும் மொழிகள் விழுமிய நிலையில் விளைந்து பொருளின் அருளும் அமைதியும் அணிநலங்களும் தெளியவந்தன.

பருவ முகிலைக் குறித்துக் காட்டியது உயிர்களுக்கும் பயிர்களுக்கும் உதவிவரும் அதன் உரிமையும் பெருமையும் அறிய என்க. உவமை நிலையால் பொருள் நிலைமை உய்த்துணர வுள்ளது. இங்கே குறித்தபொருள் உலகுயிர்களுக்கெல்லாம் பேராதரவாய் ஆரருள்புரிய ஆர்வமீதூர்ந்து வருகின்றதென்பதாம்.

அநாதிமலமுத்தன், அகண்ட பரிபூரணன், ஆதிமுதல்வன் என இன்னவாறு ஏதேனும் ஒரு தலைமைத் தன்மையைக் கூறாமல் உலகங்களை உதரத்துட் பொதிந்ததைக் குறித்தது என்னை? எனின், அன்று அங்ஙனம் காத்த அவனே இன்று ஈண்டு வருகின்றான்; அவனது உபகார நிலையையும் வரவின் கனிவையும் உற உரிமையோடு ஓர்ந்து உறுதி தேர்ந்து கொள்க என்பதாம்.

இந்த உதரம் பொதிந்த கதையை ஆழ்வார்கள் பலரும் விழைந்து வியந்து பாராட்டி யிருக்கின்றனர்.

நில்லாத பெருவெள்ளம் நெடுவிசும்பின்
மீதோடி நிமிர்ந்த காலம்
மல்லாண்ட தடக்கையால் பகிரண்டம்
அகப்படுத்த காலத்து அன்று
எல்லாரும் அறியாரோ எம்பெருமான்
உண்டுமிழ்ந்த எச்சில் தேவர்
அல்லாதார் தாமுளரோ அவனருளே
உலகாவது அறியீர்களோ? (1)

பனிப்பரவைத் திரைததும்பப் பாரெல்லாம்
நெடுங்கடலே யான காலம்
இனிக்களைகண் இவர்க்கில்லை என்றுலகம்
ஏழினையும் ஊழில்வாங்கி
முனித்தலைவன் முழங்கொளிசேர் திருவயிற்றில்
வைத்து உம்மை உய்யக்கொண்ட
கனிக்களவத் திருவுருவத் தொருவனையே
கழல்தொழுமா கல்லீர்களே. (2)

பேயிருக்கும் நெடுவெள்ளம் பெருவிசும்பின்
மீதோடிப் பெருகும் காலம்
தாயிருக்கும் வண்ணமே உம்மைத் தன்
வயிற்றிருத்தி உய்யக் கொண்டான்
போயிருக்க மற்றிங்கோர் புதுத்தெய்வம்
கொண்டாடும் தொண்டீர்! பெற்ற
தாயிருக்க மணைவெந்நீர் ஆட்டுதிரோ?
மாட்டாத தகவற்றீரே. (3)

மறங்கிளர்ந்து கருங்கடல்நீர் உரந்துரந்து
பரந்தேறி அண்டத் தப்பால்
புறங்கிளர்ந்த காலத்துப் பொன்னுலகம்
ஏழினையும் ஊழில் வாங்கி
அறங்கிளர்ந்த திருவயிற்றின் அகம் படியில்
வைத்து உம்மை உய்யக் கொண்ட
நிறங்கிளர்ந்த கருஞ்சோதி நெடுந்தகையை
நினையாதார் நீசர் தாமே. (4)
(பெரிய திருமொழி)

திருமங்கையாழ்வார் இப்படி ஒரு பதிகம் பாடியிருக்கிறார்.

"பள்ளிஆலிலை ஏழுலகும் கொள்ளும்
வள்ளல் வல்வயிற்றுப் பெருமான்
உள்ளுளார் அறிவார் அவன்தன்
கள்ளமாய மனக்கருத்தே." (நம்மாழ்வார்)

"மண்ணும் மலையும் மறிகடலும் மாருதமும்
விண்ணும் விழுங்கியது மெய்யென்பர்—எண்ணில்
அலகளவு கண்டசீ ராழியாய்க் கன்றிவ்
வுலகளவும் உண்டோ? உன் வாய்." (பொய்கையாழ்வார்)

" உற்று வணங்கித் தொழுமின் உலகேழும்
முற்றும் விழுங்கும் முகில் வண்ணன்" (பூதத்தாழ்வார்)

" நினைத்துலகில் ஆர்தெளிவார் நீண்ட திருமால்
அனைத்துலகும் உள்ளொடுக்கி ஆல்மேல்-கனைத்துலவு
வெள்ளத் தோர் பிள்ளையாய் மெள்ளத் துயின்றானை
உள்ளத்தே வைநெஞ்சே உய்த்து." (பேயாழ்வார்)

" ஆரேயறிவார் அனைத்துலகும் உண்டுமிழ்ந்த
பேராழி யான்தன் பெருமையை" (திருமழிசையாழ்வார்)

" மண்ணும் மலையும் கடலும் உலகேழும்
உண்ணும் திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளை"
(பெரியாழ்வார்)

" ஞாலமும் மேலைவிண்ணோடு உலகேழும் உண்டு
குறளாய் ஓர் ஆலின் இலைமேல் பாலனு மாயவன்"
(திருநாவுக்கரசு நாயனார்)

"மண்டலமும் விண்டலமும் நின்றவடகுன்றமும் வளைந்தமலையும் கடலுமே
தண்டமும் அகண்டமும் அயின்றவர்" (பிள்ளைப்பெருமாள்)

இன்னவாறு உலகம் விழுங்கிய செய்தியைப் பலரும் பாடியுள்ளனர். " ஒரு பகல் உலகெலாம் உதரத்துட் பொதிந்து" திருமால் அருள்புரிந்திருந்த நிலை பொருள் புரிந்த புகழாய்ப் பொங்கி நின்றுள்ளமை இவற்றால் அறிந்துகொள்ளலாம்.

" உலகம் உண்ட பெருவாயா ! உலப்பில் கீர்த்தி யம்மானே !"
(திருவாய்மொழி)

என்று இக்கீர்த்தி ஆர்த்தியுடன் போற்றப்பட்டிருக்கிறது.

இந்த மண்ணுண்ட கதை மற்றக் கவிஞர்களுடைய எண்ணங்களையும் உண்டிருக்கின்றது. அவர் என்ன என்ன வகையில் இதனை எண்ணி வந்திருக்கிறார் என்பதைத் தம் பண்ணும் பாடலும் பாரறியச் செய்துள்ளன. சில அடியில் வருவன.

" விருப்பாரும் பூஞ்சோலை மேவு திருவரங்கர்
திருப்பாற் கடலுடைய செல்வர்காண் அம்மானை ;
திருப்பாற் கடலுடைய செல்வரே யாமாயின்,
இரப்பார்க்குப் பெண்கொடுத்தது என்னமதி அம்மானை ?
என்றல்லோ மண்ணுண்டிருந்தார் காண் அம்மானை."
(சொக்கநாதப் புலவர்)

பெருந்திருவுடைய திருமால் ஒன்றும் இல்லாமல் பிச்சை எடுத்துத் திரியும் சிவனுக்கு ஏன் பெண்ணைக் கொடுத்தார்? எனின், அங்ஙனம் இனம் தெரியாமல் ஏமாந்து கொடுத்து விட்டோமே! என்று மனம் வருந்தியே அவர் மண்ணை அள்ளி வாயில் போட்டுக்கொண்டார் என்பதாம். பார்வதி அவரது தங்கை ஆதலால் அந்த உறவுரிமையும் சம்பந்தமும் உலகமறிய உல்லாச நிலையில் உவந்து பாராட்டியபடி யிது.

"கண்ணபுரங் கோயிற் கதவடைத்துத் தாழ்போட்டார்
மண்ணையுண் டார் வெண்ணையுண்ட மாயனார்—என்னும்
சிரக்கப் பறையேந்திச் செங்காட்டில் ஈசர்
இரக்கப் புறப்பட்டார் என்று." (காளமேகம்.)

மைத்துனர் பிச்சை எடுத்தாரே என்று இலச்சைப்பட்டு அவமானம் தாங்கமாட்டாமல் மாயனார் மண்ணையுண்டார் என்பதாம். கவிகளுடைய உள்ளப்போக்கும் உரை நோக்கும் உவகை யூக்கி வருதல் இவற்றால் உணரலாகும்.

"ஒரு வயிற்றிற் பிறவாது பிறந்தருளி உலகொடுக்கும்
திருவயிற்றிற் றொரு குழவி" (கலிங்கத்துப்பரணி)

"மண்டுபுனல் வேலிதிகழ் மண்ணும் உயர் விண்ணும்
உண்டவனை வெய்யமுலை ஊட்டினள் அணைந்தே."
(பாகவதம், 10, 2-4)

"கையும் முகமும் கண்ணும் காலும் உந்தித் தடமும்
செய்யகமலம் பொருவும் கரிய செம்மல் தன்னை
ஐய மருங்கிற் செவ்வாய் அசோதை குறங்கின் ஏற்றி
வைய முழுதும் உண்ட மலர்வாய் உச்சிமோந்தாள்."
(கூர்மபுராணம், கண்ணன், 62)

இங்ஙனம் பலரும் போற்றியிருக்கின்றனர். சமய வேறு பாட்டிலும் இதனை அமையக் காட்டியுள்ளனர்.

"வாயில் மண்ணிட்டுக் கொண்டவன் றன்னை மதித்து
நன்னுதலில் மண்ணிடாமல்
பாயும் வெண்டிரையில் துயில்பவன் தனக்குப்
பரிதி யொன்றளித்தருள் முக்கண்
நாயகன் றனையே கருதிவெண் ணீற்றால்
நன்னுதல் வீதியை அணியும்
தூயநன் மறையோர் தமக்கிடமாகும்
துரிசிலா விங்குளாபுரியே." (பிரபுலிங்கலீலை)

நெற்றியில் திருமண் காப்பிடுகின்ற வைணவர் யாரும் அங்கு இலர்; எல்லாரும் திருநீறு பூசும் சைவ வேதியர்களே விங்குளாபுரி என்னும் ஊரில் விளங்கியிருந்தனர் என்பதை இவ் வண்ணம் கவி விளக்கியிருக்கிறார்.

இவ்வாறு பல திறப்பட்டவரும் "ஒரு பகல் உலகெலாம் உதரத்துட் பொதிந்து" திருமால் இருந்ததை உவந்து பாரா ட்டி யிருக்கின்றனர்.

இங்ஙனம் சிவகோடிகளையும் அண்டகோடிகளையும் ஊழிமுடி வில் தன் வயிற்றுள் ஒடுக்கியிருந்த பெருமான் இன்று இங்கே ஒருத்தி வயிற்றுள் புகுந்து ஒடுங்கிக் கிடந்தான் என்பதாம். பிறக்க வந்துள்ள பிள்ளையின் பெருமையை உள்ளமறிய உணர்த் தியபடி யிது.

திறங்கோள் கோசலை என்றது இத்தேவியின் திவ்விய மகி மை தெரிய வந்தது. நல்லியல்புடைய மெல்லியலார்க்குச் சொல் லியல்பில் வராத அடைமொழியைக் கவி இங்கே தொடுத்திருக் கிறார்.

உலகங்களை யெல்லாம் ஒருபகல் தன் வயிற்றுள் வைத் திருந்தவனைத் தன் வயிற்றுள் பத்து மாதங்களாக வைத்துப் பேணியிருத்தலால் அந்த அற்புத ஆற்றலை வியந்து திறங்கோள் என்றார். அறத்திறங்கள் யாவும் அமைந்துள்ளவள் என்பதாம். யாரும் ஆற்ற அரிய பெரியதொரு பேற்றை ஆற்றியருள வந் துள்ளமையால் அவ்வேற்றம் தெரிய ஆற்றல் அடை வந்தது. குலம் குணம் அரசி என்னும் உயர் பதவி முதலிய எவற்றினும் இவளது தவத்திறமே இம் மகப் பேற்றிற்குப் பூரண காரண மாய்ப் பொருந்தியுள்ள தென்க.

"என் வயிற்றரு மைந்தற்கு இனியருள்
உன்வயிற் றதென்றாள்; உலதை யாவையும்
மன்வயிற்றின் அடக்கிய மாயனைத்
தன்வயிற்றின் அடக்குந் தவத்தினாள்." (மந்திரப்படலம், 94)

எனப் பின்னரும் இக்குலமகளுடைய மகப் பேற்றிற்குத் தவப்பேறே காரணம் என்று காட்டியிருக்கிறார். "இப்பிள்ளை யைப் பெற இப்புண்ணியவதி என்ன தவஞ் செய்தாளோ?"

என்று மண்ணும் விண்ணும் வியப்ப இப்பெண்ணரசி பெருகி யுள்ளமையை நுண்ணிதாக எண்ணியுணர முன்னுற இங்ஙனம் குறித்தார்.

உலகமுண்ட பெருவாயனை மாயவனை இத்தூயவளைத் தாயென அழைக்கத் தவங்கிடந்து வந்துள்ளான் என்றால், இந்த தருமத்தாயின் தவத்திறனை எவரளந்து உரைக்கவல்லார்?

உலகம் ஈன்ற பிரமனையும் ஈன்றருளிய ஒரு மூல முதலைத் தன் பாலனாகப் பெற்ற பெருமாட்டி ஆதலால் இவள் பெருமை இங்ஙனம் பேசவந்தது.

திருவுறப் பயந்தனள்

என்றது விரிவுற விளைந்தது. யார் திரு உற? கோசலை திருவுற, தசரதன் திருவுற, சீதை திருவுற, சூரியகுலம் திருவுற, மன்னவர் திருவுற என இன்னவாறு திருவின் விளைவு எண்ணரிய நிலையில் எண்ண வந்தது. உற=பொருந்த, அடைய. செல்வம் மேன்மை புகழ் புண்ணியம் மகிழ்ச்சி முதலிய உயர் நலங்களெல்லாம் திரு என்னும் ஒரு மொழியில் மருவியுள்ளன.

ஈன்றனள், பெற்றனள் என்றாலும் பாட்டு இசைபொருந்தி யிருக்கும்; அங்ஙனமிருந்தும், அவற்றுள் ஒன்றையும் கூறாமல் பயந்தனள் என்றது உலகமுழுவதும் பயனடைய வந்துள்ள அதன் நயனுடைமை கருதி. பயத்தல்=விளைதல், பூத்தல்.

தான் துலங்க, தன் குடி விளங்கவே பெரும்பாலும் உயர் குலத் தாயர் புதல்வரைப்பெறுவர்; இங்கே கோசலை அங்ஙன மின்றி உலகமெல்லாம் நலமுற ஒரு மகனை உதவினாள்என்பதாம்.

அறநலங்கள் பொங்கி வளர, மங்கல குணங்கள் எங்கணும் மிளிர, மானவரனைவரும் மாண்பு மிகப்பெற, வானவர் மகிழ இராமன் இங்கே அவதரித்தான் என்பதைத் "திருவுற" என்னும் ஒரு சொல்லால் உணர்த்தியருளினார்.

தாமும் திருவறப், பிறரும் திருவறப் பழியுருவங்களைப் பெற்றுவிட்டு இழிவுறு தாயர்கள் ஏங்கி நாண ஒரு புகழுருவை ஈன்றருளி யாண்டும் யாவரும் விழைந்து போற்ற என்றும் திறங் கோள் சீர்த்தியளாய்க் கோசலை உயர்ந்து விளங்கினாள் என்க.

இந்தப் பிள்ளையையும் பெற்றவளையும் குறித்து மற்றோர் இடத்தில் விசுவாமித்திரர் வியந்து பேசியிருக்கிறார். அவரது பேச்சின் திறம் பெருவியப்புடையது; அடியில் வருவது.

"விரிந்திடுதீ வினைசெய்த வெவ்வியதீ வினையாலும்
அருங்கடையின் மறையறைந்த அறஞ்செய்த அறத்தாலும்
இருங்கடகக் கரதலத்திவ் எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலை என்பாள் பயந்தாள்."
(குலமுறைகிளத்து படலம், 20)

மிதிலையிலே சனகனுடைய சபையில் இருந்து அம்மன்னனை நோக்கிக் கோசிகர் சொன்னபடி யிது. இந்த அருமைக் கவியை இருமுறை மும்முறை வாய்விட்டுப் படித்துப் பொருள் நிலைகளை நீங்கள் சிந்தித்துக் கொள்ளவேண்டும் மொழிக்கு மொழி சுவை ஒழுகி உணர்வொளி கெழுமிப் பொருள்வளம் பெருகி உவகை நிலையமாய் இது உருவாகியுள்ளது.

விரிந்திடு தீவினை என்றது உலகங்களில் விரிந்து பரந்துள்ள பாபங்களை. தீவினை செய்த தீவினை என்றதைப் பாவனை செய்து பார்க்க. நாவினால் நவிற்றல் அரிது. வெவ்விய என்றது அதன் கொடுந்தீமை குறித்து நின்றது. அரும்கடை இல் மறை= அரியதும் முடிவு இல்லாததுமாகிய வேதம். அருமறையின் கடை என்று கொண்டு அரிய வேத முடிவு எனினுமாம்.

மனிதர்கள் எண்ணிச் செய்யத் தக்க புண்ணியங்கள் இவை என வேதங்கள் வரையறுத்து முறையுடன் விதித்துள்ளமையால் "மறைஅறைந்த அறம்" என்றார்.

இராமனை இங்கே எப்படிக் காட்டியிருக்கிறார்?

இருங்கடகக் கரதலத்து இவ் எழுதரிய திருமேனிக் கருங்கடல் என அந்த இளங்குமாரனை இந்த வளங்கெழு மொழிகளால் இங்ஙனம் ஆதரவுடன் மாதவர் வழங்கியிருக்கிறார்.

கடகம்=கையில் அணிவது. இரத்தினங்கள் இழைத்துச் செய்யப்பெற்ற பொற்கங்கணம் என்க. விலை மதிக்க முடியாத பெருமித நிலையது ஆதலால் அடைமொழி அதன் தலைமை தோன்ற வந்தது. இரும்=பெரிய.

பருவம் நிரம்பி மணமகளுக இதுபொழுது நிலவியிருக்கும் நிலைமை தெரிய வுரைத்தார். "எழுதரிய திருமேனி" என்ற தனல் இராமனுடைய வடிவழகில் முனிவர் உள்ளம் பறிபோ யுள்ளமை யுணரலாகும்.

"கருங்கடல்" என்றது அவனது அழகு அறிவு ஆற்றல் கம்பீரம் வீரம் முதலியன யாரும் நிலைகாண முடியாதபடி நிலைத் திருக்கும் நிலை தெரிய நின்றது.

"கருமுகில்" எனக் கவி முதலில் குறித்ததற்கும் இங்கே "கருங்கடல்" என்றதற்கும் உள்ள உறவுரிமையை ஒருங்கே உணர்ந்துகொள்ளவேண்டும்.

முன்னது அவதாரமாகுமுன் மேலே கருத்தளவில் கனிந்து நின்றது; இது ஈண்டு அவதாரமாகி விரிந்து பரந்து காட்சிக்கு இனியதாய்க் கைவசம் அமைந்து பயன் பெருகியுள்ள தென்க.

"செங்கனிவாய்க் கவுசலை" என்றது உள்ளத் தூய்மை, உருவ எழில், உரையினிமை முதலிய அருமை நலங்கள் யாவும் அறிய வந்தது. சேயழகு காணத் தாயழகமைந்தது.

கருங்கடல், செங்கனி என முரண்தொடையில் நயம்பட நவின்றது சேயின்பெருமையும் தாயின் அருமையும் தனித் தனியே நுனித்தறிந்து மகிழ. தன் சிறு குடலில் கருங்கடலை ஒருங்கு வைத்திருந்த பெருந்தகவினள் என்பதாம். இங்ஙனம் கருங்கடல் தந்த அருந்திறல் காணவே முன்னம் "திறங்கொள் கோசலை" என்றார்.

"பயந்தாள்" என்ற வாய்பாட்டையே இங்கும் பயன்படுத்தி யிருக்கிறார். அதன் நயம் தெரிக.

இராமன் பிறப்பு இருவகை நிலையில் உருப்பட்டுள்ளது எனக் கவி இதில் கருக்கட்டி வைத்திருக்கிறார்.

தீவினையால் பிறந்தான் எனப் பாவினை இதில் தொடங்கி யிருக்கும் விசித்திரம் வியப்பினை விளைத்துள்ளது.

தீயோரைத் தொலைக்கவும், நல்லோரைக் காக்கவும், பாவத்தைப் போக்கவும், புண்ணியத்தை ஆக்கவுமே இராமபிரான்

இங்கே அவதரித்திருக்கின்றான் என்பார், "தீவினை செய்த தீவினையாலும், அறம்செய்த அறத்தாலும், கருங்கடலைக் கவுசலை பயந்தாள்" என்றார்.

இந்தப் பெண்ணரசி அந்தப் பிள்ளையைப் பெற்றபொழுது பாபத்தின் வாயில் மண் விழுந்தது என்பதாம்.

தீவினையை முதலில் குறித்தது, பாவங்கள் எங்கணும் அதிகமாகப் பரவி யிருந்தமையே அவன் வரவுக்கு முதன்மையான மூலகாரணமாய் மூண்டு நின்றது ஆகலான் அந்நிலைமையைத் தலைமையாக நேரே உணர்ந்து கொள்ள என்க.

"அறந்தலை எடுத்தருள் கொழித்து நிற்கவும்,
மறந்தலை சாய்ந்து மண் விழுந்து மங்கவும்,
சிறந்தவர் வாழவும் தீயர் மாளவும்,
பிறந்தனன் ஈசனென் றெவரும் பேசினார்"

என்றபடி தேசம் உய்யக் கோசலை வயிற்றில் வாசம் செய்து ஈண்டு இவன் உதித்தருளினான் என்க.

பாபக்கூட்டங்கள் பட்டொழியவும் புண்ணியத் திரள்கள் பொங்கி எழவும் இராமன் இங்கு வந்தான் என்றபடி. இவனது தோற்றத்தின் ஏற்றத்தை இவ்வாறு சுவையூற்றாகக் காட்டி இக் கவி தோன்றியிருக்கும் காட்சி பெருமகிழ்ச்சியுடையது.

மதுரமான இப்பிரயோகம் அதிக சதுரப்பாடுடையது.

துட்ட நிக்கிரகமும் சிட்ட பரிபாலனமும் வெளியே தெளிவாய் ஒளிவிட்டொளிர ஈண்டு இம்மொழியிட்டருளினர்.

அல்லோர் அலமர, நல்லோர் நலமுறத் தோன்றினான் என்னும் இக்குறிப்பைக் காவியத்தில் பல நிலைகளிலும் கவி விரித்து விளக்கியிருக்கிறார். முழுதும் தொடர்ந்து காணின் பெரிதும் விரிய நேரும்; மாதிரிக்கு ஒன்று காண்போம். அதுவும், இவ் எழுதரிய திருமேனிக் கருங்கடலின் இருங்கடகக் கரதலம் புரிந்த அருந்திறலடியாகப் பொருந்தி வந்ததையே நாம் இங்கு அறிந்துகொள்ள வருகின்றோம்.

இராமன் வனத்திலிருக்கும்போது கரன் என்னும் அரக்கர் தலைவன் பெரும் படைகளுடன் வந்து வளைந்துகொண்டான்.

வளையவே குகையிலிருந்து வெளியேறிய அரியேறு போல் இக் கோசலைச் சிங்கம் பன்னசாலையைவிட்டு வில்லேந்தி வெளிவந்தது. வெம்போர் மூண்டது. பொருபடையனைத்தும் விரைவில் பொன்றிமாண்டது. அவ்வெற்றிக்கோலத்தை விளக்கியிருக்கும் கவிப்படம் அடியில் வருவது. உற்றுப்பாருங்கள்.

"பனிக்கச் சுரத்துக் கரன்முதலோர் கவந்தப்
படையும் பல்பேயும்
தனிக்கைச் சிலையும் வானவரும் முனிவர் குழுவும்
தனி அறனும்
இனிக்கட் டழிந்தது அரக்கர்குலம் என்னும்
சுருதி ஈரிரண்டும்
குனிக்கக் குனித்த புருவத்துக்கு உவமம்
நீயே கோடியால்." (சுந்தர, உருக்காட்டு, 55)

சீதையிடம் இராமனது புருவத்தின் அழகைக் குறித்து அனுமான் கூறியபடியிது. இப் பாடலில் பொருள் நிலைகளும் உணர்வு நலங்களும் கரைபுரண்டுள்ளன. இராமன் போர் முகத்தில் வில்லை வளைத்தான்; அவ்வளைவில் விளைந்துள்ள விளைவுகளை அழகொழுக இது விளக்கியுள்ளது.

கரன் முதலோர் பனிக்க; கவந்தம், பேய், சிலை, வானவர், முனிவர், அறன், சுருதிகள் குனிக்கக் குனித்த புருவம் என்க. குனிக்க என்னும் வினையைக் கவந்தம் முதலியவற்றோடு தனித் தனியே கூட்டி நோக்குக.

பனித்தல் = நடுங்குதல். குனித்தல் = வளைதல், அசைதல், ஆடுதல். கவந்தப்படை = தலையிழந்த உடலங்கள்.

இராமன் சினந்து கோதண்டத்தை நாண் ஏற்றியபொழுது அவனது புருவம் சிறிது வளைந்து நெற்றியில் ஏறியது. அந்தச் சிறு குனிப்பில் இவ்வளவு பெருங்குழப்பங்கள் நேர்ந்தன: புருவம் குனித்து வில்வளைக்கவே பல்லாயிரம் அரக்கர்கள் மடிந்தனர்; கரன் முதலாயினோர் நடுங்கினர்; அறுபட்ட முண்டங்கள் எழுந்து துள்ளின; பேய்கள் கூத்தாடின; பகைவர் ஒழிந்தனர் என்று தேவர்கள் ஆரவாரித்து மகிழ்ந்தனர்; மாதவர்கள் புகழ்ந்தனர்; பாவங்கள் தொலைந்தன என்று தரும தேவதை தலை

தூக்கி உயர்ந்தது; வேதங்கள் நான்கும் "இனி அரக்கர் குலம் அழிந்தது; அழிந்தது" என்று உரக்கக் கூவி உவந்து குதித்தன என்பதாம்.

பலவகை நிகழ்ச்சிகளை ஒருங்கே இணைத்து இவ்வீரக்காட்சியை விளக்கியிருக்கும் திறம் வியந்து நோக்கத்தக்கது.

தீவினையாளர் மாண்டு மடியவும் நல்வினையாளர் வாழ்ந்து மகிழவும் இராமன் ஈண்டுத் தோன்றினன் என முன்பு ஊன்றிய வித்திலிருந்து விளைந்த விளைவுகளாக இவற்றை உய்த்துணர்ந்து கொள்க. இத்திறம் காவியத்தில் பல வுள்ளன.

இத்தகைய புண்ணிய மூர்த்தியைப் பெற்றருளியதனுல் மண்ணும் விண்ணும் வாழ்த்த இப்பெண்ணரசி பெருகி நின்றுள்.

"மன்னுபுகழ்க் கோசலைதன் மணிவயிறு வாய்த்தவனே"
(பெருமாள் திருமொழி)

என்று இவள் குடல் காய்த்த பேற்றை வியந்து இன்னவாறு குலசேகர மன்னர் பன்முறையும் போற்றியுள்ளார். தேவரும்திசை நோக்கி வணங்க இத்தேவி திவ்விய மகிமையடைந்திருக்கின்றுள்.

"வெள்ளெயிற்றிலவச் செவ்வாய் முகத்தை வெண்மதியம்என்று
கொள்ளையிற் சுற்றுமீன்கள் குழுமிய வனைய வூர்தி
தெள்ளரிப் பாண்டி பாணிச் செயிரியர் இசைத்தேன் சிந்த
வள்ளலைப் பயந்த நங்கை வானவர் வணங்கப் போனுள்."
(பாலகாண்டம், எழுச்சி, 68)

தன் மகனது கலியாணத்திற்காகக் கோசலை மிதிலையை நோக்கிச் சென்றபடி யிது. செயிரியர்=இசைப்பாடகர். இவளது திருமுகம் பூரணசந்திரன்போல் பொலிவுற்றிருந்தது; சிவிகையில் பதித்திருந்த இரத்தினங்கள் நட்சத்திரங்களைப்போல் ஒளிமிகுந்து நின்றன. அந்நிலையைக் கவி இதில் வருணித்திருக்கிருர். பேரரசியின் பெருமித நிலை தெரிய நின்றது.

வள்ளலைப் பயந்த நங்கை வானவர் வணங்கப் போனுள்

என்றதனுல் அமரரும் துதிசெய்யநின்ற இவ்வரசியின் அதிசய மகிமை யறியலாகும். நலம் பயந்தமையால் நிலம் புகழ்ந்தது.

"கொங்குமலி கருங்குழலாள் கௌசலைதன் குலமதலாய்!" என இராமனை இவள் மகனைப் பாராட்டிக் கூறுவதில் ஆழ்வார்கள் பலரும் ஆர்வமிகுந்துள்ளனர். இவளுடைய சீர்மை நீர்மைகள் சிந்தைக்கும் செவிக்கும் இனியனவாய்வந்திக்கப்படுகின்றன.

காவிய அரங்கில் இத்தேவி ஐந்துமுறை தோன்றியிருக்கிறாள். அக்காட்சிகளில் அரிய பல மாட்சிகள் ஒளி வீசியுள்ளன.

இவளது மனப் பண்பும் குணநலங்களும் வியத்தகு நிலையின. அரசுடன் அரியணையிலமர்ந்து வரிசை பல பெறும் கோப்பெருந்தேவியாகிய இவள் குணப்பெருங் கடலாய்க் குலாவி யிருக்கின்றாள். இவளை ஒரு குலதெய்வமாகக் கவி கொண்டாடுகின்றார்.

மன்னர் பிரான் மந்திரிகளுடன் ஆராய்ந்து இராமனுக்கு முடி சூட்ட முடிவு செய்தான். அம்முடிவினை அரண்மனை யுள்ளிருந்த பணிப்பெண்கள் அறிந்தனர். மனக்களிப்பு மிகுந்தனர். அச்செய்தியைக் கோசலையிடம் சொல்லவேண்டுமென்று ஆசை மீக்கூர்ந்தனர். கனகமாலை முதலிய மங்கையர் நால்வர் விரைந்து அந்தப் புரத்துள் புகுந்தனர். அரசி கண்டாள். அவரது நிலைமையைக் கொண்டே அரியதொரு மகிழ்ச்சி விளைந்துள்ளது என்று ஆர்வம் மீதூர்ந்து, "யாது காரியம்?" என ஆவலோடு வினவினள். இந்த நிகழ்ச்சியைக் குறித்து வரும்கவிகள் அடியில் வருவன.

நடந்ததையறிந்து மடந்தையர் மகிழ்ந்தது.

ஆண்டவன் னிலை யாக அறிந்தவர்
பூண்ட காதலர் பூட்டவிழ் கொங்கையர்
நீண்ட கூந்தலர் நீள்கலை தாங்கலர்
ஈண்ட ஓடினர் இட்டிடை யிற்றிலர்; (1)

ஆடுகின்றனர் பண்ணடை யின்றியே
பாடுகின்றனர் பார்த்தவர்க் கேகரம்
சூடுகின்றனர் சொல்லுவ தோர்கிலார்
மாடுசென்றனர் மங்கையர் நால்வரே, (2)

கோசலை வினவியது.

கண்ட மாதரைக் காதலின் நோக்கினள்
கொண்டல் வண்ணனை நல்கிய கோசலை
உண்டு பேருவகைப் பொருள் அன்னது
தொண்டை வாயினிர் சொல்லுமின் ஈண்டென்றாள். (3)

(அயோத்தி, மந்திரம், 87-89)

இராமன் அரசுரிமையடைய வருவதை அறிந்ததும் மகளிர் மனமகிழ்ந்த நிலையை முதல் இருகவிகளில் விளக்கி யிருக்கிறார். புறத்தே நிகழ்ந்த செயல்நிலைகளிலிருந்து அவர்களுடைய உள்ளக் களிப்பும் உவகைப் பெருக்கும் தெள்ளத்தெளியத்தெரிந்துகொள்ளலாம்.

பூட்டு அவிழ் கொங்கையர்

என்றது விநயவிளக்கம். அளவிடலரிய உவகை துள்ளி எழுந்தமையால் அவரது உள்ளம் பூரித்தது; பூரிக்கவே, உடல் பாரித்தது; அதனால் மார்பில் பூட்டியிருந்த இரவிக்கையும் பூட்டு விட்டது எனக் கவி இதில் நமக்குக் காட்டியிருக்கிறார். காரிய நிகழ்ச்சிகளையும் கருத்துக்களையும் இவர் விளக்கியருளும் விசித்திர நிலைகள் பல. சொல்லுவதில் உள்ளே உவகைச் சுவைகள் உறைந்து மிளிர்கின்றன. கொங்கையர், கூந்தலர், தாங்கலர், ஓடினர், இற்றிலர் என்றதில் அவருடைய ஓகை நிலைகளையும் வேகங்களையும் மிகவும் பாகமாக உணர்த்தியிருக்கிறார். "பண்ணடை இன்றியே பாடுகின்றனர்" என்றது ஆனந்த பரவசத்தால் தாளமும் சுதியும் தவறி அவர் நீளம் போயுள்ளமை நேரே தெரிகின்றது.

இவ்வளவு பரவசத்துடன் வந்து தன் முன் நின்ற மங்கையரைப் பார்த்து இம்மாதரசி, "ஏதோ ஓர் இனிய சோபனம் நிகழ்ந்துள்ளது; அது பேருவகையானது" என ஊகம் செய்துகொண்டாள். இதனால் இவளது குறிப்பறியும் திறம் வெளிப்பட்டு நின்றது.

நல்ல ஒரு இனிய மங்கலச் செய்தியைச் சொல்ல வந்திருக்கிறார் ஆதலால், "தொண்டை வாயினிர்! சொல்லுமின்" என்று ஆர்வத்தோடு சொல்லியருளினாள். அவர் உற்றதை உரைத்தார்.

மங்கையர் சொன்னது.

"மன்னெடுங் கழல் வந்து வணங்கிடப்
பன்னெடும் பகல் பாரளிப் பாய்! என
நின்னொடும் புதல்வன்றனை நேமியான்
தொன்னெடும் முடி சூட்டுகின்றான் என்றார்."

சக்கரவர்த்தி இராமனுக்கு மகுடம் சூட்ட உறுதி செய்திருக்கும் இனிய செய்தியைப் பட்டத்து அரசியிடம் வந்து பாங்கியர் கூறியிருக்கும் பாங்கும் பண்பும் இதன்கண் அறியநின்றன.

மன்னவர் அடிதொழப் பன்னெடுங் காலம் பாராளும் உரிமை மகனுக்கு நேரே வந்துள்ளது என அரச திருவின் நிலைமையை முதலில் குறித்தார். தொல் நெடும் என்றது ஆதிமுதல் பரம்பரையாகத் தொடர்ந்து வருகின்ற தொன்மைத் தன்மையும் தொடர்பின் தூய்மையும் கருதி. "நின் நெடும் புதல்வன்" என்றது நினைந்து நோக்கத்தக்கது. நான்கு பிள்ளைகளையும் சமமான உள்ளன்போடு அரசி உவந்து பேணி வந்தாள் ஆதலால் அவருள் இராமனைத் தெரிந்துகொள்ள இங்ஙனம் விதந்துரைத்தார். உங்களுடைய தலைமைப் புதல்வருக்கு மங்கலமுடி சூட்ட மன்னர்பிரான் எண்ணியுள்ளார் என்பதாம். ஆகவே நின் இளம்புதல்வர் என மற்றை மூன்று பேரையும் உள்ளே இடம் பெறவைத்தார். அரசியின் உள்ளப் பான்மையை நன்கு உணர்ந்தவர் ஆதலால் இங்ஙனம் உரிமை கனிய மொழிந்தார். அந்தப்புரத்து ஏவல் மகளிரும் விநயமாக இனிது பேசவல்லவர்என்பது இதனால் அறிய நின்றது.

தனது அருமைத் திருமகன் சக்கரவர்த்தியாய் வரப்போகின்றான் என்னும் இந்த மங்கலச் செய்தியைக் கேட்டவுடனே கோசலை பெருமகிழ்ச்சி யடைந்தாள்; வந்து சொன்னவருக்கு வரிசை பல தந்தாள்; அரிய நோன்புகள் புரிந்தாள்; என இன்னவாறே யாவரும் முடிவுசெய்ய நேர்வர்.

மூல நூலில் உள்ளது.

வால்மீக முனிவரும் இந்த இடத்தில் வேறு விசேடம் ஒன்றும் குறிக்கவில்லை. சிறிது மாறுபாடாகவும் இருக்கிறது. என்னை? இராமனது மகுடாபிடேக நிலையை அவனுடைய நண்பர்கள் வந்து கோசலையிடம் அறிவித்ததாகவுள்ளது. இதனைக் கம்பர் அறவே மாற்றியிருக்கிறார். அந்தப்புரத்தில் அரசியிடத்தே வேறு ஆடவர்கள் வந்து பேசினர் என்பது அவ்வளவு உசிதமாயிராது; விரசமாகும் என்று கருதி மிகவும் நாகரிகமாக நான்கு மங்கையரை அழகுற அமைத்து விழுமிய நிலையில் இங்கே

நமக்குக் காட்டியிருக்கிறார். இந்த நாட்டு அரசகுலமக்களுடன் பெரிதும் பழகி உடனுறைந்து அரண்மனைகளுடைய மரபும் வரிசையும் நன்கு தெரிந்தவராதலால் கதையை இங்ஙனம் நவினமாகப் புதுக்கி மெருகு கொடுத்து இனிமை செய்திருக்கிறார். அவ்வளவில் அமையாமல் எவ்வளவோ எண்ணங்களையும் சுவைகளையும் இடங்கள் தோறும் நிரப்பி யிருக்கிறார். யாண்டும் இன்பமும் அறமும் சுரந்து இவரது உணர்வின் சாரம் ஊற்றெடுத்துள்ளது.

மங்கையர் வந்து சொல்லவும் தேவி மனம் மிக மகிழ்ந்தாள்; பொன்னும் பொருளும் கொடுத்து அவரைப் போக விடுத்தாள் என இவ்வளவோடு பிறர் நிறுத்திவிடுவர்; அவ்வளவுதான் செய்ய முடியும்; வேறு அதிகமாக ஈண்டு யாது செய்யலாம்? நீங்களே சிறிது எண்ணிப் பாருங்கள்; என்ன தெரிகின்றது? ஏதேனும் தெரிந்தால், அதனை நம் கவிஞர்பிரான் பின்னே சொல்லி யிருப்பதோடு இணைத்து நோக்குங்கள். இவரது சொற்களில் கலா தெய்வம் துள்ளி விளையாடுகின்றாள் ஆகலால் யாருக்கும் தெரியாத அற்புத நிலைகளை அவை இனிதாக அளித்தொளிர்கின்றன.

தேவியின் சிந்தனை.

சிறக்குஞ் செல்வம் மகற்கெனச் சிந்தையிற்
பிறக்கும் பேருவகைக் கடல் பெட்பற
வறக்கு மாவட வைக்கனல் ஆனதால்
துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கமே.
(அயோத்தி, மந்திரம், 93)

இந்தப் பாடலில் பொதிந்திருக்கும் உயிருணர்ச்சிகளை ஊன்றி நோக்கவேண்டும். மங்கையரது மங்கல மொழியைக் கேட்டபொழுது கோசலை தேவியின் உள்ளத்தே அளவிடமுடியாத ஓர் உவகை ஓங்கி எழுந்தது; அலைமோதி எழுந்த அந்த ஆனந்தக் கடல் உடனே தலைகீழாக மாறி மறைந்துபோயது என இதில் ஒரு அற்புதக் காட்சியைக்கவிகாட்டியிருக்கிறார். பாட்டை உரிமையுடன் படித்துப் பார்த்தால் பாவின் நயமும் பாவிகமும் நன்கு புலனும். சிறக்கும் என்றது அரச திருவின் உயர்வுணர்த்தி நின்றது.

தன் பிள்ளை மணிமுடி தரித்துச் சக்கரவர்த்தியாய் வரப் போகின்றான் என்று நினைந்தபோது நெஞ்சம் மகிழ்ச்சியால்

பூரித்துப் பேரின்பமாய்ப் பெருகி நின்றது; அப்பெருக்கின் எல்லையை உரையால் வரைந்து சொல்ல இயலாதென்பார், உவகைக் கடல் என்றார். இங்ஙனம அதிசயமான ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்து நின்றவள் தனது நாயகர் உலகைத் துறந்து ஒதுங்கிவிடுவாரே! என உணர்ந்தாள்; அவ்வுணர்ச்சி தோன்றவும் உள்ளே பொங்கியிருந்த உவகைப் பெருக்கெல்லாம் ஒருங்கே ஒழிந்து போயது என்பதாம்.

கடல்நீரையும் வடவைக் கனலையும் ஒருங்கு புணர்த்தி அரசியின் உள்ளத் தெழுந்த உவகைக் கலுழ்ச்சிகளை இவ்வாறு உணர்த்தியருளினார். பொருள்களை விளக்கவந்த உவமைகள் வியப்பு நிலையில் விளைந்து நின்றன.

வடவைக் கனல்

வடவை என்பது கடலுள் உறைந்திருக்கும் தெய்வீகமான ஒரு நெருப்புப் பிழம்பு. நீர்ப்பெருக்கு நிலைமீறி நிலத்தில் பரவாதபடி பாதுகாத்து நிற்பது. வாரி நீர் அனைத்தையும் தன் வயப்படுத்தும் தகையது. யுகமுடிவில் வெளிப்பட்டு உலக முழுவதையும் அழிக்கவல்லது ஆதலால் ஊழித்தீ எனவும் இது உரைக்கப்படும்.

"வடவை தீத்திரள் மடங்கல் ஊழித்தீ
கடையனல் உத்தரம் வடவாக்கினிப்பேர்" (பிங்கலந்தை)

எனவரும் இப்பெயர் நிலைகளால் இதன் இயல்பும் செயலும் எளிது அறியலாம். இந்தக் கொடுந்தீயை உவமை காட்டியது நாயகனுடைய பிரிவுத் துயரின் கொடுமையை அறிவுறுத்த.

பருவம் முதிர்ந்த கிழவன் பிரிவில் அரசிக்கு இவ்வளவு துயரம் இருந்தது என்றதனால் பதியின்பால் கொண்டுள்ள இவளது உரிமையும் பிரியமும் தெரியவந்தன. இப்பதிவிரதையின் உள்ளப்பான்மையை நுணுக்கமாக வுணர்த்தத் துணுக்கம் குறித்தார்.

துணுக்கம் = திகில். கடிது தோன்றும் அச்சம் என்க.

இளவரசு குலவரசாகும்பொழுது நிலையரசு தலையொதுங்க நேரும் ஆதலின் அந்நிலைமை நினைவுக்கு வந்தது; வரவே நெடுந் திகில் அடைந்தாள்; அடையவே முன்னுயர்ந்த ஆனந்தப் பெருக்கு முழுதும் பின்னிழிந்து மறைந்து புதைந்தது என்க.

நெஞ்சில் முன்னே பொங்கி யெழுந்த இன்பவெள்ளத்தைப் பின்னே தோன்றிய துன்பத் துணுக்கம் துடைத்துவிட்டது ஆதலால் விரிந்து பரந்துள்ள கடல்நீரில் உள்ளே ஊடுருவி நிற்கும் வடவைக் கனல் அதற்கு உவமையாய் வந்தது. இந்த உவமான நுட்பத்தை உய்த்துணர்ந்து பார்க்க. ஒரே இடத்தில் முளைத்துக் கிளைத்தது; ஒருங்குறைந் திருப்பது; மருங்ககலாதது; மரபு நிலை திரியாமல் உறவுரிமை கொண்டு உள்ளே ஒடுங்கிக் கிடப்பது; ஆகவே ஏகமான வெள்ளத்தின் விரிவே மேலெழுந்து நின்றதென்பது தெளிவாம். பெட்பு=பெருக்கம்.

பெற்ற பிள்ளையிடமும், கொண்ட கணவன்கண்ணும் கோசலைக்குள்ள அன்பின் பெருக்கமும் இன்பக்காதலும் இதனால் நன்கு புலனும்.

மகன் மணிமுடி சூடியவுடனே பட்டத்து அரசி என்னும் பட்டம் தன்னை விட்டொழிந்து மருமகளை ஒட்டி ஒளிரும் என்பதை இவள் உள்ளத் துணுக்கம் உணர்த்தி நின்றது.

துணுக்கம், வடவைக் கனல் ஆனதால்

என்ற இதில் மோனமாகப் பின்னே ஆகும் விளைவுகள் தொனித்துள்ளன. இருவரையும் பிரிந்து பொருவருந் துயரம் மருவவுள்ளாள் ஆதலால் நல்லது கேட்கவும் உள்ளக் கலக்கம் பொல்லாக் கனலாய் இங்ஙனம் பொங்க நேர்ந்ததென்க.

மகன் அரச பதவி மருவுவதை யறிந்து மகிழ்ந்தருளினள் என்று மட்டும் உரைத்திருந்தால் இங்கே வியப்பு ஒன்றும் விளைந்திராது; அடுத்து இறுதியில் குறித்தமையே இப் பதிவிரதையின் உணர்ச்சித் திறத்தையும் உள்ளப் பண்பையும் இன்புற வுணர்த்தி அறிவுலகிற்கோர் இனிய சுவையைத் தனிவிளைத்துள்ளது.

உயர்ந்த கருத்துக்களைத்தகுந்த இடங்களில் கலைநலம் கனியப் பல நலங்களும் விளைய நம் கவியரசர் விதைத்துச் செல்லும் வித்தக நிலை வியந்து போற்றத்தக்கது.

உயிருணர்ச்சிகள் ஓவிய வுருவங்களாய் ஒளிமிகப் பெற்றுப் பாவினங்களில் படிந்து காவியம் எங்கணும் கனிந்து விளையாடு

கின்றன. அந்த இன்பக் காட்சியெல்லாம் கம்பன் கலைக்காட்சியாய் மன்பதைக்கு மாட்சியும் மகிழ்ச்சியும் வழங்கி வருகின்றன.

இன்னவாறு இன்னலுறினும் அருமை மகனது சோபனம் பெருமகிழ்வாய் நின்றதாதலால் வந்தவர்க்குப் பரிசில் பல தந்து உயர்ந்த தானங்களைக் கோசலை உவந்து புரிந்தாள். அரசி செய்தன அடியில் வருவன.

கோசலை வெகுமதி தந்தது.

அன்னளாயும் அரும்பெறல் ஆரமும்
நன்னிதிக் குவையும் நனி நல்கித்தன்
துன்னு காதற் சுமித்திரை யோடும்போய்
மின்னு நேமியன் மேவிடம் மேவினாள். (1)

திருமாலை வழிபட்டது.

மேவி மென்மல ராள்நில மாதெனும்
தேவி மாரொடும் தேவர்கள் யாவர்க்கும்
ஆவி யும்மறி வும்முத லாயவன்
வாவி மாமலர்ப் பாதம் வணங்கினாள். (2)

தானங்கள் செய்தது.

என்றி றைஞ்சியவ் விந்திரை கேள்வனுக்கு
ஒன்று நான்மறை ஓதிய பூசனை
நன்றி ழைத்தவண் நல்ல தவர்க்கெலாம்
கன்றுடைப் பசு வின்கடன் நல்கினாள். (3)

பொன்னும் மாமணி யும்புனை சாந்தமும்
கன்னி மாரொடு காசினி சுட்டமும்
இன்ன யாவையும் ஈந்தனள் அந்தணர்க்கு
அன்ன தானமும் ஆடையும் நல்கினாள். (4)

விரதம் தொடங்கியது.

நல்கி நாயகன் நாண்மலர்ப் பாதத்தைப்
புல்லிப் போற்றி வணங்கிப் புரையிலா
மல்லல் மாளிகைக் கோயில் அலங்கொளாத்
தொல்லை நோன்புகள் யாவும் தொடங்கினாள். (5)

(அயோத்தி, மந்திரப் படலம், 92-97)

இவற்றால் கோசலைபுரிந்த தான தருமங்களும் தவ நிலையும் அறியலாகும். "அன்னாள் ஆயும்" என்றது மகன் பட்டத்துக்கு வந்தால் கணவன் துறவியாய்ப் பிரிவுறுவனே என முன்னம் வருந்திய துயரநிலையைத் தொடர்ந்து குறித்த படியிது.

அங்ஙனம் துணுக்கமுற்றவள் பின்பு உள்ளம் தேறிப் பிள்ளையின் மகுடாபிடேகத்துக்கு வேண்டிய நலங்களை விழைந்து செய்தாள்: தனது அருமைத் துணைவியாகிய சுமித்திரையை உடன் அழைத்துக்கொண்டு அரண்மனையுள்ளிருந்த பெருமாள் கோவிலுக்குப் போய்த் திருமாலை வணங்கினாள். தன் அருமை மகனுடைய முடிசூட்டு வைபவம் இனிது நிறைவேறவேண்டும் என மனமுருகி வாழ்த்தி வழிபாடுகள் ஆற்றினாள்.

பொன்னும் மணியும் முத்தும் பட்டாடைகளும் யாவருக்கும் வாரி வாரிக் கொடுத்தாள். அன்னதானம் சொன்னதானம் பூதானம் கோதானம் முதலிய பல வகைத் தானங்களையும் நல்ல பாத்திரங்களைப் பார்த்து நன்கு புரிந்தாள். எல்லாத் தானங்களையும் இன்புறச் செய்தபின் ஆலயத்தை வலம் வந்து அரண்மனைக்குள் புகுந்தாள். அரிய விரதங்களை உரிமையுடன் மேற்கொண்டு நிவந்த நெஞ்சினளாய் உவந்திருந்தாள் என்க.

நேமியான் என்றது சக்கரதரனை திருமாலை.

"துன்னு காதல் சுமித்திரையோடும் போய்"

என்றதனால் இவ்வரசியிடம் கைகேசி அவ்வளவு அன்புரிமையுடன் மனங்கலந்து மருவியிருக்கவில்லை என்பது தெரிய நின்றது. பட்டத்துத் தேவியாய்க் கோசலை பதவியில் சிறந்திருந்தாலும் தான் இட்டது சட்டமாய்க் கைகேசி தனியே இனிதமர்ந்து வந்தாள். அதனாலேதான் அடுத்து அவள் செய்த விபரீதமான மாறுபாடுகள் யாதும் தெரியாது போயின.

தொல்லை நோன்புகள் என்றது தருமநூல்களில் விதித்துள்ள பழமையான விரத ஒழுக்கங்களை. சூரிய குலத்தில் இளவரசர் முடிசூட நேருங்கால் அவரது தாய்மார் பூண்டிருக்க வேண்டிய பரம்பரையான ஆசார நியமங்கள் எனினுமாம்.

"தொல்லை" என்னும் சொல்லில் அல்லலான தொனியும் புல்லியுள்ளது. துன்ப நோன்புகள் தொடங்கினாள் எனப் பின்பு

நிலையவுள்ள துயரத் தொல்லைகளையும் குறிப்பாக இது சுட்டி நின்றது. தொல்லை=பழமை, துன்பம்.

தன் புதல்வன் காரியம் யாதொரு இடையூறுமின்றி இனிது நடைபெறவேண்டும் என்று உள்ளமுருகித் தெய்வசிந்தனைசெய்து அருந் தவநிலையில் இத்தேவி இங்ஙனம் இருந்து வந்தாள்.

பட்டாபிடேகத்திற்கு வேண்டிய திட்டங்கள் யாவும் சிறப் பாக நிகழ்ந்து வந்தன. எங்கும் குதூகலங்கள் பொங்கி வளர்ந் தன. நாளினை எண்ணி யாவரும் நயந்து நின்றனர். முகூர்த்தத் திற்கு முதல் நாள் இரவு கைகேசி செய்த சதியால் எல்லாம் கலைந்து தொலைந்தன. அந்த நிலைமை யாதொன்றும் கோச லைக்குத் தெரியாது ஆதலால் மங்கல தினத்தன்று அதிகாலையி லெழுந்து புனித நீராடி ஆராதனைகள் புரிந்து தனதுஅருமைத் திரு மகன் முடிபுனை கோலத்துடன் தன்னைக் காணவருவான், கண்டு மகிழலாம் என்று களிபெருவகையுடன் வழிமேல் விழி வைத்து ஆர்வ மீதூர்ந்து சீர்மையுடன் அமர்ந்திருந்தாள்.

இங்கே இவ்வண்ணம் இருக்க, இரவு காவுபுரிந்த கைகேசி சூரியன் உதயமானவுடன் இராமனை அழைத்து முடிசூடா வகை தடுத்து வனம் போகும்படி பணித்தாள். அக்குலமகன் உளமிக மகிழ்ந்து, "அம்மா! கட்டளைப்படியே கானகம் போகின்றேன்" என்று தொழுது வணங்கி வெளியே வந்தான். வந்தவன் தன் தாயிடம் விடைபெற்றுப் போகவிழைந்து அரண்மனை வாயிலை யடைந்தான். தருமகுண சீலனை அக்கோமகன் கோசலை மாளிகையுள் அன்று நுழைந்த பரிபவ நிலைகளை அடியில் பார்க்க.

இராமன் தாயை நோக்கி வந்தது

என்றுகொண் டினையகூறி அடியிணை யிறைஞ்சி மீட்டும்
தன்றுணைத் தாதை பாதம் அத்திசை நோக்கித் தாழ்ந்து
பொன்றிணி போதினானும் பூமியும் புலம்பி நையக்
குன்றினும் உயர்ந்த தோளான் கோசலை கோயில் புக்கான்.

வந்த நிலை.

குழைக்கின்ற கவரி யின்றிக், கொற்றவெண் குடையும் இன்றி,
இழைக்கின்ற விதிமுன் செல்லத் தருமம்பின் இரங்கி ஏக
மழைக்குன்றம் அனையான் மௌலிகவித்தனன் வருமென்றென்று
தழைக்கின்ற உள்ளத் தன்னாள் முன்னொரு தமியன் சென்றான்.

கோசலை குலை குலைந்து வினவியது.

புனைந்திலன் மௌலி, குஞ்சி மஞ்சனப் புனித நீரால்
நனைந்திலன், என்கொல்? என்னும் ஐயத்தாள் நளினபாதம்
வனைந்தபொற் கழற்கால் வீரன் வணங்கலும் குழைந்துவாழ்த்தி
நினைந்ததென்! இடையூறுண்டோ? நெடுமுடி புனைதற்கென்றாள்.
(நகர் நீங்கு படலம், 1-3)

இராமன் மணிமுடியின்றி, அரசகோலங்கள் யாவும் துறந்து, பரிவாரங்களெல்லாரையும் அயலொதுக்கிவிட்டு, வனம் புக விழைந்து, தனிமையாய்த் தாய் வீட்டை நோக்கி மனங் கனிந்து வருகின்ற காட்சி பருவரல் மிகுந்து வெருவரல் விளைந்துள்ளது.

போதினாளும் பூமியும் புலம்பி நைய

என்றதனால் இக்கோமகன் பிரிவால் வையமடையும் வெய்ய துயரங்கள் விளங்கி நின்றன. போதினாள் = இலக்குமி. இராச்சிய லட்சுமி என்க. போது = தாமரைப்பூ. மலராள் மலராளாய் அலமரலடைந்து அழுதாள்; பூமிதேவியும் "இனி எனக்கு ஏமம் ஏதும் இல்லையே!" என்று ஏங்கி அலறினாள். இதனால் இவனது ஏற்றமும் தோற்றமும் இனிது புலனாம். உரிய நாயகன் பிரியநேர்ந்ததே எனப் பரிபவ மீதூர்ந்து மலர்மகளும் நில மகளும் இங்ஙனம் அழுது புலம்பி அலமந்து தவிக்கத் தலைமகன் தாயை நாடித் தனியே வந்தான்.

2. கவரியும் குடையும் இலன் என்றது அவலநிலை தெரிய. மாட்சிமை நிறைந்த அரசகோலங்களுடன் பெருமித நிலையில் மருவி வரவேண்டியவன் வெறுமையாய் இந்த அலங்கோலத்தில் வந்தானே என்று அக்காட்சியில் கண்ணீர் சிந்திக் கருத்துருகியுரைத்திருக்கிறார்.

இழைக்கின்ற விதி முன் செல்லத், தருமம் பின் இரங்கி ஏக என்றதில் எவ்வளவு உணர்ச்சிகள் அடங்கியுள்ளன! யாரும் எண்ணமுடியாத நுண்ணிய கருத்துக்களைத் தாம் எண்ணியபடியெல்லாம் தண்ணொளி ததும்பக் கவி எளிது விளக்கி விடுகின்றார். வனவாசம் செய்ய நேர்ந்தமையால் அன்னையிடம் விடை பெற வந்தான் என இவ்வாறு சாதாரணமாகக் கூறிப் போவதே சரித்திர முறையாம். இந்தச் சிறிய நிகழ்ச்சியில் அரிய பல

அறிவு நலங்களை அற்புதமாகப் பொழிந்திருக்கிறார். இராம சரிதமாகிய பாற்கடலில் இடையிடையே அமிர்தத் திரளைகள் போல் இனிய பல உணர்வின்பங்கள் எதிரெழுந்து மிளிர்கின்றன. அவை காவியத்துக்குப் பெருஞ் சுவை பயந்து பேரொளி செய்துள்ளன. உய்த்துணர்வுடையனவாய் எத்துணையோ நுட்பங்கள் உள்ளே உறைந்து கிடக்கின்றன.

யார் இழைத்த விதி இங்கே சேரழிக்க வந்தது? "இன்னல் செய் இராவணன் இழைத்த தீமை போல், கூனி தோன்றினாள்" (மந்தரை, 39) என முன்னம் முடி சூடா வகை மூட்டிவிட்ட கொடுவிதியே தான் கருதிய பலனை உறுதியுடன் செய்ய மூண்டு ஈண்டு முன் செல்லுகின்றது என்க. இழைக்கின்ற என நிகழ் காலத்தால் குறித்தது அது விளைத்துச் செல்லும் வேகம் தெரிய.

இராமன் இங்கே அவதரித்தது எதன் பொருட்டோ, அந்த விதியின் வழியே அவனது மதியும் வாழ்க்கையும் அதிவேகமாய் நடக்கின்றன. ஆயினும் மனித வுலகின் தனி இயல்பின்படி, "அரச திருவை யிழந்து அநியாயமாக வனம் போக நேர்ந்தானே! விதியின் கொடுமைதான் என்னே!" என இக் குல மகன் நிலைமையில் யாரும் அளிசெய் திரங்க வெளியே இது பரிதாபமாக விளைந்து படர்விளங்கியுள்ளது.

இந்தப் புண்ணியமூர்த்தியைப் பிரிந்திருக்கமாட்டாமல் தரும தேவதை கண்ணீர் சொரிந்து விம்மிப் பொருமிக் காதலோடு பின் போனது என்பார் "தருமம் பின் இரங்கி ஏக" என்றார். இராமன் அரசுக்கு வருவதை யறிந்து அளவில்லாத ஆனந்தமுடையதாய் அறக்கடவுள் உளமகிழ்ந்திருந்தது; இதுபொழுது முடிதுறந்து அவன் அடவிபோக நேர்ந்தமையால் அது துயருழந்து அயர்வுற நேர்ந்தது. "தருமம் ஏக" என்ற இந்த ஒரு குறிப்பினால் அவனது பெருமையும் பெற்றியும் எவ்வளவு ஓங்கியுள்ளன! பரமாத்துமாவே தருமாத்துமாவாக இங்கே பரிணமித்துள்ளதென்பதாம்.

முன்னே வீசும் கவரி இன்றிப் பின்னே பிடிக்கும் குடையும் இன்றித் தன்னந் தனியனாய் வந்த இராமனுக்கு முன்னும் பின்

னும் இரண்டை அதிசயமாகப் படைத்து எவரும் துதிசெய்ய நிறுத்தியிருக்கும் கவியின் கலாவினோதமும் இதன்கண் உல்லாசமாய் உலாவியுள்ளது.

முன்னே விதி ஈர்த்துச் செல்கின்றது; பின்னே தருமம் துணை போகின்றது; ஆகவே சத்துரு சயம் முதலிய காரிய சித்திகள் யாவும் இனிது நிறைவேறி வெற்றித் திருவுடன் இராமன் விளங்கி வருவான் என்பது தொனித்து நின்றது.

தான் பிறந்த பேற்றை அடைய வெளியே புறப்படுகின்றான் ஆதலால் பெற்ற தாயிடம் விடைபெற மரியாதையுடன் வந்தான். அன்னை அருள் அகிலமும் அருளும் என்பதாம்.

இராமன் இப்படி வருங்கால் கோசலை எப்படி யிருந்தாள்?

தனது அருமைத் திருமகன் மணிமுடி புனைந்து அரச திருவமைந்து இனிய மங்கலகோலத்துடன் தன்னிடம் "வருவான்; வருவான்" என விழியிமையாமல் வழியெதிர்பார்த்து விழைவு மீதூர்ந்து அத் தருமத்தாய் வீற்றிருந்தாள் ஆதலால் "வரும் என்று என்று தழைக்கின்ற உள்ளத்தன்னாள்" என்றார். வரவு காண்பதிலுள்ள துடிப்பும் முடுக்கும் உணர அடுக்கு வந்தது.

தழைக்கின்ற என்றதனால் பிள்ளையைக் காண வேண்டும் என்று அவ்வுள்ளம் துள்ளி நின்ற வேணவாவின் வியனிலை அறியலாகும். இங்ஙனம் காட்சியில் கருத்தூன்றிக் களிபெருவகையுடன் இத்தாய் களித்திருக்க அச்சேய் உள்ளே வந்தான். பிள்ளையைக் கண்டாள்; பெருந்திகில் கொண்டாள். "என்னே! என் மகன் இன்னவாறு" வருகின்றான் என இன்னலுடன் எண்ணி ஏங்கலானாள்.

"மௌலி புனைந்திலன்! குஞ்சி மஞ்சனப் புனித நீரால் நனைந்திலன்! என் கொல்?" இது! என நினைந்தயர்ந்தாள். ஐயம் மீக்கூர்ந்து இங்ஙனம் இவள் அலமந்தயருங்கால் அவ் ஐயன் வந்து பாதங்களில் விழுந்து பணிந்து தொழுதான். அத் தலைமகனைத் தழுவி எடுத்து மனமுருகி வாழ்த்தி மறுகி நோக்கி "ஐயா! என்ன நடந்தது? ஏன் இப்படி?" எனப் பரிந்து துடித்து விரைந்து வினவினாள். மௌலி=முடி, கிரீ

"நினைந்தது என்? இடையூறு உண்டோ? நெடுமுடி புனைதற்கு!" என்றதில் இத்தாயினுடைய மனத்துடிப்பும் மறுக்கமும் எப்படி விளக்கப்பட்டுள்ளன! உய்த்து நோக்குக.

பரம்பரையாகத் தொடர்ந்து நெடிது நீண்டு வந்ததும், முடிமன்னர் பலரும் அடிதொழத் தக்க பெருந்திருவுடையது மாய்ச் சிறந்து நிற்றலால் "நெடுமுடி" என்றாள். விலை வரம்பில்லாத உயர்ந்த மணிகள் அழுத்தியுள்ள இரத்தின கிரீடம் என்பதும் தெரிய நின்றது.

அமைச்சர்களுடன் நன்கு ஆலோசித்து முடிபுனைய முடிவு செய்த சக்கரவர்த்தி இப்பொழுது அதற்கு மாறாக ஏதேனும் எண்ணிவிட்டாரோ? என்பாள் "நினைந்தது என்?" என்றாள். அல்லது நீயே வேறாக நினைந்துவிட்டாயோ? எனவுமாம்.

தன்மகன் மேல் மன்னன் பேரன்புடையனாதலால் அவனுக்குப் பின்னமாக யாதும் நினைந்திரான்; பின்னர் என்ன காரணம் இது? பெருந்தடை ஒன்று இடை மிடைந்திருந்தாலொழிய என் பிள்ளை இப்படி முடியிழந்து வந்திராது என முடிவு செய்து, "முடிபுனைதற்கு இடையூறு உண்டோ?" என்று இறுதியில் வினவினாள்.

அலமரலடைந்து ஐயுறவுடன் இத்தாய் இவ்வாறு வினவியபொழுது அச்சேய் உரைத்தபடியை அயலே பார்க்க.

இராமன் பதில் உரைத்தது.

மங்கை அம்மொழி கூறலும், மானவன்
செங்கை கூப்பிநின் காதல் திருமகன்
பங்க மில்குணத் தெம்பி பரதனே
துங்க மாமுடி சூடுகின்றான் என்றான். (நகர் நீங்குபடலம், 4)

இந்த இராம வாசகங்களைச் சிந்தனை செய்து பாருங்கள். உரைகள் உரிமை கனிந்து உணர்வு சுரந்து ஒளி நிறைந்துள்ளன. பெற்ற தாயுள்ளம் பேதுறாதபடி சாதுரியமாகப் பிள்ளை பேசியிருக்கிறது. தன்னுடைய நிலைமையை நோக்கி நெஞ்சம் கலங்கி முன்னம் அன்னை வினவியதற்கு இன்னவாறு பதில்வந்துள்ளது. அங்கே கைகேசி சொன்னது ஒன்றும் இங்கே சொல்லவில்லை.

இறுதி வரையும் அவளை யாதும் வெளியே காட்டாமல் ஆளி செய்துள்ளான். இந்நுட்பம் நோக்குக. வேறொரு மகனாயிருந் தால் நேரே நிகழ்ந்ததையே நிறைகுறையாமல் அறைபறையாய்க் கூறியிருப்பான். இவன் கலைநலம் கனிந்த மதிமான் ஆதலால் மாதா முன்னிலையில் இவ்வாறு மாதுரியமாக ஓதலானான். மானவன் எனக் கவி ஈண்டு இவனுக்குப் பெயர் கொடுத்திருக்கி றார். மனுக்குலத்தை மாண்புறுத்தி வானமும் வியப்ப மானம் காக்க வந்துள்ள இவனது மகிமையை அஃது உணர்த்தி நின்றது.

செங்கை கூப்பி என்றது இவன் பணிவும் பண்பும் காண வந்தது. தாய் முன் நின்று பேசும் போதெல்லாம் வாய்புதைத்து வணங்கி நிற்பது இச்சேயின் வழக்கம். இக் காட்சியைக் கண் ணூன்றிக் காணுவார் எவரும் கனிவும் இன்பமும் காணாது போகார்.

தனக்கு நேர்ந்துள்ள வனவாச நிலையை அன்னை அறிந்தால் அலமந்தயர்வளே என்று முதலில் இவன் எண்ணி மறுகினான்; பின்பு விநயமாக உரைத்து விடைபெறத் துணிந்தான். துணிந் தவன் சொற்களை அணிபெற அமைத்து அளந்து குறித்தான்.

"நின் காதல் திருமகன், பங்கம் இல் குணத்து எம்பி, பரதனே துங்க மாமுடி சூடுகின்றான்" என நாடி ஓர்ந்து நயமாகச் சொல்லி நின்றான். இவ்வுரைகளில் புதைந்துள்ள உணர்ச்சிகள் உயர்ச்சி மிகவுடையன. சூட்டுகின்றார் எனப் பிறரைச் சுட்டா மல் "சூடுகின்றான்" என்றது பரதனை இசைந்துள்ளான் என்று தெரிந்தால் அம்மை அமைந்து அடங்கி நிற்பாள் என்று நினைந்து.

உனது ஆசை நிறைந்த செல்ல மகன் என்று தொடங்கி நல்ல அடைகள் கொடுத்து மெல்ல மெல்ல இழுத்து இவ்வள்ளல் இங்ஙனம் சொல்லியது கவலை யடைந்துள்ள தாயின் உள்ளம் உவகை யடைந்து கொள்ள என்க. ஆறுதலும் தேறுதலும் ஆர்வமும் தோன்றக் கூறிய படியிது.

தாயைத் தன் வசப்படுத்த "நின் காதல் மகன்" என்றான். தன்னுடைய உள்ளன்பையும் உரிமையையும் உணர்த்த எம்பி என்றான். அவனுடைய இயல்மையும் உயர்வையும் விளக்கப்

பங்கமில் குணத்தைப் பாராட்டினான். என் தம்பி என்று சொல்லுதற்கு முன்னதாகவே நின்மகன் என்றது நினைந்து மகிழத் தக்கது. தன்னைப் பெற்ற அன்னை மனமகிழ்ந்த பொருளென்ன தாயினும் தனக்கு அது இன்பமாம் என்பதை முன்பறிய மொழிந்தான். நின் மகன் என்று மாத்திரம் கூறித் தன்னைக் குறியாது போனால் தனக்கு அவன்பால் அன்பில்லைபோலும் என அவள் நெஞ்சில் ஐயம் தோன்றும்; அதுவுமன்றி வம்பு கூறிய படியாகவும் வார்த்தைகள் தொனிக்கும் ஆகலான் எம்பி என அன்பு கனிய வுரைத்தான்.

நம் உள்ளம் கவர்ந்து உரிமை மிகுந்து உயர்குணக் குரிசிலாய் ஒளிசெய்துள்ள உத்தமன் எனப் பரதனை இவ் வரதன் கொண்டாடியிருக்கும் இது உலகம் கண்டானந்திக்க நின்றது.

தனக்குரிய பெரிய அரச திருவை இழந்து போதற்கு ஓர் காரணபூதமாய் நின்றானென யாதும் கருதியிகழாமல் அத்தம்பியை இந்நம்பி இவ்வளவு பொறுதியுடன் புகழ்ந்து போற்றி யிருக்கின்றான். இது எவ்வளவு அதிசயம்! எண்ணியுணரின் உண்ணீர்மை தெளிவாம். அண்ணன் தம்பிகள் என இக்காலத்தில் நம் கண்ணில் காணப்படும் மண்மக்களுக்கும் இப் பொன்மக்களுக்கும் உள்ள வேற்றுமையை ஊன்றி உணர்ந்தபோதெல்லாம் நாம் உள்ளம் திகைக்கின்றோம். அக்குடிப் பிறப்பிற்கும் இப்படிப் பிறப்புக்கும் இப்படி உயர்வு தாழ்வுகள் இருத்தலினாலே தான் அக்குல மக்களைத் தெய்வ ஒளிகள் என வையம் வாழ்த்தி வருகின்றது.

தன்னுடைய நிலைமையைக் கண்டு இன்னல் மீக்கொண்ட அன்னையைத் தேற்ற இன்னவாறு பரதனை எதிர்காட்டி யிருத்தலால் அச்செம்மல்பால் இவ்வம்மை வைத்துள்ள பாசமும் உரிமையும் பாரறிய வந்தன.

இங்ஙனம் இப்பிள்ளை சொன்னபொழுது அத்தாய் உள்ளம் எப்படி யிருந்தது? என்ன பதில் சொன்னாள்? சொன்னபடியை அடியில் காண்க.

கோசலை குறித்தது.

*முறைமை யன்றென்ப தொன்றுண்டு மும்மையின்*
*நிறை குணத்தவன் நின்னினும் நல்லனால்*
*குறைவி லன்னெனக் கூறினள் நால்வர்க்கு*
*மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்*

என்று பின்னரும் மன்னவன் ஏவியது
அன்றெ னுமை மகனே! உனக்கறன்;
நன்று நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து
ஒன்றி வாழுதி ஊழி பல என்றாள். (நகர் நீங்கு படலம் 5, 6)

முன்னே அச்சேய் கூறிய உரைகளைக் கேட்டு இத்தாய் இங்ஙனம் உரைத்திருக்கிறாள். உலகத் தாயர்கள் எவரிடமும் என்றும் கண்டறியாத உயர்பெருந்தன்மைகளை இங்கே நாம் கண்டு மகிழ்கின்றோம்.

தன் மகனை நீக்கிவிட்டுப் பரதனை முடி சூட்டுகின்றார் என்று கேட்டபொழுது வாட்டம் யாதும் இன்றிக் கோசலை வாய் மொழிந்திருக்கும் இது அவளது தூய வுள்ளத்தைத் துலக்கி நிற்கின்றது. சொல்லாடியுள்ள திறம் உள்ளுந்தோறும் உவகை மீதூர்கின்றது.

அரசுமுடி புனைதற்குப் பரதன் எல்லா வகையிலும் உரிமையும் தகுதியும் உடையவனே; ஆயினும் ஒருகுறை மட்டும் உள்ளது; அது எது? மூத்தவன் இருக்க இளையவன் பட்டம் கட்டிக் கொள்வது அவ்வளவு மரியாதை யன்று எனச் சாதாரணமாக உலக வழக்கில் வழங்கி வருகின்ற அவ்வழு ஒன்றேயாம்; வேறொரு குறையும் இல்லை என்று முதலில் குறித்தாள்.

"முறைமை அன்று என்பது ஒன்று உண்டு" என்று பராமுகமாய்க் கூறியது அழுத்தமாக அதனைத் தான் வற்புறுத்தவில்லை என்பதை உணர்த்துதற்கு. முறைதிறம்பாத இக்குல மரபில் முறைமை குன்ற நடக்கலாகாது என்பது தொனிக் குறிப்பு. இவ்வாறு சிறிய ஒரு குறைவைக் குறித்துவிட்டுப் பின்பு பெரியபல நிறைவுகளை யுரைத்தாள்.

மும்மையின் நிறை குணத்தவன்

என்றது அவனுடைய செயல் இயல்களை நினைந்து. மூன்று உலகங்களினும் அவனுக்கு நிகரான குணசாலிகள் வேறு யாரும் இலர் என்றவாறு. எல்லா இடங்களினும் உள்ள நல்ல குணசீலர்கள் எல்லாரையும் ஒருங்கே தொகுத்து நிறுத்தி அவருள் யார் சிறந்த குணவான் என்று சீர்தூக்கி நோக்கினால் பரதன் ஒருவனே எவரினும் அங்கே உயர்ந்து திகழ்வன் என்பதாம்.

தேவர் மனிதர் நாகர் என்னும் மூவகை இனமும் முறை முறை புகழ இவன் நிறை குணத்தனாய் நிலவி யுள்ளான் என வரையறுத்து உரைத்தபடியிது. மும்மை=மூன்று.

முறைமை அன்று என ஒரு குறையிருப்பினும் அதற்கு மும்மடங்கு குணநிறைவுள்ளது எனவுமாம். இராமன் இலக்குவன் சத்துருக்கன் ஆகிய அம்மூவர் தன்மையினும்இவன் தன்மை மேலும் உயர்வுடையது எனினுமாம். முக்காலும் இவன் நிறைந்த குணத்தவன் எனச் சத்தியம் செய்து சொல்லியபடியாகவும் இது தொனித்து நிற்கின்றது.

நின்னினும் நல்லன் என்றது அதிசய வசனம்

தான் பத்து மாதம் சுமந்துபெற்ற அருமைத் திருமகனைக் காட்டினும் மற்றொருத்தி மகன் நல்லவன் என ஒரு தாய் மனம் உவந்து பாராட்டியது மானுட இயற்கையை மிஞ்சியுள்ளது. பெண்ணுலகில் இது பெருவியப்பாகும். "காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்றபடி எவளும் தன் பிள்ளையையே மிகவும் பெருமைப்படுத்திப் பேசுவள். தீயதையும் நல்லதாக அணைத்துப் பிள்ளைப்பாசம் கொண்டாடும் தாயர் இயல்புக்கு இத்தூயவள் உரை இங்கே பெரிதும் வேறுபட்டுள்ளது.

நல்லவர் எவரினும் நல்லவன் என உலகமெல்லாம் புகழ்ந்து தொழுகின்ற இராமனைப் பார்த்து "அப்பா! உன்னினும் பரதன் நல்லவன்" என்று பெற்றதாய் அவன் முன்னிலையில் நேரே சொல்லி யிருக்கிறாள்.

இந்த வார்த்தையைக் கேட்டு இராமன் உவந்திருப்பானா? உவர்த்திருப்பனா? நின்னின் என்றதில் இன் உருபு எல்லைப் பொருளது. ஆகவே யாருக்கு நல்லவன்? சொல்லிய கோசலைக்கா? தசரதனுக்கா? அரசுக்கா? குடிகளுக்கா? உலகுக்கா? எதற்கு நல்லன்? இவ்வாறு பலவகை நிலைகளையும் உறவுரிமையுடன் ஆராய்ந்து முடிவு செய்யும்படி இவ்வாக்கியம் முடிந்திருக்கிறது.

நின்னினும் நினக்கு நல்லன் எனவும் இது நினைக்கவுள்ளது. இராமனுக்கு நன்மை நாடுவதில் அவனினும், பெற்றதாயாகிய தன்னினும், தந்தையினும், பரதன் மிகவும் முதன்மையுடையவன் என்பதாம். அவன் உயிர்க்குயிராய் இவன் உயிர்த்திருக்கிறான்.

இராமன் பரதனைப் புகழ்ந்து முதலில் சொன்னதை உடன் பட்டு அவன்பால் தனக்குள்ள நன்கு மதிப்பையும் அன்பையும் இங்ஙனம் வெளிப்படுத்தினாள்.

இந்த அன்னையிடம் எப்பொழுதும் அடக்கமும் பணிவும் உடையனாய்ப் பரதன் ஒழுகி வந்துள்ளான்; அந்த அமைதியும் பண்பும் இவளது உள்ளத்தை இப்படிக் கவர்ந்திருக்கின்றன.

நின்மகன், பங்கம் இல்லாதவன், எம்பி என இராமன் முன்னே சொன்னான்; அந்த மூன்றிற்கும் ஈடாகக் குறைவிலன், நிறைகுணத்தவன், நின்னினும் நல்லன் என்று தாய் இவ்வாறு சொல்லியருளினாள்.

இருவருடைய உரையாடல்களிலும் உள்ளப் பண்பும் உயர் பெருந் தன்மைகளும் உணர்வு சுரந்துள்ளன. பிள்ளை மொழியினும் தாயுரை உள்ளம் வியப்ப உயர்ந்திருக்கிறது.

நால்வர்க்கும், மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றுவாள் என ஈற்றில் ஏற்றமான ஒரு பெயரைச் சூட்டி இவ்வம்மையின் செம்மையையும் தன்மையையும் கவி நமக்குக் காட்டியிருக்கிறார்.

இவ்வண்ணம் சொன்னவள் மேலும் தன்பிள்ளைக்கு அறிவு புகட்டி யிருக்கிறாள்.

2. ஐயா! உன் தந்தை கட்டளைப்படி நடப்பதே உனக்குத் தருமம் ஆதலால் அரசுரிமையைத் தம்பிக்குக் கொடுத்துவிட்டு நீ தனியமர்ந்து அரிய கலைகளை ஆராய்ந்து கொண்டு இனிது வாழ்ந்து வருக என்று உறுதி சூழ்ந்து உரிமை கனிய மொழிந்தாள்.

மகனே! மன்னவன் ஏவியது அன்று எனுமை உனக்கு அறன் என்றதனால் சக்கரவர்த்தியே பரதனுக்கு அரசுமுடி சூட்ட உறுதி செய்திருக்கிறார் எனக் கோசலை கருதியுள்ளமை அறியலாகும்.

தந்தையைக் குறித்து யாதும் சொல்லாமல் தம்பியைச் சுட்டியே மைந்தன் நயமாகப் பேசியிருக்கிறான்; இருந்தும் இந்தக் காரியம் இப்படித்தான் நடந்திருக்கும் என்று ஊகம் செய்து கொண்டு பாகமாக இவ்வன்னை இன்னவாறு உரைக்கலானாள்.

அரசன் ஏவியது எதுவாயினும் அது சரியா? தப்பா ? என்று ஆராயாதமைவதே அறம் என்ற அந்த வாக்கியத்தில் இது மன்னன் ஏவியதன்று ; ஆயினும் மறாதே என்று கோசலை நினையாமலே வினை நிகழ்ச்சியை விளக்கி உரைகள் ஊடுருவிக்கிடக்கின்றன.

இந்தப் பயல் நம் உரிமையைக் கவர்ந்து கொண்டானே என்று பகைமைகொள்ளாமல் உவகை கொண்டு உரிமைகூர்ந்து உடனமர்ந்து வாழ்க என்பாள், “ஒன்றி வாழுதி” என்றாள்.

ஊழி பல என்றது என்றும் சிரஞ்சீவியாய் இனிது வாழ்ந்திருக்கவேண்டும் என்றவாறு. தன் பிள்ளை வாழ்வில் அவ்வுள்ளங் கொண்டுள்ள பேராவல் இப்பல்லாண்டால் அறியலாம்.

தனக்கு நேர்ந்துள்ள நிலையை அறிந்தால் அன்னை என்ன பாடுபடுவளோ என ஏங்கிவந்த இராமன் இன்னவாறு அவள் சொன்னதைக் கேட்டதும் உளமிக மகிழ்ந்து மேலுள்ளதையும் சொல்லத் தொடங்கினான். சொல்லியிருக்கும் நிலை உள்ளியுணரற்பாலது. அடியில் வருவது.

தாயுரைத்த சொற் கேட்டுத் தழைக்கின்ற
தூய சிந்தைஅத் தோமில் குணத்தினான்
நாய கன்எனை நன்னெறி உய்ப்பதற்கு
ஏய துண்டொர் பணிஎன் றியம்பினான். (நகர் நீங்கு, 7)

நாடிழத்தல், காடுபோதல் என்னும் இரண்டனுள் ஒன்றை உரைத்து அன்னை உள்ள நிலையை முன்னுற உணர்ந்தான்; அடுத்ததை இப்படிக் குறித்திருக்கிறான்.

நாயகன் என்றது தசரதனை. தந்தை என்றோ, சக்கரவர்த்தி என்றோ உரையாமல் இந்த வண்ணம் குறித்தான். தாய் முன் நின்று பேசுகின்றான் ஆதலால் அவளது உரிமை தொனிக்க வந்தது. உனக்கும் எனக்கும் உலகுக்கும் நாயகன் என்றவாறு.

தனக்கு விதித்துள்ள நாடு கடத்தலை வெளிப்படையாக மொழியாமல் அழகுபடுத்தித் தாயின் சம்மதம் பெறச் சாதுரியமாக உரைத்திருக்கிறான். உரையாடலில் இத்தனயன் கையாண்டிருக்கும் இனிய வினயம் நுணுகி நோக்கத்தக்கது.

"என்னை நன்னெறி உய்ப்பதற்கு நாயகன் ஏயது ஓர் பணி உண்டு" என இனிது மொழிந்தது பணிவில் வளர்ந்தது. மன்னவன் பணித்ததை யாதும் மறாது செய்வதே உனக்குப் புண்ணியமாம் என்று அன்னை முன்னம் சொன்னமையால் அதனை அடியொற்றி ஏவிய பணி உண்டு என ஈண்டு இசைக்க நேர்ந்தான்.

புன்னெறியில் புகுந்து புலையாடாமல் தன்னை மன்னர்பிரான் நன்னெறியிற் செலுத்தியிருப்பதாக இம் மகன் சொன்னது அன்னை வருந்தாது இருக்கவே; ஆயினும் என்ன நிலைகளையெல்லாம் தன்னுள்ளத் தெண்ணி இன்னவாறு இசைத்தான்? என உள்ளுறை மருமங்களை ஊன்றி ஆராயும்படி இது தோன்றியுள்ளது. தான் செல்லும் நெறியே எல்லா நலங்களையும் நல்க வல்லது என்பான் "நல்நெறி" என்றான்.

இவ்வாறு கூறவே, "அது என்ன பணி ஐயா?" என்று இந்த அம்மை ஆவலுடன் கேட்டாள்.

இந்த இடத்தில் உள்ளதை ஒளியாமல் முழுவதும் தெளிவாக உரைக்கவேண்டும்; உற்றது வெளியானல் பெற்றதாய் பெருந் துயருறுவளே! என்று மறுகி வருந்தினன்; ஆயினும் மனந் துணிந்து நளினமாக மொழிந்தருளினன்.

அம்மா! சிறந்த தவசீலர்களான ஞானிகளுடன் நான் பழகினல் நல்ல குணநலங்கள் எனக்கு உண்டாகும் என ஐயா கருதியுள்ளார்; அதனுல் அம்மாதவர் வசிக்கும் கானகத்தில் போய்ச் சில காலம் தங்கியிருந்து மீண்டு வரவேண்டும் என்று கட்டளையிட்டிருக்கிறார்கள்" என இப்படி இக்கட்டழகன் கட்டுரைத்தான். அவ்வுரை காதில் விழுமுன்னரே இம் மாதா மண்ணில் விழுந்தாள்.

ஆங்கவ் வாசகம் என்னும் அனல்குழை
தூங்கு தன்செவி யில்தொடரா முனம்
ஏங்கினள்; இளைத்தாள்; திகைத்தாள்; மனம்
வீங்கினள்; விம்மினள்; விழுந் தாளரோ!

(நகர் நீங்குபடலம், 9)

அன்று கோசலை பட்டுள்ள பாட்டை இப்பாட்டு இன்றும் நம் கண்ணெதிரே காட்டி நிற்கின்றது. ஏங்குதல் முதலாகத் தோன்றியிருக்கும் மெய்ப்பாட்டால் இவளது உள்ளப் பதைப்பும் பிள்ளைப் பிரியமும் உணரலாகும். செவியையும் நெஞ்சையும்

நேரச் சுட்டெரித்த துயரநிலை தெரிய வாசகம் அனல் எனவந்தது. கவிகளில் எழுகின்ற உவமை உருவகங்கள் உயிர்களின் அக நிலைகளை வியனிலையில் விளக்கிவருகின்றன. அவலத் துயரால் இங்ஙனம் அலமந்து வீழ்ந்தவள் அல்லலோடெழுந்து தன் செல்ல மகனைப் புல்லி உள்ளம் உருகிப் புலம்பினாள். அப் பரிதாப வுரைகளும் பதைத்த நிலைகளும் அடியில் வருவன.

தாய் தவித்து மொழிந்தது.

வஞ்சமோ மகனே! உனை மாநிலம்
தஞ்ச மாகநீ தாங்கென்ற வாசகம்?
நஞ்ச மோவினி நானுயிர் வாழ்வெனோ
அஞ்சும் அஞ்சும்என் ஆருயிர் அஞ்சுமால். (1)

கையைக் கையின் நெரிக்கும் தன்காதலன்
வைகும் ஆலிலை யன்ன வயிற்றினைப்
பெய் வளைத்தளி ராற்பிசையும் புகை
வெய்து யிர்க்கும் விழுங்கும் புழுங்குமால். (2)

நன்று மன்னன் கருணை யெனாநகும்;
நின்ற மைந்தனை நோக்கி நெடுஞ்சுரத்து
என்று போவதெ னஎழும்; இன்னுயிர்
பொன்றும் போதுற்ற துற்றது போலுமே, (3)

அன்பிழைத்த மனத்தர சற்கு நீ
என்பிழைத்தனை என்றுநின் றேங்குமால்
முன்பி ழைத்த வறுமையின் முற்றினோர்
பொன் பிழைக்கப் பொரிந்தனர் போலவே. (4)

அறம் எனக்கிலை யோஎனும், ஆவிநைந்து
இற விடுத்ததென் தெய்வதங்காள்! எனும்,
பிற வுரைப்பதென்? கன்று பிரிந்துழிக்
கறவை யொப்பக் கரைந்து கலங்கினாள். (5)

(நகர் நீங்கு படலம், 10.14)

அரசி உள்ளம் துடித்து இங்ஙனம் உரையாடி யுள்ளாள். உரைகளில் பரிவும் பரிதாபங்களும் பரந்தொளிர்கின்றன.

"தனியே சும்மா இருந்த அருமை மகனை வலிய அழைத்து வைத்து அரசுமுடி சூட்டுவதாக உலகம் அறியச்செய்து, இன்று

காட்டுக்குப் போகும்படி கடுத்து முடுக்கி யிருக்கிறாரே! இது சிங்காரித்து மூக்கறுத்ததுபோலல்லவா? இது எவ்வளவு அவமானம்? என் பிள்ளையை நாடு சிரிக்கும்படி நிறுத்தி இப்படிக் கபட நாடகம் நடிக்கலாமா?'' என்று அவல மீதூர்ந்து துடித்திருக்கிறாள். முதலிலுள்ள கவியைப் படித்துப்பார்த்தால் இவ் இன்னல் நிலையைக் கண்ணில் காணலாகும்.

மகனே! உனை மாநிலம் தாங்கு என்ற வாசகம் வஞ்சமோ?

என நெஞ்சங் குமிறியுள்ள இதில் நினைவுகள் பல நிலவி நிற்கின்றன. முடிசூடும்படி உண்மையாகச் சொல்லியிருந்தால் இப் புன்மை தோன்றாதென்று கருதிஅரசன் முதலில் செய்தது வஞ்சம் என்று குறித்தாள்.

மகனது மகுடாபிடேகச் செய்தியை முன்னம் அறிந்தபொழுது அமிர்தம் உண்டவள்போல் உவகை மீக்கொண்டாள் ஆதலால் அதற்கு மாறான இதை நஞ்சமோ என்று நடுங்கித் தவித்தாள்.

துயரம் பொறுக்கமாட்டாமல் உள்ளம் உடைந்து உயிர் அழிந்தே போம் என்பாள் நான் உயிர் வாழ்வேனோ! என்றாள். அலமரலடைந்து உயிருழந்த அவல நிலையை அஞ்சும் அஞ்சும் என்று அலறியுள்ளமையால் அறியலாகும்.

கையை நெரித்தல், வயிற்றைப் பிசைதல், வெய்துயிர்த்தல், விழுங்கல், புழுங்கல்கள் துன்பம் நேர்ந்தபொழுது பெண்கள் படும்பாட்டைக் கண்கள் எதிர்காட்டின.

ஆலிலையை மகளிர் வயிற்றுக்கு உவமை கூறுதல் கவி மரபு.

தொந்திபடின் அரிவையர் அந்தம் கெடும் என முந்தையோர் கருதியிருத்தலால் இந்த நாடு பெண்ணழகை எண்ணி வண்ணம் வரைந்து கண்ணூன்றி வந்துள்ளமை காணலாகும்.

துயர நிலையிலும் அரசி வயிற்றைக் குறித்துக் கூறுங்கால் கவின் கனிய நம் கவியரசர் இரசனையை விளைத்திருக்கிறார். "இலைபைத்தளிரால் பிசையும்" என்றது வயிற்றோடு கையழகும் காண வந்தது. காதலன் = மகன்.

காதலன் வைகும் ஆல் இலை அன்ன வயிறு

என்றதில் இருபொருள் உள்ளது. முன்பு திருமால் ஆலிலையில் அமர்ந்திருந்ததையும், பின்பு இராமனுக் கருவடைந்துள்ளதையும் ஒருங் குணர நின்றது.

உலகிலுள்ள சாதாரண ஆல இலை கோசலை வயிற்றுக்கு ஒப்பாகாது; ஆதியில் திருமால் பள்ளிகொண்டிருந்த அத்திவ்விய ஆலிலையே உவமையாம் என்பதாம். புதிய பிறப்பிடத்திற்குத் தன் பழைய இருப்பிடத்தை அப்பெருமான் முன்னதாகவே விருப்புடன் அனுப்பியிருந்ததுபோல் தொனித்திருக்கிறது.

"மாலை யந்துழாய் மரகதப் பசும்புயல் வளர்வான்
கோல வாலிளந் தளிரின்மேல் விழைதலென்? குறிக்கேன்
சேலு லாவுகண் தேவகி திருவயிறு அந்த
ஆலி ளந்தளிர் போலுமென் றடைகுதல் போன்மால்."
(பாகவதம், 10-1, 33)

தேவகி வயிற்றில் கண்ணன் பிறந்ததற்குக் காரணங் கூறிய படியிது. தான் முன்னம் துயின்ற ஆலிலைபோல் அவ்வன்னை வயிறு இருந்தமையால் அதனை விழைந்து வந்து புகுந்தான் என்பதாம். நம் கவியோடு கருத்து இணைந்திருத்தலான் ஈண்டு இது எண்ண வந்தது. வெறும் சரித்திரத்தை மட்டும் சொல்லிப் போகாமல் உணர்ச்சியும் சுவையும் விளைத்துக் கவிகள் இங்ஙனம் உவகையூட்டியிருக்கின்றனர்.

அல்லல்நிலையைச் சொல்லும் பொழுதும் மொழிகள் அருமைக்காட்சியை அறிவுறுத்திச் செல்லுகின்றன.

வயிறும் கையும் மருவிப் பிசைந்தது, "நீ பத்து மாதம் வைத்திருந்தாய்; நான் நாற்பது திங்களாகத் தாங்கித் தழுவி அணைத்து வளர்த்தேன்; அந்தத் தெய்வக்குழந்தையை வெய்ய காட்டுக்கு விரட்டுகிறார்களே! ஐயோ அம்மா!" என்று இரண்டும் கட்டிப்புரண்டு கதறித் துடித்தபடியாய்க் காட்சிதந்துள்ளது.

இவ்வண்ணம் பதைத்துத் துடித்தவள் மேலும் பரிந்து புலம்பினள். நாயகன் அருள் செய்திருப்பது மிகவும் நன்றென இகழ்ச்சிக்குறிப்புடன் வெறுத்துச் சிரித்தாள்; மகனை நோக்கி ஐயா! நீ எப்பொழுது காட்டுக்குப் போகின்றாய்! என்று கலுழ்ந்து கதறினள்; மரணவேதனையாய் மறுகி அயர்ந்தாள்;

மன்னர்பிரான் இன்னவாறு பின்னமுறும்படி என்பிள்ளை என்ன பிழை செய்தது? ஐயோ எனக்குப் புண்ணியம் துணையில்லையா? நான் யாருக்கு என்ன பாவம் பண்ணினேன்? ஆ தெய்வங்களே! என்று அல்லல் மீதூர்ந்து குலைதுடித்து இத்தாய் அன்று அடைந்த அலமரல் நிலைகள் அளவிடலரியன.

கொடிய வறுமையுடையவர் இடையே பெரும் பொருள் கைவரப்பெற்று மீண்டு அதனை இழக்க நேர்ந்தால் எப்படித் துயருறுவரோ அப்படி வருந்தினள் என்பார், "வறுமையின் முற்றினோர், பொன் பிழைக்கப் பொரிந்தனர்போலவே" என்றார்.

நீண்ட காலம் மலடிருந்து பெற்ற அருமைப் பிள்ளையை இடையே பிரியநேர்ந்த அல்லல் நிலையை உணர்த்தற்கு இவ்வுவமையை உரைத்தார். உள்ளம் எரிந்து உயிர் துடித்துள்ளமை இதனால் உணரலாகும்.

இராமன் இங்கே போனான் என நின்றான். புகழ் புண்ணியங்களை விளைத்து இருமையினும் பெருமைதரவல்ல அருமைப் பொருள் போல் அம்மகன் இத்தாய்க்கு அருள் புரிந்திருந்தான் என்க. இன்பமூற்றான தன் பொருளை அன்போடு ஆதரித்து வந்தவள் இன்று அது அயலகல நின்றமையால் இங்ஙனம் துயரடைந்து நொந்தாள். இத்தாய் வாய்திறந்து புலம்பியிருப்பதில் ஒரு வெய்யசொல்லும் புகாமல் தெய்வங்களும் தருமங்களும் மருவியுள்ளமையால் உள்ளத்தின் உயர் நிலை யுணர நின்றது.

கறவை ஒப்பக் கரைந்து கலங்கினாள்

என்னும் இவ்வுவமை பின்னுள் வந்துள்ளது. கறவை = பசு. மலட்டுப் பசுக்களும் ஈற்றுமாறினவும் உள்ளன ஆகலான் அவற்றினும் வேறுபாடு தெரியக் கறவை என்றார். ஈன்று அணிமையான கன்றுடையதாய்ப் பால் கறந்து வருவது என்னும் பருவ நிலை தெரியவந்தது. "சேதா, முலைபொழி தீம்பால் எழுதுகள் அவிப்பக், கன்று நினைகுரல மன்று வழிப்படர" (மணிமேகலை, 5) என்றதனால் அதன் பிள்ளைப்பாசமும் உள்ளக்கசிவும் உணரலாகும்.

"கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே" எனப் பேரன்புடைய மாணிக்கவாசக சுவாமிகளும் இந்த ஆவின் கசிவைத் தனக்கு அருளும்படி ஆண்டவனை வேண்டியிருக்கிறார்.

ஈன்ற கன்றின்பால் பரவசமான ஓர் அதிசய அன்பு பசுவினிடம் இயல்பாக இனிதமைந்திருத்தலால் பேரிரக்கத்திற்கும் உருக்கத்திற்கும் அது ஓர் எடுத்துக்காட்டாக வந்தது.

"கறவை கன்றிழந்த போன்றுங் கிடந்தழுகின்ற கண்ணார்"
(சிந்தாமணி, 1283)

"கன்றிழி கறவையிற் சென்றவண் எய்தி" (பெருங்கதை, 1-56)

"கன்று தடையுண் டெதிரழைக்கக் கதறிக் கனைக்கும் புனிற்றாப்போல்"
(பெரிய புராணம், 43-135)

"கறவை கன்றுவயிற் படர" (குறுந்தொகை, 108)

"கறவைதம் பதிவயிற் கன்றமர் விருப்பொடு" (கலி, 119)

என வருவன காண்க. அன்புறு பரிவிற்குக் கன்று பிரி கறவையை இவ்வாறு நூலோர் உவமையாகக் கூறியிருக்கின்றனர்.

தன் பிள்ளைப் பிரிவை நினைந்து உள்ளம் உருகி உணர்வழிந்து துயருழந்து உரைகள் பதறிக் கதறினாள் ஆதலால், "கரைந்து கலங்கினாள்" என்றார்.

இங்ஙனம் மறுகி மயங்கிய தாயை இராமன் தொழுது போற்றி உறுதிபல கூறி உள்ளம் தேற்றினான். அன்னை ஆறுதலடைந்தருளும்படி மகன் தேறுதல் கூறியுள்ள நிலைகளை அடியில் காண்க.

இத்திறத்தின் இடருறுவாள் தனைக்
கைத்தலத்தின் எடுத்தருங் கற்பினோய்!
பொய்த்திறத்தினன் ஆக்குதியோ புகல்
மெய்த்திறத்துநம் வேந்தனை நீ என்றான். (1)

பொற்புறுத்தன மெய்ம்மை பொதிந்தன
சொற்புறுத்தற்குரியன சொல்லினான்
கற்புறுத்திய கற்புடையாள் தனை
வற்புறுத்தி மனங்கொளத் தேற்றுவான். (2)

சிறந்த தம்பி திருவுற எந்தையை
மறந்தும் பொய்யிலன் ஆக்கி வனத்திடை
உறைந்து மீளும் உறுதிபெற்றேன் இதிற்
பிறந்து யான்பெறும் பேறென்பதியாவதே? (3)

விண்ணும் மண்ணுமிவ் வேலையும் மற்றும்வே
றெண்ணும் பூதம் எவையும் இறந்திலும்
அண்ணல் ஏவல் மறுக்க அரியனோ
ஒண்ணுமோ? இதற்குள்ளழியேல் என்றான். (4)

(நகர்நீங்கு படலம், 15-18)

மேலே குறித்த உறுதிமொழிகளால் இராமனுடைய உள்ளக் கிடக்கைகள் உணரநின்றன. உரைகளில் பொதிந்துள்ள அறிவு நலங்கள் நிறைபெருங்குணங்களோடு ஒளிசெய்து மிளிர்கின்றன. தம்பியிடமும் தந்தைபாலும் இந்நம்பி கொண்டிருக்கும் அன்பும் பணிவும் என்றும் எவர்க்கும் இன்பம் பயக்கும். வனம் போகின்ற தன் மனநிலையை மைந்தன் இவ்வண்ணம் உணர்த்தவே மறுகிநின்ற தாய் பரிவு மீதூர்ந்து தன்னையும் உடனழைத்துப் போகும்படி வேண்டினள்.

கோசலை வேண்டியது

ஆகின் ஐய! அரசன்றன் ஆணையால்
ஏகல் என்பது யானும் உரைக்கிலென்;
சாக லாவுயிர் தாங்கிநின் றேனையும்
போகின் நின்னொடும் கொண்டனை போஎன்றாள்.

அம்மா! தந்தை சொல்லைத் தட்டலாமா? அவர் இட்ட கட்டளைப்படியே நான் நடக்கவேண்டும்; விண்ணும் மண்ணும் நிலை குலைந்தாலும் அண்ணல் ஏவலை மறாமல் ஆற்றும்படி என்னை ஆசீர்வதித்தருளுங்கள் என்று பிள்ளை உள்ள நிலை கூறவே, தாய் மாறு கூறமாட்டாமல் இதில் மறுகியுரைத்தாள். இருவருடைய உரைகளிலும் அறிவும் பரிவும் மருவி மன்றாடுகின்றன.

வனம் போக மகன் மனந்துணிந்துள்ளமையை முடிவாகத் தெரிந்துகொண்டமையால் முடிவில் தானும் உடன்போக முடிவு செய்தாள். பிள்ளைப்பிரிவு உள்ளத்தை எரித்து உயிரை வதக்கியுள்ளமை உரையால் அறியவந்தது.

சாகலா உயிர் தாங்கி நின்றேனை

என்றதனால் இவ்வன்னை அடைந்துள்ள துயர நிலையின் அளவறியலாகும். "இராமையா! உன்னைப்பிரிந்து நான் இங்கு உறைந்திரேன்; என்னையும் உடன் அழைத்துப்போ" என்று தாய் தவித்து நின்றாள். உடன் தொடர உறுதிகொண்டு இங்ஙனம் உரையாடிய தாய்க்கு மகன் பதில் உரைத்தான். மதிநலம் கனிந்த அவ்வெதிர் மொழிகள் அடியில் வருவன.

இராமனது உறுதியுரை

என்னை நீங்கி இடர்க்கடல் வைகுறும்
மன்னர் மன்னனை வற்புறுத் தாதுடன்
துன்று கானம் தொடரத் துணிவதோ
அன்னையே அறம் பார்க்கிலை யாமென்றான். (1)

வரிவில் எம்பியிம் மண்ணரசாயவற்கு
உரிமை மாநிலம் உற்றபின் கொற்றவன்
திருவி னீங்கித் தவஞ்செயும் நாளுடன்
அருமை நோன்புகள் ஆற்றுதி யாமன்றே. (2)

சித்தம் நீதிகைக் கின்ற தென்? தேவரும்
ஒத்த மாதவம் செய்துயர்ந் தாரன்றே
எத்த னைக்குள ஆண்டுகள் ஈண்டவை
பத்து நாலும் பகலலவோ என்றான். (3)

முன்னர்க் கோசிகன் என்னும் முனிவரன்
தன்னருட்டலை தாங்கிய விஞ்சையும்
பின்னர் எய்திய பேறும் பிழைத்தவோ
இன்னம் நன்றவர்க் கேயின செய்தலே. (4)

மாதவர்க்கு வழிபாடிழைத்தரும்
போதம் முற்றிப் பொருவரு விஞ்சைகள்
ஏத மற்றன தாங்கி இமையவர்
காதல் பெற்றுநன் காவரக் காண்டியால்! (5)

மகரவேலைமண் தொட்ட வண்டாடுதார்ச்
சகரர் தாதை பணிதலை நின்று தம்
புகரில் யாக்கையின் இன்னுயிர் போக்கிய
நிகரில் மாப்புகழ் நின்றதன்றோ வெனு; (6)

மான் மறிக்கரத் தான்மழு வேந்துவான்
தான்மறுத்திலன் தாதைசொல் தாயையே
ஊனறக்குறைத் தான்உர வோனருள்
யான் மறுப்பதென் றெண்ணுவதோ வென்றான். (7)

(நகர்நீங்கு படலம், 20-26)

தான் வனத்துக்குப்போவதை வலுயுறுத்தித் தாயின் மனத்தைத் தேற்றியிருக்கும் மகனுடைய உரையாற்றலையும் உள்ளத் துணிவையும் இங்கே ஒருங்கே காண்கின்றோம். ஒருவன் வாய்ச்சொல் அவனது உண்மை நிலையை வெளிப்படுத்துகின்றது. இப் பேச்சில் வாதவன்மையும் போதனையும் நீதிமுறைகளும் நிறைந்திருக்கின்றன. உரைநிலைகளை ஓர்ந்து உணர்ந்துகொள்க.

உன்னைப் பிரிந்திருக்கமாட்டேன்; நானும் உடன் வருவேன் என்று அன்னை சொன்னபொழுது அதற்குப்பதில் முதலில் சொல்லினான். பின்பு பல குறிப்புக்களையும் நலமுற வுரைத்

திருக்கிறான்: "தலைமகனைப் பிரிந்து தனியே வருந்தியிருக்கும் தந்தையை நீங்கள் அயலிருந்து ஆற்றி ஆதரிக்கவேண்டும். என்னுடன் தொடர்வது இனிதாகாது; தம்பிக்கு அரசுமுடி புனைந்துவிட்டு ஐயா வானப்பிரத்தராய்த் தவச்சாலையில் அமருங்கால் தாங்களும் உடனுறைந்து பணிவிடை புரிந்து தவவிரதங்கள் தொடங்கலாம். அதுவரையும் அமர்ந்திருங்கள். நான் தனியாகவே வனம் போகவேண்டும். தாங்கள் மனங்கலங்கவேண்டா. வனவாசத்தால் எனக்கு உயர்நலங்கள் பல உளவாகும். தனிமையாயிருப்பது இனிமையானது; அது மனிதனைப் புனிதப்படுத்தி மாண்பு மிகச் செய்யும். இப்பொழுது ஊரறியவுள்ள நான் பின்பு உலகம் அறிய வருவேன்; உன் பிள்ளை பெருமையடையப் போகின்றது; அதனை உணர்ந்து நீ உள்ளம் உவந்துகொள்ளவேண்டும்; இடையே தடை செய்யலாகாது; விடை தந்தருளுக; விரைவில் மீண்டு வந்துவிடுவேன்; ஆண்டுகள் பதினான்கு நாளாகவே கழிந்துபோம்; நாட்டிலுள்ளவர்களைக் காட்டிலும் அங்கு எங்கும் நல்லவர்கள் உள்ளனர். மாதவர்களுடைய பழக்கம் மகிமை மிகவுடையது; முன்னர்க் கோசிக முனிவருடன் போனேன்; எனக்கு எவ்வளவு பெருமை கிடைத்தது! அரிய வித்தைகள் கண்டேன்; திருமணம் கொண்டேன்; பெருமைகள் பல பெற்றேன்; உனது அருமை மருமகளுடன் ஊருக்கு வந்தேன். அச்சீரையும் சிறப்பையும் நீ நேரில் கண்டாய்! அருந்தவர் ஒருவருடன் சிலநாள் பழகியதில் இவ்வளவு பெருந்திருவுகளை அடைந்தேன்; இனிப் பலருடன் பலநாள் பழகும் பாக்கியம் எனக்கு இன்று அமைந்துள்ளது; இதனால் உளவாகும் நன்மைகளை நீ நோக்கியருளவேண்டும் அம்மா! விண்ணவர்களும் வியந்து புகழ எண்ணரிய நலங்களை நான் எய்திவருவேன். தாதை ஏவியதைச் செய்வதில் யாதொரு பலனும் நேரே இலதாயினும் அதனை மாதவமாக மதிக்கவேண்டும். "மன்னன் ஏவல் மறுமை உனக்கு அறம்" என முன்னமே நீங்கள் எனக்கு உபதேசித்திருக்கிறீர்கள். இருந்தும் பிள்ளைப் பாசத்தால் மறுகுகிறீர்கள். நம் முன்னோரெவரும் தந்தை பணியைத் தவறாது செய்துவந்திருக்கிறார்கள். தம் பிதாவின் ஏவலை நிறைவேற்றுவதில் நம்குலதிலகரான சகரர் உயிரையேயிழந்திருக்கின்றனர். நமது குலவிரோதியான கொடிய பரசுராமரும்

தந்தை சொல்லைக் கேட்டுத் தாயையே கொன்றிருக்கின்றார்; இந்த வண்ணம் எல்லாரும் இனிது செய்திருக்கிற பணியை நான் இகழ்ந்து விடலாமா? புண்ணியவதியான உங்கள் வயிற்றில் பிறந்தும் வரன்முறை தவறி வழுவுற வொழுகல் பெரிதும் பழுதாம். இவற்றையெல்லாம் எண்ணி யருளி எனக்கு உடனே விடை யளி அம்மா!" என அன்னையிடம் இராமன் இன்னவாறு தன் கடமையை விளக்கிக்கனிந்து பேசியிருக்கிறான். இப்பேச்சில் உணர்ச்சியும் உருக்கமும் உரிமையும் உறுதி நலங்களும் ஊடுருவி ஒளிர்கின்றன. தருக்க நீர்மையும் ததும்பி நிற்கின்றது.

தன்னுடன் வனத்துக்கு வருவதாக மனத்துயருடன் துணிந்த மாதாவைத் தடுத்து ஆதாரங்கள் பல எடுத்துக்காட்டித் தன் உள்ளத் துணிவை உறுதிபெற உணர்த்தியிருக்கும் இதில் 'ல் உள்ள இரண்டு குறிப்புக்கள் கருதி யுணரத் தக்கன.

தந்தை பணியைத் தவறாது செய்தவராகச் சகரரையும், பரசுராமனையும் எதிர்காட்டியிருக்கிறான். இக்காட்டுகள் கடினமானவை; தன் குறிக்கோளை வலியுறுத்த இவ்வாறு வரைந்து குறித்தான். முன்னது தனது மாபுரிமை தெரிய நின்றது; பின்னது உலகநிலை உணர வந்தது.

சகரர் தாதை பணி செய்தது.

சகரமன்னன் அசுவமேத யாகஞ்செய்ய நேர்ந்தபொழுது அவ்வேள்விக்குரிய பரியை இந்திரன் கவர்ந்துகொண்டுபோய்க் கபிலமுனிவரிடம் கரவாக வைத்து மறைந்துபோனான். மன்னன் மறுகினான். அருகிருந்த மக்களை நோக்கி எங்கிருந்தேனும் குதிரையைக் கொண்டுவரும்படி பணித்தான். அவர் விரைந்து சென்று கபிலரிடங் கண்டார்; இனந்தெரியாமல் வெகுண்டார்; முனிவர் முனிந்தார்; அம்முனிவில் அனைவரும் அடியோடு மடிந்தார் ஆதலால் " தாதை பணி தலைநின்று தம் இன்னுயிர் போக்கிய சகரர் " என அவரை இங்கே எடுத்துக்காட்டினான்.

பரசுராமர் தந்தை பணி புரிந்தது.

பரசுராமருடைய தந்தை பெயர் சமதக்கினி. தாய் இரேணுகை. அவள் சிறந்த குணவதி. பேரழகுடையவள். ஒரு

நாள் நீர் கொண்டுவரும் பொருட்டு கங்காநதிக்குச் சென்றிருந்தாள். அவ்வமயம் அங்கே சித்திரரதன் என்னும் கந்தருவன் தனது இனிய மனைவியருடன் உல்லாசமாய் நீராடிக்கொண்டிருந்தான். அவன் சர்வாங்கசுந்தரன். அவனது உருவ எழிலை நோக்கி இவள் உளமிக வியந்து சிறிது நின்ற பின்பு, "சீ இது என்ன நெஞ்சு!" என்று தன்னை இகழ்ந்து தண்ணீர்க்குடத்தை எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தாள். வரவே இதனை விரகுடன் உணர்ந்துகொண்ட கணவன் இவளைக் கடுத்து வெகுண்டு அடுத்து நின்ற மூத்தமகனை உருமண்வான் என்பவனைப் பார்த்து "நிறையழிந்த இவளை நேரே கொலை புரிக" என்று குறித்தான். அவன் மறுத்தான். அதன்பின் சுசேணன், வசு, விசுவாவசு என்னும் புதல்வர் மூவரையும் ஏவினன்; அவர் யாவரும் இசையாது அகன்று போயினர். இறுதியில் இளைய மகனை பரசுராமனை நோக்கி "வீர மகனே! எனக்கு மாறுபாடான இந் நால்வரையும் இப்பொழுதே கொன்று தொலை" என்றான். அவன் அப்படியே விரைந்து பாய்ந்து தன் மழுவாயுதத்தால் வெட்டி வீழ்த்தினன். தந்தை கண்டு சிந்தை கலங்கினன்; பின்பு தெளிந்து நின்று மகனை அணைத்து மனமிகவுருகி "எனது அருந்தவம் முழுவதும் உனக்குத் தருவேன்; யாது வரம் வேண்டும்? அருள்க" என்றான். முனிவன் முகத்தை அவன் இனிது நோக்கினன்: "தந்தாய்! இறந்துபட்ட எனது அருமைத் தாயும், தமையன்மாரும் எழுந்துவரவும், பின்பு யாண்டும் அவர் மரணபயம் இல்லாதிருக்கவும் அருள்புரியவேண்டும்" என அன்புடன் வேண்டினன். தந்தையார் அவ்வாறே தந்தருளினர். தரவே மாண்டு விழுந்த நால்வரும் மீண்டெழுந்தார். அனைவரும் வியந்தார்; அருந்தவ நிலைமையை மகிழ்ந்து அமரரும் புகழ்ந்தார். தந்தை சொல்லைக்கேட்டுத் தாயையே கொன்று தகவுபுரிந்த அம்மைந்தனது மனநிலையையும் மதிநலத்தையும் யாவரும் வியந்து பாராட்டி நின்றனர். இவ்வரலாறு வியாச பாரதத்திலும், பாகவதத்திலும், விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

"தன்னுரை வழாத மைந்தன் தனை நனி உவந்து தாதை
உன்னுளம் விழைந்தது என்கொல்? உதவுதும் பெறுதி என்ன
இன்னெழிற் பரசுராமன் இறந்தவர் பிழைப்ப என்னின்
மன்னிய திறப்பென்று எண்ணுது இருப்பதீ வரம் ஈ என்றான்;

மைந்தன் அங்கு உரைத்தவண்ணம் மாதவன் அருளமாய்ந்தோர்
உய்ந்தனர் எழுந்தார் உற்ற உறக்கம்நீத் தெழுந்தா ரேபோல்
தந்தையும், தாயும், சாற்றும் தம்முனென் றுரைத்துளோரும்
அந்தமில் உவகை பூப்ப அமர்ந்தனன் கணிச்சியாளன் "(பாகவதம்)

எனச் சுகமுனிவரும் பரிட்சித்து மன்னனிடம் இதனை இங்ஙனம் குறித்திருக்கிறார். கணிச்சி=மழு.

இக் கதையில் மகளிர் நிறைகாக்கும் நிலை, மாதவத்தின் மாட்சி, மைந்தரின் கடமை, தந்தை தாய் பேணுந் தகைமை, நல்லவர் முதலில் அல்லலுறினும் முடிவில் நலமடைவர் என்னும் நியமம் முதலிய உறுதிநலங்கள் உள்ளுறைந்துள்ளன.

தந்தை பணியை மேற்கொண்டு யாரும் செய்ய முடியாத அரியசெயலை அம்மகன் செய்திருத்தலால் பகைவனுயினும் அவனை உவகையோடு இராமன் இங்கே உதாரணமாக எடுத்துக்காட்டினன்.

மழு ஏந்துவான் தான் மறுத்திலன் தாதை சொல்

என்று நிறுத்தினன்; நிறுத்தவே, "அவன் மறுக்காமல் அப்படி என்ன செய்தான்? ஐயா," என்று அன்னை ஆர்வத்துடன் வினவ, அதற்கு விடைகொடுத்தபடியாய் அடுத்த தொடர் தொடுத்து வந்துள்ளது.

தாயையே ஊன் அறக் குறைத்தான்

என்றதில் ஏகாரம் உணர்த்தி நிற்கும் குறிப்பை ஊன்றியுணர்க. "தெய்வமென முடி பணிந்து அடி தொழத்தக்க தாயையே கொன்றுவிடும்படி மகனுக்குத் தகப்பன் கட்டளை முன்னம் தக்கதாய் நின்றுள்ளது எனின், எனது அருமைத் தந்தை என்னளவில் எனக்கு இட்ட ஏவலை எப்படி அம்மா? நான் மறுத்து நிற்பேன்? நீதி நிலையமான உங்கள் வயிற்றில் பிறந்த நான் தாதை பணியைத் தவறி நடப்பது தகாது அம்மா! பிள்ளைக் காதலால் பிழைபடுகின்றீர்கள்; உள்ளங்கலங்காமல் உத்தரவு புரியுங்கள்" என்று தன் உள்ள உறுதியை உணர்த்திநின்றான்.

## கோசலை புரிந்த யோசனை

பிதிர்வாக்கிய பரிபாலனத்தில் தான் கண்ணூன்றியிருக்கும் நிலையைத் தாய் எண்ணியருள இவ்வண்ணம் உரைத்தான். இதனை

அறிந்ததும் இவ்வன்னை பின் ஒன்றும் பேசாமல் இன்னல் மீதூர்ந்து தன் மகனைக் காட்டுக்குப் போகாதிருக்கும்படி மன்ன னிடம் சொல்லி, மறு உத்தரவுபெற மறுகித் துடித்தாள். புத்தி ரன் நிலைமையை உணர்ந்து இவள் சித்தம் பதைத்துச் செய்தன அடியில் வருவன.

கோசலை குறித்துச் செய்தது.

இத்திறத்த எனைப்பல வாசகம்
உய்த்து ரைத்த மகனுரை உட்கொளா
எத்திறத்தும் இறக்குமிந் நாடென
மெய்த் திறத்து விளங்கிழை உன்னுவாள்.

அவனி காவல் பரதனது ஆகுக
இவன்இஞ் ஞாலம் இறந்திருங் கானிடைத்
தவனி லாவகை காப்பென் தகைவிலாப்
புவனி நாதற் றொழுதென்று போயினள்.

(நகர்நீங்கு படலம், 27-28.)

மகன் உறுதியாக வனம் போகத் துணிந்துள்ளதை யுணர்ந் ததும் கோசலை உள்ளங்கலங்கி அச்செல்லமகனை அயலே செல்லா தருளும்படி கணவனிடம் சொல்ல விரும்பி ஒல்லை யெழுந்து அல் லல் நிலையில் அலமந்து சென்றாள்.

எத்திறத்தும் இந்நாடு இறக்கும் என்றது இராமன் எப்படி யும் இந்நாட்டைவிட்டுக் கடந்து போய்விடுவான் என்றவாறு. பிள்ளை பிரிவது உறுதி; பிரியின் இத்தேசம் உயிரிழந்த வுடல் போல் துயருழந்துபடும் எனவும் இது தொனித் துள்ளமை காண்க. மகனுடைய உறுதிமொழிகளை யுணர்ந்து எந்த வகை யிலும் பிரிந்து அவன் வனம் போயே தீருவான் என்று இவள் சிந்தை கலங்கியுள்ளமை இதனால் அறிய நின்றது. பரிபவ மீதூர்ந்து இங்ஙனம் மறுகி நின்றவள் ஓர் உறுதி நாடினாள். “பரதனுக்கு முடி சூடுங்கள்; மகராசனாய் அவன் அரசாளட்டும்; என் பிள்ளையைக் காட்டுக்கு ஓட்டாமல் கருணைபுரியுங்கள்; என் னோடு வீட்டில் ஒதுங்கியிருக்கட்டும்; எனக்காக இந்த உதவியை இரங்கி யருளுங்கள்” என்று தன் நாயகனிடம் நயந்துசொல்லிப் பயன்பெற விழைந்து இந்நாயகி விரைந்து போயினாள்.

“தவன் நிலாவகை காப்பென்”

என்றது தவவேடம் பூண்டு பரதேசிக் கோலத்தில் என் பிள்ளை போகாதபடி நான் பாதுகாப்பேன் என்றவாறு.

புவனிநாதன் என்றது தசரதனை. தகைவு இலா என்னும் அடை இங்கு மிகை யுலாவி வந்தது. யாரும் தடுத்தலின்றிப் பாராளும் பேரரசு என்றவாறு. தகைவு=தடை, தளர்ச்சி.

தன் கணவனிடம் வருந்தி வரம வாங்க அரசி இங்ஙனம் பரிந்து போகவே இத்தாயைத் தொழுதுவிட்டு நேயநெஞ்சுடன் இராமன் அயலே பிரிந்து போயினன்.

பிள்ளையை நீங்கி உள்ளத்துயருடன் உடையவனை நாடிக் கோசலை ஓடி வந்தாள். கணவன் இரவில் பள்ளிகொள்வது கைகேசியிடம் என்பது வழக்கமாய்த் தெரியுமாதலால் அந்த மாளிகையுள்ளே வந்து புகுந்தாள். என்றும் எளிதாக வராத அரசி அன்று புதிதாக நுழைந்தாள். பரிதாபமாய் விரைந்து படுக்கையருகு வந்தாள். பார்த்திபனைப் பார்த்தாள். உள்ளம் உடைந்தாள். துள்ளி விழுந்தாள்.

நடந்த கோசலை கேகய நாட்டிறை
மடந்தை கோயிலை எய்தினள் மன்னவன்
கிடந்த பார்மிசை வீழ்ந்தனள் கெட்டுயிர்
உடைந்த போதின் உடல்விழுந் தென்னவே.

(நகர்நீங்கு படலம், 30)

இந்த அரசி எண்ணிச் சென்றதும், இறையைக் கண்டதும், நிலைமையை நோக்கி நெஞ்சம் துடித்து நிலத்தில் வீழ்ந்ததும், நெடுந்துயருழந்ததும் இதனால் அறியலாகும்.

இராமனை வனத்துக்குப் போம்படி வரத்தை வாங்கிக் கைகேசி இரவு புரிந்திருந்த சதியால் தசரதன் உயிர் பதைத்து உணர்வழிந்து கிடந்தான் ஆதலால் அந்நிலை ஒன்றும் தெரியாத கோசலை உள்ளே வந்தாள்; உரியவனைக் கண்டாள்; உள்ளங் குலைந்து இவ்வாறு உருகி வீழ்ந்து மறுகித்துடித்தாள் என்க.

தசரதனை உயிராகவும் கோசலையை உடலாகவும் கவி இதில் குறித்திருக்கிறார். உரிமையும் ஒருமைப்பாடும் உயராதரவும் ஒருங்கே உணர இவ்வுவமைவந்தது. தேவிநிலைமையும் தெரிந்தது.

பெற்ற பிள்ளைக்குப் பரிந்து பேச உற்ற கணவனிடம் வந்தாள்; மாறுபாடு கண்டாள்; மனம்திகைத்து விழுந்து உயிர் மயங்கினாள். பின்பு மயக்கம் தெளிந்தாள்; அன்னே! என்ன இது! என்று அலறிக்கூவிப் பல பல புலம்பினாள்.

அரசன் பதில் யாதும் கூறாமல் உயிர் மயங்கியிருந்தமையால் இவள் உள்ளம் பதைத்து உணர்வழிந்து பிள்ளையைக் கூவிப் பெருந்துயருழந்தாள்.

" மின்னின் றனைய மேனி வெறிதாய் விடநின் றதுபோல்
உன்னுந் தகைமைக் கடையா வுறுநோய் உறுகின் றுணரான்
இன்னென் றுரையான் என்னே! இதுதான் யாதென் றறியேன்
மன்னன் தகைமை காண வாராய் மகனே! என்னும்"

(நகர்நீங்கு படலம், 34)

இவ்வாறு ஆருத்துயரமாய் அலமந்து புலம்பினாள்.

ஒளிமிகுந்த திருமேனி பொலிவிழந்துள்ளதே! ஐயோ! ஒரு நிலையும் தெரியவில்லையே! யாதொரு பதிலும் காணேமே! பேதை நான் யாது செய்வேன்? அந்தோ மகனே உன் தந்தையை வந்து பார் ஐயா! என்று இந்தவாறு சிந்தை கலங்கி நொந்து கூவி நைந்து விழுந்து நடுங்கித் தவித்தாள்.

"உன்னும் தகைமைக்கு அடையா" என்றது உற்ற துயரம் இன்னதென்று யாதும் எண்ணி யறியமுடியவில்லையே என்றவாறு. நேர்ந்த பிழை தெரியாமல் நிலைகுலைந்தபடி யிது.

மகன் துயரை நீக்க விழைந்து மறுகிவந்த கோசலை கணவன் நிலையைக் கண்டதும் அதனை மறந்து அவலமிகுந்து இங்ஙனம் அலமரலானாள். இதன்பின் தொடர்ந்து நிகழ்ந்த வரலாறுகள் முன்னம் வந்துள்ளன. * அவற்றை ஈண்டு இணைத்து நோக்கிக் கொள்க.

இன்னவாறு மன்னவன் முடிவு கண்டதும் இவள் இன்னலுழந்து துடித்தன எண்ணிடலரியன. பரிந்து பதைத்துப் படியில் படிந்து படர்மிகுந்து புலம்பிய இவளது அருந்துயர் நிலைகளை அடியில் வரும் கவிகளில் காண்க.

* இந்நூல் பக்கம் 610, வரி 16 பார்க்க.

## கோசலை துயருழந்த நிலை.

இருந்த அந்தணரோ டெல்லாம் ஈன்றவன் தன்னை யீனப்
பெருந்தவம் செய்த நங்கை கணவனிற் பிரிந்து தெய்வ
மருந்திழந் தவரின் விம்மி, மணிபிரி அரவின் மாழ்கி,
அருந்துணை பிரிந்த அன்றிற் பெடையென அரற்றலுற்றாள்.(1)

புலம்பிய வகை.

தானே தானே தஞ்சம் இலாதான் தகைவில்லான்
போனான் போனான் எங்களை நீத்திப் பொழுதென்னா
வானீர் சுண்டி மண்ணற வற்றி மறுகுற்ற
மீனே என்ன மெய்தடு மாறி விழுகின்றாள். (2)

ஒன்றோ நன்றாட் டுய்க்குவர் இந்நாட் டுயிர்காப்பார்
அன்றே மக்கட் பெற்றுயிர் வாழ்வார்க் கவம் உண்டே
இன்றே வந்தீண் டஞ்ச லெனாதெம் மகன் என்பான்
கொன்றான் அன்றோ தந்தையை என்றாள் குலைகின்றாள். (3)

நோயும் இன்றி நோன்கதிர் வாள்வேல் இவையின்றி
மாயும் தன்மை மக்களினாலோ மறமன்னன்
காயும் புள்ளிக் கர்க்கட நாகம் கனிவாழை
வேயும் போன்றான் என்று மயங்கா விழுகின்றாள். (4)

வடித்தாழ் கூந்தற் கேகயன் மாதே! மதியாலே
பிடித்தாய் வையம் பெற்றனை பேரா வரமின்னே
முடித்தாய் அன்றே மந்திரம் என்றாள் முகில்வாய்மின்
துடித்தால் என்ன மன்னவன் மார்பில் துவள்கின்றாள். (5)

அருந்தே ரானைச் சம்பரனைப்பண் டமர் வென்றாய்
இருந்தார் வானோர் உன்னருளாலே இனிதிந்நாள்
விருந்தாகின்றாய் என்றனள் வேழத் தரசொன்றைப்
பெருந்தாள் அன்பிற் சூழ்பிடி என்னப் பிரிவுற்றாள். (6)

வேள்விச் செல்வம் துய்த்திகொல்? மெய்ம்மைத் துணையின்மைச்
சூழிச் செல்வம் துய்த்திகொல்? தோலா மனுநூலின்
வாழிச் செல்வம் துய்த்திகொல் முன்னென் றனள் வானோர்
கேள்விச் செல்வம் துய்க்க வயிற்றோர் கிளைதந்தாள். (7)

(தைலமாட்டு படலம், 63-69)

இந்த ஏழு பாடல்களையும் ஊன்றிப் படித்து உள்ளுறை பொருள்களையும் உணர்ச்சி நிலைகளையும் ஓர்ந்துகொள்ளவேண்டும். பலவகை எண்ணங்களும் நிகழ்ச்சிகளும் பரிதாபத்துடன் ஈண்டு வெளிவந்துள்ளன.

முதல்பாட்டில் கோசலையைக் குறித்துக் கூறியிருக்கும் திறங் களைக் கூர்ந்து கவனிக்க.

அந்தணன் என்றது பிரமதேவனை. இருந்த என்றது மலர் மேல் என்றும் மன்னியிருக்கும் அவனது நிலை தெரிய வந்தது. ஒரு நாள் இருந்து மறுநாள் மறையாமல் நெடுநாள் நிலையாயிருப் பவன் ஆதலால் "இருந்த அந்தணன்" என நின்றான்.

ஈன்றவன் என்றது திருமாலை.

படைத்தற் கடவுளாகிய பிரமனையும் சரம் அசரம் முதலிய எல்லாப்பொருள்களையும் அகில வுலகங்களையும் ஒருங்கே பெற்ற வன் என்பதாம். இங்ஙனம் யாவையும் ஈன்ற பெருமானைத் தன் பிள்ளையாக ஈன்றருளிய பெருந்தவக்கற்பினள் எனக் கவி இங்கே இப்பெருமாட்டியைப் பாராட்டியிருக்கிறார்.

"இருந்த அந்தணனோடு எல்லாம் ஈன்றவன் தன்னை ஈனப் பெருந்தவம் செய்த நங்கை" என்றது ஈன்ற தாயருள் இவளது மகிமை வான்தோய் புகழுடன் வயங்கியுள்ளமை தோன்ற நின் றது. இவளுடைய பிள்ளைப் பேற்றைச் சொல்லும் போதெல் லாம் கவி உள்ளம் உருகி உரைத்து வருகின்றார்.

நாயகனைப் பிரிந்து இவள் நடுங்கித் துடித்த துயர நிலைக்கு மூன்று உவமைகள் குறித்திருக்கிறார்.

தெய்வமருந்து இழந்தவரின் விம்மி,
மணிபிரி அரவின் மாழ்கி,
அருந்துணை பிரிந்த அன்றிற் பெடைஎன அரற்றலுற்றாள்.

கையில் கிடைத்த தேவாமிர்தத்தை இடையே யிழந்தவர் போல ஏங்கி விம்மினாள்; சீவரத்தினத்தை இழந்த நாகம்போல் ஆகம் துவண்டு சோகம் மிகுந்து துடித்தாள்; அருமைத் துணை யைப் பிரிந்தஅன்றில் பேடைபோல் அலமந்து புலம்பினாளென்க.

விம்மல், மாழ்கல், அரற்றல் என்னும் மூன்றும் நிலை டைந்து, உளம் உடைந்து, வாய்பிதற்றிய படியை நிரலே தொகை யாக உணர்த்தி நின்றன. சோக நிலைகளின் பாகங்களை யூகஞ் செய்து உணர்ந்து கொள்க.

போகமும், போக்கியமும், யோகமும் போயினமையை மருந்து, மணி, அன்றில்சேவல்களால் முறையே அறிவித்தரு ளினர். சுட்டிய உவமைகளால் தசரதனது இன்பச்செவ்வி, பெருந் திரு, அன்புரிமை முதலிய பண்புயர்வுகள் புலனும்.

பாம்புகளுள் உயர்ந்த சாதியான நாகம் என்னும் அரவின் தலையில் சிறந்த மணி விளைந்திருக்கும். அது அதன் உயிராதார மாயுறைந்திருத்தலால் அதனைச் சீவரத்தினம் எனவும், நாகரத்தி னம் எனவும் மேலோர் புகழ்ந்திருக்கின்றனர். அந்த மணியைப் பிரிந்தால் நாகம் துயருழந்து இறந்துபடும் ஆதலின் கணவனைப் பிரிந்து துடிக்கும் அரசிக்கு அது இங்கே உவமையாய் வந்தது.

"அருமணி இழந்து ஓர் நாகம் அலமருகின்றது ஒத்தாள்."
(சீவக சிந்தாமணி, 1508)

"இருநிதிக் கிழவனும் பெருமனைக் கிழத்தியும்
அருமணி இழந்த நாகம் போன்றதும்." (சிலப்பதிகாரம், 13)

"நன்மணி இழந்த நாகம் போன்றவள்
தன்மகள் வாராத் தனித்துயர் உழப்ப
இன்னுயிர் இழந்த யாக்கையின் இருந்தனள்"
(மணிமேகலை, 7)

"மன்னவன் மகனுக்கு உற்றது பொறுஅன்
நன்மணி இழந்த நாகம் போன்று." (மணிமேகலை, 25)

இனிய துணையை இழந்து வருந்துபவர்க்கு மணி பிரிந்த அரவம் இவற்றுள் உவமையாய் வந்துள்ளமை காண்க.

"இழந்த மணி புற்றரவு எதிர்ந்ததென லானுள்"
(உருக்காட்டுப்படலம், 65)

என இராமனது கணையாழியைக் கண்டபொழுது சீதை கொண்ட வுவகைக்கு இங்ஙனம் ஒப்புரைத்திருக்கிறார். மணி பிரி அரவம் மாமிக்கும், மணி எதிர்ந்தது மருகிக்கும் உரிமை யாயின. நிலைமையை நேரே நினைந்து தகைமை தெரிந்து கொள்க.

"அழலுமிழ் நாக நிழலுமிழ் மணியும்" (பெருங்கதை, 3, 3)
என்றதனால் இந்த மணியின் நிறமும் நிலையும் அறியலாகும்.

"செய்ய மங்மகள் உலப்புறு உந்தியந் தியாய்
வெய்ய வன்செலற்கு அரியவப் பாலைமே வுதலால்
மொய்யில் வெம்பணி புகையழல் உமிழ்வன முரணும்
மையுறுங்கொடு நஞ்சொடு கான்றசெம் மணிகள்."
(கந்தபுராணம், சுரம்புகுபடலம், 17)

பாலை வனத்தில் வெப்பம் பொறுக்கமாட்டாமல் பாம்புகள் நஞ்சைக் கக்குதல் கரும்புகைபோலவும், சிவந்த மணிகளை உமிழ்தல் அழல்போலவும் இருந்தன என இஃது உணர்த்தியுள்ளமை காண்க. அரவம் மணியை வெளியே உமிழும் எனவும், அது நெருப்புப் பொறிபோல் செஞ்சோதிவீசி ஒளி செய்திருக்கும் எனவும் இதனால் உணர வந்தன.

"The toad, ugly and venomous,
Wears yet a precious jewel in his head."(Shakespeare)

"புலைநஞ்சுயிரும் விலையுயர்ந்த மணியைத் தன் தலையில் தரித்திருக்கிறது." என மேல்நாட்டுக் கவிஞர்பிரானாகிய சேக்கிஸ்பியரும் இங்ஙனம் குறித்திருக்கிறார். ஆகவே அரவிற்கு மணியுண்டு என்னும் கருத்து பல நாடுகளிலும் பரவியுள்ளமை தெரியலாகும்.

"திருமகள் இருந்த திசையறிந்திருந்தும் திகைப்புறு
சிந்தையன் கெடுத்தது
ஒருமணி நெடும்பற் பஃறலை அரவின் உழைதொறும்
உழைதொறும் உலாவ"
(சுந்தரகாண்டம், நிந்தனைப்படலம், 19)

கடுங்காதல் மண்டி நெடுமையல்கொண்டு சீதையை நாடி அசோக வனத்தில் இராவணன் வந்த நிலையை வருணித்தபடி யிது. இழந்த மணியைத் தேடி உழந்துவருகின்ற பத்துத்தலை நாகம்போல் அவன் விழைந்து வந்தான் என்பதாம். இந்த உவமான நுட்பத்தை உய்த்துணர்ந்து கொள்க.

"தீயவர்பால் கல்வி சிறந்தாலும் மற்றவரைத்
தூயவரென் றெண்ணியே துன்னற்க—சேயிழாய்
தன்னொளிய மாணிக்கம் சர்ப்பம் தரித்தாலும்
நண்ணுவரோ மற்றதனை நாடு." (நீதி வெண்பா)

பாம்பின் தலையில் மணியுள்ளதென்பதை இன்னவாறு முன்னோர் பலரும் எண்ணியுள்ளனர். இந்த மணிக்குறிப்பை நம் கவி காவியத்தில் அணிபெற அமைத்திருக்கும் நிலைகளை அமைதியுடன் ஆய்ந்துகொள்க.

அன்றில் என்பது ஒருவகைப் பறவை. ஆணும் பெண்ணும் எப்பொழுதும் இணைபிரியாது துணையமைந்திருக்கும். சேவல் சிறிது பிரியினும் பெரிதும் அரற்றிப் பேடை பேதுற்றயரும் ஆதலால் "அன்றில் பெடை என அரற்றலுற்றாள்" என்றார். அரற்றல்=வாய்விட்டுக் கதறல்.

அரசன் பிரிவில் அரசி அடைந்த துயரங்களின் அகநிலைகளை மூன்று உவமைகளால் உணர்த்திப் பின்பு புறத்தே புலம்பிய துன்பக்கூறுகளைத் தொடர்ந்து கூறுகின்றார்.

ஒரு குலமகள் அல்லலுழந்து அலமருகின்ற நிலையை உலகம் உள்ளபடி உணர்ந்துகொள்ளச் சொல்லிவிடுவது எளிதன்று; மிகவும் அரிய செயலாம். அந்த உயிர்த்துடிப்போடு உணர்வு ஒன்றி உள்ளந் துடித்தாலன்றிப் பிறருடைய உள்ளங்கள் உருகச் சொல்ல இயலாது. அங்ஙனம் உணர்ந்து சொல்லினும் மற்றவரினும் கற்றவர் சொல்வது கவினுடையதாம். அவரினும் சீரிய கவிஞர் கூறின் அத்துயரத் துடிப்புகளை நேரில் கண்டதுபோல் எவரும் நெஞ்சுருகி நிற்பர். அந்நிலையினை இங்கே காண்கின்றோம்.

சோகநிலையைக் கூறுவதில் நம்கவிஞர்பிரான் மிகவும் உயர்ந்த நிலையில் ஒளி செய்து நிற்கின்றார். பொதுவாக மானுட இயல்பையும், ஆண்பால் பெண்பால் என்னும் இருவகைகளின் தனிமையான நுணுகிய இயற்கைகளையும் இவர் நன்கு உணர்ந்துள்ளார். உலக நிலைகளோடு உயிர் வருக்கங்களுடைய இயல்புகளையும் ஊன்றி ஓர்ந்து அவ்வுணர்வை ஆன்றோர் வியப்ப அணி செய்து விளக்கி அருள் புரிந்து வருகின்றார்.

அமிர்து அழிந்து, மணி இழந்து, அருந்துணைபிரிந்தவளாய்ப் பெருந் துயருழந்த கோசலை பின்னும் உள்ளங் குலைந்து உயிர் உலர்ந்து துடித்த நிலையை இன்னல் கனிய இசைத்திருக்கின்றார்.

"வான் நீர் சுண்டி, மண் அற வற்றி மறுகுற்ற
மீனே என்ன மெய்தடுமாறி விழுகின்றாள்."

என்ற இதிலுள்ள அவலக் காட்சியை ஆய்ந்து பார்க்க.

ஆரனுருழந்த பேராசி நிலைக்கு நீரிழந்த மீன் இங்கு நேரு வந்தது. தாம் வாழ்ந்துவருகின்ற வாவி குளம் முதலியவை களில் நீர் நிறைந்திருந்தாலும் மேலே மழை பெய்யவில்லையாயின் மீன்கள் வெம்பி யுழலும்; அத்துடன் இருந்த நீரும் வறந்துவிடின் அவை இறந்துபடும் ஆதலால் அவ்விரண்டு நிலைகளையும் ஒருங்கே தொடர்ந்து உணர ஈண்டு இசைத்தருளினர்.

மண் என்றது பூமியிலுள்ள நீர் நிலைகளை.

வான் நீர் சுண்டி என்றது இராமன் பிரிவைச் சுட்டியது. மண் அறவற்றி என்றது தசரதன் இறந்து பட்டதைக் குறித்தது.

பிடித்து நின்ற கொம்பும் மிதித்திருந்த கிளையும் ஒருங்கே இழந்து ஒருவன் அடிமறிந்து வீழ்ந்த படுதுயர நிலை இங்கே நெடி துணர வந்தது.

பெற்ற பிள்ளையும் பிரிந்தது ; உற்ற கணவனும் இறந்தான்; ஆகவே பற்றுக்கோடின்றிக் கண்ணீர் சிந்திக் கவன்று துடித் தாள். விண்ணீர்குன்றி மண்ணீர் இன்றி மறுகித்துடிக்கும் மீனை எதிரெடுத்துக் காட்டியதனுல் கோசலை அன்று உயிர் பதைத்துழன்ற கொடிய பரிதாப நிலை எளிது தெளிவுறலாகும். நீர் பிரிந்த மீன்போல் கொழுநனைப் பிரிந்து அரசி குலை துடித் தாள் என்பதாம்.

மீனுக்கு நீர்போல் கோசலைக்குத் தசரதன் என்றதனுல் அவளது உயிராதார நிலை யுணர வந்தது. மீனே என்றதில் ஏகா ரம் தெளிவும் இரக்கமும் தெரிய நின்றது.

காதலனை இழந்து சாதலுழந்து துடிக்கும் காதலி நிலையை யுணர்த்த நீர் இழந்த மீனை நேரமைத்துக் காட்டினர். இக்காட்டு அத்துன்பத் துடிப்பை நம் கண்முன் காட்டிக் கழிபேரிரக்கத்தை ஊட்டி நிற்கின்றது. நீரிழவு பேரிழவாதலறிக.

நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியை மக்கள் அனுபவத்தில் கண்டு தெளிந்துள்ள காட்சிகளோடு புணர்த்தி யுணர்த்தின் அதனை எவரும் முழுவதும் எளிதாகத் தெரிந்துகொள்ளுவர் ஆதலால் அங்ஙனம் அனுபவமான உவமையை நம் கவி இங்கே இனி தமைத்து விளக்கினர். படுதுயர் நிலை கடிதுணர வந்தது.

படிப்பவர் கேட்பவர் உடனே யுணர்ந்து உள்ள முருகி உரிமை கொள்ளச் சொல்ல வல்லவரே நல்ல உவமையை நன்கு நாடிச் சொல்லுவர். ஆதாரம் இழந்து அவலமுறுபவளது நீர்மை நிலைமைகளை நீரிழந்த மீன் எவ்வளவு தெளிவாக வுணர்த்தி ஈண்டு நெஞ்சுருக்கியுள்ளது! கவிகள் காட்டும் உவமைகளால் அவர்களுடைய அனுபவக் காட்சிகள் அறிய வருகின்றன.

> "நீர்பிரிந்த மீன்போல் நிலைதிரிந்து நெஞ்சுடைந்து
> நீர்பிரிந்த போதே நெடிதழிந்தாள்—கார்பிரிந்த
> கண்ணுளைக் காணக் கடிதுநீர் வந்தாலும்
> கண்ணுரைக் காணீர் கனிந்து."

தலைவியைப் பிரிந்து வினைமேல் விரைந்து போன தலைவனுக்குத் தோழி எழுதி விடுத்தபடி யிது. மீன் உவமானம் இதன் கண்ணும் வந்துள்ளது. கவியின் பொருளைக் கருத்தூன்றி அறிக.

அவலமான துயரநிலைகளை இவ்வாறுன உவமைகள் இனிதுணர்த்துகின்றன. இவற்றுல் சொல்லப்படும் பொருள்களின் உள்ளத்துடிப்புகளையும், உயிர்ப்பதைப்புகளையும் உலகம் அறிந்து உடனே இலகுவாக உருக நேர்கின்றது.

மெய்தமோறி விழுகின்றுள்

என்றதனுல் ஒரு நிலையில் நில்லாமல் எழுந்து விழுந்து உருண்டு புரண்டு துவண்டு துடித்து இவ் அரசி அன்று பட்ட பரிதாபங்கள் யாவும் அறியலாகும்.

இவ்வாறு மனமழிந்து பரதவித்தவள் பின்பு சிறிதுதேறி நாயகனுடைய மேன்மைகள் பலவற்றையும் நினைந்து பெருமிடறிட்டுப் பெரிதும் புலம்பினுள்.

"யாருக்கும் புகலிடமாய், யாண்டும் வலியனுய், எங்கும் ஏகசக்ராதிபதியாய் இசை திசை பரவ நின்ற எனது நாயக மணிபோயதே! என் கண் மணியை இழந்தேனே! இனி என்று காண்பேன்! ஐயோ! என்னைக் கைவிட்டுப் போயதே! ஆ! தெய்வமே! செய்வது ஒன்றும் தெரியவில்லையே! ஐயையோ தெய்வமே!" என்று அலறிப் புரண்டு அலமந்து கதறினுள்.

"நல்ல மகவைப் பெற்றவர் இம்மையிலும் மறுமையிலும் சுகம் மிகப்பெறுவர் என்று சொல்லுவார்களே; எங்களிடம்

அது இல்லாமல் போயதே! தந்தை இறந்து போவதையும் மதி யாமல் மைந்தன் பிரிந்துபோனானே! அந்தோ! இது என்ன பரி தாபம்?" என்று இன்னவாறு தன் மகனை எண்ணி இரங்கிப் புலம்பினாள்.

எம் மகன் என்பான் கொன்றான் அன்றோ தந்தையை

என்று கோசலை தன்னை மறந்து, குலைதுடித்து அலறியிருக் கிறாள். இராமனைத் தன் உயிரினும் இனியனாகக் கருதி வந்த உழுவலன்புத் தாய் இங்கே அவனை இங்ஙனம் பழுதுரைத்தது தனது நாயகன்பா லுள்ள கெழுதகைமையினால் என்க.

இராமன் வனம் போனதே தசரதன் இறந்து போதற்குக் காரணம் ஆனதால் அதனை இங்ஙனம் காட்டி மொழிந்தாள். கொன்றான் என்றது உள்ளக் கொதிப்பால் துள்ளி வந்தது. என் கழுத்துத் தாலியை வயிற்றுப் பிள்ளை அறுத்துப் போயதே! என்று உள்ளம் வெறுத்துப் புலம்பியிருக்கிறாள். துயரம் அளவு மீறி யுள்ளமையால் இவ்வளவு துணிவாகத் தனது அருமைமகனை யும் இகழ நேர்ந்தாள். கொண்ட கணவன்பால் இக்குலமகள் கொண்டுள்ள அன்பும் ஆர்வமும் இதனால் நன்கு அறியலாகும்.

எவ்வளவு இனிய பொருள்கள் புடை சூழ்ந்திருந்தாலும் உரிய கணவன் இலனாயின் அவை யாவும் இன்னாதனவாய்த் தோன்றும் ஆதலால் பதிவிரதை எதனையும் எதிர்பாராமல் யாரை யும் மதியாமல் இகழ்ந்து விடுவாள் என்க.

"தந்தை தாய் இருந்தாலும் தன்னுடனே ஒரு வயிற்றில்
சார்ந்து அன்பாக
வந்ததுணை இருந்தாலும் வளர்கிளைகள் இருந்தாலும்
மகிழ்ந்து பெற்ற
மைந்தர்தாம் இருந்தாலும் மற்றவெல்லாம் இருந்தாலும்
மணந்து கொண்ட
சுந்தரன்தான் இல்லை எனில் அந்தமகள் உயிர்வாழ்க்கை
துயரம் அன்றோ?"

என்றதனால் பெண்களுக்கு உயிர் நிலையமான பொருள் இன்னதுதான் என்பது இனிது புலனாம். இவ்வாறு ஆருயிர்த் துணையாய் அமர்ந்திருந்த அருமை நாயகன் இறந்து போனமை யால் இப்பேரரசி பெருந் துயருழந்து இங்ஙனம் பேதுறலானாள்.

4. என் நாயகர் நோயால் இறந்திலர் ; வேலால் மடிந்திலர்; வாளால் மாய்ந்திலர் ; பெற்றபிள்ளையால் பிழையாய் மடிந்தாரே! வெற்றிவீரரது வினையிருந்தவாறென்னே ? முடி மன்னருக்கு இப்படியும் ஒரு முடிவு நேரலாமா ? என்று நெடிது புலம்பி நெஞ்சம் பதைத்தாள்.

வாள் வேல் இவை யின்றி மன்னன் மாயும் தன்மை

ஆயதே என்று மறுகி யிருத்தலால் போரில் நேரும் வீரச்சாவு பொருந்தாது போயதே என வருந்தியுள்ளமை புலனும்.

வீரமரபில் பிறந்து சுத்தவீரனுக்குப் பத்தினியாயிருத்தலால் இவ்வுத்தமி வாயில் இத்தகைய துயரநிலையிலும் இவ்வாறு வீரவுரைகள் மீறி எழுந்தன. அல்லலால் அலமந்து சொல்லாடிய பொழுதும் உள்ளநிலை ஊடாடி வந்தது. மனிதனது வாயுரை அவனுடைய மரபையும் மனத்தையும் வெளிப்படுத்தும் ஆதலால் இத்தாயிடமும் அது தழைத்து நின்றது. வீரவில்லி என்று விண்ணும் மண்ணும் புகழ நின்ற மகாவீரனைப் பெற்றருளிய இவ்வீரத்தாயின் நீர்மை வியத்தகு நிலையது. தன் தலைவன் தலைசாய்ந்தது குலமகனால் நேர்ந்ததே என்று குலைதுடித் தலறுகின்றாள் ஆதலால் நிலைகுலைந்து பல பல புலம்பினாள்.

“காயும் புள்ளிக் கர்க்கடம் நாகம் கனிவாழை, வேயும் போன்றான்” என நாயகன் மாய்ந்திருக்கும் நிலைமையை நினைந்து மறுகி யுழந்தாள். பெற்றமகவால் உயிரிழந்துள்ளமையால் உற்ற கருவால் அழியும் பொருள்களோடு உடனுறழ்ந்து கூறினாள்.

புள்ளிக் கர்க்கடம் என்றது நண்டு

லும் வசிப்பது ; செந்நிறமும் புள்ளிகளும் உடையது. “செக்கரம் புள்ளித் திகிரி அலவன்” (நெய்தற்கலி, 29) என்றதனால் இதன் நிறமும் புறமும் அறியலாகும். நாகம்=பாம்பு. வேய்=மூங்கில்.

நண்டு சூல் முதிர்ந்தவுடன் குஞ்சு அதன் முதுகைப் பிளந்து வெளிவரும்; வரவே, தாய் நண்டு இறந்துபடும். விரியன் பாம்பும் அவ்வாறே குட்டி வெளிவரவும் பட்டுமாயும். வாழை குலை தள்ளியபின் அதன் நிலையழிந்துபோம். மூங்கில் தன்னுள் இருக்கும் -ன் அது அகன்று வெடித்து விடும்.

தம்முள் தோன்றிய கருவினால் இவை உருவற அழிய நேர்ந்துள்ளன; ஆகவே தன் மகன் பிரிவால் இறந்த தசரதன் இவற்றோடு இனமாக எண்ண நேர்ந்தான்.

"நண்டுசிப்பி வேய்கதலி நாசமுறும் காலத்தில்
கொண்ட கருவளிக்கும் கொள்கைபோல்—ஒண்டொடீ
போதம் தனம்கல்வி பொன்றவரும் காலமயல்
மாதர்மேல் வைப்பார் மனம்." (ஔவையார்)

தாம் கொண்ட கருவால் நண்டு முதலிய நான்கும் நாசம் அடையும் என இதுவும் உணர்த்தி நிற்றல் காண்க. இதில் நாகத்தை நீக்கிச் சிப்பி சேர்க்கப்பட்டுள்ளது. ஆகவே ஐந்தும் சூலால் அழியும் என்பது அறிய வந்தது.

"தாய்சாப் பிறக்கும் புள்ளிக் கள்வன்" (ஐங்குறுநூறு, 24)

கள்வன்=நண்டு. பெற்ற தாய் சாக அது பிறக்கும் என இஃது உணர்த்தி நிற்றலறிக.

"வாய்க்குப்பிள்ளை உயிர்க்கு எமன்" என்னும் பழமொழிப் படி சில கருவுயிர்ப்பில் தாயர் மாய நேர்கின்றனர் என்பதாம்.

"கல்லா ஒருவர்க்குத் தம்வாயிற் சொற் கூற்றம்
மெல்லிலை வாழைக்குத் தான் ஈன்ற காய் கூற்றம்"
(நான்மணிக் கடிகை, 84)

என்றார் விளம்பி நாகனாரும். சிருட்டியில் இயற்கையாய் அமைந்துள்ள இந்த விசித்திர முடிவுகளைக் கவிஞர் தமக்கு வேண்டிய வழிகளில் இங்ஙனம் கையாண்டிருக்கின்றனர். அவற்றைத் திருத்தமாகக் குறித்து உரையாடுங்கால் அரிய நீதி நலங்களை உள்ளே இனிமையாகப் புகுத்தி உறுதிபெற உணர்த்தியருள்கின்றார்.

புத்தர் பிறந்தவுடன் அவரைப் பெற்ற தாய் இறந்துபோனாள் ஆதலால் சூலால் உயிரிழக்கும் நண்டு முதலியவற்றோடு அவரையும் கொண்டு கூட்டி யுள்ளார். அடியில் வருவது காண்க.

"புத்தன்தாய் ஞெண்டிப்பி வாழை புனமூங்கில்
கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி—இத்தனையும்
வேலாலும் வாளாலும் அன்றியே தாங்கொண்ட
சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு." (உலோக வசனம்)

இதன்கண் சிலந்தி ஒன்று அதிகமாகச் சேர்க்கப்பட்டுள்ளது. "வாள் வேல் இன்றி மன்னன் மாயும் தன்மை மக்களினுலோ?" என்று முன்னம் வந்துள்ள நம் கவிக்கும் இதற்கும் உள்ள ஒற்றுமையை ஊன்றி நோக்குக. இதனை நோக்கியே அது தோன்றியிருக்குமோ? என்று ஐயம் தோன்றுகின்றது. ஞெண்டு என்பது பண்டு வழங்கியமொழி. நண்டு பிற்கால வழக்காய்ப் பெயர் பெற்றுள்ளது.

ஞான வீரரான புத்தர் ஈன்ற தாய் இறக்க ஏதுவாயிருந்தார்; மான வீரரான இராமர் தந்தை மாளத் தாம் வனம் போனார் என்க.

கணவன் மேல் விழுந்து கடுந்துயருழந்து இவ்வாறு கோசலை பரிதபித்துப் புலம்புங்கால் அங்கே கைகேசி எதிர்ப்பட்டாள். விரிந்து பரந்த கூந்தலோடு அழகு சிதைந்த முகத்தளாய் வினை வினை நினைந்து வெந்துயர் கூர்ந்தும் உளம் பதையாமல் ஒதுங்கி நின்ற அவளைப் பரிந்து நோக்கி இவள் சில உரைகள் பகர்ந்தாள்.

"அம்மா! கைகேசி, உன் எண்ணம் முடிந்ததா? அழகையெல்லாம் அவலம் ஆக்கினையே; உன் மதிநலந்தான் என்னே? பின்னே விளையும் பிழையினை உணராமல் பேரிழவு செய்துவிட்டாயே; என் தாலியையும் உன் தாலியையும் ஒருங்கே அறுத்து உலக முழுவதையும் ஆருத்துயரத்தில் ஆழ்த்தித் தொலைத்தாயே! ஐயோ! இனி உய்ய வழி ஏது? உன் பேராசை உனக்குத் தீரா வசையைச் செய்ததே யன்றித் தினையளவு நலமும் செய்யவில்லையே" என்று வினைவிளைவை நோந்து கூறி வெய்துயிர்த்தாள்.

> "பிடித்தாய் வையம்; பெற்றனை பேராவரம்; இன்னே
> முடித்தாய் அன்றே மந்திரம்!"

என்றதில் கோசலை நெஞ்சுடைந்து பேசியிருக்கும் நிலை தெரியலாகும். சொற்கள் வயிறெரிந்து வந்துள்ளன. பேரா வரம் என்றது அரசன் மறுத்து மாறமுடியாதபடி தீரயோசித்துச் செய்துள்ளமை தெரிய வந்தது. உன் பேராவரத்தால் என்னுடைய குடியை அடியோடு பேர்த்தெறிந்தாயே! என்பதாம்.

"விரகு புரிந்து வரம் கைக்கொண்டு ஆட்சியைக் கவர்ந்து நீ முடித்திருக்கும் காரியம் எவ்வளவு பேரிழவில் முடிந்திருக்கி

றது ? இதனை ஓரளவு கூட உணராதொழிந்தாயே ! உன்னுடைய மந்திர தந்திரங்களால் வந்துள்ள வரவைக் கொஞ்சம் சிந்தனை செய்துபார் அம்மா!'' என நெஞ்சம் நொந்து புலம்பினாள்.

பொறுக்க முடியாத கொடிய துயரத்தைக் கைகேசி கருதிச் செய்திருந்தும் அவளைக்குறித்து யாதொரு தீயசொல்லும் சொல்லாமல் இத்தூயவள் வாயடங்கி வருந்தியிருக்கும் நிலைமையும் பெருந்தகைமையும் மிகவும் வியந்துகொள்ளத் தக்கன.

சக்களத்தி மனப்பான்மையுடன் தருக்கு மிகுந்து அவள் தவறிழைத்து வந்தும் இவள் பொறுத்து நின்று இரக்கம் புரிந்துள்ளாள். இப் பதிவிரதையின் மதிநலமும் மனப் பண்பும் அதிமேன்மையுடையனவாய் யாண்டும் துதிசெய்யவுள்ளன. தன் நாயகனுக்குக் கூற்றமாய் மாற்றவள் மருவிநின்றமையை நினைந்து நினைந்து மறுகியுருகி அவல நிலையில் அலமரலானாள். உயிர் பதைத்து இவள் அடைந்த பரிதாப நிலைகள் பதியின்பால் வைத்துள்ள முதிர்பேரன்பை எதிர் விளக்கியுள்ளன.

"முகில்வாய் மின் துடித்தால் என்ன மன்னவன் மார்பில் துவள்கின்றாள்'' என்றதனால் கணவன் மீது விழுந்து புரண்டு இவள் அழுதுகிடந்தமை அறியலாகும். இன்னல் நிலையிலும் மின்னல்கொடிபோல் துவண்டு துடித்தாள் எனவே இவளது திருமேனியின் ஒளியும் திவ்விய சவுந்தரிய நிலையும் தெரிய நின்

மயங்கி முயங்கி மனம்பதைத்து உழந்தவள் வாழ்நாளில் மன்னன் புரிந்துள்ள மாட்சிகள் பலவற்றையும் நினைந்து புலம்பினாள். "அந்தோ ! என் பிராணநாதா ! இனி நான் யாது செய்வேன் ? சம்பரன் முதலிய அசுரர்களையெல்லாம் அறவே வென்று அமரரை வாழ்வித்த வீரமூர்த்தியே ! உங்கள் உரிமைத்தாரத்தை இப்படி அநாதையாகத் தவிக்கவிட்டு அகன்று போகலாமா? தேவரைக் காத்து யாவரையும் பேணியருளிய தேவரீருக்கு இப் பாவியைக் காப்பது ஒரு பாரமாகுமா? என் ஆவித்துணையே! ஆசைக்கனியே! ஆருயிர் இன்பமே! ஓருயிர்க்கும் நான் ஊறு செய்தறியேனே ; இப்பாரிழவைப் பார்க்க நேர்ந்தேனே !'' என இன்னவாறு பல பல புலம்பி உளநிலை திரிந்து பரதவித்தாள்.

வேழத்து அரசு ஒன்றைப் பிரிந்த பிடிபோல் வருந்தி அழுதாள். "வேள்வி முதலாக இங்கே புரிந்த புண்ணியப்பயன்களை நுகர விண்ணவர் விருந்தாய்ப் போயுள்ள ஓ வேந்தர் திலகமே! நானும் விரைந்து வருகின்றேன்" என்று ஆறாத்துயருடன் அலமந்து துடித்த இவளது பரிதாப நிலைகள் முழுவதும் உரைசெயலரியன. முடிவில் இவளைக் குறித்துக் கவி உரை செய்திருக்கும் அருமை வாக்கியம் ஈண்டு மிகவும் அறிய வுரியது. "வானோர் கேள்விச் செல்வம் துய்க்க வயிற்று ஓர் கிளை தந்தாள்" என வந்துள்ள இவ்விழுமிய தொடர்மொழி பெரிதும் விரிபொருளுடையது. ஓர் கிளை என்றது இராமனை. இப்பேரழகைப் பார்க்க. தன் உந்தியிலிருந்து அகிலாண்டங்களையும் பூத்த அற்புத வுருவே இப்பொற்புறு கிளையாய் ஈண்டுப் பொலிந்துள்ளதென்க. கான்முளையை ஓர் கிளை என்றது உற்றவர்க்கெல்லாம் உரிமைக் கிளையாய்க் கற்பக தருப்போல் நற்பயன்பயந்துள்ளமை கருதி. யாண்டும் யாதும் தளர்ந்து படாமல் மேலும் மேலும் கிளர்ந்து வளர்ந்து என்றும் நாவிரி கீர்த்தியாளனாய்ப் பாவியலில் படிந்து தேவியல்புடன் நின்று நிலவலால் வானவர் எவர்க்கும் செவிநுகர் அமிர்தமாய் இத் திருமகன் சுவைபயந்துள்ளான்.

இராமனுடைய குணகணங்களையும் வீரப்பிரதாபங்களையும் அமரரனைவரும் அனுதினமும் உரையாடிக் கேட்டு உள்ளம் பூரித்து உவகை கூர்ந்து வருதலால், "வானோர் கேள்விச் செல்வம் துய்க்க ஓர் கிளை தந்தாள்" என்றார். கற்பக தருக்களும் அற்புத வளங்களும் பொற்புறு போகங்களும் இக்கிளையினாலேயே பிழைகள் தீர்ந்து பிழைத்துள்ளன என்க.

கொடிய பகை களைந்து தமக்கு இனிய வாழ்வளித்த குலவீரன் ஆதலால் இக்கோமகன் புகழ் வானவர்க்குத் தேவாமிர்தத் தெவிட்டா இன்பமாய்த் தித்தித்திருந்த தென்பதாம்.

"அம்பொன்நெடு மணிமாட அயோத்தி எய்தி
அரசெய்தி அகத்தியன்வாய்த் தான்முன் கொன்றான்
தன்பெருந்தொல் கதைகேட்டு மிதிலைச் செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்
செம்பவளத் திரள்வாய்த்தன் சரிதை கேட்டான்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள்
எம்பெருமான் தன்சரிதை செவியால் கண்ணால்
பருகுவோம் இன்னமுதம் மதியோமின்றே."
(பெருமாள் திருமொழி, 10-8)

இராம சரிதம் அமிர்தினும் இனியது; அதனையே பருகு வோம்; வேறு எதனையும் மதியோம்; உணவமுதத்தையும் ஒரு பொருளாக எண்ணோம் என அமரர் கணங்கள் தமருடன் கூடிக் களித்துரைத்த படி யிது. பொருளை நுனித்தறிந்து கொள்க.

பிறர் சொல்லக் கேட்டும், தாமே படித்தும் கோசலை சேயுடைய இசை யமிழ்தத்தை ஆசையுடன் கூடித் துய்ப்போம் என்பார், "செவியால் கண்ணால் பருகுவோம்" என்றார். அமரர் செவி நுகர் இன்பமாய் இவள் குமரன் கிளைத்துத் தழைத்துள்ளமை இதனால் அறியலாகும்.

கேள்வியைச் செல்வம் என்றது அதனையுடையவர்க்கு இருமையும் அது பெருமைதரும் இயல்பு நோக்கி.

* "செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை." (குறள், 411)

என்றார் தேவரும். செவிக்குச் செல்வம் இராமகதை என்பதை நம் கவி இங்கே குறித்தருளினார். வானோர் துய்க்க என்றதனால் ஏனையோர் இக்கேள்வியை எவ்வளவு மகிமையுடன் ஏத்திப் போற்றுவர் என்பது இனிது புலனும்.

நல்லோர் பல்லோராலும் இராகவன் கதையைக் கேட்டு மகிழ்ந்து அதனால் பெருந் திருவடைந்து சக்கரவர்த்தியாய்த் தழைத்திருக்கும் அனுபவ வாழ்க்கையை நம் கவி இங்கேபக்குவமாக வெளிப்படுத்தியிருக்கிறார்.

விண்ணவர் கேள்விச் செல்வம் துய்க்கக் கோசலை வயிற்றில் வளர்த்தளித்த கிளையைக் கம்பர் வாயில் விளைத்து மண்ணவர் எல்லாரும் என்றும் அண்ணிய அமிர்தமா நுகரத் தண்ணளியுடன் தந்துள்ளமையை யீண்டு எண்ணி யுணரவேண்டும்.

இங்ஙனம் வானும் வையமும் மகிழ ஒரு குல மகனைப்பெற்றருளிய இக்கோப் பெருந்தேவி கொழுநனை யிழந்து கொழுகொம்

* செவிச்செல்வம் என்றது கேள்வியை. நல்லோர் சொல்லும் உறுதி நலங்களை நயந்து கேட்டால் அதனால் உணர்வொளி பெற்று உயிர் உயர்ந்து விளக்கும்; விளக்கவே இருமையிலும் இன்பமாம்; ஆகவே உடலளவில் உலக போகங்களை வழங்கி ஒழியும் செல்வங்கள் எவற்றினும் உயிரை வளர்த்து ஒளிசெய்து நிற்கும் கேள்வி மிகவும் உயர்ந்தது ஆதலால் அது, "செல்வத்துள் எல்லாம் தலை" எனச் சிறந்து நின்றது.

பற்ற விழுமிய கொடிபோல் விழுந்து புரண்டாள். பிரிந்த மகனையும் இறந்த நாயகனையும் எண்ணி எண்ணி ஏங்கி அழுதாள்.

"பெற்றபிள்ளை பிரிந்தகன்று பெருங்கானம் படர்ந்தேகப்
பேணிக் கொண்ட
கொற்றமுடி மன்னனையும் கொடும்பாவி இழந்தேனே!
கொடுமை அந்தோ!
அற்றவருக் கருந்துணையே! அமரர்வாழ் வினிதளித்த
அரசர் கோவே!
உற்றமனை உயிரழிய ஒருமொழியும் உரையாமல்
ஒளிந்தாய் என்னே?"

என இன்னவாறு இன்னல்மீதூர்ந்து பன்னிப் புலம்பிப் பரதவித்த இவளை வசிட்ட முனிவர் வந்து ஆற்றி யருளிப் பரதனுக்கு ஆள் அனுப்பி அவனது வரவை எதிர்பார்த்திருந்தார்.

### பரதன் வருதல்.

அவ்வரதன் வந்து சேர்ந்தான். நிகழ்ந்ததை அறிந்தான்; நெஞ்சங் கொதித்து நெடுந் துயர் கூர்ந்து கைகேசியைப் பலவாறு கடிந்திகழ்ந்தான். முடிவில், "இக்கொடும்பாவியிடம் இரேன்; என் தெய்வத் தாயாகிய கோசலையிடம் போவேன்" என்று இத்தாயை நாடி அவனது ஓடி வந்தான். வந்த படியை அடியில் காண்க.

### பரதன் பரதவித்தது

"இன்னணம் இளையவன் இயம்பி யானுமிப்
பன்னருங் கொடுமனப் பாவி பாடிரேன்;
துன்னரும் துயர்கெடத் தூய கோசலை
பொன்னடி தொழுவன் என்று எழுந்து போயினன். (1)

### பணிந்து விழுந்தது

ஆண்டகை கோசலை அருகர் எய்தினன்
மீண்டுமண் கிழிதர வீழ்ந்து கேழ்கிளர்
காண்டகு தடக்கையிற் கமலச் சீறடி
பூண்டனன் கிடந்தனன் புலம்பினனரோ. (2)

### பரிந்து புலம்பியது

எந்தைஎவ் வுலகுளான்? எம்முன் யாண்டையான்?
வந்தது தமியன்இம் மறுக்கம் காணவோ?
சிந்தையின் உறுதுயர் தீர்த்திரால் எனும்
அந்தரத் தமரரும் அழுது சோரவே." (3)

(பள்ளியடைப் படலம், 87-89)

இந்த மூன்று கவிகளையும் ஊன்றி நோக்குங்கள்; பரதன் உள்ள நிலை உங்கள் உள்ளங்களை உருக்குதலை உணர்ந்துகொள் வீர்கள். ஒரு புனிதவுயிர் மனிதவகை உயர மகிமை தருகின்றது.

இந்தப் பாத்திரத்தின் பான்மை மேன்மைகளையும் ஆன்ம வுருக்கங்களையும் தனியே பார்க்கவேண்டும்; அது அரங்கமேடை யில் வரும்பொழுதே யாவும் அறிய உரியன; ஆயினும் ஈண்டு நம் கோசலைத் தாயிடம் வேண்டியவளவு சிறிது காண நேர்ந்தோம்.

"தூயகோசலை பொன்னடி தொழுவன்"

என்று அக்குல மகன் எண்ணி வந்துள்ளமையால் இத்தா யின்பால் அவன் கொண்டுள்ள அன்பும் மதிப்பும் நன்கு அறிய வந்தன. வெளியே வருகின்ற வாய்மொழிகள் ஒருவன் உள்ள நிலையை ஒளிசெய்து காட்டுகின்றன.

அழுத கண்ணனாய் உழுவலன்போடு உருகி வந்தவன் இவள் அடியில் விழுந்து கால்கள் இரண்டையும் கைகளால் பிடித்துக் கொண்டு கதறியலறினான். மண்கிழிதர வீழ்ந்து என்றதனால் அடியற்ற மரம் போல் அவன் தரையில் விழுந்த நிலை தெரிய நின்றது. உள்ளே மண்டி யெழுந்த துயரத் துடிப்புகள் புறத்தே பட்டுள்ள பரதவிப்புகளால் அறியலாகும்.

காலில் கிடந்தபடியே தாயைக் கரைந்துகூவி "ஐயோ! அம்மா! என் அண்ணா எங்கே? தந்தையார் யாண்டுளார்? இந்தத் துன்பத் தொல்லைகளைக் காணவா நான் இங்கே வந்தேன்? என் ஆருயிர் அன்னையே! அருமைத்தாயே! பெருமைத் தெய்வமே!" என்று அவன் மறுகித்துடித்தான்.

அவனுடைய பரிதாபத்தை நோக்கி "இவன் மிகவும் பரிசுத் தன்" என்று தெளிந்து அவனை ஆரத்தழுவி இத்தாய் ஆறுதல் கூறினாள். பரதன் முன்னிலையில் கோசலைத்தாய் செய்துநின்ற பாசப் பண்புகளை இங்கே நாம் பார்க்க வருகின்றோம்.

"புலம்புறு குரிசில்தன் புலர்வு நோக்கினள்
குலம்பொறை கற்பினை சுமந்த கோசலை
நிலம்பொறை ஆற்றலன் நெஞ்சம் தூய்தெனச்
சலம்பிறி துரானெனத் தளர்ந்து கூறுவாள்.

மையறு மனத்தொரு மாசுளான் அலன்;
செய்யனே என்பது தேரும் சிந்தையாள்
கைகயர் கோன்மகள் இழைத்த கைதவம்
அய்யநீ அறிந்திலை போலும் ஆலென்றாள்."
(பள்ளியடைப்படலம், 94-95)

உருகி அழுது பரதன் உரைத்த மொழிகளைக் கேட்டதும் கோசலை உள்ளங் கரைந்தாள். அவனது புனித நிலைமை உணர்ந்து இனிது தேறி இதமொழிகள் புகன்றாள்.

இவ்வாசி நெஞ்சில் முன்னம் புகுந்திருந்த ஐயங்கள் இங்கே அறவே நீங்கியுள்ளன. அந்நீக்கம் விநயமாக விளக்கப்பட்டிருக்கிறது.

"நிலம் பொறை ஆற்றலன்; நெஞ்சம் தூய்து"

என்றதனால் பரதனைக் குறித்து இந்த அன்னை இதுவரை மாறுபாடாகக் கருதி யிருந்துள்ளமை யூகமாக உணர வந்தது.

"கைகேசி செய்துள்ள சூழ்ச்சி மகனுக்கும் ஓரளவு தெரிந்து தானிருக்கும்; முன்னம் தெரியாது போயினும் பின்னரேனும் அறிந்திருப்பன்; ஊரிலிருந்து வந்தவுடன் அரசுமுடிசூடி ஆட்சி புரிய நேர்வன்; இயற்கையில் நல்லவனாயினும் தாயின் போதனையால் நெஞ்சந் திரிந்து வஞ்சம் புரியவரும்" என இன்னவாறு அக் குலமகனைப் பற்றி இக் கோசலைத்தாய் சிந்தையில் சந்தேகித்திருந்தாள். இதுபொழுது அப் புண்ணியப் புதல்வன் உள்ளமையைக் கண்ணெதிரே கண்டாள்; உண்மையை உணர்ந்து உள்ளமுருகி எண்ணியது தவறென இரங்கி யருளினாள் என்க.

நிலம்பொறை ஆற்றுதல் அரசனாய் நின்று உலகை ஆளுதல். மனநிலை மாறித் தூய்மை குன்றி அரசை ஆற்றுவான் என்று கருதியிருந்தாள்; நேரே உறுதி தெளிந்த பின், "ஆற்றலன்; நெஞ்சம் தூய்து" என அதனை மாற்றியுணர்ந்தாள். உள்ளத்தே குறித்தன உரைகளால் தொனித்திருக்கின்றன.

இவ்வன்னை மனத்தில் படிந்திருந்த இன்னலும் வெறுப்பும் ஈண்டு நீங்கித் தண்ணளி புரிந்து தயங்கி மொழிந்தாள் ஆதலால்

சலம் பிறிதுற, மனம் தளர்ந்து சாற்றுவாள்

என்றார். சலம்=சஞ்சலம் கலந்த சினம். தனது அருமை மகன் வனம் போகவும், தான் அவலமெல்லாம் அடைந்து வருந்

தவும் இவனும் தாயும் ஏதுவாயினர் என எண்ண வந்தமையால் நேர்ந்த உள்ளக் கொதிப்புகள் இப்பிள்ளை முகம் காணவும்பிரிந்து போயின என்பது பிறிதுற என்றதால் அறியலாகும். தளர்ந்து என்றது இனியவனை இன்னுதவனுக எண்ணிவிட்டோமே! என்று இரங்கி வருந்தி மனம் கரைந்து நின்றுள்ளமை தெரியவந்தது.

* "நிறைகுணத்தவன்; நின்னினும் நல்லன்" என்று முன்னம் இராமன் முன்னிலையில் பரதனைப் புகழ்ந்து சொல்லிய இவ்வன்னை பின்னர் இன்னவாறு பிழையாக எண்ணியது என்னை? எனின், தனது அருமைத் திருமகன் வனம்போகும்படி வரைந்து செய்துள்ள அச்சூழ்ச்சிச் சூழல்கள் தொடர்ந்து தொல்லைகள் பல சூழ்ந்து தன்னை அல்லற்படுத்தி யுள்ளமையான் என்க.

அரச திரு உலகில் உயர்ந்தது; எவரையும் அது தன் வசப்படுத்த வல்லது; அதன் ஆசையால் அண்ணன்மேலிருந்த பாசமெல்லாம் மாறி வேறுளாய்ப் பரதன் பாராளவும் கூடும் எனக் கோசலை யோசனை செய்துள்ளமை உரைகளிலிருந்து தெளிவாய் வெளிவந்துள்ளது.

தரும நிலையமான பரம புனிதனை மனித இயல்பின்படி இப்படி மதிப்பிடலாயினள். "மனத்தால் மறுவிலரேனும் தாம் சேர்ந்த இனத்தால் இகழப்படுவர்" என்றபடி யாதொரு மாசும் இல்லாத பரதனும் கைதவக் கைகேசியின் தொடர்பால் இத் தெய்வத் தாயால் இங்ஙனம் சந்தேகிக்க நேர்ந்தான். நேர்ந்தும் நேரே கண்டவுடன் உள்ளதை ஓர்ந்து உண்மை தெளிந்துகொண்டாள்.

"மையறு மனத்து ஒரு மாசுளான் அலன்; செய்யனே"

என ஐயம் நீங்கி அகமிக மகிழ்ந்து அவன்பால் ஆர்வமீதூர்ந்திருத்தலால் இவளது நீர்மையும் நேர்மையும் நிலை தெரிய வந்தன.

தண்ணளி நிறைந்த இப் புண்ணியவதியின் கண்ணிய இயல்புகள் யாண்டும் கனிவு மிகுந்து இனிமை பயந்துள்ளன.

குலம் பொறை கற்பு இவை சுமந்த கோசலை

என இப்பேரரசியைக் கவி இங்கே இவ்வாறு குறித்திருக்கிறார். குலம் என்றது பெருந் தகைமை நிறைந்த குடிப்பிறப்பை.

* இந் நூல் பக்கம் 716, வரி 26 பார்க்க.

உயர்வான குணநலங்கள் யாவும் இயல்பாக இனிது விளைதற்கு இக்குடிநலம் தனி நிலையமாயிருத்தலால் அத்தலைமை தோன்ற இதனை முதலில் வைத்தார். பண்பட்ட சிறந்த நிலம் பலன் மிகத் தருதல்போல் பரம்பரையான உயர்ந்த குடியும் நலன் பல தரும் என்க. இக் குல நலத்தை நம் கவி பலவழியிலும் பாராட்டியிருக்கிறார்.

"கலம் சுரக்கும் நிதியம்; கணக்கிலா
நிலம் சுரக்கும் நிறைவளம்; நன்மணி
பிலம் சுரக்கும்; பெறுதற்கரியதம்
குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்."

(பாலகாண்டம், நாட்டுப்படலம், 38)

நல்ல ஒழுககஙகளாக குலம சுரக்கும் என இதில்
க்கும் அழகைக் கூர்ந்து பார்க்க. கலம்=மரக்கலம், கப்பல். நிலம்=விளைபுலம். பிலம் என்றது பொன்மணிகளுள்ள சுரங்கங்களை. உயர்திணையாகிய குலம் கூறவந்தவர் கலம் முதலியவற்றைக் கலந்து கூறினர். நிதி, வளம், மணி, ஒழுக்கங்களை முறையே கலமும் நிலமும் பிலமும் குலமும் கோசல நாட்டில் கொழித்து வந்தன என்பதாம்.

"நிலம் விளக்கிடும் நித்திலம், நீலவுற்
பலம் விளக்கிடும் பைம்புனல், பண்பினன்
நலம் விளக்கிடும் நல்லவர் வாய்மொழி,
குலம் விளக்கிடும் கோசல நாடரோ."

(அரிச்சந்திர புராணம், நாட்டுச்சிறப்பு, 59)

நமது கவியை அடியொற்றி இது வந்திருத்தல் காண்க.

கோசல நாட்டுக் குடிமக்களிடம் வாய்மையும் ஒழுக்கமும் இங்ஙனம் தூய்மையுடன் குலாவியிருந்தன என்றதனால் அந்நாட்டரசியின் வியத்தகு மேன்மை விளங்கித் தோன்றும்.

மாற்றவள் செய்த சதியால் மனந் திரிந்திருந்தும் அவளது மகன் நிலைமையை அறிந்தவுடனே இவள் சலம் தவிர்ந்து நலம் புரிந்து நயந்து நின்றது குலம் சுரந்த குணம் ஆதலால் அதனை வியந்து குறித்தார்.

"சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்." (குறள், 956)

என்னும் இப்பொய்யாமொழியால் நல்ல குடிப்பிறப்பாளர் அல்லலுறினும் பொல்லாதன புரியார் என்பது புலனும். எல்லா நலங்களுக்கும் ஏதுவாயிருத்தலால் இந்த இற்பிறப்பு முற்பட

"இற்பிறப்பென்ப தொன்றும் இரும்பொறை என்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்."
(சுந்தர காண்டம், திருவடிதொழுதபடலம், 62)

எனச் சீதையைக் குறித்து அனுமான் வாயிலாகச் சொல்லியுள்ளதும் ஈண்டு அறியத்தக்கது. இங்கே வரைந்த குலம் பொறை கற்பு அங்கே எப்படி விரிந்துள்ளன! உரைகளையுய்த்துணர்ந்துகொள்க. மாமியையும் மருமகளையும் ஒரு துலையில் வைத்து நம் கவி பெரு வணக்கம் செய்துவருகிறார்.

ஈண்டு இத்தாய் சுமந்து வந்தன ஆண்டு அத் தேவியிடம் களிநடம் புரிந்தன. நிலைகளின் தரங்களை நினைந்து தெளிக. இவ்வண்ணம் நிறைகுணத்தளாய்ப் பொறை கனிந்து பரதனைப் பரிந்து நோக்கி, "ஐயா! உன் தாய் செய்த சதி நீ யாதும் அறியாய் போலும்?" என்று ஆதரவுடன் கேட்டாள். இவ்வுரை செவியில் விழவும் அப்பிள்ளை உள்ளந் துடித்தான். "ஐயோ! அம்மா! என்னையும் இன்னவாறு தாங்கள் ஐயமுற நேர்ந்ததே! ஆ தெய்வமே! அண்ணா!" என்று அலறி அழுதான். "அக்கொடியவள் புரிந்த வஞ்சம் கொஞ்சமேனும் என் நெஞ்சம் அறிந்திருப்பின் நான் இன்ன கதிகளில் போவேனாக" எனக் கடுமையான சபத மொழிகளைக் கவன்று மொழிந்தான். ஆணைகள் பல குறித்து அக்குரிசில் உரைத்திருக்கும் உறுதி நலங்கள் ஒரு சிறு நூலாக உருவமைந்துள்ளன. அவற்றையெல்லாம் அவன் வரலாறு வருங்கால் நிரலே காண்போம். அவ்வுரைகளால் அவனது உள்ளத்தூய்மையைத் தெள்ளத் தெளிந்து இத்தாய் உள்ளம் உருகினாள். அக்குமாரனைத் தழுவி உழுவலன்புடன் இவள் உருகி நின்ற நிலைகளை அடியில் வரும் கவிகளில் காண்க.

கோசலை பரதனைக் கருதியது

தூய வாசகம் சொன்ன தோன்றலைத்
தீய கானகம் திருவின் நீங்கிமுன்
போயினான் வரக் கண்ட பொம்மலாள்
ஆய அன்பினால் அழுது புல்லினாள். (1)

### உருகி நின்ற நிலை

*செம்மை நன்மனத் தண்ணல் செய்கையும்*
*அம்மை தீமையும் அறிதல் தேற்றினள்*
*கொம்மை வெம்முலைக் குமுறு பாலுக*
*விம்மல் விம்மநின் றழுது விங்கினள்.* (2)

### உவந்து புகழ்ந்தது

*முன்னை நம்குல முதலு ளோர்கள்தாம்*
*நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?*
*மன்னர் மன்னவா! என்று வாழ்த்தினள்*
*உன்ன உன்னநைந் துருகி விம்முவாள்.* (3)

### சத்துருக்கன் கோசலையை வணங்கியது.

*உன்ன வுன்னநைந் துருகும் அன்புகூர்*
*அன்னை தாளின்வீழ்ந் தினைய அண்ணலும்*
*சொன்ன நீர்மையால் தொழுது மாழ்கினன்.*
*இன்ன வேலைவாய் முனிவன் எய்தினன்.* (4)
(பள்ளியடைப்படலம், 117-120)

இப்பாடல்களில் படிந்துள்ள உயருணர்ச்சிகளையும் உள்ளுருக்கங்களையும் ஊன்றிநோக்கிஉயிர்நிலைகளை உணர்ந்துகொள்ளவேண்டும்.

பரதன் பரம பரிசுத்தன் என்று உறுதியாகத் தெரிந்தவுடன் பரிவுமீதூர்ந்து கோசலை உருகியழுதிருக்கும் நிலை எவரையும் உள்ளம் உருக்கியுள்ளது. தூயவன் என உணரவும் தாய் அகம் மகிழ்ந்தது. அம்மகிழ்ச்சி நிலையைக் கவி எப்படி நமக்குக் காட்டுகிறார்! காட்சியைக் கண்ணூன்றிக் கவனியுங்கள்.

*"தீயகானகம் திருவின்நீங்கி முன்*
*போயினன் வரக் கண்டபொம்மலாள்"*

என்னும் இவ் இனிய விளக்கம் கனிவு மிகவுடையது.

தன்னைக் கைவிட்டுக் காட்டுக்குப்போன தனது அருமைத் திருமகனை இராமன் மீண்டு வந்ததுபோல் கண்டு பரதனைக் கோசலை கண்டு மகிழ்ந்து கனிந்துருகி நின்றாள் என்பதாம். உள்ளம் பூரித்து உவந்துள்ள உயிர்நிலை 'பொம்மல்' என்றதனால் புலன்கொள வந்தது. பொம்மல்=மனப்பூரிப்பு.

காணுதுபோன கண்மணி கண்ணெதிர்ப்பட்டது போல் ஆறுவுகையளாய் அமர்ந்து நின்றநிலைக்கு ஆன உவமையைக் கவி இங்கே அமைத்திருக்கும் அழகு உவகை நிலையமாய் உதித்து ஒளிமிகுந்திருக்கின்றது.

இறந்த நாயகன் எழுந்துவரக் கண்டதுபோல் உவந்து நின்றாள் எனினும் ஓரளவு உரிமை தெரிந்திருக்கும் ஆயினும் அப்பொருத்தம் விருத்தமாய் விரசப்படும் ஆதலால் அதனைவிடுத்துப் பிரிந்தமைந்தன் பெயர்ந்து வந்ததை விழைந்து குறித்தார். குறிப்பினுள்ள குலையுருக்கத்தைக் கூர்ந்து பார்க்க.

பிள்ளைக்காதலில் பெருகியுள்ள தாயின் புனித உள்ளத்தை இவ் இனிய உவமையால் வெளிப்படுத்தி யருளினர். கானகம் போன இராமனையே இரவும் பகலும் எப்பொழுதும் எண்ணி எண்ணி ஏங்கியிருந்தாள் ஆதலால் அவன் வரவு பொம்மல் நிலையமாய் இவ்வம்மையுள்ளே பொங்கி நின்றது.

பத்து மாதம் சுமந்து பெற்ற தனது அருமைப் புதல்வனைவே பாதனை உரிமையுடன் கருதி உருகி உவந்தாள் என்றதனல் இவ் அரசியுடைய பெருந்தகவும் பேரன்பும் நேர்மை நிலையும் நேரே தெரியலாகும். பிரிந்துபோன பிள்ளையின்பால் உள்ள உழுவலன்பு உள்ளத்தை உருக்கியுள்ளமையால் அழுது புல்லினள் என்க.

அன்புணர்ச்சிகளை என்புருக்கும்படி பண்புற அமைத்து யாண்டும் இன்பம் பயக்க நம்கவி இனிது உணர்த்தி வருகிறார்.

போனவனுக்குப் பதிலாக அம்மானவனை இம்மாதா மதித்துக்கொண்டாள் என்றதனல் அம்மதிப்பு அப் போக்கைப் பதினன்கு ஆண்டுகளாக நிலையுறுத்தி நின்றது என்பது நுட்பமாக உய்த்துணரவந்தது.

மாற்றாள் மகன் என்று எண்ணி இகழாமல் தன் அருமை மகனுக்கு நேரே உரிமையான மாற்றாள் எனவே போற்றிப் புகழ்ந்தாள் என்பதாம்.

புதல்வர் நால்வரிடமும் ஒரு நிகரான உயர் பேரன்பினை இயல்பாக வுடையாள்; இடையே சக்களத்தி செய்த வெய்ய வினையால் அவள் வயிற்றுப் பிள்ளைபால் ஐயம் நிகழ்ந்தது; அது தீரவே, அக்குலமகனிடம் நிலையான பாசம் நெடிதோங்கி இத் தலைமைத் தாயுள்ளத்தே தழைத்து நின்றதென்க.

2. அம்மை என்றது கைகேசியை. அவள் புரிந்த சதியால் பேரிழவுகள் பெருகி எழுந்தன ஆதலால், அம்மை தீமை என அதன் வெம்மை தோன்ற வந்தது.

தாயின் தீயபுன்மையையும் சேயின் தூய தன்மையையும் செவ்வையாகக் கோசலை தெரிந்துகொண்டாள் என்பார் அறிதல் தேற்றினள் என்றார். செம்மை நன்மனத்து அண்ணல் எனப் பரதனை எண்ணி மகிழ்ந்தது அப்புண்ணியனது உண்மையான உள்ளத்தூய்மைகளை ஓர்ந்து என்க.

செய்கை என்றது அண்ணன்பாலுள்ள அன்பின் பெருக்கால் அழுது தவித்து அலமந்து நிற்கும் அல்லற்பாடுகளை. கள்ளம் கபடுகள் யாதும் இன்றி உள்ளம் உருகி உரிமை கனிந்திருக்கும் செயல் நிலைகள் செம்மை என வந்தது. செம்மை எவ்வகையிலும் நெறிதிறம்பாதிருக்கும் செவ்விய நீர்மை. நன்மை=அறநலங்களெல்லாம் ஒருங்கே நிறைந்திருக்கும் தன்மை.

செவ்விய மனநலமுடைய இத் திவ்விய மகனையும், அவ்வியமுடைய அவ்வெவ்விய தாயையும் விதந்து நோக்கி வேறுபாடு தெரிந்து இப்பேரரசி இளையவனை ஆரமையுடன் தழுவி யுருகி விழிநீர் சொரிந்து விழைந்து குழைந்து புகழ்ந்து போற்றி நின்ற நிலையை எவரும் வியந்துருகக் கவி விளக்கியிருக்கிறார்.

"கொம்மை வெம்முலை குமுறுபால் உக
விம்மல் விம்மநின் றழுது வீங்கினள்"

என்றதனால் இந்த அம்மையினுடைய உள்ளக்கனிவும் உயிருருக்கமும் எவ்வளவின என்பது எளிது புலனும். பதங்களில் படிந்துள்ள உணர்வுநலங்கள் உயர்ந்த பண்புகளில் விளைந்து தண்ணளி நிறைந்து தகைமை வளர்ந்துள்ளன.

முலை பால் உக என்றது பிள்ளையிடம் தாய்க்குண்டான பேரன்பின் பெருநிலை தெரியவந்தது. இப்பொழுது இராமனை ஈன்று இருபத்துநான்கு வருடங்களாகின்றன. இந்த வயதில் இந்தத் தாய் மார்பில் பால் எந்த வகையில் வந்தது? எனின், மகவின்பால் மண்டிய புனித அன்பு தலை சிறந்து நின்றபொழுது தன்னையறியாமலே அவ்வன்னையிடம் பால் முலை சுரந்து வரும் ஆதலால் அந்த அதிசய நிலை இங்கே துதி செய்ய வந்ததென்க.

பிள்ளைக் காதலால் உள்ளம் உருகும்; அவ்வுருக்கம் அமுதப் பெருக்கமாய் வெளிப்படும் என்பதாம். தாய்மையின் தூய்மையான தனி அன்புக்கு இனிமையான ஓர் புனித அளவு கூறிய படியிது. பொதுவான மன்பதை அன்பு ஆர்வலர் புன்கண்ணீரால் புலப்படுதல் போல் சிறப்பான தலைப் பாலன்பு தாயரது முலைப்பாலால் வெளிப்படும் என்க. மண்பால் அன்பிற்கு நீரும், பெண்பால் அன்புக்குப் பாலும் பார்வைக் கருவியாய்ப் பதிந்துள்ளமையால் அதன் நீர்மையும், இதன் சீர்மையும் நிறை தெரியலாகும்.

> "கொற்றக் கொடிச்சி குழவியைத்தன் கைவாங்கி
> மற்றப் பொழுதில் வயாவும் வருத்தமுமாய்ப்
> பெற்றுக்கொள் வாள்போலப் பேணிப் பெரிதுமகிழ்
> வுற்றுக் கனதனத்தில் ஊறும் அமிர் தூட்டினளால்."
> (கந்தபுராணம், வள்ளியம்மை திருமணப்படலம், 37)

வள்ளிநாச்சியாரைப் பிள்ளையாகக் கண்டெடுத்த பொழுது குன்றவாணன் மனைவி கொண்ட அன்பால் தன்பால் மிக மண்டி வந்தது என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. பிள்ளைப்பேறு அறியாதவளும் அதனை நேரே கண்டு பேரன்பால் உள்ளம் உருகிய பொழுது அவளுடைய முலைகளில் பால் ஊறிவரும் என்பது இதனால் உணரலாகும். குழவியைத்தழுவி உழுவலன்புடன் உளம் உருகின் மலடி மார்பிலும் பால் பீறிவரும் என்பது பெற்றும்.

பெற்ற மகன் எனவே உற்றமகனை இங்ஙனம் உவந்து தழுவி உளமிகவுருகி விழிநீர் சொரிந்து அளிபுரிந்து நின்ற கோசலை அக்குழகனைக் கெழுதகைமையுடன் நோக்கி வியனுரைகள் சில விழைந்து மொழிந்து குழைந்து வாழ்த்தினள்.

> "முன்னை நும் குல முதலுளோர்கள் தாம்
> நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்?"

என இவ் அன்னை அம்மகனை வியந்து புகழ்ந்திருக்கும் நிலை உணர்ந்து சிந்திக்கத்தக்கது.

முதலுளோர்கள் என்றது சூரிய குலத்தில் தலை சிறந்துள்ள மனு, மாந்தாதா, ககு, சிபி, முதலானவர்களை. முன்னிருந்த மன்னவரெவரும் இப்பின்னவனுக்கு நிகராகார் என்று என்ன கார

ணத்தை எண்ணி இவ்வன்னை இன்னவாறு சொன்னாள்? எனின், வனது குணநலங்கள் முழுவதையும் நேரே வழுவறத் தெளிந்து உமிக வியந்து அதிசய பரவசம் அடைந்துள்ளமையான் இங் ஙனம் துதிசெய்து நின்றாள் என்க.

அகில மங்கள குணகண சொரூபியான இராமன் எதிரிலே யே, "ஐயா! பரதன் நின்னினும் நல்லன்" என முன்னம் சொன்னவள் இங்கே தலைமுறையில் உயர்ந்துள்ள பலரையும் ஒருங்கே தொகுத்து ஒப்புநோக்கி எவரும் "இவனுக்கு நிகரிலர்" என இக் குணசீலனது நிலைமையை நிறைதூக்கி நேரே கூறி யருளினாள்.

இக்குலமகனது உயர்நிலை காவியத்தில் பலர் வாயிலாகவும் வியனாக வெளிப்பட்டுள்ளது. "சூரியன் மற்றை ஒளிகளையெல் லாம் தன்னுள் அடக்கித் தலை சிறந்து நிற்றல் போல் உலகில் தோன்றிய குலமன்னர்களுடைய பெருமைகளை யெல்லாம் தன் புகழ் ஒளியுள் ஒடுக்கிப் பரதன் உயர்ந்தோங்கியுள்ளான்" எனக் குகன் * கூறியுள்ளதும் ஈண்டுக் குறித்து நோக்கற்பாலது.

வீரம் கொடை முதலிய வேறு வேறு நிலைகளில் ஒருவாறு சிலர் நேராகவரினும் குணநலங்களில் எவரும் நிகர் ஆகார் என் பாள் "யாவரே நிகர்க்கும் நீர்மை யார்?" என்றாள். ஒருவரும் இலர் என உறுதி கூறியபடியிது. இங்கே நீர்மையாவது அண்ண னைக் கண்ணினும் உயிரினும் இனியனாக எண்ணிப்பேணி என்றும் நிலை திரியாமல் என்பு நெக்குருகி அன்பு பெருகி ஆர்வமீதூர்ந்து அருள் சுரந்து யாண்டும் புண்ணிய சீலனாய்ப் பொருந்தியிருக்கும் தன்மை.

ஒருவனது புனித நீர்மையை உணர்த்தற்குப் பலரையும் தொகுத்து எதிர் நிறுத்தித் தாழ்த்தியது, என்னை? எனின், அவ னுடைய அருமை பெருமைகளையாவரும் தெளிவாக அறிய என்க.

"To be honest, as this world goes, is to be one man picked out of ten thousand." (Hamlet, 11-2)

"இந்த உலக நிலையை நோக்கில், நல்ல யோக்கியன் பதினா யிரவருள் ஒரு மனிதனே அரிதாயமைகின்றான்" எனக் கணக்

* குகப்படலம் 36-வது பாட்டைப் படித்துக் கொள்க.

கை இணைந்தெண்ணி மேல்நாட்டுப் புலவரும் கணித்திருத்தல் காண்க.

இன்னவாறு பரதனது நீர்மை நிலையை நினைந்துருகிய அன்னை பின்னர் "மன்னர் மன்னவா!" என்று மகிழ்ந்து கூறினாள். இந்த வாசகம் பெரிதும் சிந்தனைக் குரியது.

சக்கரவர்த்தியான தசரதன் ஒருவனுக்கே உரிமையாக யாண்டும் வழங்கிவருகின்ற இப்பேரை ஈண்டு இவனுக்கு இசைத்தது மேல்வரும் இசைவினை எதிர் நோக்கி என்க.

"அண்ணா முடி துறந்து அடவி போயினான்; ஐயா படி துறந்து பரம் அடைந்தார்; இனி நீயே வையம் ஆளவேண்டும் ஐயா!" என்று தன் சம்மதத்தை நன்மனத்துடன் உணர்த்தி அவ் இளையமகனை இத்தாய் இங்ஙனம் உளமகிழ்ந்து வாழ்த்தியருளினாள்.

தருமமூர்த்தியான இவனே எந்த வகையிலும் அரசாள உரியவன் என்று சிந்தை குளிர்ந்து இந்தவாறு நயமாக விளம்பினாள். இவ் வார்த்தையின் குறிப்பை உணர்ந்ததும் அக்குலமகன் குலை துடித்தான்; "இது என் தலையெழுத்தா? அம்மா!" என்று அலறி அலமந்தான். "இராமபிரானது அடிகளைத்தொழுது என்றும் ஊழியம் புரிகின்ற அடிமையான என்னை அரசாளுக என்றது அன்னையே! என்னால் சகிக்க முடியாது: இனி ஒருபோதும் அவ்வாறு உரையாதருளுக தெய்வமே!" என்று உருகியழுதான்.

அவனது நிலைமையைத் தெளிந்து இவள் நெஞ்சம் உருகினாள். குணநலங்களையும் மனநிலையையும் மதிநலத்தையும் நினைந்து நினைந்து உள்ளம் கரைந்தாள்; கண்ணீர் வெள்ளமாய் விரைந்தது. விம்மி விம்மி அழுது மெய்ம்மறந்து நின்றாள். அந்நிலையினை அடியில்வரும் தொடர்மொழி நெடி துணர்த்தியுள்ளது.

"உன்ன உன்ன நைந்து உருகி விம்முவாள்" என்றதனால் இவ் வன்னை அன்று எண்ணியுள்ள எண்ணங்களும், கண்ணீர் சொரிந்து கரைந்தழுது கருத்துருகி நின்றதும் அறியலாகும். இப்படி வெப்பம் மிகுந்து வெய்துயிர்த்து விம்மிநிற்கும் பொழுது அயலே கண்ணீரும் கம்பலையுமாய்க் கலங்கிநின்ற சத்துருக்கன் விரைந்து

வந்து இத்தாயின் தாள்களில் தாழ்ந்து வணங்கினான். தொழுது கிடந்த அவனைத் தழுவி எடுத்து அருகணைத்து முகம் துடைத்து அகங் குழைந்து ஆர்வ வுரைகளாடி இருவரையும் மருங்கு வைத்து மறுகி யுளைந்து இவ்வன்னை உருகியிருந்தாள்.

இங்ஙனம் இருக்குங்கால் அங்கே வசிட்டர் வந்தார். அவரைக் கண்டதும் பரதன் வணங்கி நின்று தமையனையும் தந்தையையும் வினவி அழுதான். அவர் ஆற்றித் தேற்றி மேல் ஆக வேண்டியதைச் செய்தார்.

## பரதன் பரிந்து புரிந்தது.

தந்தையின் தகனகிரியை முடிந்தது. சடங்குகளுக்குரிய பத்து நாள்களும் கழிந்தபின் வசிட்டரும் சுமந்திரன் முதலிய மந்திரிகளும் இம்மைந்தனிடம் வந்தனர். மரியாதைகள் செய்தனர். அரசு முடி சூடும்படி பரசி வேண்டினர். அவ் வேண்டுகோளைக் கேட்டதும் இவ் வாண்டகை துடிதுடித்தான்; முதிர் சினத்துடன் எதிர்மறுத்து, "என் அண்ணனை அழைத்து வந்து மணிமுடி சூட்டிக் கண்ணாரக்கண்டு களித்தாலன்றி மண்ணா நான் இனி வதிந்திரேன்" என உண்ணுவிரத முடையனாய் உறுதிசெய் தெழுந்தான். மறுநாள் வந்தது. "அடவி போயுள்ள அத்தெய்வத்தைக் கொண்டுவரக் குடிசனங்கள் எல்லாரும் உடனெழவேண்டும்" என முரசறைவித்தான். அவ்வொலியைக் கேட்டதும் உயிர்கள் யாவும் உள்ளங் களித்தன. அனைவரும் ஒருங்கே திரண்டனர். படை பரிவாரங்களுடன் பரதன் எழுந்தான். தாய்மார் மூவரும் உடன் தொடர்ந்தார். சேனை தளங்களுடன் இம்மானவன் வழிநடந்ததும், பரத்துவாசரை அடைந்ததும், குகனைக் கண்டதும், தோழமை கொண்டதும் அன்பு நலங்கனிந்த இன்பக் காட்சிகளாய்ப் பண்புகள் பலபடிந்து பலன் மிகுந்துள்ளன. அவை யாவும் பின்பு காணவுரியன.

பேரன்புடைய குகன் நேரே வந்து நிலைமை தெரிந்து இக் குலமகனைத் தழுவி நெஞ்சம் உருகினான். படைகளையெல்லாம் கங்கை கடத்தினான். இறுதியில் பரதன் ஏறுதற்குச் சிறந்த நாவாய் ஒன்று கொண்டுவந்தான். அது உயர்ந்த வேலைப்பாடுகள் உடையது. அரச குடும்பம் மட்டும் அமர்ந்திருக்க வுரியது.

## கோசலை கங்கையில் நின்றநிலை

கோசலைத் தாயை முதலில் ஏற்றினன். கைகேசியும் சுமித்திரையும் அடுத்து ஏறி அருகே நின்றனர். பின்பு தம்பியுடன் பரதன் ஏறினன். இராச மரியாதைக்காக அத் தோணியைக் குகனே நடத்தக் குறிக்கொண்டு நின்றான். கைதேர்ந்த பாகனல் நீர்மிதவை சீர்மையுடன் நேர் நடந்தது. அங்ஙனம் நடக்குங்கால் அரசிகளுள் தலைமைபெற்று அருந்தேசுடன் அமர்ந்திருக்கும் பெருந்தகைக் கோசலையைக் குகன் கூர்ந்து நோக்கினன். தன்னை யறியாமலே உள்ளம் உருகியது; பெற்ற தாயினும் பற்று மிகப்பெற்றது; இவ்வன்னையாரை இனந்தெரிந்துகொள்ள அவன் மனந்துணிந்தது; துணிந்தவன் பரதனிடம் அணுகி மெதுவாய் வாய்புதைத்து இனிது வினவினன். குகன் வினவவே, அக் குமரன் கூறினன். இத்தாயைக் குறித்து அத்தூயவன் உரைத்ததும், தொடர்ந்து நிகழ்ந்ததும் உணர்வுநலங் கனிந்து உயிருருக்கள் சுரந்து உயர் மேன்மையுடையனவாய் ஒளிவளர்ந்துள்ளன. அடியில் வருவன காண்க.

கோசலையைப் பரதன் குகனுக்கு அறிவித்தது.

சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற கோசலையைத்
    தொழுது நோக்கி
வெற்றித்தார்க் குரிசிலிவர் ஆரென்று குகன்வினவ
    வேந்தர் வைகும்
முற்றத்தான் முதற்றேவி மூன்றுலகும் ஈன்றானை
    முன் ஈன்றானைப்
பெற்றத்தால் பெறுஞ் செல்வம் யான்பிறத்தலால் துறந்த
    பெரியாள் என்றான்.

குகனைக் கோசலை வினவி யறிந்தது.

என்றலுமே அடியின்மிசை நெடிதுவீழ்ந் தழுவானை
    இவன்யார் என்று
கன்றுபிரி காராவின் துயருடைய கொடிவினவக்
    கழற்கால் மைந்தன்
இன்றுணைவன் இராகவனுக்கு, இலக்குவற்கும் இளையவற்கும்
    எனக்கும் மூத்தான்
குன்றனைய திருநெடுந்தோட் குகன்என்பான் இந்நின்ற
    குரிசில் என்றான்.

கோசலை குகனை மகன் என்று கொண்டது.

நைவீர லீர்மைந்திர்! இனித்துயரால் நாடிறந்து
காடு நோக்கி
மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலமாயிற் றுமன்றே
விலங்கற் றிண்டோட்
கைவீரக் களிறனைய காளையிவன் தன்னோடு
கலந்து நீவிர்
ஐவீரும் ஒருவீராய் அகலிடத்தை நெடுங்காலம்
அளித்திர் என்றாள், (குகப்படலம், 65-67)

இந்தப் பாடல்கள் அன்புநலங் கனிந்து இன்ப நிலையமாய்ச் சுவை சுரந்து வந்துள்ளன. உள்ளப் பண்புகளும் உணர்வியல்புகளும் எவருடைய மனங்களையும் கொள்ளைகொள்ள வல்லன. பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் நிகழ்ந்தன; எல்லா வுயிர்களுக்கும் என்றும் புதிதாய் யாண்டும் இன்பக் காட்சிகளாய் இருந்து வருகின்றன. ஒரு முறை ஊன்றிப் படித்தால் பல நலங்கள் உள்ளம்படிதலை அறிஞர் அனுபவத்தில் கண்டு அகம் மிகமகிழலாம்.

கோசலையும் குகனும்

பரிசுத்தமான கங்காநதி; வெண்ணிறமான தண்ணீர்ப் பெருக்கு நிரந்தர நிதானமாய்ப் பரந்து நெகிழ்கின்றது. அந்நீர் நிலையில் அழகிய தொழில்கள் அமைந்ததாய் அரசு நிலைக்குரிய தோர் சிறந்த தோணி. அதன்மேல் மகிமை வாய்ந்த சூரியகுலத்தின் உயர்ந்த அரசகுடும்பம். தாயர் மூவர்; சேயர் இருவர். மிதவை இயக்கும் சாரதியோடு உரிமையான ஒரு தோணித்தலைவன். நதியின் வடகரையிலிருந்து தென்திசை நோக்கி நாவாய் நகர்ந்து வருகின்றது. அங்ஙனம் வருங்கால் கதை தொடங்குகின்றது. இக்காட்சி கண்ணையும் கருத்தையும் கவர்ந்து இனிய எண்ணங்களை விளைத்துப் புண்ணிய நலங்கள் பயந்து தண்ணளி சுரந்துள்ளது.

இராச கம்பீரத்தின் தேசு மழுங்கி மாசுபடிந்த மதிபோல் மறுகியிருந்த கோசலையைக் குகன் கண்டான்; காணவே ஈன்ற தாய்என ஆன்ற பாசம் அகத்தில் ஊர்ந்தது. புறத்தே கைகள் குவிந்தன; அருகே நின்ற பரதனை "யார் இவர்?" என ஆர்வமொடு கேட்க, அச்சீராளன் சொல்லியருளினான். சொல்லியதில் முன்னுற வந்துள்ள தொடரை நாம் முதலில் காண்போம்.

"சுற்றத்தார் தேவரோடும் தொழ நின்ற கோசலை"

என்றது தனியே கவியின் கூற்றாகக் கனிந்து வந்துள்ளது. இதில் கலைக் காட்சியும் தெய்வக்காட்சியும் கலந்து நிற்கின்றன.

மண்ணவரும் விண்ணவரும் இப்புண்ணியவதியை எண்ணித் தொழுதற்கு என்ன காரணம்? தொழுதது எப்பொழுது? முன்னம் தொழுதுவந்த பழைய வளமையை இங்கே கிழமை தோன்ற உரைத்ததா? அல்லது இப்பொழுது தொழுது நிற்றலைக் குறித்ததா? தேவர் என்றதற்கு ஏற்ப மனிதர் என விரித்துச் சொல்லாமல் சுற்றத்தார் என்று சுருக்கிச் சொன்னது ஏன்? அது தான் எந்தச் சுற்றம்? கோசலை பிறந்த இடத்துச் சுற்றமா? புகுந்த வழிக் கிளையா? அன்றி இருவகையும் மருவிநின்றதா? தேவதேவனை திருமாலைத் தனக்குப் பிள்ளையாகப் பெற்றுள்ளமையால் தேவரும், சக்கரவர்த்தினியாய் இருத்தலால் சுற்றத்தாரும் தொழுதார் எனின், பட்டத்து அரசியை எவரும் மரியாதையுடன் உவந்து தொழுவராதலால் சுற்றத்தார் தொழுதார் என்றதில் என்ன பெருமையுள்ளது? புத்திரப்பேற்றின் மகிமையால் இத்தாயைப் புத்தேளிர் தொழுது வருதலை யாண்டும் பொதுவாகச் சொல்லி வருதலால், ஈண்டுச் சிறப்பான வியப்பு ஒன்றும் இல்லையே! அங்ஙனம் இருக்க இருதிறத்தாரையும் ஒருங்கு சேர்த்து இங்ஙனம் விதந்து விளம்பியதால் விளைந்த பயன்யாது? குறித்த மொழிகளின் கருத்து என்ன? இன்னவாறான வினக்கள் பல விளையும்படி இத்தொழுகை ஈங்கு விளைந்துள்ளது.

கை கூப்பித் தொழுதல் எவரிடமும் எளிதில் நிகழாது. உள்ளங் கனிந்து உயிர் உவந்த பொழுதுதான் அது மெள்ள வெளிப்படும். புறத்தில் புலப்படும் செயல்களுக்கு இயல்பான காரணங்கள் அகத்தில் அமர்ந்து கிடக்கும். உரிமையான பலன்களைக் கருதிய கரும நிகழ்ச்சிகள் பெரும்பாலும் கனிந்து வெளி வருகின்றன. இருவகையாரும் குழுமிவந்து இங்கே தொழுது நின்றமைக்கு உரிய பயனை நாம் அறியவேண்டும்.

இப்பொழுது கோசலை வந்துள்ளது இராமனை அழைத்துக் கொண்டுபோக. அக் கோமகனைப் பிரிந்து அயோத்தியிலுள்ள குடிசனங்களெல்லாரும் உயிரிழந்த உடல்போல் செயலிழந்து துயருழந்துள்ளனர். இராமன் திரும்பி வந்தால், போன உயிர்

மீண்டு வந்ததுபோல் அவர் உள்ளம் பூரித்து உவகை பூத்து நிற்பர். அவனைத் திருப்பிவர யாராலும் இயலாது. தந்தை ஏவலைத் தலைக்கொண்டு சென்றுள்ளான். தாயார் சொல்லைக் கேட்டுவந்தால் உண்டு; இல்லையானால் வேறு வழியில்லை. தந்தை தாயரைத் தெய்வம் எனக் கருதியொழுகும் குலமகன் என்பதை அந்தக் குடிகள் நன்கு தெரிந்தவர் ஆதலால் இந்த முடிவில் அவர் உறுதி செய்து நின்றனர். ஆகவே "கோசலைத் தாயே! எங்கள் உயிர் நிலையமான இராமனை எப்படியும் நீங்கள் கையோடுகூட்டிக் கொண்டு வந்து விடவேண்டும்" என்று அவர் யாவரும் ஆவலுடன் தொழுது வந்தனர். அருமைக் குடிகளுடன் உரிமைக் கிளைகளும் உடனுறைந்திருந்தனர் ஆதலால் சிறப்பு நோக்கி ஒருங்கே "சுற்றத்தார்" என்றார். இப்பொழுது சூழ்ந்து வந்து தன்னைச் சுற்றியிருத்தலாலும் எல்லாரும் இத்தாய்க்குச் சுற்றத்தார் ஆயினர் என்க.

இவர் இங்ஙனம் தொழத் தேவர் தொழுதது ஏன்? எனின், இராமன் கானகம்புகுந்தது "வானவர் செய்த மாதவம்" என முன்னமே குறிக்கப்பட்டுள்ளது. அரசு முடி துறந்து அக் கோமகன் அடவிக்கு அடி பெயர்த்த போதே அரக்கர் குடி அடியோடு தொலைந்தது என அமரரனைவரும் உளமுவந்து நின்றார். "தாம் பண்ணிய புண்ணியப் பயனால் எண்ணிய படியே அவ் வீரவில்லி பாதி வழிக்கு வந்துவிட்டார்; இனி மெல்ல மெல்லத் தென் திசை யேறி வென்றிசை பெறுவர்; நாம் அல்லல்நீங்கி நல்ல சுகம் பெறுவோம்" என்று எண்ணி எண்ணி உள்ளம் களித்து நின்ற தேவர்கள் இன்று அவ்வீர வள்ளலை ஊருக்கு அழைத்துப்போக வந்திருத்தலைத் தெரிந்து சிந்தை கலங்கினர். வந்தவருள் தாயது நிலைமையே தலைமையானதால் அவ்வாயுரைக்கு அஞ்சினர். அத் தாயின் எதிர்நேரே விசும்பில் நிறைந்துநின்று விழைந்து தொழுது குழைந்து வேண்டினர். "எங்கள் துன்பமெல்லாம் தீர ஓர் இன்ப மூர்த்தியை ஈன்றருளிய பேரன்புத் தாயே! எங்களைப் பேணியருள வேண்டும். காணி யாட்சிகளைக் கையிழந்து நாங்கள் கண்கலங்கி நிற்கின்றோம். கலங்கினவரைக் காக்கும் பொருட்டே கருணைவீரர் கால் நடந்து வந்து கானடைந்துள்ளார். அவரை மீண்டும் ஊரடைய நீங்கள் உரைத்து வேண்டாமல் எங்களுக்கு

உதவியருளி ஒதுக்கிவிட்டுப்போகவேண்டும்" என உம்பரெல்லாரும் உவந்துதொழுது கும்பலாய் வணங்கி நின்ருர் என்க.

சுற்றத்தார் ஒருபுறம் நின்று தாயே! இராமனைக் கொண்டு வருக என்று விண்ணப்பிக்கின்ருர்; தேவர் ஒருபுறம் நின்று அவனைக்கொடுத்தருள்க என்று முறையிடுகின்ருர். இருவருக்கும் இடையே தரும சங்கடமான நிலையில் காரிய சாதனையில் கோசலை கருத்தூன்றி நிற்கின்ருள் ஆதலால் "சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற கோசலை" என அந்நிலையினை இங்ஙனம் குறித்தருளினர்.

தோணியில் அமர்ந்திருக்கும் அரசியைத் தொழ நின்றவளாக நிலையில் நிறுத்தி, அந்த அம்மையினுடைய தலைமைத் தன்மையையும் நிலைமையையும் கலைநலங் கனியக் கவி இங்கே காட்டியிருக்கும் காட்சி காணுந்தோறும் களிபெருவகையை ஊட்டி வருகின்றது.

அரசனெடு அமைச்சன் வந்தான், தந்தையொடு மைந்தன் வந்தான் என்றபடி தேவரொடு சுற்றத்தார் தொழுதார் என்றதனுல் ஒடு சிறப்புப் பொருளில் அமைந்தது. அமையவே அவருடைய வேண்டுகோளை வியன் மிகவுடையது; அவரே பயன் அடைய நின்றனர் என்பதும் நுட்பமாக உய்த்துணர வந்தது.

இராமனை அழைத்துப்போக வந்தவர் பயன் கைகூடாமல் இளைத்தே மீளுவர்; அவன் தேவகாரியம் செய்ய ஆவலுடன் அரிய கரும வீரனுய் மேலே நிவந்து வியத்தகு வினைகளை முடித்து நயத்தகு புகழுடன் நண்ணி எழுவன் என்பதும் ஈண்டு எண்ண நின்றது. உண்மையில் உறுவன உரைகளில் ஒளிர்கின்றன.

கண்ணுல் நோக்கிய பின்பே கையால் தொழுதல் இயலும்; அங்ஙனமிருக்கத் தொழுது நோக்கி என்றது அவனது உழுவலன்பும் உள்ளப் பணிவும் விழுமிய நிலையில் விளைந்துள்ளமை தெளிய என்க.

கையிரண்டும் குவித்து மெய்துவண்டு தொழுது கொண்டே கோசலை நிலைமையை அறிய ஆசை மீதூர்ந்து பரதனிடம் குகன் பரபரப்புடன் வினவினுன் ஆதலால் அன்பும் அடக்கமும் நிறைந்த அந்த இன்பக் காட்சியை இங்ஙனம் இனிது காட்டியருளினர்.

வெற்றித்தார்க் குரிசில்! என்று பரதனை இங்கே விளித்தது வீரநிலை தெரிய. கிடைத்த அரசை இகழ்ந்து விடுத்துப் போறிவடக்க முடையனாய் ஐம்புலன்களையும் வென்று வந்திருக்கும் அவனது வெற்றித்திறலை வியந்து குறித்தபடியாய் இவ்விளி விளைந்து நின்றுள்ளது.

குகன் நல்ல வீரன் ஆதலால் அரசகுமாரனை வீரப்பான்மையில் பாராட்டலானான். உள்ளூறும் உயிர் மூச்சியே புறத்தே பேச்சாகப் புலப்படுகிறது. "இவர் யார்?" என்று மரியாதைப் பன்மையில் வினவியது மாட்சிமை தோன்ற நின்றது. இவ்வாறு அமைதியுடன் ஆர்வம் கனிந்து கேட்ட குகனுக்குப் பரதன் பதில் உரைக்க நேர்ந்தான். அவ்வுரைத் திறம் மதிமாண்பு மிகுந்து அதி மேன்மையுடையதாய் எவரும் விழைந்து நோக்கி வியந்து துதி செய்யவுள்ளது.

கோசலையைத் தொழுது நோக்கிப் பரதனிடம் குகன் வினவியது "இவர் ஆர்?" என்பதே. இதற்கு என்ன பதில் சொல்லலாம்? முன்னதாக நீங்களே சிறிது எண்ணிப் பாருங்கள். பார்த்தீர்களாயின் பின்னர் அக்குலமகன் பேசியிருக்கும் உரைநலங்களின் பெருமிதநிலைகளை அறிந்து ஆர்த்தி மீக்கூர்ந்து ஆனந்தம் அடைவீர்கள்.

யார்? என்று கேட்டவுடனே "இது என் பெரிய தாய்" என்று ஒரே வார்த்தையில் சொல்லிவிடலாம். இக் காலத்துப் பிள்ளைகள் இப்படித்தான் சொல்லுவர் என்பதை இங்கே சொல்ல வேண்டியதில்லை.

அக்கோமகன் சொல்லியிருப்பதைக் கூர்ந்து கவனிப்போம்.

"வேந்தர் வைகும் முற்றத்தான் முதல்தேவி"

என முதலில் குறித்தான். பட்டத்து அரசி என்று சுட்டியபடி யிது. முதல் என்றது தலைமையும் நிலைமையும் தெரிய வந்தது.

மன்னர்பிரான் ஆன தசரதனுக்குத் திறை செலுத்தும் பொருட்டு அரசர்கள் எல்லாரும் குறித்த காலத்தில்வந்து அரண்மனை முன்றிலில் திரண்டு சமயம் பார்த்துக் காத்திருப்பார்கள் ஆதலால் "வேந்தர் வைகும் முற்றத்தான்" என்றான். தசரதன் ஏகசக்கராதிபதி என்பதை இங்ஙனம் விநயமாகவிளக்கினான்.

"மன்னவர் தருதிறை அளக்கும் மண்டபம்"
(நகரப்படலம், 62)

என முன்னம் குறித்திருத்தலால் அயோத்தியில் வந்து குவியும் அரசிறைப் பொருள்களின் அளவு நிலை புலனும்.

"தொடிபுனை தடங்கை தலையணையாகச் சுரும்புணவிரிந்ததார் அரசர் இடுதிறை கொணர்ந்து துயில்மணி முன்றில்"

எனவரும் இதனுல் திறையோடு வந்து அரசர் நிறைந்திருக்கும் நிரையும், நிலையும் தெரியலாகும். முன்றில்=முற்றம்.

மன்னவர் திரண்டு முற்றத்தில் மொய்த்து நிற்றலை அடிக்கடி பார்த்திருத்தலால் அக்காட்சியின் மாட்சி தன்னை யறியாமல் இப்பின்னவன் வார்த்தையில் முன்னுற வெளிப்பட்டு வந்தது.

"முதல் தேவி" என்றதனுல் இரண்டு மூன்று வேறு உண்டு என்பது உணர நின்றது. இல்லின் முகத்தும் அகத்தும் நிலைத்துள்ள மகத்துவங்களை இங்கே நாம் மதித்து மகிழ்கின்றோம்.

இவர் ஒரு சக்கரவர்த்தினியார் என்பதைச் சுருங்கிய சொல்லால் இங்ஙனம் குறித்துவிட்டுப் பின்பு அருப்பெறலான மகப்பேற்றின் மகிமையை மிகப் போற்றி உரைத்தான்.

"மூன்று உலகும் ஈன்றானை முன் ஈன்றான்"

என்றது திருமாலை. பிரமனையும் படைத்த பரமன் என்றபடி.

சிருட்டி கருத்தாவாகிய பிரமாவைப் பெற்ற தந்தையாகிய அந்த ஆதிமூலப் பொருளைத் தன்னுடைய வயிற்றில்பத்துமாதம் வைத்திருந்து பிள்ளையாகப் பெற்றெடுத்த புண்ணியவதி எனக் கண்ணியம் தோன்றக் கனிந்து மொழிந்த படி யிது.

எல்லா வுயிர்களுக்கும் தந்தையானவனைத் தனக்கு மைந்தனுகப் பெற்றுத் தனி முதல் தலைவனுய்த் தழைத்து நின்றவள், இவளிடம் பிள்ளையாய் வந்து பிறந்திருக்கிறான் என்றால் இவளது மகிமையை எவரளந்து சொல்லவல்லார்? ஒல்லும் வகையான் உணர்ந்து கொள்க என்று குகனுடைய உள்ளம் வியந்து மகிழப் பரதன் இவ்வாறு சொல்லியருளினன்.

*"இருந்த அந்தணனோடு எல்லாம் ஈன்றவன் தன்னை ஈனப் பெருந்தவம் செய்த நங்கை" என முன்னம் தனியே

* இந்நூல் பக்கம் 735, வரி 1 பார்க்க.

உரைத்தார்; இங்கே இக்குலமகன் வாயினால் அதனை வலியுறுத்தியிருக்கிறார். மகப்பேறு இத்தாய்க்கு மிகவும் மகிமை விளைத்துள்ளமையால் அப்பேற்றின் ஏற்றத்தை இடங்கள்தோறும் ஏத்திப் போற்றிவருகின்றார்.

அந்தமிலின்பமான அந்தத் தெய்வக் குழந்தையை உலகம் உய்யத் தந்திருக்கிறாள். இவ்வளவு பேருதவி செய்துள்ள இந்தக் கருணைத் தாய்க்கு அந்தோ! பேரிழவு தரும்படி நான் பிறந்திருக்கின்றேன் என இறுதியில் பரதன் தன்னை நொந்து இன்னலுழந்து இரங்கிக் கூறியிருக்கிறான்.

"பேற்றத்தால் பெறுஞ்செல்வம் யான் பிறத்தலால் துறந்தபெரியாள்"

என்றதில் பரதனது மறுக்கமும் மனவருத்தமும் அறிய நின்றன. பெற்றதால் என்பது எதுகை நோக்கி ஒற்றுமிகுந்து வந்தது. "பெறும் செல்வம்" என்றது பிள்ளைப் பேற்றால் அடைய நின்ற பெருமித நிலைகளை.

இராமன் மணிமுடிசூடி அரியணை அமர்ந்து அரசு புரிந்தால் அவனைப் பெற்றதாய் மகிழ்ச்சியும் மாட்சியுமிகுந்து எவ்வளவு உயர்ச்சியாய் ஒளி செய்து நிற்பள்! ஒரு சக்கரவர்த்திக்குத் தாய் என்பதைக்காட்டிலும் மிக்க சீர்த்தி வேறு எங்குளது? உலகமெல்லாம் அடிதொழவுள்ள ஒருவன் தன் அடிபணிய அன்னை என அமரும் அரும்பெறல் நிலை என்ன பெரும்பேறுடையது! இன்னவாறு எண்ணிடலரிய உயர்ந்த பாக்கியங்களை யெல்லாம் ஒருங்கே யிழந்து தலைவிரிகோலமாய் இத்தாய் இங்கே நிலைகுலைந்து நிற்றலால் அந்நிலையினை நினைந்து நெஞ்சம் கரைந்தான். "இப் பரிதாப நிலைக்கெல்லாம் நான் ஒரு பாவி பிறந்துள்ளதே காரணம்" என்று பரதன் பரதவித்திருக்கின்றான். உள்ளத் துயர்களை அவனுடைய உரைகள் உணர்த்தி நிற்கின்றன.

பரதன் பொருட்டே கைகேசி அரசைக் கவர்ந்தாள்; இராமனை வனத்துக்கு அனுப்பினாள். அதனால் தசரதன் மாண்டான்; ஆகவே பெற்ற மகனையும் உற்ற கணவனையும் ஒருங்கே இழந்து, அரிய நலங்கள் யாவும் துறந்து கோசலை அவலம் அடைந்துள்ளாள் ஆதலால் இவற்றிற்கெல்லாம் தன் தோற்றமே காரணம் என்று அத்தூயவன் துடித்து மொழிந்தான்.

நான் ஒரு சிறுபயல் பிறந்து இத்தாயுடைய பெருநலங்களை யெல்லாம் தொலைத்துப் பின்னும் அயலே தொலைந்து போகாமல் இன்னும் இனியவன் போல் அருகே அமர்ந்து நிற்கின்றேனே. என்னுடைய நிலையும் புலையும் இருந்தவாறு என்னே என்பதாம்.

தன் பிறப்பு நிலையை இகழ்ந்து, அவளுடைய சிறப்பு நலங்களைப் புகழ்ந்து இங்ஙனம் விநயமொழி பகர்ந்திருக்கும் இத்தனயனது மனக்கனிவும் மதிநலனும் உரையாடுந் திறனும் உள்ளுந்தோறும் உள்ளம் உருக்கியுள்ளன.

பெரியாள் என்றது இவ்வளவுபெருஞ்செல்வங்களையெல்லாம் இழந்தாலும் தனது பெருந்தகைமை குன்றாமல் இனிய நீர்மையுடன் தனியமர்ந்திருக்கும் இத்தாயின் புனித நிலைமையை வியந்தென்க. "எனக்கு இவர் பெரிய தாயார்" என்பதும் இப்பெயரில் தொனித்திருத்தலை நுனித்தறிந்து கொள்க.

கோசலையைக் குறித்துப் பரதன் இவ்வாறு குகனிடம் கூறவே உடனே உள்ளம் கரைந்து இத் தாயின் காலில் தாழ்ந்து வீழ்ந்து அவன் ஆழ்ந்து விம்மி அழுது கிடந்தான்.

"என்றலுமே அடியின்மிசை நெடிதுவீழ்ந்தழுவானை"

என்றதனால் குகனுடைய உள்ளப் பாசமும் உழுவலன்பும் உரிமை நிலையும் உயர் பெருந்தகவும் உணரலாகும்.

இராமனை முன்னதாகக் கண்டு நட்புமீக்கொண்டு அந்தத் தருமமூர்த்தியின் குணநலங்களில் உள்ளம்பறிபோய் உயிர்க்காதல் மண்டியிருந்தான் ஆதலால் அக்குலமகனைப் பெற்ற தாய் என்று கோசலையைத் தெரிந்தவுடனே இவ்வாறு பாசமீதூர்ந்து பரவசமாய்க் கரைந்துருகிக் கண்ணீர் சொரிந்து அழுதான் என்க.

தன்னை முன்னதாக யாதும் அறியாதவன் இன்று புதிதாய்க் கண்டவுடன் அடியில் விழுந்து இன்னவாறு விம்மி விம்மி அழுதலைக் கோசலை வியந்து நோக்கிக் கெழுதகைமையுடன் உவந்து "இவன் யார்?" என்று பரதனிடம் இராசநோக்குடன் கேட்டாள். அங்ஙனம் கேட்டபொழுது அரசியிருந்த நிலையை இங்கே அறிய நேர்கின்றோம்.

"கன்றுபிரி காராவின் துயருடைய கொடி"

என இத்தாயாரை வாயார உருகிக் கவி வரைந்திருக்கிறார்.

கார்ஆ=காராம்பசு. பசுக்களுள் இது தனி மகிமை யுடையது. மறுநிறம் கலவாத இனிய கருவுரு அமைந்தது. புனிதமும் தெய்வத்தன்மையும் நிறைந்தது; யாண்டும் எளிதில் காணப்படாமல் மிக்கும் அருமையாகத் தோன்றுவது ஆதலால் இதனை யாவரும் விழைந்து பூசிப்பர். நலம் பல நிறைந்த இந்த உயர்ந்த பசுவைக் கோசலைக்கு இங்கே உவமை கூறியது இத்தாயது குலந் தூய்மை முதலிய உயரியல்புகளை உணர்ந்து கொள்ள என்க. ஆவினங்களுள் காரா எப்படியோ, அப்படியே தாயினங்களுள் இத்தூயவள் சிறோங்கியுள்ளாள் என்பதாம்.

காரா கோசலையையும், கன்று இராமனையும் குறித்துநின்றன. இப்பொழுது அம்மகன் காளைப்பருவத்தன் ஆயினும் ஈன்றதாயின் அன்புருக்கத்தால் புனிற்றிளங்கன்ருகவே தனித்துணர நின்றான்.

*" கன்று பிரிந்துழிக், கறவைஒப்பக் கரைந்து கலங்கினுள் "

என முன்பு மகன்பிரிவு நேர்ந்தவுடன் இத்தாய் பரிவு மீதூர்ந்து பதைத்தழுதபடியை உரைத்தார்; இங்கே முற்றும் பிரிந்துபோனபின் வருந்தி நின்ற நிலையைக் குறித்தார்.

துடிப்பும் அழுகையும் துன்பத் தொடக்கத்தில் தொடுத்து நிகழும்; பின்பு அடுத்து அடங்கும்; புறத்தே அடங்கினும் துயரம் உள்ளத்தை வாட்டி உயிரை வதக்கி உருக்குலைத்து நிற்கும் ஆதலால் அந்நிலை தெரியத் துயருடைய கோடி என்றார். கொடி என்றது வடிவும் வனப்பும் உணர வந்தது. இனிய மெல்லியல்புடைய இந்நல்லாள் கொடிய துயரால் அல்லலுழந்து அலமந்துள்ளாளே! எனக் கவி அகம் குழைந்து சொல்லியபடியிது.

முன்னம் கறவை எனக் கரைந்து கலங்கினாள் என்றார்; இங்கே காராவின் துயரை விதந்து காட்டினார். இக்காட்சியிலுள்ள வேற்றுமையைக் கருத்தூன்றி நோக்குக.

" ஈற்று விருப்பிற் போற்றுபு " (பொருநராற்றுப்படை)

என்றபடி புத்திர வாஞ்சையில் ஏற்றமுற்றிருந்தாள் ஆதலால் இப்பொழுது இப்பிரிவில் இப்படி ஏக்கமுற்று நின்றாள் என்க.

* இந்நூல் பக்கம் 724, வரி 22 பார்க்க.

மகவாசை முறுகி இங்ஙனம் மறுகி நின்ற கோசலை குகனைக் குறித்து வினவப் பரதன் பதில் உரைத்தான். உரைத்திருக்கும் திறம் வியப்பு மிகவுடையது. பெரியதாய் கேட்ட கேள்விக்கு உரிய பதில் வருகின்றது.

அம்மா! இவன் "இராகவனுக்கு இன் துணைவன்" என முதலில் குறித்தான். துணைவன் என்றது இங்கே தம்பி என்ற வாறு. சிலபேர் ஒப்புக்குத் தம்பியாயிருப்பர்; அண்ணனுக்கு ஓர் உதவியும் செய்யார்; அதுவுமன்றி என்போல் இன்னலுக்கும் ஏதுவாய் நிற்பார்; இவன் அவ்வாறன்று; மூன்னவனை இன்னு யிரினும் இனிது பேணுபவன் என்பான், "இன் துணைவன்" என்றான். தோழன், உதவியாளன், தம்பி என்னும் பல பொருள்களையும் தழுவி நிற்கும் ஒரு பெயரை ஈண்டு உரிமையாக வழங்கியிருக்கிறான். இதில் தன் குறிப்பு இன்னதுதான் என்பதைப் பின்னே விளக்கியுள்ளான்.

"என் அருமை மகனுக்குத் துணைவனா இவன்!" என்று இத் தாயுள்ளம் உவந்து ஆர்வமீக்கொள்ள முதலில் இங்ஙனம் இராமனைக் குறித்தான். பின்பு சொன்னது என்ன? "இலக்குவற்கும், இளையவற்கும், எனக்கும் மூத்தான்" என்றான்.

இராமனுக்கு அடுத்த தம்பி தானயிருக்கத் தன்னை முறையே தொடுத்துவைக்காமல் எல்லாருக்கும் இறுதியில் இருத்தி யிருக்கிறான். இதன் கருத்து என்னை? குறித்து நோக்க வேண்டும்.

தன் பணிவுடைமையை விநயமாக நுணுகி யுணருமாறு இப் படி வைத்துள்ளான் எனின், அப்படியாயின் இலக்குவனுக்குப் பின் நின்றாலே போதும், எப்பொழுதும் தனது அடித்துணையைப் பின்பற்றி ஆரா அன்புடன் அடிமை பூண்டு கிடக்கின்ற சத்துருக்கனையும் முன்னே தள்ளித் தான் பின்னே ஒதுங்கியது ஏன்? இன்னவாறு பின்னுற நின்றது தன் உள்ளத்தே உறைந்து கிடக்கும் துக்கத்துடிப்பைப் பக்கம் அறியச் செய்ததென்க.

என்னை துக்கம்? எனின், முன்னம் தந்தைக்கு இம்மைந்தன் கொள்ளி வைக்க எழுந்தபொழுது வசிட்டர் தடுத்து, "ஐயனே உன் தாய்மீதுள்ள கோபத்தால் மன்னர்பிரான் உன்னையும் ஒதுக்கி வைத்திருக்கிறார்; ஆதலால் இளையவன் வந்து செய்யட்டும்"

என்று உரைத்து நிறுத்தினர். அவ்வுரையைக் கேட்டவுடனே இவன் உள்ளந்துடித்து "அந்தோ! நான் அரசமரபில் பிறந்தும் பிறவாதவனுயினேனே! என் தாய் செய்த பாவம் இருந்தபடி என்னே!" என்று அலறி அழுதான்; அன்று முதல் உள்ளத் துயருடன் ஒதுங்கியே உள்ளான் ஆதலால் அவ் வொதுக்கத்தை இங்கே நுட்பமாக இங்ஙனம் உணர்த்தி நின்றான்.

"நான் ஒரு கொடிய பாவியான தீயவள் பெற்ற சிறுமை மிகவுடையேன்; இந்தத் தூய குலக்குமாரர்களிடையே புகுதல் தகாது" எனப் புறம் ஒதுங்கிப் பொருமி உரைத்தபடியிது.

இந்நிலைமையை அன்னையரைக்குறித்துச் சொல்லி யிருக்கும் முறைமையிலும் தெளிவாகத் தோன்ற வைத்திருக்கிறான்.

முதலில் இராமனைச் சொன்னதுபோல் அவன் தாயாகிய கோசலையை முன்னே சொன்னான்; இலக்குவனையும் சத்துருக் கனையும் குறித்ததுபோல் அவர் தாயாகிய சுமித்திரையை அதன் பின்னே உரைத்தான்; இறுதியில் தன்னைப்போலவே தன் தாயை யும் மனம் நொந்து சொல்லி முடித்தான். இம்முடிவிலுள்ள முடி வினைகளை முறையே கண்டு முடிந்த நிலையை உணர்ந்துகொள்ளுக.

எனக்கும் என்றதில் உம்மை எண்ணும்மையோடு இழிவு சிறப்பாகவும் கருத நின்றது. கடையனை எனக்கும் இவன் மூத்தான் என மனத்துயருடன் முடித்திருக்கிறான்.

"குன்று அனைய திருநெடுந்தோட் குகன்"

என்றது அவனுடைய உயர் வடிவமும் பெயரும் தெரிய வந்தது. முன்னம் குகனிடம் அறிமுகஞ் செய்யுங்கால் கோசலை பெயரை வெளியே பரதன் சொல்லவில்லை; இங்கே இத்தாயிடம் அவனது பெயரைத் தெளிவாக விளக்கி யிருக்கிறான். பேச்சில் கையாளும் மரியாதைகள் பேசுவோரையும் பேசப்படுவோரையும் பொறுத் திருக்கின்றன. உயர்ந்தவர் உரையாடலைக் கவி உணர்த்திவரும் திறம் இடங்கள்தோறும் உணர்ந்து மகிழ வுள்ளது.

இவ்வாறு பாசம்கனிய நேசமீதூர்ந்து பரதன் சொல்லி முடிக்கவே, கோசலைத்தாய் என்னசெய்தாள்?

"மைந்தீர்! இனி துயரால் நைவீர் அலீர்"

என்று அன்புரிமையுடன் ஆசீர்வதித்து இன்பவுரைகள் இனிது மொழிந்தாள். இங்கே கோசலை பேசவேண்டியது பரதனைப்பார்த்தோ? குகனை நோக்கியோ? வினுவிடைகளிலுள்ள உரிமை நிலைகளை ஓர்ந்து கொள்ளவேண்டும்.

தான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லிநிற்கும் பரதனிடமே அரசி எதிர்மொழிய வுரியள். அவ்வாறு மொழியின் கெழுதகைமை நழுவும்; அதுவுமன்றி அரச அகந்தையோடு தனியொதுங்கியபடியுமாம். அத்துனிபடியாவண்ணம் நனிநாகரிகமாய் இத்தாய் ஈண்டு நயமொழி பகர்ந்துள்ளாள்.

மைந்திர்! என்று பன்மையில் விளித்தது குகனையும் தழுவி. மைந்தனே! எனப் பரதனை மட்டும் சுட்டியிருந்தால் சுவை கெட்டிருக்கும். விளியிலுள்ள பொருளினிமையை விழைந்து நோக்குக.

"பிள்ளைகளே! நீங்கள் இனிமேல் யாதும் மனங் கவல வேண்டா; உங்களுக்கு ஒரு குறைவும் வராது; எல்லோரும் மங்கலமாய் வாழ்வீர்கள்" என்று உள்ளங் கனிந்து உவந்து வாழ்த்திச் செம்மைநலந் திகழ இவ்வம்மை உரை தொடங்கியிருக்கிறாள்.

மெய் வீரர் என்றது இராமனையும் இலக்குவனையும். சுத்த வீரர்கள் என்று சுட்டியது அவர்களுடைய உத்தமமான சித்த நிலையை நினைந்து. இங்கும் தன் மகனை மட்டும் தனியே குறியாமல் இளையவனையும் தழுவியிருக்கிறாள். இது, அருகே யிருக்கும் சுமித்திரைக்கு எவ்வளவு மகிழ்ச்சியை விளைத்திருக்கும்! புனித வாயிலிருந்து வெளிவருகின்ற இனிய மொழிகள் அமிர்த மழைபோல் உயிர்களுக்கு என்றும் உவகையை விளைத்து ஒளிர்கின்றன.

என்னுடைய அருமைக் குமாரர்கள் அரசைத்துறந்து அடவி புகுந்தது பெரிய ஊதியமாய்ப் பெருகி நின்றது என்பாள்,

"நாடு இறந்து காடு நோக்கி மெய்வீரர் பெயர்ந்ததுவும் நலம் ஆயிற்று" என்றாள். இனிய நாட்டைக் கைவிட்டுக் கொடிய காட்டை நோக்கி அன்று அவர் காலெழுந்து போன கடுங்காட்சி தன் கண்ணுள் கிடந்தமையால் இவ்வண்ணம் மொழிந்தாள்.

"வீரர் பெயர்ந்தது" இது வரையும் ஆறாத் துயரமாயிருந்தது; இன்று அப்பெயர்ச்சியால் ஓர் உயர்ந்த இலாபம் விளைந்

துள்ளதை ஈண்டு உணர்ந்துகொண்டாள்; கொள்ளவே அதனை நல்லதென்று உள்ளம் உவந்து இங்ஙனம் உரைத்தாள் என்க.

துன்பத்திற்கு ஏதுவானது ஓர் இன்பத்தை விளைத்தருளி யது ஆதலால் அதன் இயல்பினை உம்மை உணர்த்தி நின்றது.

"கைவீரக் களிறனைய காளை"

என்றது குகனது உருவப் பொலிவை உவந்து வந்தது. அவனும் ஒரு குறுநிலமன்னன் ஆதலால் உடம்பில் வீரத்திண்மைவிளங்கி நின்றது. உத்தமச் சத்திரிய குலத்தில் பிறந்து ஒரு சுத்த வீரனைப் பெற்றருளிய வீரத்தாய் ஆதலின் அவள் வாய்மொழி களில் வீர மணங் கமழ்ந்து மேன்மைகள் பல மிகுந்துள்ளன. ஈர நெஞ்சினளாயினும் உரிய இடங்களில் உரைகள் வீரம்படிந்து வெளி வருகின்றன. குலமரபு தலைமறைவாயிருப்பினும் உரை செயல்களில் உரிய நிலைமைகள் நேரே தெரியலாகும்.

"இவன் தன்னோடு கலந்து" என்றது குகனாகிய இந்த மகனோடு நீங்கள் நால்வரும் உரிமையுடன் மருவி என்றவாறு. யாதொரு வேறுபாடும் தோன்றாமல் ஒருதாய் வயிற்றில் பிறந்த அருமை மக்கள் போலவே கெழுதகைமை கனிந்து தழுவி யுவந்து என்பாள் கலந்து என்றாள். இடையே யாரும் கலந்து கொள்ளமுடியாத கலப்பற்ற உயர்ந்த அரசகுலம் ஆதலால் கலத் தலைத்தலைமையாக வலியுறுத்தினாள். ஒப்புக்கு உலகம் அறிய உரி மை பாராட்டிக் கலந்துகொண்டால் மட்டும் போதாது, இன்ன வாறு நீங்கள் அமைந்து நடந்துகொள்ளவேண்டும் என இறுதியில் உறுதியாகத் தன் உள்ளக் கருத்தை உணர்த்தி யருளினாள்.

"நீவிர் ஐவீரும் ஒருவீராய் அகலிடத்தை நெடுங்காலம் அளித்திர்"

என்ற இந்த அருமை வாசகம் உள்ளம் உருகி உவகை கனிந்து வந்துள்ளது. பெருமித நிலையில் மருவியுள்ள ஓர் அரசி வாயிலிருந்து இவ்வாறு உரிமை தழுவி ஒரு உரை வெளி வந்தது மிகவும் அதிசயமாகும். உலகியல்போடு தலைமையான நிலைமை கள் பலவும் ஈண்டு நினைந்து சிந்திக்கத் தக்கன.

இத் தாயினுடைய வாய்மொழிகள் உள்ளக் கனிவில் உதித் திருக்கின்றன. தன் பிள்ளைக்குத் துணைவன் என்றவுடனேயே

இவள் உள்ளம் பரவசமாயினாள். அதன்பின் உயிர்க்கிழமை மண்டி எழுந்தது.

சொல்ல வாய்திறந்த பொழுதே மைந்நீர்! என்று பரதனோடு குகனையும் மகனாக அணைத்துக்கொண்டது இவ்வம்மையின் உள்ளப்பண்பையும் உயர்ந்த நோக்கத்தையும் உலகம்அறிய உணர்த்தி நின்றது.

பரதன் முன்னம் என்ன சொன்னான்? “இராமனுக்குத் தம்பி, எங்கள் மூவருக்கும் அண்ணன்” எனக் குகனைக்குறித்து மொழிந்தான் ஆதலால் அக்கிளை யுரிமையை உடனே ஆமோதித்துத் தானும் உடன்பட்டுத் தன் சம்மதத்தை “மைந்நீர்” என்னும் இந்த ஒரு மொழியால் வெளிப்படுத்தினாள்.

தங்களோடு உடன் பிறந்தவனாகக் குகனைப் பரதன் தழுவி மொழிந்ததும், அதனைக் கேட்ட இத்தாய் உடனே பெற்றபிள்ளையாகவே அவனைப் பேணியுள்ளதும், பேச்சின் திறமும் பெருமகிழ்ச்சிக்கு இடமாய் ஈண்டுப் பெருகியுள்ளன.

தன் செல்ல மகனைப் பிரிந்து அல்லலுழந்து அலமந்துவந்த கோசலை இங்கே அப்பிரிவை நல்லதென்று குகன் முன்னிலையில் நயந்துகொண்டது எவ்வளவு வியந்துகொள்ளவுள்ளது!

“என் பிள்ளை காட்டுக்கு வந்ததனாலேதான் இந்தப் பிள்ளை கிடைத்தது; வாவில்லையானால் இப்பாக்கியம் கிடைத்திராதே” என அவ்வரவில் விளைந்துள்ள பயனை மிகவும் விழைந்து மொழிந்தாள்.

பெறலரிய பெரும் பொருள் ஒன்று பெறும்படி நேர்ந்திருத்தலால் “பெயர்ந்ததுவும் நலம் ஆயிற்று” என்று உளம் உவந்து கொண்டாள் என்க. நான் பட்ட பாட்டிற்குப் பலன் கிடைத்தது என ஆறுதலடைந்து கூறியபடி யிது.

பிள்ளைப் பிரிவால் தன் உள்ளத்துள் மண்டியிருந்த பெருந் துக்கமெல்லாம் குகனைக் கண்டவுடனே ஒழிந்துபோயின என்றால் அவன்பால் இவ் அன்னைகொண்டு நின்ற அன்புரிமை என்ன நிலையிலிருந்திருக்கும் என்பதை எண்ணியறிந்துகொள்ளலாம்.

புத்தப் புதிதாய்ப் பார்த்த அவன்பால் இத்தனை பாசம் வைத்தது என்னை? எனின், தன் ஆசைமகன்பால் கொண்டுள்ள

அவனது நேசப்பான்மையை நினைந்தும், தன்முன் அழுதுதொழுது நிற்கும் அவ்வுழுவலன்பினை யுணர்ந்தும் என்க.

இராமன் பரதன் இலக்குவன் சத்துருக்கன் என முன்னம் நான்கு பிள்ளைகளே இருந்தனர்; இப்பொழுது குகனோடுசேர்ந்து ஐந்து மக்கள் ஆயினர் எனத் தன் பிள்ளைப் பாக்கியத்தை நினைந்து இத்தாய் உள்ளம் உவந்திருக்கிறாள். யாதொரு பின்னமும் கருதாமல் இன்னவாறு தன் பிள்ளைகளாகவே எல்லாரையும் ஒருங்கே எண்ணியிருத்தலால் இப்புண்ணியவதியுடைய உள்ளப் பண்பின் உயர்வுணரலாகும்.

புறத்தே உருவத்தால் வேறுபட்டிருப்பினும் உள்ளம்ஒத்து உயிரொருமையுற்று வாழவேண்டும் என்பாள் "ஐவீரும் ஒருவீராய்" என்றாள். உயிர் ஒன்று உடல் ஐந்து என்னும்படி ஒருமையுடன் வாழுக என்பதாம்.

ஒருவீர் என்பதில் யாண்டும் உறவுரிமை ஒருவாதவராய் ஒழுகி வருக என்பதும் தொனித்துள்ளது. ஒருவல்=நீங்கல், ஒதுங்கல். தலைமையில் ஒருவராய் நிலைமையில் ஒருவிராய் நிலமிசை நிலைத்து நெடிது நிலவுக என்பதாம்.

சக்கரவர்த்தித் திருமக்களுடன் ஒக்கச் சேர்த்துக்கொண்டாள் ஆதலால் அரசுரிமையிலும் பங்கு உண்டு என்பதை நன்கு உணர்த்தினாள். அகல் இடம் என்றது விரிந்து பரந்த உலகினை. ஆளுகையின் அகலும் நீளமும் தெரிய இங்ஙனம் வரைந்து குறித்தாள்.

அகலிடத்தை நெடுங்காலம் ஆளுதிர் என்றது அளித்திர் என்றது குடிசனங்களிடத்தும் உயிர்கள் மாட்டும் தண்ணளி புரிந்து புண்ணிய ஆட்சி புரிக என்றவாறு.

அரசு அளிபுரிந்துவரின் வழிவழியே ஆளுகை நீளும், ஆயுளும் பெருகும், அறங்களும் வளரும் என்பதாம்.

செல்வச் செருக்குடன் தந்நலங் கருதி இன்னாபுரியும் மன்னர் மன்னாதொழிவர் ஆதலால் நெடுங்காலம் மன்னி வருதற்குரிய இன்னமிர்தம் இன்னதென்பதை நுண்மையாக ஈண்டு உணர்த்தியருளினாள். உள்ளத்தின் அளி உரையில் மிளிர்ந்தது.

" துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு." (குறள், 557)

என்றதனால் அரசர்க்கு அளி எவ்வளவு உரிமையுள்ளதென்பது உணரலாகும். மலர்தலை உலகிற்கு உயிரென நிற்கும் அரசுக்கு அளி உயிர் நிலையமாகலான் அது உடனுணர வந்தது.

அரசாட்சி புரிந்து போக போக்கியங்களுடன் நீங்கள் ஐந்து பேரும் சுகமாக வாழ்ந்து வாருங்கள் என மைந்தர்களை மட்டும் தனியே சொல்லாமல், உலகிலுள்ள எல்லாரும் இன்புற்றிருக்கும்படி அன்பாற்றி அளிபுரிந்து நாளும் நன்கு பாதுகாத்தருளுங்கள் என்று ஓதியிருத்தலால் இக் கருணைத் தாயின் உள்ளப் பான்மையும் உயர் பெருந்தகைமையும் எவ்வளவு பெருமித நிலையிலினிதமர்ந்துள்ளன என்பதை நுணுகி யுணரவேண்டும்.

வான்மீகி முனிவரும் இவ் அன்னையைக் குறித்துச் சொல்லும் பொழுதெல்லாம் பரந்த இரக்கமும் விரிந்த நோக்கமும் உடையவள் எனப் பல இடங்களிலும் குறித்திருக்கிறார்.

சுந்தரகாண்டம் 38-வது சருக்கம் 52-வது சுலோகத்தில் மநஸ்விநீ என இத்தாயது மனநலத்தை வியந்திருக்கிறார். எல்லாரும் நல்லவராய் எங்கும் இன்புற்றிருக்கவேண்டும் என்று யாண்டும் அன்புற்று ஒழுகிய புண்ணியவதி என்பது மேற்குறித்த பெயர்க்குப் பொருளாம். இங்ஙனம் விசாலமான இருதயம் வாய்ந்துள்ளமையினாலேதான் உலகம் நலமுற வந்த பரமனும் இவளுடைய குலமகனாகஉவந்து குடல் தோய்ந்துகிடந்தான்.

இப்பொழுது மூன்று பேர்தாம் எதிரே நிற்கின்றார்; இருவர் அயலொதுங்கியுள்ளனர். அப்படி யிருக்க "ஐவிரும்" என்று உளப்பாட்டு முன்னிலைப் பன்மையாக் குறித்தது, தன் சம்மதத்தை எப்படியும் அவர் ஒப்புக்கொள்ளுவர் என்னும் துணிவினால் என்க.

"முன்னிலை கூடிய படர்க்கையும் முன்னிலை" (நன்னூல்)
என்னும் இயல்விதியையும் ஈண்டு எண்ணிக்கொள்க.

ஈன்றதாய் நிலையில் நின்று தன் பிள்ளைகளுக்கு ஆன்ற புத்திமதிகளை அறிவுறுத்துகிறாள் ஆதலால் முதலில் ஒற்றுமையை வலியுறுத்தினாள். உற்ற உறவுக்கு உறுதிகூறியபடி யிது.

"எவனோ வேடன்; இடையே சேர்ந்தவன்; இவனை உயர்ந்த அரச குடும்பத்தில் ஒட்ட வைக்கலாமா?" என்று கோளர் சிலர் குலைக்க நேரினும் அவர் கொடுமொழிக்கு இடங் கொடாமல் உடம்பும் உயிரும்போல் ஒருமையுடன் வாழுங்கள்; உலக முழுவதும் உங்கள் கைவசமா யுரிமையுற நீங்கள் பெருமை மிகுந்து ஆள்வீர்கள் எனப் பரதனுணர உணர்த்துகின்றாள் ஆதலால் "ஐவிரும் ஒருவிராய் அளித்திர்" என்றாள்.

"ஒருவீர் ஒருவீர்க்கு ஆற்றுதிர்; இருவீரும்
உடனிலை திரியீ ராயின் இமிழ்திரைப்
பெளவம் உடுத்தவிப் பயங்கெழு மாநிலம்
கையகப் படுவது பொய்யா காதே;
அதனால், நல்ல போலவும், நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறியே போலவும்
காதல்நெஞ் சின்நும் இடைபுகற்கு அலமரும்
ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது
இன்றே போல்கநும் புணர்ச்சி." (புறம், 58)

எனத் திருமாவளவனையும், பெருவழுதியையும் நோக்கிக் காரிக் கண்ணனார் என்னும் புலவர் பெருந்தகை அருளியுள்ளதும் ஈண்டு அறிய வுரியது. இவ்வுறுதிமொழிகளில் பொதிந்துள்ள பொருள் நலங்களை உரிமையுடன் உணர்ந்துகொள்ளவேண்டும்.

கைகேசி இடைபுகுந்து செய்த சிறு கொடுமையினால் ஒற்றுமை குலைந்து உலகாட்சியும் சிதைந்து உயர் துயர் மிகுந்தது ஆதலால் ஒருமைப்பாட்டை இங்ஙனம் உறுத்தியுரைத்தாள்.

அளிமின் என ஏவலாகவும், அளிப்பிர் என எதிர்காலமாகவும் குறியாமல் அளித்திர் என்றது இவ்வம்மை உள்ளங்கனிந்து ஆர்வத்துடன் வாழ்த்தியபடியை உணர்த்தி நின்றது.

இந்த உரையாடலில் பரதனும் கோசலையுமே அதிகம் பேசியிருக்கின்றனர். குகன் வேறு கூறவில்லை. "இவர் ஆர்?" என்ற ஒரு வார்த்தை மாத்திரம் அவன் வாயிலிருந்து வந்திருக்கிறது. அதன் பின் பரிவின் தன்மை உருவு கொண்டது போல் அவன் மருவி நின்றான்; அந்நிலைமையைக் கண்டு இத்தாய் உருகி மொழிந்துள்ளாள்; மொழிகளில் கெழுதகைமைகள் நிலை மீறியுள்ளன. அரச திருவில் தலை சிறந்து நிற்பவர் யாண்டும் எளிதிறங்கிஎவரை

யும் இனம் தழுவி யுரையார்; இங்கே அனைவரும் ஒரு முகமா யிசைந்து உரிமை சுரந்துள்ளார்.

கோசலை குகனை மகன் என்று கொள்ளு முன்னமே பரதன் அவனை அண்ணன் என அணைத்துக் கொண்டான். இவ்விருவருக்கும் முன்னதாகவே இராமன் என்ன செய்திருக்கிறான்?

"முன்புளெம் ஒருநால்வேம் முடிவுள தெனவுன்னு
அன்புள இனிநாம்ஓர் ஐவர்கள் உளராளேம்"
(கங்கைப் படலம், 69)

என அவ் ஐயன் இவனை மெய்தழுவி யுள்ளான். தன் குலக் குலையில் அத் தலைமகன் இவ்வாறு முன்னரே குகனை நிலை செய் திருத்தலால், பின்னேனும் அதனை வழிமொழிந்து நின்றான். முடிவில் அன்னை அம்முடிவினை முடிவு செய்தருளினள். ஆகவே இம் முடிவிற்கு மூலமுதல் இன்னதென்பது இனிது புலனாம்.

பிள்ளைகளுடைய உள்ளங்களும் பெற்ற தாய் மனமும் பெருந் தகைமைகளும் மனித வுலகிற்கு என்றும் இனிமையான ஒரு புனித விருந்தாய் இங்கே பொங்கி யுள்ளன.

அன்புநலம் சுரந்து, நண்பும் நயனும் நிறைந்து, பண்பும் பயனும் கனிந்துள்ள இவ்வுறவுரிமை வனத்திடையே ஓர் இன்பப் பூஞ் சோலையாய் இனிது எழுந்து தனி வளர்ந்துள்ளது.

## நிலை மாறி நின்றது

இக்கதை நிகழ்ச்சி முதல் நூலில் வேறு விதமாயிருக்கிறது. பரதன் சேனைகளுடன் கங்கை கடந்து தென்கரை யடைந்து பரத்துவாசரைக் கண்டான். அம்முனிவர் இவனை அன்புடன் உபசரித்து அன்று அங்கு இருத்திச் சிறந்த விருந்து புரிந்தார். மறுநாள் எழுந்து சித்திரகூடம் போக விழைந்து இம்மகன் அம் மகானிடம் விடை வேண்டினன். அப்பொழுது தாய்மார் மூவரும் அம்முனிவரை வணங்கினர். வணங்கவே அவரை இனந்தெரிந்து கொள்ள விரும்பிப் பரதனை நோக்கி அம்மாதவர் ஆதரவுடன் கேட்டார். அதற்கு முறையே இவன் பதில் உரைத்தான்.

வால்மீகி ராமாயணம் அயோத்தியாகாண்டம் 92வது சருக்கம் 19வது சுலோகத்திலிருந்து தொடங்கி யிருக்கிறது. முதலில்

கோசலையைக் குறித்துச் சொல்லியுள்ளதை எல்லாரும் எளிதில் வாசித்துக் கொள்ளும்படி தமிழில் எழுதுகின்றேன்.

"யாமிமாம் பகவந் தீநாம் சோகாநசநகர்சிதாம் ;
பிதுர் ஹி மஹிஷீம் தேவிம் தேவதாமிவ பச்யஸி
ஏஷா தம் புருஷவியாக்ரம் ஸிம்ஹ விக்ராந்த காமிநம்;
கௌஸல்யா ஸுஷுவே ராமம்."

"முனிநாதா! துக்கத்தால் துவண்டு சோகத்தால் வாடித் தெய்வத்தேசுடன் நிற்கின்ற இவர் என் தந்தையின் பட்டத்துத் தேவியார்; சிங்கஏறுபோல் பெருமித நடையுடைய மனிதப் புலியாகிய இராமனைப் பெற்றவர்; கௌசலை என்னும் பெயரினர்" என்பதே மேற் குறித்த சுலோகத்தின் பொருள். கோசலைத் தாயைக்குறித்து இவ்வளவுதான் பரத்துவாசரிடம் பரதன் சொல்லியிருக்கிறான். அதற்கும் இதற்கும் உள்ள வேறுபாடுகளையும் உரைநிலைகளையும் உரிமையுடன் ஊன்றிப்பாருங்கள். இது எவ்வளவு இனிமையில் பெருகி இவ்வழி மிளிர்கின்றது!

இந்த இடத்தையும் இனத்தையும் மாற்றிக்கங்கையிலேற்றிக் குகன் முன் இணைத்து இந்தக்கதை நிகழ்ச்சியை உவகையும் உணர்ச்சியும் பெருகச் சுவைமிகச் செய்து அன்பு நலங்கள் யாண்டும் ததும்பக் கம்பர்பிரான் அமைத்து வைத்திருக்கும் இவ்வைப்பு மன்பதைக்கு என்றும் உம்பர் அமுதமாய் ஒளி சிறந்துள்ளது.

பழைமையான பெருந்தன்மை நிறைந்த உயர்குலக் குடும்பம் ஒன்று புதுவது புனைந்து தலையளி சுரந்து உலகம் நலமுற அதிமதுரமாய் இங்குத்துதிகொண்டு துலங்குகின்றது.

சுமித்திரை கைகேசிகளைக் குறித்து அடுத்துக் கூறியுள்ள மூன்று பாடல்களும் ஆன்ற சுவையுடன் அரும் பொருள்கள் நிறைந்துள்ளன; அவை பின்பு காண வுரியன.

பரதன் இராமனைக் கண்டு மீண்டது

இங்ஙனம் கங்கையைக் கடந்து தென் திசையடைந்து சித்திரகூட மலையில் புகுந்து பரதன் பரிதாபமாய் அண்ணனை நாடி வந்தான். அந்நம்பியைக் கண்டபொழுது இத்தம்பி குலையுருகி நின்றதும், அவன் தலைடளி புரிந்து தழுவி யழுததும் உழுவலன்பாயொழுகியுள்ளன. அக்காட்சியைக் காணும்போது யாரும் தம் கண்ணீரையும் காண நேர்வர். பின்னே காண்போம்.

பரதனை அணைத்து அருகிருத்திய இராமன் தந்தை இறந்ததை யறிந்து சிந்தை கலங்கினான். தாயரடிகளில் விழுந்து தவித்தழுதான். வசிட்டர் தேற்றினர். தம்பி வந்த காரியம் தெரிந்தான்; பதினன்கு வருடம் கழித்தாலன்றி நான் நகர்க்கு வர முடியாதென்று தனது மனவுறுதியை வலியுறுத்தி அறிவுரைகள் பல கூறிக் குறித்த காலம்வரையும் அரசாண்டு வரும்படி பரதனை இராமன் பரிவுடன் வேண்டினான். அதன்பின் எதிர்மொழி கூற அஞ்சி அவனது பாதுகைகளை வாங்கித் தலையில் வைத்துக்கொண்டு படை பரிவாரங்களுடன் மீண்டு வந்து அயோத்தியை அடைந்து அதன் அருகேயுள்ள நந்தியம்பதி என்னும் தனியிடத்தில் விரத சீலனாய்ப் பரதன் தங்கியிருந்தான்.

இந்த யாத்திரையில் தனது அருமை மகனையும் மருமகளையும் இளையவனையும் சித்திர கூடத்தில் கண்டு கோசலை உருகியழுது மறுகி வந்தாளே யன்றி மைந்தனை ஊருக்கு வரும்படி ஒன்றும் வற்புறுத்த வில்லை. பிள்ளையின் உள்ளத்தை நன்கு அறிந்தவள் ஆதலால் தன் பிரிவாற்றாமையை அடக்கிக் கொண்டு அமைதியுடன் திரும்பலானாள். நகரினை யடைந்து விதிவலியை நினைந்து வெதும்பி யிருந்தாள்.

## கோசலையும் பரதனும்

தொடக்கத்தில் மண்டியெழுந்த துயரம் காலம் கழியக் கழிய வேகம் குறையுமாயினும் இத்தாயிடம் அச்சோகம் ஏகமாகவே யிடம் பெற்று இன்னல் நிலையில் மன்னி நின்றது.

அரசாட்சியைக் கவனியாமல் அண்ணனையே நினைந்து எப்பொழுதும் கண்ணீர் சொரிந்து பரதன் கரைந்திருந்தான். அவனது நிலைமைக்கு இரங்கி இவ்வன்னை நெஞ்சுருகி நின்றாள். பதினன்கு வருடங்களையும் நாள் எண்ணி ஆழ்துயருடன் அவன் கழித்து வந்தான். உறுதி செய்திருந்த கால அளவு முடிவினை யடைந்தது. குறித்த காலம் வந்ததும் அண்ணன் இன்னும் வரவில்லையே என்று பரதன் எண்ணியேங்கி இருந்துயருழந்தான். எல்லை செய்திருந்த அந்நாளின் இரவு முழுவதும் எதிர் பார்த்தான்; ஒருவரவும் காணேம். மறுநாள் எழுந்ததும் தம்பியை அழைத்தான்; அருகிருத்தினன்; அவன் உருகி யிருந்தான். அவனைப் பரிவுடன் நோக்கி "அப்பா! அரசைக் கவனித்துக்

கோள்; நான் இனி உயிர் வாழ்ந்திரேன்; என் இன்னுயிர்த் தெய்வம் இன்னும் வரவில்லை; இனி என்னால் இருக்க முடியாது; பொறுப்பு உன்னுடையது" என்று நெருப்பில் விழத்துணிந்து நேரே எழுந்தான். அவ்விளையவனும் அடிதொழுதழுது அவன் பின் தொடர்ந்தான். ஊரின் வடகீழ்த்திசையில் வளர்த்திருந்த தீக்குழியில் பாய்ந்து மாய அக்கோக்குமரர் துணிந்து போதலைக் கோசலையிடம்போய்ச் சிலர் குலைதுடித்து மொழிந்தார். அத் தீ மொழியைக்கேட்டதும் இத்தாய் உள்ளங்கலங்கி உணர்வு குலைந்து உயிர் பதைத்து மாளிகையை விட்டு விரைந்து வெளியே ஓடி வந்தாள். அப்பரிதாபக் காட்சியை அடியில் வரும் கவிப்படங்களில் காண்க.

கோசலை துடித்து எழுந்தது

அப்பொழுதின் அவ்வுரைசென் றயோத்தியினின் இசைத்தலுமே
அரியை ஈன்ற
ஒப்பெழுத ஒண்ணாத கற்புடையாள் வயிறுபுடைத்து
அலமந் தேங்கி
இப்பொழுதே உலகிறக்கும் யாக்கையினை முடித்தொழிந்தால்
மகனே! என்னா
வெப்பெழுதி னலன்ன மெலிவுடையாள் கடிதோடி
விலக்க வந்தாள்.

தொடர்ந்து வந்தது

மந்திரியர் தந்திரியர் வளநகரத் தவர்மறையோர்
மற்றும் சுற்றச்
சுந்தரியர் எனைப்பலரும் கைதலையில் பெய்திரங்கித்
தொடர்ந்து செல்ல
இந்திரனே முதலாய இமையவரும் முனிவரரும்
இறைஞ்சி ஏத்த
அந்தரமங் கையர்வணங்க அழுதரற்றிப் பரதனைவந்
தடைந்தாள் அன்றே,

பரதனைப் பிடித்தது

எரியமைத்த மயானத்தை எய்துகின்ற காதலனை
இடையே வந்து

விரியமைத்த நெடுவேணி புறத்தசைந்து வீழ்ந்தொசிய
மேனி தள்ளச்
சொரிவமைப்ப தரிதாய மழைக்கண்ணாள் தொடருதலும்
துணுக்கம் எய்தாப்
பரிவமைத்த திருமனத்தான் அடிதொழுதான் அவள்புகுந்து
பற்றிக் கொண்டாள். (மீட்சிப் படலம், 226—228)

இந்தக் கவிகளைக் கண்ணூன்றிக் காண்பவரெவரும் ஒரு பெரிய துயரக்காட்சியை நேரே கண்டு நெஞ்சுருக நேர்வர்.

பரதன் இறந்துப்போகப் போகின்றான் என்று தெரிந்தவுடனே என்றும் எளிதே வெளிவாராத அரசி அன்று விரைந்து ஓடிவந்த அலங்கோல நிலையைக் கவி இதில் விளங்க எழுதியிருக்கிறார். நிகழ்ச்சியின் எழுச்சி நெடுந்திகிலுடையது.

ஒரு அரசகுமாரன் துணிந்து புகுந்த காரியத்தில் குடிசனங்கள் எதிர் மறுத்துத் தடுத்து நிறுத்த முடியாது ஆதலால் காரிய விளைவை நினைந்து கதிகலங்கி அதிபரிதாபமாய் அலறி நின்று ஓலமிடலாயினர். அந்த அபாய ஒலி அந்தப் புரத்திலிருந்த கோசலையின் செவியில் வந்து விழுந்தது; அதனோடு சிலர் தலைவிரி கோலமாய் ஓடிவந்து உண்மையை உரைத்துக்கூவியழுதார். அப்பொழுது இக்கோப்பெருந்தேவி குலைநடுங்கி நிலைகுலைந்து விரைந்தெழுந்து வெளியேறிப் பாதனை நாடி அதிவேகமாய் முடுகி வந்த நிலை கொடிய பரிதாபமாய்க் கொழுந்தோடி நின்றது.

“அரியை ஈன்ற ஒப்பு எழுத ஒண்ணாத கற்புடையாள்” என்றது கருதி யுணர வுரியது. யாண்டும் அற்புத நிலையில் விளங்கியுள்ள இத் தேவி இப்பொழுது உளமிக நொந்து அலமந்து வருகிற அவதியிலும் தலைமை நிலைமையைத் தகவுடன் குறித்திருக்கிறார். அரி=திருமால்.

சிறந்த கற்பு நலம் வாய்ந்து உயர்ந்த சக்கரவர்த்திகட்கு மனைவியராய்ச் சிலர் அமர்ந்திருந்தாலும் பிள்ளைப்பாக்கியத்தில் இவள் எதிரே எவரும் ஒப்பாக நிற்க முடியாது ஆதலால் ஒப்பின்மை உணர வந்தது.

நிறை பொறை அருள் அமைதி நேர்மை சீர்மை முதலிய குணநலங்களையெல்லாம் ஒருங்கே தொகுத்து வைத்து இவ்வளவு

நீர்மையோடு இவளுக்கு நேராக யாரேனும் உளரா என்று நெடிது ஆராய்ந்து முடிவாக ஒருவரையும் காணாமையால், "ஒப்பு எழுத ஒண்ணாத கற்புடையாள்" என்று உளமுருகி யுரைத்தார்.

அயல் எழுத ஆள் இல்லையே எனச் செயலிழந்து கூறிய படியிது. இப்பேராசிக்கு இணையாக யாரையேனும் நேரே எழுதி வைத்துவிடவேண்டும் என்று பலகாலமும் ஆராய்ந்து பலமுறையும் முயன்றுள்ள நிலைமை உரையொலியால் தெரிய நின்றது.

உரைக்க என்னாது எழுத என்றது வாய்திறந்து சொன்னால் வையம் பொறுத்து நில்லாது; உடனே சடுத்து மறுத்துவிடும் ஆதலால் எழுதியாவது வைத்துவிடுவோம் என்றால் அதற்கும் வழியில்லையே என்றவாறு.

இங்ஙனம் ஒப்பற்ற அற்புத நிலையினளான இக் கற்பரசி அன்று கடுந்துயர் மிகுந்து நெடுந்திகிலடைந்து நிலை தளர்ந்து தலை விரிகோலமாய்த் தவித்து வந்தாள்.

பரதனுக்கு ஏதாவது கேடு நேர்ந்தால் உலக முழுவதும் பாடழிந்துபடும் என்பாள் "இப்பொழுதே உலகு இறக்கும்" என்றாள். அக்குலமகனைக் குறித்து இத்தலைமைத்தாய் கொண்டிருக்கும் கருத்து என்ன நிலையிலிருந்துள்ளது? என்பதை இதனால் அறிந்துகொள்ளலாம்.

மகனே! மகனே! என்று வாய்விட்டு அலறி இத்தாய் ஓடி வந்த அவல நிலை அளவிடலரிய துயரத் துடிப்பால் முடுகியுள்ளது. "கடிது ஓடி" என்றதனால் அந்த உயிர்ப்பதைப்பும் வேகமும் உணரலாகும். இவ்வாறு துடிதுடித்து வந்த அரசியின் பரிபவ நிலைமையை இறுதியில் தெளிவுற அறிவுறுத்தியிருக்கிறார்.

"வெப்பு எழுதினால் அன்ன மெலிவுடையாள்" என்றதனால் அப்பொழுது இத்தாய் இருந்த நிலைமை தெரிய நின்றது.

விதவைக் கோலத்தோடு மகப்பிரிவினால் மறுகிநின்ற இவள் நாளும் உள்ளத் துயரால் வெதும்பி நொந்து உயிர் வாடி உடல் மெலிந்து படருழந்து பரிந்திருந்தாள் ஆதலால் அவ்வடிவ நிலைமையைக் கவி இப்படிப் படம் வரைந்து காட்டியிருக்கிறார். வெப்பு = மனக்கொதிப்பு, துன்பம்.

அருவமான துன்பத்தையே குழைத்து கண்ணுக்குத் தெரியும்படி ஒரு உருவமாகச் செய்திருந்தால் எப்படி இருக்குமோ அப்படியிருந்தாள் அப்பொழுது அரசி என்பார் வெப்பு எழுதலை ஒப்புக்காட்டினார். ஒப்பெழுத ஒண்ணாதவள் வெப்பெழுத நேர்ந்தாளே என நிலைமையை நெஞ்சுருக விளக்கியிருக்கிறார்.

இவ்வாறு இயல்பாகவே துயரங் கனிந்திருந்த கோசலை பரதனது பரிபவ நிலையை அறிந்ததும் பரிந்து பதைத்து விரைந்து வந்தாள்.

2. அரசி இங்ஙனம் அலமந்து வருங்கால் மந்திரிகளுந் தந்திரிகளும் அரச சுற்றமும் நகரமக்களும் மடந்தையரும் உடன் தொடர்ந்து அடர்ந்து பெருந்துயருடன் பின் ஓடி வந்தனர். "கை தலையில் பெய்து இரங்கி" என்றதனால் அவர் வந்த நிலையறியலாகும். தந்திரியர்=சேனைத் தலைவர்கள்.

"இந்திரன் முதலிய இமையவர் இறைஞ்ச, அந்தர மங்கையர் வணங்க அழுது அரற்றிப் பரதனைவந்து அடைந்தாள்" என்ற இது இக்கோப்பெருந்தேவியின் மாப்பெருந்தகைமையை எவ்வளவு மகிமையுடன் விளக்கியுள்ளது!

குறித்த இடத்தே மூட்டி வைத்துள்ள தீயுள் பாய்ந்து மாண்டு மடியப் பரதன் மூண்டு போகின்றான்; அவனைப்பிடிக்கக் கோசலை குலை துடித்து ஓடி வருகின்றாள்; அவளைத் தொடர்ந்து குடிசனங்கள் அனைவரும் அலறி வருகின்றார்; இந்த அவலக் காட்சியைக் கண்டு இங்கே நாம் உளமுருகி நிற்கின்றோம்.

துயர நிலைகளை உயிர்கள் உருகக் கவியுரைகள் எதிர்கொண்டு காட்டுகின்றன. மொழிகள் தோறும் அவலத்துடிப்புகள் பெருகி வழிகின்றன.

3. "எரி அமைத்த மயானத்தை எய்துகின்ற காதலனை" என்றது சாவின் எல்லை தெரியவந்தது. மயானம்=சுடுகாடு. எல்லா வுடல்களையும் சுட்டெரிக்கும் பொல்லாப் பிணக்காட்டை இங்கே இது குறிக்கவில்லை. பரதநம்பி இறத்தற்கு எரிமூட்டியிருக்கும் தனி இடத்தைச் சுட்டி நின்றது. அச்சமும் அல்லலும் அவலமும் தோன்ற இப்பெயரை இங்கே அமைத்துக் கூறினார். எவரும் பெருந் திகிலடைய இங்ஙனம் வேகமாகச் சாகச்

செல்கின்ற மகனை இடையே புகுந்து தாய் தடுத்து நின்ற நிலை அடுத்து வருகின்றது.

பரந்து நீண்டு சடையாய் விரிந்து வீழ்ந்த கூந்தல் புறத்தே அலைந்து அலைமோத, இடை ஒசிந்து உடல் துவண்டுவரக், கண்ணீர் தாரைதாரையாய் ஒழுகி ஓட அழுது அலமந்து வந்த கோசலைத் தாயின் துயரநிலை இங்கே நம் கண்முன் தோன்றிக் கழிபெரிரக்கத்தை விளைத்து நிற்கின்றது.

“நெடுவேணி புறத்து அசைந்து வீழ்ந்து ஒசிய, மேனி தள்ள, மழைக்கண்ணுள் தொடருதலும்” என்றது அந்த அலங்கோல நிலை புலங்கொள்ள வந்தது. வேணி = சடை. நெடுமை கூந்தலின் நீட்சி தெரிய நின்றது. உயிர் துயர்மண்டி உயருணர்விழந்து அயர்வுழந்திருந்தமை வேணி என்றதனுல் காணலாகும்.

இவ்வாறு அழுது கூவி மறுகி ஓடி அருகுவரவே பரதன் திரும்பிப் பார்த்தான். அரசியைக் காணவே அருந் திகிலடைந்து அடியில் விழுந்து நெடிது தொழுதான். தொழவே அம்மகனை இத் தாய் தழுவிப் பிடித்துக்கொண்டாள்.

காலில் விழுந்தவனைக் கையில்பற்றிக்கொண்டது மேலும் தப்பிப் போய்விடலாகாதே என்னும் ஆவலால் என்க.

பரதனைக் கைகளால் அணைத்து நிறுத்தி, “ஐயோ மகனே! என்ன செய்ய நேர்ந்தாய்” என்று கோசலை பரிதபித்து உருகி உறுதிமொழிகள் பல உரைத்து நின்றாள். அவ்வுணர் வுரைகள் அவளது உள்ளப் பான்மையையும் உயர் பெருந்தகைமைகளையும் உலகம் அறிய வுணர்த்தியுள்ளன. அடியில் வருவன காண்க.

கோசலை உரைத்தது.

மன்னிழைத்ததும் மைந்தன் இழைத்ததும்
முன்னிழைத்த விதியின் முயற்சியால்
பின்னிழைத்ததும் எண்ணிலப் பெற்றியால்
என்னிழைத்தனை என்மகனே! என்றாள். (1)

நீயி தெண்ணினையேல் நெடு நாடெரி
பாயும் மன்னரும் சேனையும் பாயுமால்
தாயர் எம்மள வன்று தனியறம்
தீயின் வீழும் உலகும் திரியுமால். (2)

தரும நீதியின் தற்பய னுவதுன்
கரும மேயன்றிக் கண்டிலம் கண்களால்
அருமை ஒன்றும் உணர்ந்திலை ஐயநின்
பெருமை ஊழி திரியினும் பேருமோ? (3)

எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின்னரு ளுக்கரு காவரோ?
புண்ணி யம்மெனும் நின்னுயிர் போயினல்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ? (4)

இன்று வந்திலை னேயெனில் நாளையே
ஒன்றும் வந்துனை உன்னி யுரைத்தசொல்
பின்றும் என்றுண ரேற்பிழைத் தான்எனின்
பொன்றும் தன்மை புகுந்தது போயென்றாள். (5)

ஒருவன் மாண்டனன் என்றுகொண் டூழிவாழ்
பெருநிலத்துப் பெறலரும் இன்னுயிர்க்
கருவும் மாண்டறக் காணுதி யோகலைத்
தருமம் நீயல தில்லெனும் தன்மையாய். (6)

இறக்கை யுஞ்சிலர் ஏகலும் மோகத்தால்
பிறக்கை யும்கடன் என்றுபின் பாசத்தை
மறக்கை காண்மக னேவலி யாவது
துறக்கை தானும்என் றாள்மனம் தூய்மையாள். (7)
(மீட்சிப்படலம், 229-235)

இந்த ஏழு பாடல்களையும் ஊன்றி நோக்கி உளங்கொண்டு உணரின் ஆன்ற உறுதி நலங்கள் பல அறியலாகும்.

புத்திரனுக்குப் புத்திமதிகளாக இத்தாயின் வாயில் இங்கே வந்துள்ள அறிவுரைகள் எத்துணையோ நுட்பங்களை யுடையன. நன்கு உய்த்துணரத் தக்கன.

"மன் இழைத்ததும், மைந்தன் இழைத்ததும்
முன் இழைத்த விதியின் முயற்சியால்"

என்றது என்ன பொருளை எண்ணி இன்னவாறு முன்னுற வந்தது? மன் என்றது இங்கே தசரதனை. மைந்தன் என்றது இராமனை. மூலமுதல்களை முதலில் நினைந்தாள்.

மதிமானான தசரதன் மதியிழந்து கைகேசிக்கு வரம் கொடுத்து மடிந்ததும், அதிவீரனான இராமன் அரசு துறந்து

வனம் புகுந்துபோனதும், பழவினைப் பயனால் விளைந்தன என் பாள் "விதி மூன் இழைத்த முயற்சி" என்றாள்.

பின் இழைத்தது என்றது பதினான்கு வருடங்கள் கழிந்த வுடன் வந்து விடுவேன் என்று பரதனிடம் இராமன் உறுதிகூறி யிருந்தபடி வராமல் நின்றுள்ளதை.

சத்தியசீலனான இராமன் உரைத்த மொழிக்கு மாறாக யாண்டும் பொய்த்து நில்லான்; அத்தகைய உத்தமன் இத்துணைத் தாமதமாய் நின்றது விதியின் சதியேயாம்; ஆகவே மதிமானான நீ சோகமுறாது சிறிது பொறுத்துப் பார்க்கவேண்டும் என்பது குறிப்பு.

"என் மகனே! என் இழைத்தனை!"

என்றது இன்னல் மீதூர்ந்து வந்துள்ளது. இந்த வுரை பரிதாபமாய்த் தொனித்து வந்திருத்தலை நுனித் தறிந்துகொள்க.

இன்னுயிரனைய இருவரையும் என்னுடைய தீவினைப்பயனால் முன்னம் பிரிந்து இன்னலுழந்து சாகாவுயிரளாய் உன்னையே நம்பி உயிர்தரித்திருக்கின்றேன்; நீயும் இவ்வாறுசெய்யத் துணிந்தாயே அந்தோ! மகனே என்று அலறித்துடித்திருக்கிறாள்.

பரதா! நீ கருதிய காரியம் பெரிதும் பரிதாபமானது; அதனைச் சிறிதும் உணரவில்லையே என மறுகி நின்று உரிமை தெரிய உறுதி யுரைத்தாள்.

2. நீ தீயுள் பாய்ந்தால் உலகமுழுவதும் அதில் பாய்ந்து மாயுமே என்பாள், "நீ இது எண்ணினையேல் நெடுநாடு எரி பாயும்" என்றாள். இது என்றது அந்நிலைமையை வாயால் பேசவும் கூசி. நினைத்தாலே நெஞ்சு வேகும்படியான அச்சத்தை அம்மகனது துணிச்சல் அன்று விளைத்து நின்றது.

"நாட்டு மக்கள் மட்டுமா, சுற்றமுற்றும் சுடுதீப்பாயும்; சிற்றரசர்களும் செத்துத் தொலைவர்; சேனைகளும் சாகும்; ஏனையரெல்லாரும் இவ்வாறாயின் தாயாகிய நாங்கள் சாவதைச் சொல்லவேண்டுமா? விரித்து விரித்துச் சொல்லுவானேன் பரதா! நீ மாயவேரின் தரும தேவதையும் தீயில் பாய்ந்து மாய்ந்து போமே! உன் போக்கை நோக்கவில்லையே! உலக முழுதும் ஒருங்கே அழிந்து போகவல்லவா நீ இன்று எழுந்து போகின்

றாய்! உன் நிலைமையைச் சிந்தனைசெய்துபார் ஐயா!" என்று ஆர்வம் கனிந்து அறிவுறுத்தினாள்.

"தாயர் எம்மளவன்று; தனி அறம்
தீயில் வீழும்; உலகும் திரியுமால்"

என்றதனால் பரதனை இத்தாய் என்ன நிலையில் எண்ணியிருக்கிறாள் என்பது இனிது புலனாம். உள்ளத்தில் படிந்துள்ள உயிருணர்ச்சிகளைக் காலம் வாய்த்தபோது உரைகள் அயலறிய உணர்த்திவிடுகின்றன.

3. தருமம் நீதி முதலிய அருவமான அருமைப்பண்புகளை எல்லாம் பரதனுடைய கருமங்களே உலகம் காணக் காட்டி நிற்கின்றன; இவன் செயல்கள் இல்லையாயின் அவற்றைக் கண்ணால் காணமுடியாது என்பதை இதில் காட்டியருளினாள்.

இவனுடைய செயல் இயல்கள் யாவும் புண்ணியங்கள் விளைந்து புனிதம் நிறைந்துள்ளன என்பதாம்.

*நதிகளெல்லாம் கடலில்போய்ச் சேருதல்போல் நீதிகள் எல்லாம் பரதனிடம் வந்து படிந்திருக்கின்றன என்று கோசிக முனிவர் சனகனிடம் கூறியிருக்கின்றார். இவனது நீதியொழுக்கங்களைக் குறித்துக் காவிய பாத்திரங்கள் யாவரும் ஒரு முகமாய் உவந்து பாராட்டியுள்ளனர். பரம புனிதன் என அனைவரும் வியந்து புகழ இவன் உயர்ந்து நிற்கின்றான்.

புண்ணிய சீலனை உன்னுடைய அருமை பெருமைகளை யாதொன்றும் நீ எண்ணியுணரவில்லையே என்பாள், "அருமை ஒன்றும் உணர்ந்திலை" என்றாள். உன் மகிமையை உண்மையாக உணர்ந்தால் உலகுக்கெல்லாம் நீ ஓர் உயிராதாரமாயிருப்பது தெரியவரும்; தெரியின் பொறுப்பையுணர்ந்து உன்னைப் போற்றியிருப்பாய் என்பது கருத்து.

"ஐய! நின் பெருமை ஊழி திரியினும் பேருமோ?"

என்றது யாண்டும் நீர்மை குன்றாமல் என்றும் பொன்றாத புகழுடைப்புடன் நின்று திகழுவன் என்பதை நினைவுறுத்தி நின்றது.

"ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி எனப்படு வார்." (குறள், 989)

* பாலகாண்டம், குலமுறைகிளத்துபடலம், 21.

என்னும் இந்த அருமைத் திருக்குறள் இங்கு அறியத்தக்கது.

எல்லாம் பெயர்ந் தொழிகின்ற யுகாந்தகாலத்திலும் பரதன் பெருமை பேராது நின்று பேரொளி வீசும் எனக் கோசலை ஆராமை மீதூர்ந்து பாராட்டியிருக்கிறாள்.

அப் பிள்ளையின்பால் உள்ளம் பரவசமாய் இத்தாய் உரையாடியுள்ளமையை உணருந்தோறும் அதிசய மிகுந்து உரிமையன்புகள் வளர்ந்து உறுதிநலங்கள் பெருகி எழுகின்றன.

"எண்ணில் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின்அருளுக்கு அருகு ஆவரோ?"

என்னும் இந்த வாசகம் எவ்வளவு பாசம் தோய்ந்து ஆசை மீதூர்ந்து வந்துள்ளது! நிலைமை ஆய்ந்து சிந்திக்கற்பாலது.

தன் வயிற்றிலிருந்து பிறந்த பிள்ளை இராமன்; அருமைப் பண்புகள் யாவும் ஒருங்கே அமையப் பெற்றவன். அந்த உத்தம புத்திரனை மாற்றாள் மகனான பரதன் எதிரே நிறுத்தி மாற்றுரைத்து நோக்கி இருவருடைய நிலைமைகளையும் உலகம் உரிமையுடன் ஓர்ந்துணர இத்தாய் இவ்வாறு உணர்த்தியிருக்கிறாள்.

ஒரு இராமன்; இரண்டு இராமர்கள் அல்லர்; பலகோடி இராமர்களை ஒருங்கு திரட்டி மருங்கு வைத்தாலும் பரதனது அருள் நீர்மைக்கு நிகராகார் என்பாள் "எண்ணில் கோடி இராமர்களை" எதிரெடுத்துக் காட்டினாள். இந்த அதிசய வசனம். இதன் எண்ணங்களை எண்ணி ஆராயவேண்டும்.

முன்னம் இராமனை நோக்கி ஐயா, "பரதன் நின்னினும் நல்லன்" என நேரே சொல்லினாள். இப்பொழுது அப்பின்னவன் எதிரே இப்படிப் பேசியிருக்கிறாள்.

முன்பு அவனிடம் இளமையில் தோன்றியிருந்த விழுமிய நீர்மைகளைப் பொதுவாக நினைந்து அவ்வாறு கூறினாள்; அதன்பின்பு பதினான்கு ஆண்டுகளாக அவனது குணநலங்களையும் மனநிலைகளையும் அருட் பண்பையும் ஆன்ம வுருக்கத்தையும் அனுபவித்தறிந்து அதிசயமிகுந்து பரவசமாய் இவ்வாறு துதிசெய்து நின்றாள் என்க.

"எண்ணில் கோடி" என நம்மால் எண்ணியறிய முடியாதபடி அப்புண்ணியப் புதல்வனது புனித நீர்மையை இத்தாய் புகழ்ந்து போற்றியிருக்கும் நேர்மை வியந்து போற்றத் தக்கது.

*" ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ தெரியின் அம்மா "

என்று பரதனை நோக்கக் குகன் உருகி உரைத்துள்ளதும் ஈண்டு உணரவேண்டும். கேழ்=ஒப்பு. தெரியின் என்பதிலுள்ள மருமம் தெரிக.

இராமனைத் தன் இன்னுயிர் நாயகனாகக் குகன் எண்ணி ஏத்தியிருக்கிறான்; அத்தகைய நேயமிகுந்த தூயவனைக் காட்டிலும் ஆயிரம் பங்கு பரதன் மேலானவன் என மனங் கனிந்து வாயார இவ்வாறு வாழ்த்தியுள்ளான்.

பரதனைப் புகழ்ந்து கூறுமுகத்தால் இராமனை இகழ்ந்து கூறியுள்ளதுபோல் ஈண்டு எண்ணத்தோன்றும்; உண்மையை ஊன்றி நோக்கி உள்ள நலனை உரிமையுடன் உணர்ந்துகொள்ளவேண்டும்.

பெற்ற தாயும் உற்ற நண்பனும் இராமனிடம் பற்று மிகவுடையவர்; பேரார்வமாய்ப் பெருகியுள்ள அவ்வுரிமையாளர் தம்முடைய இனிய அருமைப் பொருளையும் அயலொதுக்கி இவ்வளவு பரவசமாய்ப் பரதனைப் போற்றியது அவ்வரதனது உயர் நீர்மையில் உள்ளம் பறிபோய் உயிருருகியுள்ளமையால் என்க.

முன்னவனிலும் பின்னவனிடம் என்ன ஏற்றம் கண்டு இன்னவாறு ஏத்திநின்றார்? எனின், அவர் நேரில் அனுபவித்துள்ளன யாரும் தெளிவாக நிலையிடலரியன. வெளியே நாம் அறிந்தன சில இங்கே நயந்து காணத்தக்கன.

இராமன் தந்தையிட்ட கட்டளையை முன்னிட்டு அரசு துறந்து அடவி புகுந்தான்; பரதனுக்கு அவ்வாறான உத்தரவு யாதும் இல்லை; அதற்கு மாறாக அரசுரிமையை ஆளும்படி தாயும் பிறரும் வரிசை பல செய்து வணங்கிவேண்டினர்; அந்த அரிய செல்வங்களையெல்லாம் அறவே வெறுத்து விடுத்து அண்ணனையே எண்ணி உருகி உண்ணும் உணவும் பருகும் நீரும் துறந்து கண்ணீரும் கம்பலையுமாய் இராமனைக் காணும் காதலோடு காடுபோந்து மீண்டு வந்து குறித்த நாள் வரையும் பொறுத்திருந்து முடிவில் அவனைக் காணமையால் தன்னுயிரையே வெறுத்துச் சாகத் துணிந்தான். இந்த அற்புத அன்புரிமையும் ஆன்ம வுருக்கமும் உயிரினங்களையெல்லாம் உள்ளம் உருக்கியுள்ளன. அவ்வுருக்கத்

* அயோத்தியாகாண்டம், குகப்படலம், பாட்டு 35.

தில் பலகாலும் தோய்ந்து பரிதபித்து நின்ற கோசலை அப்பிள்ளை யை விழைந்து இப்படி உள்ளம் குழைந்து உரைத்தாள் என்க.

அன்பும் ஆர்த்தியும் தலைமீறி நின்றபொழுது வார்த்தைகள் நிலைமீறி எழும் ஆதலால் அந்நிலையில் உரைகள் இங்கு ஓங்கி யுள்ளன. உயிருருக்கம் உரையுருவில் வெளி வரலாயது.

அருளுக்கு அருகு ஆவரோ? என்றது வீரம் கொடை ஞானங்களில் இராமன் பெரியவனாயிருப்பினும் உடன்பிறந்தான் பால் கடலன்பு மண்டி ஆற்றாமை மீதூர்ந்து எப்பொழுதும் ஊற்று அறாத கண்ணனாய் உள்ளங்கரைந்து உயிர் உருகி நிற்கும் அருளியல்பில் இத்தம்பி அருகே அவ்வண்ணன் யாதும் இணையாக நிற்க இயலாதென்னும் அந்நிலை தெரிய என்க.

இராமனைப்போல் அண்ணர்கள் பலரைப் பெறலாமாயினும் பரதனைப் போன்ற அன்புடைத் தம்பியைக் காண்டல் யாண்டும் அரிதாம் என்றவாறு.

பிள்ளையைப் பிரிந்திருக்கமாட்டாமல் ஈன்ற தாயாகிய தான் வருந்தியழவும் சிறிதும் இரங்கி யருளாமல் வன்கண்மையுடன் இராமன் வனம் புகுந்ததைக் கோசலை நினைந்திருந்தாள் ஆதலால் அம்மகனுடைய நெஞ்சின் நிலைமையையும், உரிமைத் துணைமேல் உள்ளமும் உயிரும் ஒருங்கே உருகி அருளுருவாயுள்ள பரதனது பெருநீர்மையையும் நேரே நிறை செய்து கூறினாள்.

எண்ணில் கோடி இராமர்களும் இந்த இளையமகனுக்கு ஈடாகார் என்று பெற்றதாய் சொன்னதுதான் இங்கே பெருமையானது; மற்றவர் சொன்னால் இத்துணை இனிமையும் உரிமையும் பயந்து நம் உள்ளங்களை உருக்கி உவகை விளைத்திராது.

இந்தத் தம்பி செய்துள்ள அன்புரிமைக்கு அந்த அண்ணன் எண்ணில்லாத காலம் நன்றியறிவுடன் நலம்புரியக் கடமைப்பட்டுள்ளான் என்பதும் இதன்கண் காணலாகும்.

இராமனுக்கு ஒரு அண்ணன் இருந்து அவன் தம்பியாய் நின்றால் இப்படி என்புருகும் நிலையில் அன்புருகி அனவரதமும் ஆற்றாமை மீதூர்ந்து ஆருயிரை உருத்துவிட நேர்வனோ? என்று நினைந்து நினைந்து நெஞ்சுருகி இரங்கி யிருக்கிறாள்.

புண்ணியமே பரதன் என்னும் பெயருடன் உருவம் எடுத்து வந்துள்ளது என்று பிள்ளையைத் தழுவிய கை தளராமல் உள்ளங் குழைந்து உளைந்து நின்றாள்.

"புண்ணியம் எனும் நின் உயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?"

என ஆழ்துயருடன் இத்தாய் அலமந்திருக்கிறாள். பரதன் ஒருவன் வீயின் உயிர்கள் பலவும் மாயும் என்றதனால் அவனது புனிதமேன்மை புலன்கொள நின்றது. மனிதர்கள் தேவர்கள் மாத்திரம் அல்லர்; பகுத்தறிவில்லாத சீவப் பிராணிகளும் அவனைப் பிரிந்து இனிது வாழா என்பதாம்.

தன் வாழ்வினை முடித்துவிடத் துணிந்த அம்மகனை நோக்கி அவனது வாழ்வின் மகிமையை இங்ஙனம் உருகி உரைத்து மேலும் பல உறுதி கூறினாள்.

"ஐயா! உன் அண்ணன் இராமன் இன்று வரவில்லையானால், நாளை வந்துவிடுவான்; அவன் சொல்லியுள்ள கால எல்லை இன்னும் சிறிது பாக்கியிருக்கலாம்; ஆத்திரத்தினால் நீ எண்ணிய கணக்குப் பிழைபட்டிருக்கும்; சத்திய வாக்கியாதலால் எப்படியும் அவன் வந்து சேருவான்; சிறிது பொறுத்துப் பார்க்க வேண்டும்; உயிரை உகுத்துவிட நீ இப்படி உருத்தெழுந்தது உலகையெல்லாம் அழித்ததுபோலாம் ஐயனே!" என்று உய்தியுரைகள் பல உருகி மொழிந்தாள்.

"ஒருவன் மாண்டனன் என்று உயிர்க்கருவும் மாண்டறக் காணுதியோ?" என்றதில் கருத்துக்கள் பல கண்ணூன்றிக்காண வுள்ளன. அப்பிள்ளையின்பால் இத்தாய் கொண்டுள்ள பேரன்பும் பெருமதிப்பும் உரைகள்தோறும் உயிரொளிவீசி உயர்ந்து நிற்கின்றன.

இவ்வண்ணம் உறுதிமொழிகள் பல உருகி யுரைத்து வந்த கோசலை இறுதியில் சொன்னது மிகவும் கருதி யுணரத்தக்கது.

"தாய் தந்தை அண்ணன் தம்பி மனைவி மக்கள் என இன்னவாறு முறைப்பெயர் பலகொண்டு ஈண்டு மனிதர் பிறந்து இருந்து பின்பு மறைந்து போகின்றனர். எக்கிளைஞரும் எவ்வுறவினரும் யாண்டும் ஒருங்கு சேர்ந்து உறைந்திருக்கமாட்டார். பறவையினங்கள் மாலைப் பொழுதில் ஒரு மரத்தை யடைந்து கூடிக்

குலாவியிருந்து மறுநாள் காலையில் எழுந்து பிரிந்துபோதல்போல் மனிதக்குழுவும் ஒரு குடியில் வந்து உறவினர் எனத் தோன்றிச் சிலநாள் மருவியமர்ந்து பின்பு ஒரு தொடர்புமின்றி ஒளிந்து போகின்றனர். வினையளவே வந்து சேர்கின்றன; அது முடிந்தால் தினையளவும் நில்லாமல் கனவென ஒழிந்துபோகின்ற இந்த மாய வாழ்வில் பற்று மிக வைப்பது குற்றமாகும். இப்பொழுது தோன்றியுள்ள இப்பிறப்பிற்கு முன்பு நாம் எங்கு இருந்தோம்? இனி எங்கே போகப்போகின்றோம்? எதற்காக இங்கே வந்தோம்? வந்து கூடிய இடத்திலும் கூட்டுறவு நீட்டித்து நில்லாமல் நிலை குலைந்துபோவானேன்? இச் சிறிய கால எல்லையுள் எவ்வளவு பெரிய இழவுகளைக் காண்கின்றோம்! இந்த மாய வாழ்க்கையில் பற்று நீங்கித் தத்துவ தரிசனம் செய்திருப்பதே சித்த சாந்தியாம்" என இத்தகைய உத்தம போதனைகளை உரைத்து அவனுடைய வுள்ளத்தைத் தேற்றினாள்.

"இறக்கையும் சிலர் ஏகலும் மோகத்தால்

பிறக்கையும் கடன்." என்றது உயிரினங்கள் ஒரு நிலையுமின்றி உழன்றுவரும் செயல் இயல்களை உணர்த்தி நின்றது.

பிறந்தவரனைவரும் இறந்துபடுகின்றார். சிலர் மாத்திரம் தத்துவவுணர்வுடன் பற்றற்று நின்று முத்தியை அடைகின்றார்; பற்று அறாதவர் எல்லாரும் மீளவும் பிறந்து வருகிறார்; ஆகவே பற்றே துன்ப மயமான பிறவிக்குக்காரணமாயிருத்தலால் அதனை அடியோடு ஒழித்துவிடவேண்டும் என்பதாம்.

"பாசத்தை மறக்கைகாண் மகனே வலி"

என்றதில் இத்தாயினுடைய மெய்யுணர்வு விளங்கியுள்ளது.

பாசம் நெஞ்சில் நிலைத்திருந்தால் அது அல்லல்களுக்கெல்லாம் மூலகாரணமாய்ப் பல்வேறு வகைப்பட்ட பிறவிகளை விளைத்துவிடும்; விடவே முடிவில்லாத துயரங்களில் மூழ்கி உழல நேரும்; ஆகவே அதனை உள்ளத்தில் கொள்ளாமல் மறந்துவிடுதல் நல்லது; ஒரே அடியாக முழுவதும் அகத்தே மறக்கமுடியாதாயினும், புறத்தே தள்ளிவிடுக என்பாள் "துறக்கை தானும்" நன்று என்றாள்.

அண்ணன்மீது வைத்துள்ள பாசத்தால் பரதன் உயிரை மாய்க்கத் துணிந்தான் ஆதலால் அவனை உய்விக்கவேண்டி இன்ன

வாறு கோசலை தத்துவ வுபதேசம் செய்தருளினாள். இதனால் இந்த அம்மையின் மனநிலையும் ஞானநலமும் உற்றவர்க்கு உறுதி கூறி உள்ளந்தேற்றும் திறமும் உணரலாகும்.

அருமைத் துணையைப் பிரிந்திருக்க ஆற்றாமல் ஆறாத்துயருடன் மறுகி ஏங்கிய இளையவனுக்கு உரிமைத்தாய் சொன்ன இவ் வுறுதிமொழிகள் உலகுக்கெல்லாம் ஒருங்கே உணர்வு நலன்களை யுதவி உய்திகாட்டி யுள்ளன.

தன் நாயகன் பிரிந்துபோயுள்ளதை நினைந்து வருந்தி நெடுங் காதலுடன் அழுதுகிடந்த கேமசரி என்னும் மங்கைக்கு அவள் தாயாகிய நிப்புதி என்பவள் ஆறுதல் கூறியிருப்பதும் ஈண்டு அறியவுரியது. அடியில் வருவது காண்க.

"பிறங்கின கெடுங்கள் யாவும்; புணர்ந்தவர் பிரிவர்;பேசின்
இறங்கின வீழும் மேலாய் ஓங்கிய, எண்ணில் யோனிப்
பிறந்தவர் சாவர்; செத்தார் பிறப்பவே என்ன நோக்கிக்
கறங்கிசை வண்டு பாடுங் கோதைநீ கவலல் என்றாள்."
(சிந்தாமணி, 1535)

மனித வாழ்க்கையின் நிலைகளையும் அல்லற்பாடுகளையும் எடுத்துக்காட்டித் தன் மகளுக்கு அத்தாய் இங்ஙனம் தேறுதல் கூறியிருக்கிறாள். பொருள் நிலையை ஊன்றி உணர்ந்து கொள்க. பிறங்கின யாவும் என்றது விளங்கிநின்ற பொருள்கள் எல்லாம் என்றவாறு. நிலையற்ற நிலையை நினைந்து தெளிக என்பதாம்.

இறக்கையும் பிறக்கையும் ஏகலும் உயிர்கட்கு இயல்புஎன்று எண்ணிப் பொறுத்திரு மகனே! என்ற நம் தாயின் வாயுரை இதனை ஒத்துவந்துள்ளதை உய்த்து உணர்ந்து கொள்க.

கோசலையும், நிப்புதியும் உரைத்தனவாக உருவாகிவந்துள்ள இவ்வுணர்வுரைகள் கம்பரையும், திருத்தக்க தேவரையும் எவ்வளவு விநயமாக வெளிப்படுத்தி நிற்கின்றன! உலகமக்கள் உணர்ந்து உய்திபெறுதற்குரிய அரிய உறுதி நலங்களைத் தக்க பாத்திரங்களின் வாயிலாகக் கவிஞர்கள் பக்குவமாக உணர்த்தி யருளினெறனர். தாம் மறைவாக நின்றுகொண்டு உயிர்கள்பால் அருள்புரிந்து அவர்கள் உதவி வருகின்ற சதுரப்பாடு அதிசய மிகவுடையது. அவர்களுடைய மறைமொழிகள் இறைமொழிகளாயமர்ந்து என்றும் எங்கும் இன்பம் பயந்து வருகின்றன.

உற்ற உறவினர்பால் பற்றுமிக வைத்துப் பரிந்து நிற்பது பிறவித்துயர்க்கே ஏதுவாகும் ஆதலால் அப்பாச மோகங்களை மறந்து விடும்படி கோசலைத்தாய் மறுகி வேண்டினள்.

"மோகமே திரியக்கிடை உய்ப்பது;
மோகமே நரகத்தில் விழுப்பது;
மோகமே மறமாவது மற்றவும்
மோகமே யறமாசற நிற்பதும்," (மேருமந்தரபுராணம்)

பிறவிக் கடலில் காதலெனும் பெருவாய்
முதலை பிடித்திருக்க
இறவுச் சுழியாற் சுழலுமவர்க் கிதய
நாவாய் எட்டாவாம்
மறமுற் றுளத்தை உளத்தாலே மாய்த்துப்
பிறப்பில் வருந்தாமல்
உறவுற் றுனைநீ உய்விப்பாய் உயிர்க்குப்
பிறரால் உய்வுண்டோ? (1)

வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றாம் குடும்பபரம்
வெறும்பொய் என்றே
இங்காசை அறநீக்கி எல்லையிலாப் பரமபதத்
திருந்து வாழ்வாய்
சிங்காரக் கந்தர்ப்ப நகரிநந்தென் சிதைவுற்றென்
தீதோ நன்றோ
பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென்? கெட்டாலென்?
பாசமமை! (2)

தாரதனம் மிகும் என்னில் தளையாகும்
அப்பாசம் தனைத்துக் கொண்டால்
ஆரதனை அறுத்தகலும் விரகுடையார்
அறிவிலார் ஆசை விஞ்சிக்
கூரிதையா மப்போகத் தூன்றழுக்கும்
கொடுந்துயரைக் குறித்த போதே
தீரதையாம் அறிஞர்க்கு விரத்தி யுளதாய்ச்
சித்தம் தெளியுமன்றே. (3)

(ஞானவாசிட்டம்)

மோகமும் பாசமும் உயிரினங்களுக்குத் துயர்விளைத்து வரு நிலை இவற்றால் உணரலாகும். தத்துவ நோக்கில் உருவகித்து வந்துள்ள இப்பாடல்களை ஊன்றி நோக்கி உறுநிலங்களை ஓர்ந்து கொள்ளவேண்டும். பாச நீக்கம் ஈசன் ஆக்கும் என்க.

ஆசாபாசங்கள் பிறவிக்கு வித்தாய்ப் பெருந்துயர் விளைத்து வருதலின் அதனை ஒழித்து விடுதலே உயிர்க்கு உறுதியாமென இந்நாட்டு முன்னோர் பலரும் உணர்ந்து வந்திருக்கின்றனர். அவ்வுணர்வுறுதியைப் பலவகை நிலையிலும் தெளிவுபடுத்தி வழி வழியே நூலோர் உலகுக்கு நலமாக உணர்த்தியுள்ளனர். பக்குவமான மாணாக்கனுக்கு நல்ல ஞானாசிரியன் உபதேசிப்பது போல மனத்தை முன்னிலைப் படுத்தியும் தத்துவ வுணர்ச்சிகளை வெளிப்படுத்தியிருக்கின்றனர். ஒன்று அடியில் வருவது காண்க.

“ பேசு வாழி பேசு வாழி
ஆசையொடு மயங்கி மாசுறு மனமே!
பேசு வாழி பேசு வாழி,
கண்டன மறையும்; உண்டன மலமாம்;
பூசின மாசாம்; புணர்ந்தன பிரியும்;
நிறைந்தன குறையும்; உயர்ந்தன பணியும்;
பிறந்தன இறக்கும்; பெரியன சிறுக்கும்;
ஒன்றொன் றொருவழி நில்லா; அன்றியும்
செல்வமொடு பிறந்தோர் தேசொடு திகழ்ந்தோர்
கல்வியிற் சிறந்தோர் கடுந்திறல் மிகுந்தோர்
கொடையிற் பொலிந்தோர் படையிற் பயின்றோர்
குலத்தின் உயர்ந்தோர் நலத்தினின் வந்தோர்
எனையர் எம்குலத்தினர் இறந்தோர் அனையவர்
பேரும் நின்றில போலும் தேரின்
நீயும் அஃதுஅறிதி அன்றே! மாயப்
பேய்த்தேர் போன்று நீப்பரும் உறக்கத்துக்
கனவே போன்று நனவு பெயர்பெற்ற
மாய வாழ்க்கையை மதித்துக் காயத்தைக்
கல்லினும் வலிதாக் கருதிப் பொல்லாத்
தன்மையர் இழிவு சார்ந்தனை நீயும்
நன்மையிற் றிரிந்த புன்மையை ஆதலின்
அழுக்குடைப் புலன்வழி இழுக்கத்தின் ஒழுகி
வளைவாய்த் தூண்டிலின் உள்ளிரை விழுங்கும்
பன்மீன் போலவும்,
மின்றுறு விளக்கத்து விட்டில் போலவும்,
ஆசையாம் பரிசத்து யானை போலவும்,
ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்,
விரிய மணத்தின் வண்டு போலவும்,
உறுவது உணராச் செறுவுழிச் சேர்ந்தனை ;
நுன்னூல் நாற்றுத் தன்னகப் படுக்கும்
அறிவில் கிடத்து நுந்துழி போல
ஆசைச் சங்கிலிப் பாசந் தொடர்ப்பட்டு

இடர்கெழு மனத்தினொ டியாற்றுவ தறியாது
குடர்கெழு சிறையறைக் குறங்குபு கிடந்து
கறவை நினைந்த கன்றென இரங்கி
மறவா மனத்து மாசறும் அடியார்க்கு
அருள்சுரந் தளிக்கும் அற்புதக் கூத்தனை
மறையவர் தில்லை மன்றுள் ஆடும்
இறைவன் என்கிலை என்னினைந் தனையே!"

(கோயில் நான்மணிமாலை)

இது தில்லைப்பரமனை நினைந்து பட்டினத்துஅடிகள் மனத்தை முன்னிலைப்படுத்திப் பாடியது. இந்த அருமைப் பாசுரம் ஆர்வமுடன் ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது. மனித வாழ்க்கையின் நிலைமைகள் யாவும் ஆடியில் ஒளிர்வனபோல் இப்பாடலில் மிளிர்கின்றன. படியேறிய ஒரு உயர்ந்த உயிரின் உள்ளுணர்ச்சிகள் உரைகளாக வெளிவந்துள்ளன. இந்த அனுபவ நிலைகள் பக்குவமான புனித மனமுடையார்க்கு உடனே இனிமையும் தெளிவும் பயந்து இன்ப மிகச் செய்யும். ஒவ்வொருவரும் தம் உள்ளத்தை நோக்கி நாளும் மனனமா ஓதிவரும்படி இஃது உருவாகி வந்துள்ளது. கவியின் கருத்துக்களைக் கருத்தூன்றி உணர்ந்துகொள்ளுக.

பந்தபாசத்தைத் துறந்து சிந்தை தெளிந்து நிற்கும்படி பரதனை நோக்கி நம் அரசி உரைத்த உறுதிமொழிக்கு இனமாய் இங்ஙனம் உணர்வுயர் நூல்கள் பலவுள்ளன. நம் தாய்மொழி தத்துவ நிலையில் தலைசிறந் துள்ளமையான் அத்தாயின் வாய்மொழி இப்படித் தூய்மையில் தோய்ந்து வந்தது.

சரித்திரப்போக்கும் இலக்கிய நோக்கும் புருடார்த்தமாகிய முத்திப்பேற்றையே முதன்மையாகக் கருதியுள்ளன ஆதலால் இவ்வாறான ஆன்ம தரிசனங்களை இடையிடையே நாம் அறிந்துகொள்ள நேர்கின்றோம். அறிந்த அளவில் மறந்து விடாமல் ஆழ்ந்து சிந்தித்தால் அச்சிந்தனைகளில் உண்மைநிலை தோன்றி உயரின்பம் விளைதலை உணர்ந்துகொள்ளலாம்.

பாசமோகங்கள் மோசமுடையன என்று விளக்கிக்காட்டி அவற்றை மறந்து நிற்கும்படி கோசலைத்தாய் பரதனிடம் பரிந்து சொல்லினள். இன்னவாறு பல பல கூறி இவ்வண்ணம் மறுகி வேண்டியும் உருகிநின்ற அம்மகன் ஒரு சிறிதும் இசையாமல் கருதியபடியே உறுதிபூண்டு நின்றான். "கண் எதிர்நின்ற என் கருணைத் தெய்வமே! தேவரீரது கட்டளையை நான் தட்டி

விட்டதாகக் கருதிவிடலாகாது; பொறுதி செய்யவேண்டும். என் ஐயன் குறித்தபடி வரவில்லை; இனி நான் பொய்யனைப் புலைப்படமாட்டேன்; இத்தீய மெய்யினைத் தீயுள் உகுத்துத் தூய மெய்யனைத் தோன்ற விழைந்தேன்; சொன்னமொழி தவறாமல் தன்னுயிரை மாய்த்த மன்னர்மன்னவனுக்கு நானும் ஒரு மகன் என்பதை நானிலம் அறிந்துகொள்ளும்படி நான் இறந்துபடவேண்டும்; அம்மையே! என்னை மன்னித்துத் தண்ணளி புரியுங்கள்" என்று இவ்வண்ணம் சொல்லிக்கொண்டே கைகளிலிருந்து நழுவிக் கால் விரைந்து போனான். பரதன் கையகன்று போகவே, ஐயோ! தெய்வமே! என்று கண்ணீர் சொரிந்து இத்தாய் கரைந்து நின்றாள்.

அம் மைந்தன் போனதும், தம்பி பின்தொடர்ந்து சென்றதும், குடிசனங்கள் துடித்ததும், தீயில் பாய நேருங்கால் அனுமான் ஆகாயமார்க்கமாய் வந்து அருள்புரிந்ததும் அவலங்கனிந்த அதிசயங்களாய் விரிவடைந்துள்ளன. பரதன் வரலாறு தனியே வருங்கால் அவை காணவரும்.

இங்கே மறுகிநின்ற கோசலை பின்பு சீதையுடன் இராமன் வரவே கார்கண்ட பயிர்போல் நேர்கண்டு உருகி நெஞ்சங்களித்து நெடிது விழைந்து உரிமையுடன் தழுவி உவந்திருந்தாள். இந்தத் தாயின் சரிதம் காவியத்தில் இவ்வளவோடு முடிவடைகின்றது.

தொகைக் குறிப்பு.

கோசலதேசத்து அரசன் திருமகள்; தசரதனது முதல் மனைவி; கோப்பெருந்தேவி; வீரமூர்த்தியாகிய இராமபிரானைப் பெற்றவள்; பெருமகிமையுடையவள்; பொறுப்பிலும் கற்பிலும் பொறையிலும் சிறந்தவள்; குணநலங்கள் பல நிறைந்தவள்; பரந்த நோக்கமும் விரிந்த மனப்பான்மையும் வாய்ந்தவள்; சக்களத்தியிடத்தும் தகவுடன் நடந்தவள்; தண்ணளிநிறைந்தவள்; தான் பெற்ற பிள்ளையைப் போலவே மற்ற மக்களிடமும் மாறா அன்புடன் மருவி நின்றவள்; எல்லாரும் இன்புற்றிருக்கவே யாண்டும் எண்ணியொழுகிய புண்ணிய நிலையினள் என இதுவரையும் கோசலைத் தாயின் அருமைப் பண்புகளை அறிந்து வந்தோம். இனி, இக்குலவரசி உலகம் உய்ய உதவிய தலைமகனைக் கண்டு நிலைமைகளைத் தெரிந்து நாம் உளம் மகிழ வருகின்றோம்.

**6**-வது கோசலை நிலை முற்றிற்று.

# ஏழாவது அதிகாரம்

## இராமன்

பாற்கடல் என்னப் பரந்தொளிர் கம்பன்
நூற்கடல் படிந்து நுவலரும் இன்பக்
கார்க்கடல் இராமன் கதையின் அமிர்தம்
சூர்க்கடல் கடந்த சுந்தரன் அருளால்
மன்பதை இன்புற மாண்புடன் வழங்கி
அன்பறம் யாவும் அடைகுவம் யாமே.

### இராமன் அவதரித்த நிலை

இந்நிலவுலகில் நிலவிவாழும் சீவகோடிகளுள்இடையிடையே தேவ ஒளிகள் மேவி வருகின்றன. அத்திவ்விய ஒளிகளால் உலகமும் உயிர்களும் அளவிடலரிய பல நலங்களை யடைந்து தலைமையுடன் உயர்ந்து திகழ்கின்றன. வையம் உய்ய வருகின்ற அந்தத் தெய்வச் சோதிகள் அடிக்கடி எளிதில் எழுவனவல்ல; உயிர்களின் பெரும்பேருக அரும்பெறல் நிலையில் அரிதில் எழுகின்றன. களைகளைக் களைந்தொதுக்கிப் பயிர்களை வளர்க்கும் உயர் உழவன்போல மன்பதையைப் பண்படுத்த இறைவனே ஓரோ வழி மனித வுருவில் நேரே நிலமிசை வந்தருளுகின்றான். அந்நிலையில் நமது இராமன் இங்கே வந்திருக்கிறான்.

ஆதிமூலப் பொருளான இப்பெருமான் தீதுமூலங்களைத் தீர்த்து நீதிநலங்களை நிலைநாட்டிச் சாது சனங்களைப் பாதுகாக்க இம் மேதினியில் தோன்றிய திறம் யாரும் விழைந்து நோக்கும் படி விளைவூன்றி யுள்ளது. அவ்விளைவின் மூலம் வியன் மிகவுடையது. அரிய பொருளை அடைதற்கு ஆயத்தங்கள் பல பெருகி எழுந்தன. அப்பெருக்கின் சுருக்கம் அடியில் வருவது.

### தேவர் முறையிட்டது

மண்ணுலகமும் விண்ணுலகமும் புண்ணியநலங்கள் பொலிந்து யாண்டும் இன்ப வளங்கள் சுரந்து இனிது வாழ்ந்துவருங்கால் இடையே அரக்கர் குலதிலகனான இராவணன் அரிய வர பலங்களையடைந்து எல்லா வுலகங்களையும் தன்னடிப்படுத்தி எங்கும் தலைமை அதிபதியாய் நிலவி நின்றான். அளவிடலரிய பெருந்

பெருமையுடன் அருந்திறலும் நிறைந்திருந்தமையால் அகிலமும் வென்று அமரர் முதல் அனைவரும் வணங்கத் தனிமுதல் நிலைமையில் அவன் உயர்ந்து விளங்கினான். பலவகை நலங்களும் படிந்து கலையறிவு சிறந்து தன்னிகரில்லாத் தலைவனாய்த் தழைத்து நின்ற அவனது அரசாட்சி நெடுங்காலம் நிலைத்து வந்தது. வரவே அரக்கர்கள் யாண்டும் செழித்து வளர்ந்தனர். போக போக்கியங்களை ஏகபோகமாக அனுபவித்து இறுமாந்திருந்தனர். செல்வ நிலை தலைமீறி நின்றமையால் அவருடைய உள்ள நிலைகள் பொல்லா வழிகளில் புகுந்து புலைமீறியோடின. புறத்தே பெரும் பொருள்கள் பொங்கி வரவே அகத்தே பரம்பொருளை அறவே மறந்தனர். மடமையும் கொடுமையும் வஞ்சமும் தீமையும் அவர் நெஞ்சில் மண்டி எழுந்தன.

“செல்வம் ஒருவன்பால் சேர்ந்தக்கால் அப்பொழுதே
பொல்லாத நான்கும் பொருந்துமே—கல்லாத
மூடம் உலோபம் முரண்செருக் கம்மம்மா
பிடையெவர் உய்வார் பிழைத்து?”

என்றபடி புல்லிய செல்வப் பிழைகளில் பொங்கி நின்ற அவர் எல்லா வுயிர்களுக்கும் அல்லலிழைத்து வந்தார். அதனால் கொடியவர் தீயவர் பாதகர் என அவர் எள்ளப்பட்டார். உள்ளூற உலகம் இங்ஙனம் அவரை வெறுத்து வந்ததேயன்றி வெளியே யாரும் எதிர்த்து யாதும் செய்ய இயலவில்லை. அவரது கொடுமை நாளும் பெருகி நிமிர்ந்தது. அதிபதியான இராவணனும் மதம் மீறி நின்றான். அவன் புரிந்துவரும் அல்லலை ஆற்றமாட்டாமல் அமரர் பலரும் அலமந்து நொந்தார். முடிவில் சிவபெருமானிடம் போய் முறையிட்டு நின்று அருள் செய்ய வேண்டினார். அப்பெருமான் அவர்க்கு இதமொழி புகன்று இயல்வதை இசைத்தார். “தசமுகன் புரிந்த அருந்தவத்திற்கு மகிழ்ந்து நாம் சிறந்த பதவியை அளித்தோம்; நெடுநாள் இனிது வாழ்ந்து வந்தான்; முடிவில் கெடுமதியாளனாய்க் கொடுமைகள் புரிகின்றான்; ஆயினும் வரம் கொடுத்த யாமே அவனைப் புரந்துடைப்பது நியாயமன்று; பிரமனை அழைத்துக்கொண்டு திருமாலிடம் போய் நிலைமையைச் சொல்லுங்கள்; அவர் உடனே உங்களுக்கு உதவி செய்வார்” என்று உரைத்தருளினான். பரமன் அருளியபடியே இந்திரன் முதலிய இமையவர் யாவரும் பிதா

மகனிடம் சென்றார்; ஒருங்கு கூடினார்; புனிதமான இடத்தை நாடி இமயமலையை யடைந்தார். மணி மண்டபத்தில் அமர்ந்து ஆலோசனைகள் செய்து மணிவண்ணனை மனமுருகி நினைந்தார். உடனே திருமால் அங்கு வந்தருளினார். அவ்வரவு நிலையைக் கவி நன்கு வரைந்து காட்டியிருக்கிறார். காட்சியை அடியில் கண்ணூன்றிக் காணுங்கள்.

இமையவர் நினைந்தது

*இருபது கரந்தலை ஈரைந் தென்னும் அத்*
*திருவிலி வலிக்கொரு செயலின்று எங்களால்*
*கருமுகில் எனவளர் கருணை யங்கடல்*
*பொருதிடர் தணிக்கின்உண் டெனும்புணர்ப்பினார். (1)*

இறைஞ்சி நின்றது

*திரைகெழு பயோததி துயிலும் தெய்வவான்*
*மரகத மலையினை வழுத்தி நெஞ்சினால்*
*கரகம லங்குவித் திருந்த காலையில்*
*பரகதி யுணர்ந்தவர்க்கு உதவு பண்ணவன். (2)*

திருமால் வந்தது

*கருமுகில் தாமரைக் காடு பூத்துநீடு*
*இருசுடர் இருபுறத்து ஏந்தி ஏடவிழ்*
*திருவொடும் பொலியஓர் செம்பொற் குன்றின்மேல்*
*வருவபோல் கலுழன்மேல் வந்து தோன்றினான். (3)*

(திருவவதாரப் படலம், 10-12)

இந்தப் பாடல்கள் மூன்றும் ஊன்றி நோக்கத்தக்கன. காவிய நாயகன் தோன்றுதற்கு மூலவித்து இங்கே விதைக்கப் பட்டுள்ளது. தேவர்கள் திரண்டதும், சிந்தனை புரிந்ததும், தேவதேவன் வந்ததும் ஈண்டு ஓர் வித்தகக் காட்சியாய் விளங்கி நிற்கின்றது.

இலங்கேசன் எனப் பெயர் பெற்று எங்கும் ஏகசக்கராதிபதியாய் விளங்கி நிற்கும் பெருந்திருவாளனை இராவணனைத் திருவிலி என்றது பொருளினுரையாய்ப் புறந்தோன்றி அமரர்களுடைய வெகுளி நிலையை வெளிப்படுத்தியுள்ளது.

புறத்தே செல்வ நிலையில் சிறந்திருந்தாலும் அகத்தே ஆன்ம நிலையில் வறியனாய் அவ புற்றிருத்தலால் “திருவிலி” என இகழ

நின்றான். மெய்த் திருவாகிய முத்தித்திருவை இழந்து மோசம் போயுள்ளான் என்பதாம். திருவினை அடக்கத் திருவுடையானை அறிவுடையார் வேண்டினார் என்க.

அவனுடைய அடாத செயல்களால் அமரர்கள் படாதபாடுகள் பட்டுச் சகல உரிமைகளையும் இழந்து அபலைகளாய் மெலிவடைந்துள்ளமையால், "எங்களால் ஒரு செயல் இன்று" எனத் தம் இயல்பை இரக்கந்தோன்ற உணர்த்தி நின்றார். இராட்சச ஆட்சி நாசமடையவேண்டும் என்று வருந்தி வேண்டியிருத்தலால் அவரது வயிற்றெரிச்சல் நிலை தெரியலாகும்.

"கருமுகில் என வளர் கருணையங் கடல்"

என்றது பரமனது உருவையும் உள்ளத்தையும் ஒருங்கே கருதி. அமரர் அகத்தே உருகி நின்றமை புறத்தே உணர வந்தது. கடல் என்றதனால் எல்லையற்ற பேரருளுடையவன் என்பது புலனும். கருணையம் என்பதில் பொருள் நயம் தெரிக.

2. பயோததி என்றது பாற்கடலை. பயம்=பால். உததி =கடல். கருணையங்கடல் எனவும், மரகதமலை எனவும் அவர் உளம் உவந்து நினைந்ததனால் அவனது அருள் நீர்மையும் அழகும் இன்பமும் அருமையும் பெருமையும் உணர வந்தன. கடல் மலைகளுக்குக் கொடுத்த அடைமொழிகள் உடல் உளங்களை உணர்த்திப் பொருளின் உயர்வு தோன்ற நின்றன.

3. ஒரு காளமேகம் செந்தாமரை மலர்கள் பல பூத்து, சூரியனையும் சந்திரனையும் இருபுறங்களில் ஏந்தி, மின்னலைத் தழுவி, இன்னொளிவீசிப் பொன்மலைமேல் வந்ததுபோல் திருமால் வந்தருளினார் என்பதாம்.

அருவமான பரமன் அன்பர் கருத்திற்கு இரங்கி உருவங் கொண்டு வந்தான்; அந்நிலையை உலகந் தெரிந்த பொருள்களால் அதிசய நிலையில் உவகை மலிய இங்ஙனம் உருவகஞ் செய்தருளினார். அவன் அன்று கொண்ட வடிவை அவனி என்றும் கண்டு மகிழக் கவி இங்கே கவினுற எழுதி நன்று காட்டியிருக்கிறார்.

பருவ காலத்து மேகம் நீர் சுரந்து நின்றதுபோல் மால் அருள் சுரந்து வந்தமையால் கருமுகில் என்றார். தாமரைக்காடு என்றது கண் வாய் கை கால் முதலிய அவயவங்களை. அன்று

அலர்ந்த மலர்போல் கண்கள் முதலியன நன்கு துலங்கி ஒளி தவழ்ந்து எழில் கனிந்துஇனிதிருந்தன என்பார் பூத்து என்றார்.

இருசுடர் என்றது சந்திரனையும் சூரியனையும். சங்கையும் சக்கரத்தையும் முறையே இவை குறித்து நின்றன.

திரு என்றது இலட்சுமியை. ஏடு=பூவிதழ். தாமரை மலர் திருமகள் உறையும் இடமாதலால் "ஏடவிழ் திரு" என வந்தது.

செம்பொற் குன்று என்றது கருடனை. கருமுகில் கனகக் குன்றில் மருவி வருதலை உருவகித்தது ஊர்வானோடு ஊர்தியின் உருவக் காட்சியும் உடனுணர நின்றது. "பொன்மலை மேல் எழுந்த மாமுகில் போன்றுளர் வந்து காணீர், அஞ்சிறைப் புள்ளும் ஒன்று ஏறி வந்தார்" (பெரியதிருமொழி) என்பதும் காண்க.

வலக் கரத்தில் சக்கரமும், இடக்கையில் சங்கமும் தங்கியிருந்தன. முன்னது சிவந்த நிறமுடையது; பின்னது வெண்ணிறம் ஆதலால் இவற்றின் வண்ணங்கள் கதிர்மதிகளோடு எதிர் எண்ண வந்தன.

"வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங்கு ஓங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக் கொடி உடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங்கு ஆழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்."
(சிலப்பதிகாரம், 11)

வேங்கடமலையில் எழுந்தருளியுள்ள நெடிய செங்கண்மாலை இளங்கோவடிகள் இங்ஙனம் வருணித்திருக்கிறார். இதனையும் நம் கவியையும் இணைத்துநோக்கி இயைபு தெரிக. இருசுடர் ஏந்தி என்ற அந்தச் சொல்லும் பொருளும் இதன்கண் விரிபொருளுடையனவாய் விளங்கியுள்ளன. இருபெருங்கவிகளுடைய உருவகங்களையும் உரைகளையும் ஊன்றி உணர்ந்தால் உளநிலை புலனும்.

தன் அருமைத் திருமனைவியை என்றும் அகலாதிருப்பவன் ஆதலால் திருவொடு திகழ்ந்து வந்தான். மேகத்துள் மின்னல் போல் அவன் ஆகத்துள் திரு தோய்ந்திருந்தாள் என்பதாம். ஆகவே இருசுடர் முதலியன அயலகல நேரினும் யாண்டும் அகலா துறையும் உயருரிமையின் இயல்புணர நின்றது.

மின்னலுக்கும் மேகத்திற்கும் என்ன தொடர்புண்டோ அன்னதொடர்பு திருவுக்கும் மாலுக்கும் என்பதாம். இருவருடைய எழிலும் ஒளியும் இயல்பும் நிலையும் இதனால் அறியலாகும்.

அடியவர்க்கு அருளவரினும், கொடியவரைத் தொலைக்க ஏகினும் இக்கொடியை விட்டகலாமல் கூடவே கொண்டு வருவான் என்பது குறித்துணர வந்தது. திருவினிடம் இவ்வாறு பெருமால் கொண்டுள்ளமையினாலேதான் திருமால் என நின்றான்.

“கருமுகில் போல்வதுஓர் மேனி, கையன ஆழியும் சங்கும்,
பெருவிறல் வானவர் சூழ ஏழுலகுந்தொழு தேத்த
ஒருமகள் ஆயர்மடந்தை ஒருத்தி நிலமகள் மற்றைத்
திருமகளோடும் வருவான் சித்திரகூடத் துள்ளானே.”
(பெரிய திருமொழி, 3-3)

எனத் திருமங்கையாழ்வார் அருளியுள்ளதும் ஈண்டு அறியவுரியது. உரிமைகளுடன் இங்ஙனம் உவந்து எழுந்தருளினான்.

இப்பொழுது கையுடன் வந்தன யாவும் இனிவரும் அவதாரத்துக்கு மெய்யுடன் இணைந்து நிற்பன; கருடன் மாத்திரம் பிரிந்துபோய்ப் பின்பு நாகபாசத்தில் வந்து சேருகின்றான்.

முகில் திரு சக்கரம் சங்கு அரவம் முறையே இராமன் சீதை பரதன் சத்துருக்கன் இலக்குவன் என எழுகின்றன.

வானவர் வேண்டவே கரும நிகழ்ச்சிக்கு வேண்டிய காரியக் கூட்டத்துடன் முதல்வன் நேரே வந்தருளினான் என்க.

பகவானைக் கண்டவுடனே தேவர்கள்கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை. அவர் உள்ளம் உவந்து துள்ளிய நிலைகளை உடலின் செயல்கள் உணர்த்தி நின்றன.

அமரர் உவந்தது

“ஆடினர் பாடினர் அங்கும் இங்குமா
ஓடினர் உவகைமா நறவுண்டு ஓர்கிலார்
வீடினர் அரக்கர் என் றுவக்கும் விம்மலால்
சூடினர் முறைமுறை துளவத் தாள்மலர். (1)

அரி அமர்ந்தது

பொன்வரை இழிவதோர் புயலின் பொற்புற
என்னையா ளுடையவன் தோள்நின்று எம்பிரான்
சென்னிவான் தடவுமண் டபத்துச் சேர்ந்தரி
துன்னுபொற் பீடமேல் பொலிந்து தோன்றினன். (2)

அயல் இருந்தது

விதியொடு முனிவரும் விண்ணு ளோர்களும்
மதிவளர் சடைமுடி மழுவ லாளனும்
அதிசய முடனுவந்து அய லிருந்துழி
கொதிகொள்வேல் அரக்கர்தம் கொடுமை கூறினர்: (3)

துயர் மொழிந்தது

ஐயிரு தலையினோன் அனுச ராதியாம்
மெய்வலி அரக்கரால் விண்ணும் மண்ணுமே
செய்தவம் இழந்தன திருவின் நாயக
உய்திறம் இல்லையென் றுயிர்ப்பு வீங்கினர், (4)

(திருவவதாரப்படலம், 15-18)

திருமால் வந்ததும், தேவர்கள் மகிழ்ந்ததும், அப்பெருமாள் கருடவாகனத்திலிருந்து இறங்கிச் செம்பொன் மணிமண்டபத்துள் புகுந்ததும், அங்கே அரியாசனத்தில் அமர்ந்ததும், அரனும் அயனும் அயலமைந்திருந்ததும், அமரர் தங்கள் குறைகளை உரைசெய்து முறையிட்டு நின்றதும் இங்கே நாம் கண்டு மகிழ்கின்றோம்

பருவமழை பெய்யவந்த ஒரு இனிய கார்மேகம் பொன் மலையிலிருந்து இறங்கினதுபோல் கருடனைவிட்டு அரி இறங்கினன் என்பார் "புயல் பொன்வரை இழிவது ஓர் பொற்பு" என்றார். செம்பொற் குன்றில் கருமுகில் வந்ததென முன்னம் குறித்தார் ஆதலால் அதற்கியைய இன்ன வண்ணம் இறக்கியருளினர். பொற்பு=அழகு. புதுமையான ஒரு அதிசய எழில் என்பது ஓர் என்றதனல் உணரவந்தது.

என்னை ஆளுடையவன் என்று கருடனை இங்கே ஏத்தியிருக்கிறார். கருதிய பரமனை விரைவுடன் கொணர்ந்த உதவியை நினைந்து உவந்து கூறிய படியிது. மாலின் ஏவலாளரிடமும்

ஆவல்மீதூர்ந்து வழிபாடு புரிந்து மரியாதை செய்துள்ளமையால் பரமபத்தியின் பரிபக்குவநிலை வெளிப்பட்டு நின்றது.

4. தலைவன் எதிர் நின்று தம் நிலைமையை நேரே நெஞ்சுருக உரைத்திருக்கிறார். உரைகள் உறுதி சூழ்ந்துள்ளன.

ஐயிரு தலையினோன் என்றது இராவணனை. அனுசர்=தம்பியர். என்றது கும்பகருணன், கரன் முதலானவர்களை. அரக்கர் பலர் அல்லல் இழைத்து வந்தாலும் அவர் எல்லார்க்கும் தலைவனு யுள்ளவனை முதன்மையுறக் காட்டினார். இராவணனுடைய ஆட்சித்திறத்தினாலேயே நிருதரெல்லாரும் நிலைமீறி நின்றுள்ளமையால் அந்நிலைமை தெரிய வுரைத்தார்.

மக்களும் தேவரும் செய்யத்தக்க நல்வினைகளையெல்லாம் சேர இழந்து பேரிட ரடைந்துள்ளனர் என்பார், "விண்ணும் மண்ணுமே செய்தவம் இழந்தன" என்றார். பூவுலகமும் புத்தேளுலகமும் பாவ இருள் படர்ந்து படருழந் என்பதாம். தங்களை முன்னிலைப்படுத்தி நேரே தனித்துச்சொல்லாமல் எல்லா உயிர்களையும் இணைத்துச் சொன்னது பரந்த நோக்கமுடைமை தெரிந்து பரந்தாமன் விரைந்து இரங்கியருள என்க. பிறர் நலமுறக் கருதமேல உயர்நிலை என்பது உணரவந்தது.

தவமும் தருமமும் இறைவனுக்கு உவகை விளைப்பன ஆதலால் அவற்றிற்கு இழவு நேர்ந்ததை உளம் அறிய வுணர்த்தினார்.

திருவுள்ளம் விரைவாக இரங்கியருளும்படி பரிபவ நிலைகளை விரகுடன் விளக்கி விநயமொழிகள் பகர்ந்தார்.

திருவின் நாயக! என்றது திருவிலிகளான தீயவர் செய்து வரும் அல்லல்களையெல்லாம் அடியோடு நீக்கவல்ல ஊனும் உரிமையும் தெரிய வந்தது.

தேவரீர் விரைந்து பாதுகாத்தாலன்றி நாங்கள் சுகமாக இனிமேல் உயிர்வாழ முடியாது என்பார் "உய்திறம் இல்லை" என்றார். காப்புத் தெய்வமாகிய நீயே எங்களுக்குப் புகலிடம்; வேறு அயலிடம் இல்லை என்பதாம்.

குறையிரந்து கூறி முறைபாடுகள் செய்து பெருமூச்செறிந்து பேதுற்று நின்றார் ஆதலால் "உயிர்ப்பு வீங்கினர்"

என்றார். இரக்கமில் அரக்கரால் தாம் எய்தியுள்ள இடர் நிலைகளை ஆண்டவன் பரிந்து தெரிந்து இரங்கி யருளும்படி இமையவர் இவ்வாறு ஒருங்கு திரண்டு ஓலமிட்டு நின்றார்.

## திருமால் அருள் புரிந்தது

இவ்வுரைகளைக் கேட்டதும் அமரரை அன்புடன் நோக்கி அஞ்சனவண்ணன் அஞ்சலென்றருளி ஆறுதல் கூறினான். "உங்களுக்கு அல்லல்புரிகின்றவர்களை அடியோடு தொலைத்து நல்லன செய்வேன்; அதன் பொருட்டு நிலவுலகில் தலைமை யதிபதியாய் நிலவியுள்ள தசரதனுக்கு நான் மகனாய் வந்து தோன்றுவேன்; திருமகளும் சனகன் மகளாய்த் திகழுவள்; அரவும் திகிரியும் வளையும் எனக்குத் தம்பியர்களாய் உடன் வந்தருளும்; உங்களுள் தலைமையான பலரும் துணைவரவேண்டும் ஆதலால் எனக்கு முன்னதாகவே நீங்கள் உலகில் போய் வானரங்களாய் உதித்திருங்கள்; நான் வந்து சேருகிறேன்; நீவிர் யாதும் சிந்தை தளராமல் சென்றருளுங்கள்" என இந்தவாறு இசைத்தருளினான்.

மாயவன் உரைத்த இவ்வருள் மொழிகள் தேவர்களுக்குப் பேரின்பமா யிருந்தன. பெருமகிழ்ச்சி யடைந்தனர். "அருளிய படியே அவனியில் போய் வானரங்களா யிருக்கின்றோம்; வந்தருளுக" என்று வாழ்த்தி நின்றார். திருமால் அனைவரையும் ஆர்வமுடன் நோக்கி அருள்புரிந்துவிட்டு அகன்று போயினார். போகவே அமரர்கள் அனைவரும் தமருடன் உவந்து தனித்தனியே சனித்தருள நுனித்துணர்ந்து நுவலலாயினார். அன்று அவர் சொன்னபடியை அடியில் பார்க்க.

### பிரமன் உரைத்தது

"என்னையா ளுடைய ஐயன் கலுழன்மீ தெழுந்து போய
பின்னர் வானவரை நோக்கிப் பிதாமகன் பேசுகின்றான் :
முன்னரே எண்கின் வேந்தன் யான்என மொழிகின்றான் மற்று
அன்னவாறு எவரும் நீர்போய் அவதரித் திடுமின் என்றான்.

### இந்திரன் முதலினோர் இசைத்து நின்றது

தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவான் எனது கூறு
மருவலர்க்கு அசனியன்ன வாலியும் மகனும் என்ன ;
இரவிமற்று எனது கூறங் கவற்கினை யவன்என் றோத,
அரியும்மற் றெனது கூறு நீலன்என் றறைந்திட் டானல்.

வாயுமற் றெனது கூறு மாருதி எனலும் மற்றோர்
காயுமற் கடங்க ளாகிக் காசினி யதனின் மீது
போயிடத் துணிந்தோம் என்றார்; புராரிமற்று யானே வாத
சேயெனப் புகன்றான் மற்றைத் திசையுளோர்க் கவதியுண்டோ?

அருள்தரு கமலக் கண்ணன் அருள்முறை அலரு ளோனும்
இருள்தரு மிடற்றி னோனும் அமரரும் இனையராகி
மருள்தரு வனத்தில் மண்ணில் வானர ராகி வந்தார்
பொருள்தரும் இறைவர் தத்தம் உறைவிடம் சென்று புக்கார்."

(திருவவதாரப்படலம், 26-29)

இராமாவதாரத்துக்குத் துணைகளாகத் தேவர்கள் இந்நில வுலகத்தில் வந்து பல உருவங்களாய்ப் பிறந்திருக்க முந்துற முடிவு செய்துள்ளமை இவற்றால் அறியலாகும்.

பிரமன் சாம்புவன் ஆகவும், இந்திரன் வாலியாகவும், சூரியன் சுக்கிரீவன் ஆகவும், அக்கினி நீலன் ஆகவும், வாயு அனுமான் ஆகவும், மற்றைத் தேவர்களெல்லாரும் ஒருங்கே குரங்குகளாகவும் உள்ளந்துணிந்து உதிக்க நேர்ந்தனர்.

அமரர்களை நோக்கி முதலில் பிரமாவே உறுதி செய்தார் ஆதலால் "எண்கின் வேந்தன் யான் என முன்னரே மொழிகின்றான்" என்றார். பிதாமகன்=பிரமன். எண்கு=கரடி. சாம்புவன் கரடிகளுக்குத் தலைவன் ஆகலான் "எண்கின் வேந்தன்" என நின்றான்.

தருவுடைக் கடவுள் வேந்தன் என்றது இந்திரனை. கற்பக தருக்களை யுடையவன் என்பதாம். அரி=அக்கினி தேவன்.

இங்ஙனம் எல்லாரும் சொல்லி முடித்தபின் முடிவில் கண்ணுதல் பரமனும், "என்னுடைய அமிசம் வாயு குமாரனாகிய அனுமனிடம் மன்னியிருக்கும்" என்று இன்னருள் புரிந்தார்.

திரிபுரத்தை எரித்து அழித்தவன் ஆதலால் புராரி என நின்றான். சிவபெருமானுக்கு உரிய வேறு பெயர்களுள் ஒன்றையும் கூறாது இந்தப் பெயரை இங்கே குறித்தது உக்கிர வீர மூர்த்தியாய் உறுதி பூண்டு நின்ற பருவ நிலை தெரிய என்க. நெற்றித் தீயால் நிருதர் புரத்தை எரித்த நீர்மையே கொற்ற அனுமன்பால் கூடியிருந்த தென்பதாம். ஆகவே ஊரில் தீவைக்கும் பேர்வழி என்பது உணர நின்றது. பின்பு நிகழவிருக்கும் இலங்காதகனத்துக்கு இங்கேயே அடிகோலி வைத்த படியிது.

அனுமானிடம் அமைந்துள்ள அரியவேகம், அருங்கலைவிநோதம், பெருந் தகைமை, பேராற்றல், போர்வீரம், யாரும் நேராற்ற முடியாத நெஞ்சுறுதி, சொல்வன்மை முதலிய அற்புத நிலைகளுக்கெல்லாம் மூலகாரணங்கள் மூன்னுற ஈண்டு அறிய நின்றன.

தேவர்களும் தேவதேவர்களும் ஒருங்கே திரண்டு உறுதி சூழ்ந்து பரம ரகசியமாய் அயல் மறைந்து செயல்வரைந்து உயர் வீரர்களாய் நிலமிசை வந்தமையால் எதிரியினுடைய அதியுன்னதமான மகிமையும் மாட்சியும் நன்கு புலனாயின.

இராவணன் எதிரே இமையவரெவரும் தலைநீட்ட முடியாது ஆதலால் தலைமைத் தேவர்களே இங்ஙனம் துணிந் தெழுந்து தொடர்ந்து வரலாயினர்.

அவரும் நேரே வாராமல் மாறுவேடங் கொண்டு மறைவாய் வந்தது என்னை? எனின், அதன் மருமம் ஆராயவேண்டும்.

## மனிதரும் குரங்குமாய் மருவிய காரணம்

இராவணன் அருந்தவம் புரிந்து பிரமனிடம் பலன் பெறும் பொழுது அமரர் விஞ்சையர் கந்தருவர் அசுரர் அரக்கர் முதலிய பெருவலியாளரெவராலும் தனக்கு யாதொரு இடையூறும் நேராதபடி உறுதி சூழ்ந்து உயர் வரம் வேண்டினன். அங்ஙனம் வேண்டுங்கால் மனித இனத்தை அவன் ஒரு பொருளாக மதிக்க வில்லை. "இந்தச் சின்னமனிதர் நம்மை என்ன செய்யமுடியும்" என்று இகழ்ச்சியாய் இளித்துவிட்டிருந்தான். அவ்விடுதியை நெடிது தெரிந்திருந்தமையால் வானவர்தலைவர் மானவராய் ஈண்டு மருவி வரலாயினர். ஆயின் குரங்குகளாய் வந்தது ஏன்? எனின், நந்திதேவரது சாபத்தின் நயந்தெரிந்து என்க. என்னை சாபம்? எனின், பின்னே காண்க.

அகில உலகங்களிலும் தன் ஆணையைச் செலுத்தி இராவணன் அரசுபுரிந்து வருங்கால் ஒரு நாள் திவ்விய விமானமூர்ந்து தேவருலகுக்குச் சென்றான். சென்று மீளுங்கால் இமயமலை மேல் நேரே வந்தான். வரவே அங்குக் காவலாய் நின்ற நந்தி தேவர் அவனைக் கடுத்து நோக்கி, "உலகமெல்லாம் உய்யும்படி எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருமலை என்பதை அறியாமல் ஒரு பயமுமின்றி மேலே உலாவுகின்றனையே! உன்

நிலைமை என்னும்?" என்று நேரே கேட்டார். அதற்கு அவன் எதிர்த்து நின்று "உன் பரமன் வெறும் ஈசன்; நான் இலங் கேசன்; என் தரம் தெரியாமல் புலம்புகின்றாயே குரங்கு மூஞ்சியே!" என்று சினந்து கூறினன். கூறவே நந்தி சீறி நின்று "என்னைக் குரங்கு என இகழ்ந்தாய் ஆதலால் உன் குல மும் அரசும் குரங்கால் அழியும்" என்று கொதித்துச் சபித்தார்.

நந்தி சபித்தது

"எம்பிரான் இருக்கும் இடமென அறிந்தும்
  எண்ணம் ஒன்றின்றியே செருக்கி
உம்பர்மீ துலாவ வந்தனை என்னை
  உருத்துநீ குரங்கென இகழ்ந்தாய்!
அம்புவி யதனில் குரங்கினல் உன்றன்
  அணிநக ரழிந்திடும்; அரசும்
பம்புதீப் பட்ட பதரெனப் பாழாம்;
  பழிவளர் துயருடன் படுவாய்!"

என்று இவ்வாறு கொடிய சாபம் கொடுத்திருந்தார் ஆதலால் அமரர்கள் குரங்குகளாய் உருவெடுத்து வந்தனர் என்க.

யாரும் பெறுதற்கரிய சிறந்த திருவுடன் உயர்ந்திருந்தும் செருக்கு மீதூர்ந்து யாண்டும் தீங்கூக்கி நின்றமையால் அரக்காதி பதிக்கு அழிவு சூழ்ந்து அமராதிபதிகள் இங்ஙனம் அவனியில் தோன்றினர். இதுவரை கூறிய வாற்றால் திருமால் இராமனாய் அவதரித்தற்கு ஏதுவும் இனமும் தெரியவந்தன.

பிறந்த நிலை

பெரிய போர்வீரனை வெல்லவேண்டியிருத்தலால் அதற் குரிய வீரமான உயர்ந்த அரசகுலத்தில் இராமன் தோன்ற நேர்ந்தான். கரும நிலைக்கு உரிமையான உயர் மாபை ஓர்ந்து சூழ்ந்தான்.

தருமம் தலைசாயாமல் நிலை நிறுத்தி நல்லோரைப் பாதுகாக் கும் பொருட்டுத் தகுந்த ஆயத்தங்களுடன் திருமால் அவதரிக்க எண்ணியபொழுது இந்நிலவுலகில் புண்ணிய சீலனைத் தசரத மன்னன் புகழோங்கி நின்றான். அவன் நெடுங்காலம் புத்திரப் பேறின்றி வருந்தியிருந்து முடிவில் அரிய வேள்வி ஒன்று செய் தான். அந்தப் பரிபக்குவ நிலையை அறிந்து அம்மன்னர்பிரா

னுக்கு மகனாய் மால் வந்து பிறந்தான். அவனுடைய கோப் பெருந் தேவியாகிய கோசலை வயிற்றிலிருந்து இக்குமரன் பிறந்த பொழுது உலகம் எங்கணும் உவகை நலங்கள் ஓங்கி எழுந்தன. சித்தரும் இயக்கரும் சித்தம் களித்தனர். விண்ணுளோர்களும் மண்ணுளோர்களும் எண்ணிடலரிய இன்பங்களுடையராய் யாண்டும் எழுந்து துள்ளினர். அறநலங்களெல்லாம் மிக மகிழ்ந்து நின்றன. தவமும் சீலமும் தனி நடம் புரிந்தன. வீரமும் நீதியும் வீறுகொண்டெழுந்தன. சிலைவேதம் தலைநிமிர்ந்தொலித்தது; கலைகள் பலவும் கவித்து உயர்ந்தன. கொடை அருள் முதலிய உயர்நிலைகள் யாவும் ஒளிமிகுந்து வந்தன.

இங்ஙனம் எங்கும் இன்ப நலங்கள் பொங்கி மிளிர இங்கே இராமன் அவதரித்தான். திருமால் இவ்வாறு ஒரு மகனாய் வரவே அவனது ஆழியும் சங்கமும் பாயலும் அடுத்துத் தோன்றின. பரதனைக் கைகேசி பெற்றாள்; இலக்குவனும் சத்துருக்கனும் சுமித்திரையிடம் பிறந்தனர்.

இந்தப் பிள்ளைகளைக் கண்டு சக்கரவர்த்தி பேரானந்தம் அடைந்தான். அளவிடலரிய தான தருமங்களை உளமகிழ்ந்து புரிந்தான். தேச முழுவதும் மகிழ்ச்சியும் கிளர்ச்சியும் மங்கல வாழ்த்துகளும் பொங்கி எழுந்தன.

சோதிடக் கலையில் தலைசிறந்துள்ள கணித நூற்புலவர் பிறந்த மக்களின் சாதகங்களைக் கணித்து அரசன் எதிர் ஓதி அரிய பரிசில்கள் பெற்று அகமிகமகிழ்ந்தனர். இராமன் பிறந்த மாதம் திதி நாள் இலக்கினம் முதலியவற்றைக் குறித்துள்ள கவி அடியில் வருகின்றது.

கோள்களின் நிலை

"மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுறு மாலைகர்க் கடகம் நீதிசேர்
ஓடைமா களிறனன் உதய ராசிகோள்
நாடின் ஏகாதசர் நால்வர் உச்சரே." (திருவவதாரம், 110)

இராமன் உதித்த பொழுது கோள்கள் கதித்து நின்ற நிலைகளை இது குறித்து நிற்கின்றது. சுபானு வருடம், சித்திரை மாதம், புதன்கிழமை, பூருவபக்கர்நவமி, புனர்பூச நட்சத்திரம்,

கர்க்கடக லக்கனத்தில் சுக்கிர ஓரையில் இராமன் பிறந்தான்; அப்பொழுது ஐந்து கிரகங்கள் உச்சமாயிருந்தன என்பதாம்.

மதி=மாதம். மீன்=நட்சத்திரம். கழை=புனர்பூசம்.

## சோதிடம்

காலம் ஓரளவுக்கும் உட்படாமல் எல்லையற்றுள்ளது. அதனை மனித வாழ்க்கைக்கு இனிது பயன்படும்படி சில வரையறைகளை ஏற்படுத்தி மேலோர்கள் வரம்பு செய்து வைத்துள்ளார். அதன் அளவுக்கு மூலகாரணமாயுள்ளது சூரியன். அவன் வெளிப்பட்டு நிற்பது பகல்; மறைந்திருப்பது இரவு. பகல் முப்பது நாழிகையுடையது; இரவும் அப்படியே. ஆகவே பகலும் இரவும் அறுபது நாழிகையாய் அமையப்பெற்றன. இது ஒரு நாள். இப்படி முப்பது நாள் கூடின் ஒரு மாதம். அம் மாதம் பன்னிரண்டாயின் ஒருவருடமாம். இவ்வாறு காலத்தைக் கணித்தற்கு மூலமுதலாயுள்ள சூரியனை முதன்மையாக வைத்து ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி என ஏழு பேர்களை ஏற்படுத்தினர். இந்த ஏழும் கோள்கள் எனப்படும். இவையே ஆதியில் அமைந்தன. பிற்காலத்தில் இராகு கேது என்னும் இரண்டையும் சேர்த்து ஒன்பதாக எண்ணினர். இவை நவக்கிரகங்கள் என நின்றன. இந்தக் கிரகங்கள் உலாவி வருதற்குப் பன்னிரண்டு நிலைகள் உள்ளன. அவை, மேடம் இடபம் மிதுனம் கடகம் சிங்கம் கன்னி துலாம் விருச்சிகம் தனுசு மகரம் கும்பம் மீனம் என்று சொல்லப்படும். இவற்றை இராசி மண்டலம் என்பர். சூரியன் முதலிய ஒன்பது கோள்களும் இந்தப் பன்னிரண்டு இராசிகளிலும் முறையே சஞ்சரித்துவரும். ஒவ்வொரு இராசியிலும் இன்னகோள் இவ்வளவு காலம் தான் இருக்கலாம் என வரம்புண்டு. சூரியனுக்கு ஒருமாதம், சந்திரனுக்கு இரண்டையகால் நாள், செவ்வாய்க்கு ஒன்றரை மாதம், புதனுக்கு ஒரு மாதம், வியாழனுக்கு ஒரு வருடம், வெள்ளிக்கு ஒரு மாதம், சனிக்கு இரண்டரை வருடம், இராகுவுக்கு ஒன்றரை வருடம், கேதுவுக்கு ஒன்றரை வருடம் உரிமையாம்.

சித்திரை மாதம் முப்பது நாளும் சூரியன் மேடத்தில் இருப்பன். வைகாசியில் இடபம் புகுவன். அவ்வாறே பன்

னிரு மாதமும் பன்னிரண்டு இராசிகளில் முறையே சுற்றி வருவன். இது தலைமைக்கோள் ஆதலால் அதன் நிலைமை யாண்டும் முதன்மையாகப் போற்றப்பட்டுள்ளது.

இராமன் பிறந்தது சித்திரைமாதத்தில் ஆதலால், "மதி மேடம்" என்றார். ஏகாதசர் நால்வர் என்றது சன்மலக்கினமாகிய கடகத்திற்குப் பதினோராம் இடமும், அதற்குப் பதினொன்றும், அவ்வாறே வழி முறையேயுள்ள இடங்களுக்கும் உரியவரை. அவராவார் சுக்கிரன் வியாழன் சனி செவ்வாய் என்க. அடியில் அமைத்துள்ள சக்கரத்தில் கிரகநிலைகளைத் தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம்.

இராமன் சாதகம்

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | கேது |
| | நவக்கிரக நிலை | | லக்கினம் வியாழன் சந்திரன் |
| செவ்வாய் | | | |
| ராகு | | சனி | |

ஆட்சி உச்சம் பகை நட்பு நீசம் என ஐவகை நிலைகள் இப் பன்னிரண்டிடங்களில் கிரகங்களுக்கு அமைந்திருக்கின்றன.

மேடம் சூரியனுக்கும், இடபம் சந்திரனுக்கும், மகரம் செவ்வாய்க்கும், கன்னி புதனுக்கும், கடகம் வியாழனுக்கும், மீனம் சுக்கிரனுக்கும், துலாம் சனிக்கும் முறையே உச்ச வீடுகளாம்.

"மேடம் இடபம் கலைபெண் கடகம்
மீனம் தூக்கு மித்திரன் முதற்சனி
உச்ச மாகி உறையும் என்ப."

என்றதனால் கோள்களின் உச்சநிலைகளை உணர்ந்துகொள்ளலாம். ஒரு கிரகம் உச்சமாயிருந்தால் அது அந்தச்சாதகனுக்கு

உயர்ந்த பலனை உதவ வல்லதாம். இங்கே ஐந்து கிரகங்கள் உச்சமாயிருக்கின்றன. வால்மீகி முனிவரும் பஞ்சக் கிரகங்கள் உச்சமாய் நின்றன என்று அருளியிருக்கிறார்.

உலகம் முழுவதும் தரும நிலையமாகத் தனிச் செங்கோல் செலுத்தும் மனுச் சக்கரவர்த்தியாய் இச்சாதகன் மருவி யிருப்பன் என்பதைக் கோள்நிலைகள் இங்கே அறிவுறுத்தியிருக்கின்றன.

ஒரு மனிதன் பிறந்த சமயம் அமைந்திருந்த கிரகநிலைகளைக் கொண்டு அவன் வாழ்நாள் நிலைமையைத் தெளிவாக அறிய முடியுமா? என்று சிலர் ஐயமுறலாம். உண்மையை உணராத இடத்தில் உள்ளம் மலைந்து மறுகி இகழ்ந்துழலுதல் இயல்பேயாகும்.

கணித நூற்கலை கடல்போல் விரிந்து பரந்துள்ளது. மிகவும் நுணுகி உணரத்தக்கது. தெய்வீக நிலையது. இக்கலை இந்நாட்டில் முன்னாள் மிகவும் தலைசிறந்திருந்தது; இந்நாள் நிலைகுலைந்துள்ளது. சீலமுடையராய் நின்று கால நிலைகளைக் கருத்தூன்றி ஆராய்ந்த மேலோர்கள் எதிர்கால பலன்களை யாரும் வியக்கும் படி எளிதே வெளிப்படுத்தி விடுகின்றனர். அவர் எவர் நிலைமையையும் உணர்ந்துரைக்கும் வல்லுநராய் ஒளிமிகுந்துள்ளனர்.

"போதிட மாகிய வேதியன் ஆதி புராதனன் மால்முதலோர்
ஈதிட மாய்வரு வாரெனில் யாதும் விடாதியல் பாகநவில்
சோதிட மேதிட மாக நடாவு குமார சுவாமியம் யான்
ஓதிடவே என தோரகம் வாழ்பவன் யானை சகோதரனே."

என்று குமாரசுவாமியம் என்னும் நூலாசிரியர் கூறியுள்ள இக்காப்புச் செய்யுளில் மாலாதியர் இங்கு வந்து பிறக்க நேரின் அவர் நிலைமையையும் வழுவாது உரைக்கவல்லது சோதிடம் என உணர்த்தி யிருக்கிறார். இராமனது அவதாரத்தை நினைந்து சொன்னதுபோல் இது நினைக்கவுள்ளது.

## பிள்ளைப்பருவம்

கருவிலே திருவுடையனாய் இங்ஙனம் பிறந்த மகன் சிறந்த நிலையில் வளர்ந்து வந்தான். நல்ல ஓரையில் பெயரிட்டுச் சவுளம் உபநயநம் முதலிய பிள்ளைமைச் சடங்குகளெல்லாம் முறையேசெய்து அரசன் பெருமகிழ்ச்சி யடைந்திருந்தான். பிள்ளைகள்

தோன்றிய ஆனந்தத்தினால் உள்ளங் களித்து எல்லையில்லாத தான தருமங்களை எங்கணும் புரிந்தான். சிறையி லிருந்தவர் களை வெளியில் விடுத்தான். குடிகளிடமிருந்து வாங்கும் வரிகளை ஏழு வருடம் தொடர்ந்து நிறுத்தினான். எல்லாரும் யாண்டும் இன்புற்றிருக்கும்படி அன்பாற்றி இனிய ஆதரவுகளை உரிமை யுடன் வழங்கினான். பிள்ளைப்பேற்றால் உள்ளம் உவந்து அவ் வள்ளல் உலகம் உவப்பச் செய்தன என்றும் உயர் நிலையில் நின் றன. மக்கள் நால்வரும் ஒக்க உலாவினும் மூத்தபிள்ளையிடம் ஆர்த்திமிகுந்து அதிசய பரவசமாய் மன்னன் உருகியிருந்தான்.

## கலைகள் பயின்றது

பசுமை ஒளி தவழ்ந்து இளமைநலஞ் சுரந்து அதிசய எழி லுடன் துதிகொண்டு நின்ற இராமன் தம்பியரை அன்புடன் தழுவி அரிய கலைகள் பலவும் பயின்று, யானை ஏற்றம் குதிரை ஏற்றம் வில் வேல் முதலிய எல்லாக் கலைகளிலும் சிறந்து உலகம் மகிழ உயர்ந்து விளங்கினான். இக் குலமக்களுடைய காட்சி நிலமக்கள் எல்லார்க்கும் நிறைபேரின்பமாய் நெடி தோங்கி வந்தது.

அமிர்துகு குதலையொடு அணிநடை பயிலாத்
திமிரமதறவரு தினகரன் எனவும்
தமரம துடன்வளர் சதுமறை எனவும்
குமரர்கள் நிலமகள் குறைவற வளர்நாள். (1)

சவுளமொ டுபநயம் விதிமுறை தருகுற்
றிவளவ தெனஒரு கரைபிறி திலவா
உவள்தரு மறையினொடு ஒழிவறு கலையும்
தவள்மதி புனையரன் நிகர்முனி தரவே. (2)

யானையும் இரதமும் இவுளியும் முதலா
ஏனைய பிறவுமவ் வியல்பினி னடையுற்று
ஊனுறு படைபல சிலையொடு பயிலா
வானவர் தனிமுதல் கிளையொடு வளர்நாள். (3)

அருமறை முனிவரும், அமரரும், அவனித்
திருவும், அநகருறை செனமும்நம் இடரோடு
இருவினை துணிதரும் இவர்களின் இவணின்று
ஒருபொழு தகல்கிலம் உறையென வுறுவார். (4)

(திருவவதாரப்படலம், 126-127)

பாலர்களுடைய பாலிய நிலைகளைக் குறித்து வந்துள்ள இந் நாலு கவிகளிலும் நலம் பல வுள்ளன. தெய்வத் தேசுகளாய்த் திகழ்ந்து நின்ற திருவுருவங்களைக் கவி உரை யுருவங்களில் ஒளி பெற விளக்கி யிருக்கிறார். விழிகளால் நேரே காணும் காட்சிகளைப்போலவே நிகழ்ச்சிகளை மொழிகள் தெளிவாகக் காட்டியருள்கின்றன. காணாதன பலவும் கண்ணெதிர் விளக்கி உள்ளுணர்ச்சிகளை எழுப்பி உரிமைகளை வளர்த்து உயிரினங்களுக்கு என்றும் அவை உவகைகளை விளைத்துவருகின்றன.

மழலைமொழி பயின்று, தவழ்நடையிட்டு, உவளகங்களிலும் அரண்மனை முன்றில்களிலும் அருமைக்குழந்தைகள் ஒருமையுடன் மருவி உலாவி நின்ற நிலைமையை முதலில் உரைத்தார்.

1. அதிசயமான இனிய இளஞ்சூரியர்கள்போல் உள்ளும் புறனும் தனியொளிசெய்து இனிது தழைத்து வந்தனர் என்பார், "திமிரமது அறவரு தினகரன்" என்றார். திமிரம்=இருள். தினகரன்=சூரியன். உலகில் மண்டியுள்ள அல்லல்களும் மூடங்களும் அறவே அகன்றொழிய இந்த எல்லொளிகள் இங்ஙனம் உறவா யுதித்துள்ளன என்பதாம்.

தமரம்=ஓசை. ஒலி வடிவாய் உணர்வொளி பரந்துள்ள வேதங்கள்போல் இக்குமரர்கள் நால்வரும் குலாவி யிருந்தனர் என்பார் "சதுமறை" என்றார். சது=நான்கு. சதுர் எனவும் வரும். அதிபதி நிலையிலமர்ந்து விதி நியமங்களை விளக்கி ஞானநலங் கனிந்து உயிரினங்களுக்கு உயர்நலங்களை உதவி வருதலால் நான்மறை இம்மேன்மைக் குமரருக்கு உவமையாய் வந்தது. அறிவொளிகளாயிவர் தழைத்து விளங்கினர் என்பதாம்.

இப்புதல்வர்கள் வளர்ந்து வருவதைக் கண்டு பூமிதேவி நாளும் உள்ளங்கிளர்ந்து உவந்து வந்தாள் ஆதலால் "நிலமகள் குறைவற வளர்நாள்" என்றார். இவர்களுடைய வளர்ச்சி உலகுக்கெல்லாம் ஒரு பெரிய ஊதியமாய் ஓங்கி வந்ததென்பதை இங்ஙனம் உணர்த்தியருளினார். குறைவற வளரும் குழவிகளைக் கண்டு குலைதுடித்திருந்த நிலமகளுக்கு இக்குமரர்கள் காட்சி பெருமகிழ்ச்சியை விளைத்து வந்த தென்க.

பிறந்த முடி களைந்து குழந்தைக்குக் குடுமி வைக்கும் சடங்கைச் சவுளம் என்பர். இது மூன்றாவது ஆண்டில் நடைபெறும்.

உபநயம் என்றது பூண்நூல் தரித்தலே. இதனை எட்டாவது வயதில் செய்வர். பருவங்களில் செய்யும் உரிமை நலங்களெல்லாம் பெருமையுடனடைந்து குமாரர்கள் ஒளிமிகுந்து வந்தனர்.

கலைகள் பலவும் கற்றுத் தேர்ந்தனர். வசிட்ட முனிவரே மகிழ்ச்சி மீதூர்ந்து பயிற்றிவந்தனர். அறிவுக் கலைகளிலும் போர்க்கலைகளிலும் அனைவரும் பொருவருநிலையினராய்ப் பொலிந்து விளங்கினர்.

இராமனது வில்லாற்றல் இளமையிலேயே அதிசய நிலையில் விளங்கி நின்றமையால் முனிவர் முதல் எல்லாரும் வியந்து இறும்பூதடைந்தனர். இக் குலமகனுடைய உருவம் செயல் இயல்புகள் யாவும் எவரையும் பரவசப்படுத்தி வந்தன. "இம் மரகத வண்ணனைக் கண்டதே நமக்குப் பரகதியாம்" என நகர மாந்தரனைவரும் மனமுருகி மகிழ்ந்து வந்தனர்.

"வானவர் தனிமுதல் கிளையொடு வளர்நாள்" என இராமனை இங்கே குறித்திருக்கும் அழகைக் கூர்ந்து நோக்குக.

ஒத்த அழகுடைய தம்பியர்களை அன்புடன் அணைத்து யாண்டும் உரிமை மிகுந்து இத்தலைமகன் அளவளாவி வந்தான். அந்த அருமைக்காட்சி எல்லார்க்கும் ஓர் புதிய இன்ப நிலையமாய் இனிதமர்ந்திருந்தது. உழுவலன்பொழுகிக் கெழுதகைமை கனிந்து சகோதர வாஞ்சை அங்கே ஒளிசெய்து நின்றது.

## இராமனும் இலக்குவனும்

இராமனை இலக்குவனும், பரதனைச் சத்துருக்கனும் எப்பொழுதும் இணைபிரியாது இயைந்திருந்தனர். மாலைவேளைகளில் நகரயலே இனிய சோலைகளில் இக்குமரர் உல்லாசமாய் உலாவி வருவர்; அவ்வரவு செலவுகள் எவர்க்கும் பெருமகிழ்ச்சியாய்ப் பெருகிநின்றன. அடியில் வருவது காண்க.

ஐயனும் இளவலும் அணிநில மகள்தன்
செய்தவ முடைமைகள் தெரிதர நதியும்
மைதவழ் பொழில்களும் வாவியும் மருவி
நெய்குழ லுறுமிழை எனநிலை திரிவார். (திருவவதாரம், 130)

"இந்த அழகிய பாடல் விழுமிய நிலையில் விளைந்து வந்துள்ளது. இளவல் என்றது இலக்குவனை. இராமனை ஐயன் என்றது அருமை வாசகமாய் அன்பு கனிந்து வந்தது. என் ஐயன் என உரிமை பாராட்டி வையமெல்லாம் உவந்து கொண்டாடும் மெய்யன் ஒரு பையனாய் இங்கே பைய வந்துள்ளான் என்பதாம்.

"இந்தத் தெய்வக் குழந்தைகள் தன் இடத்தே தோன்றி வளரப் பூமிதேவி என்ன புண்ணியம் பண்ணினளோ?" என்று யாவரும் ஆவலோடு வியந்துபுகழ இக்குமாரர்கள் இளமரக் காக்களிலும் இனிய பூம்பொழில்களிலும் பொய்கைத் தடங்களிலும் கால்பெயர்ந்து நடந்து திரிந்தனர் என்பார் "நிலமகள் தவமுடைமை தெரிதரத் திரிவார்" என்றார். அரிய பெரிய தவம் புரிந்திருந்தாலொழிய இந்த அற்புத உருவங்களைஎளிதே அடைய முடியாதென்பதாம். புத்தேளுலகமும் பெறாத ஓர் அற்புதத் தவப்பேற்றை இப்பூவுலகம்பெற்றுக்கொண்டதுஎன்பது குறிப்பு.

அவங்களும் அல்லல்களும் ஒழிந்து தவங்களும் தருமங்களும் இவரால் இனி வளர்ந்தோங்கிவரும் என்பதை இவ்வுரையால் இங்கே உய்த்துணர வைத்துள்ளார்.

வினைப்போகங்களை அனுபவிக்கும்படி தோன்றி மனத்துயருடன் மறுகியுழலும் மன்பதைகளிடையே இந்த இன்ப மூர்த்திகள் திருவுள்ளம் இரங்கி இதம் செய்ய வந்துள்ளமையால் நிலம் செய் தவம் என நினைந்து மகிழ்ந்து வியந்து புகழ நின்றார்.

தன் குலம் செய் தவம் எனத் தசரதனும், நிலம் செய்தவம் என உலகரும் உவந்து புகழ இப்புதல்வர் வளர்ந்து வந்தனர்.

இராமனைப் பின் தொடர்ந்து இலக்குவன் எங்கணும் நிழல்போல் நிலையாய்த் திரிந்து வந்தான் ஆதலால், "ஐயனும் இளவலும் நெய்குழல் இழை என நிலை திரிவார்" என்றார்.

இங்கே பெய்திருக்கும் இந்த உவமை மிகவும் சிந்தனை செய்து இன்புறற்பாலது. ஒப்பு நிலைக்கு வரும்பொருளை உண்மைப்பொருளோடிணைத்து யாண்டும் உய்த்துணரவேண்டும்.

குழல் என்பது நெய்வோர் கையில் உள்ள ஒரு கருவி. மரக்கட்டையால் செய்யப்பட்டது. அந்தக் குழல் நூலோடு பிணைந்திருக்கும். பாவூடு அது ஊடாடிவரும். பாவாற்றி

நெய்யுங்கால் நெசவாளர் அதனை வலக்கையாலும் இடக் கையாலும் மாறி மாறித் தள்ளிவிடுவர்; விடவே அது பாவுள் ஓடி ஆடைகளை உருப்படுத்தி வரும். அது சென்று மீளும் திறம் விந்தையாயிருக்கும். விழுமிய தொழிலையுடைய அந்தக் குழல் இங்கே உவமையாய் வந்துள்ளது. இழை=நூல்.

குழல் இராமனுக்கும், இழை இலக்குவனுக்கும் முறையே ஒப்பாம். நெய்குழல் என்றது ஊதுகுழல் புல்லாங்குழல் என்பனபோல அதன் செய்கையை விளக்கி நின்றது. சோம்பலின்றித் தொழிலில் முனைந்திருக்கும் ஏம்பல் நிலையும் எண்ண நேர்ந்தது. தாழ்வறவந்த ஆள்வினையாளர் என்பதை உவமை உணர்த்தி நின்றது.

இராமன் பின்னே இலக்குவன் தொடர்ந்து நடந்து வந்தது குழலோடு இழை படர்ந்து சென்றதுபோல் இருந்ததென்பதாம்.

உரிமைக்கும் தொடர்புக்கும் உழைப்புக்கும் ஒப்பாக மேலெழுந்தபடியே இது தெரிய நிற்பினும் அரிய பொருளும் உள்ளே உணர வுள்ளது.

குழலும் இழையும் பாவூடு சென்றுவரின் அதனால் என்ன விளையும்? ஆடை தோன்றும்; அந்த உடை மனிதனது மானத்தைக் காப்பாற்றும். இராமனும் இலக்குவனும் நிலத்தூடு உலாவி வருதலால் அறம் வளரும்; அதனால் உலகமெல்லாம் ஞான நலம் கனிந்து மானமுடையதாய் உயர்ந்து திகழும் என்க.

இளம் பருவ நடையிலேயே இவ்வளவு வளம்படிந்துள்ளமையை நம் உளம்படிந்துணர நலம்படிந்த இவ்வுவமானம் வலம்படிந்து வந்தது.

மாலையில் உலாவப் போவதாகச் சொல்லிக்கொண்டு உள்ளத்தே ஒரு சிறிதும் ஒட்டாமல் புறத்தே ஒருங்குகூடி ஊர் வம்புகளையே பேசி உணர் வுறுதிகளை மறந்து காலாற்றி வருவதாக மாலாற்றி வருகின்ற இக்கால மக்கள் இச் சீலமக்களுடைய செயல் இயல்களைச் சிறிது சிந்தித்துவரின் தமக்கும் பிறர்க்கும் நலமாய்த் தகவுடன் நடந்து தழைத்தோங்க நேர்வர்.

பொழுதுபோக்கும் பழுது போகாமல் பயனுற நடந்து உலகம் தொழுத நோக்க இக்குலவீரர் உலாவி வந்தார் என்''

தாம். இவரது குறுநடையில் பெருநலம் விளைந்துள்ளதைக் கவியின் உரைநடையால் உணர்ந்து உறுதி பல தெரிகின்றோம்.

இந்த நெய்குழலை மாணிக்கவாசக சுவாமிகளும் உவமையாகக் கையாண்டிருக்கின்றார்கள். அடியில் வருவது காண்க.

“மாவடு வகிரன்ன கண்ணி பங்காநின் மலரடிக்கே
கூவிடு வாய்கும்பிக் கேயிடு வாய்நின் குறிப்பறியேன்
பாவிடை ஆடு குழல்போல் கரந்து பரந்த துள்ளம்
ஆகெடு வேன்உடையாய்! அடியேனுன் அடைக்கலமே.”
(திருவாசகம்)

பாவூடு கரந்து திரியும் குழல்போல் மனம் புலன்களில் புகுந்து புலையாடுகின்றதே! என அடிகள் இதில் இரங்கியிருக்கின்றார். இதனால் அவரது ஆன்ம பரிபாக நிலை அறியலாகும்.

## கைத்தறிகள் முன்னம் காலூன்றி யிருந்தமை

நெய்குழலை இங்ஙனம் உவமை கூறியிருத்தலால் பண்டைக் காலத்தில் இந்நாட்டில் கைத்தறிகள் தழைத்திருந்த நிலைமை நன்கு தெரிய நின்றது. கவிகள் கூறும் உவமானங்களும் உரை நலங்களும் உணர்வுறுதிகளும் அவருடைய காலநிலைகளைத் தெளிவாகக் காட்டியருள்கின்றன.

“இழைநக்கி நூல்நெருடும் ஏழை” என வள்ளுவப் பெருந்தகை சொல்லியிருத்தலால் நெய்தல் தொழிலை அவரும் செய்து வந்துள்ளமை தெரியலாகும்.

செய்யும் தொழில்களெல்லாம் முன்னாளில் இங்கே எங்கணும் செழித்திருந்தன; அவற்றுள்ளே நெய்யும்தொழில் மிகவும் தலை சிறந்து நின்றது. வீட்டினுள்ளேயே நெய்தல் தொழில் செய்யப்படுதலால் ஆடை நெய்வோர் காருகர் என நின்றார்.

“பருத்தி நூல் பட்டு நூல் அமைத்தாடை ஆக்கலும்
சமைத்தலும் பிறவும் காருகர் வினைத்தொழில்” (திவாகரம்)

கிரகத்திலிருந்து அமைதியாகச் செய்யப்படுவது காருகம் என்க. கிரகம்=மனை. பெயரின் இயல்பால் உயர்வுணரலாகும்.

“பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்
கட்டும் நுண்வினைக் காருகர்” (சிலப்பதிகாரம்)

எனவரும் இதனால் ஆடைகள் நெய்தற்குரிய மூலப்பொருள்கள் அறிய நின்றன. மயிர் என்றது இங்கே எலிகளுடைய

உரோமங்களை. மெல்லிய எலி மயிரால் அருமையான வேலைப் பாடுகளை யுடைய சிறந்த போர்வைகள் முன்னோரால் ஈண்டுச் செய்யப்பட்டு வந்தன. மறு புலங்களெல்லாம் அரிய விலை கொடுத்து வாங்கி அவற்றைப் பெரிதும் போற்றுகின்றன. வேறு எந்நாட்டிலும் எவரும் செய்யப்பெறாதன என்று எல்லாராலும் யாண்டும் அவை புகழப்பெற்றிருந்தன.

"எங்கும் இல்லன எலிமயிர்த் தொழிற்
பொங்கு பூம்புகைப் போர்வை மேயினார்."
(சீவகசிந்தாமணி, 2680)

என்றதனால் அவற்றின் நீர்மையும் நிலைமையும் தெரியலாகும்.

"பனிமயிர் குளிர்ப்பன பஞ்சின் மெல்லிய
கனிமயிர் குளிர்ப்பன கண்கொளாதன
எலிமயிர்ப் போர்வையைத் தெழினி வாங்கினார்
ஒலிமயிர்ச் சிகழிகை உருவக் கொம்பனார்."
(சிந்தாமணி 2471)

எலிமயிராடை இங்ஙனம் பலவாறு பாராட்டப்பட்டுள்ளது.

நெய்யுந்திறத்தில் நம்முன்னோர் மிகவும் கைதேர்ந்தவரா யிருந்திருக்கின்றனர். ஆடையின் இடையே இழைநுழைந்த வழி எவர் விழியும் காணாதபடி அவ்வளவு நுண்மையும் மென் மையும் வாய்ந்து செவ்விய பூவடிவங்கள் தோய்ந்து மேன்மை மிகுந்த உடைகள் இங்கே மேவியிருந்தன.

"நோக்கு நுழைகல்லா நுண்மைய, பூக்கனிந்து
அரவுரி யன்ன அறுவை நல்கி." (பொருநராற்றுப்படை, 82)

கரிகால்வளவன் தனக்குப் பரிசில் கொடுத்த ஆடையைக் குறித்து ஒரு புலவன் கூறியபடி யிது. நூல் புகுந்த வழி நோக்குதற்கரிய நுண்மை யுடையது; பூத்தொழில் அமைந்தது; அரவின் உரியை ஒத்தது அத்துகில் என்பதாம்.

"பாம்புரி அன்ன வடிவின் காம்பின்
கழைபடு சொலியின் இழையணி வாரா
ஒண்பூங் கலிங்கம் உடீஇ" (புறம், 383)

"ஆவி அன்ன அவிர்நூற் கலிங்கம்" (பெரும்பாண், 469)

"காம்பு சொலித்தன்ன அறுவை" (சிறுபாண், 236)

" கண்ணுழை கல்லா நுண்ணூற் கைவினை
வண்ண அறுவையர்." (மணிமேகலை, 28)

" பாறிவாய் அரவின் உரிநிகர் ஆடை" (இலிங்கபுராணம்)

" பையர வுரியின் அன்ன நடைப்படாம்" (திருவிளையாடல்)

" அரவின் உரிவை அன்னவால் நுண்துகில்" (பாகவதம்)

இந்நாட்டின் ஆடைகளைக் குறித்து இன்னவாறு பன்னூல்களும் பகர்ந்திருக்கின்றன. "காம்பு சொலி" என்றது மூங்கிலின்மேல் உரிந்த மெல்லிய தோலினை. பலவகையான உடைகள் முன்னம் இங்கு நிலவியிருந்தன என்று அடியார்க்கு நல்லார் காட்டியுள்ளார். சில அடியில்வருவன காண்க.

" கோசிகம் பீதகம் பச்சிலை அரத்தம்
நுண்டுகில் சுண்ணம் வடகம் பஞ்சு
குருதி பாடகம் கோங்கலர் கோபம்
குச்சரி தத்தியம பங்கம் தூரியம்
சில்லிகை வண்ணடை திருக்கு தேவாங்கு."

என இவ்வண்ணம் பலவிதங்களில் பேர்பெற்றுத் துகிலினங்கள் இத்தேசத்தில் முன்னம் பெருகியிருந்துள்ளன.

எல்லா நாடுகளும் எதிர்நோக்கி வியந்துபோற்ற வியனிலையில் உயரிய ஆடைகளை உளவாக்கி உதவிவந்த இந்நாடு இந்நாள் என்ன நிலையிலுள்ளது? அன்னே!

நம் கவிஞர்பிரான் காட்டிய குழலும் இழையும் காரணமாவகைத்தறிமேற் சென்று இத்துணை நீள நேர்ந்தது. நேரினும் பழைய காலத்தின் சீரிய நிலைமையும் இந்நாடிருந்த தகைமையும் சிறிது தெரியவந்தமையால் இதனை உரிமையாக அறிஞர் உவந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

## சேர்க்கை நிலை

அண்ணன் தம்பிகளாய் நண்ணியுலாவிய அப்புண்ணிய உருவங்களை இனி எண்ணி மகிழ்வோம். குழல்தழுவிய இழைபோல் இராமனை இணைபிரியாது மருவியிருந்தமையினாலேதான் இராமாநுசன் எனவும் இளையவன் எனவும் தனியே இலக்குவன் உயர்பெயர் பெற்று இயல்புணர நின்றான். அநுசன் = தம்பி.

இந்த அருமை இரட்டைகள் காவியம் முழுவதிலும் ஒன்றை ஒன்று தழுவி ஒருமையுற்றே ஒளி பெற்றுள்ளன. எவ்வழியும் இனித்த குணநலங்களை யுடையராய் யாண்டும் உள்ளம் ஒத்து உரிமை கனிந்து ஒழுகி நின்றமையால் இப்பிள்ளைகள் இருவரும் மனுக்குலத்திற்கு மிகவும் மாட்சியை விளைத்துள்ளனர். இற்றைக் குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றினவராயினும் எல்லா இடங்களிலும் எல்லார் உள்ளங்களிலும் இன்றும் புதிய ராய் இவர் நின்று வருகின்றனர். இவரை அறியாதவர் யாண் டும் அரியர். புறவுலகிலும் அறிவுலகிலும் அலகில் புகழுடன் நிலவி அன்பொளி வீசி இன்பநிலையமாய் இவர் இனிதமர்ந்திருக் கின்றனர். உலகக் காட்சியைவிடப் புலமைக் காட்சியிலேதான் இவரது நிலைமை தெய்வத் தேசுடன் மிளிர்கின்றது. ஆயினும் உலகமுழுவதும் இவரை உரிமையுடன் உவந்து கொண்டாடுகின் றது. குமரி முதல் இமயம் வரையும் உள்ள பொதுமக்கள் இக் குலமக்களைத் தத்தம் தலைமக்களாகவே கருதித் தகவாற்றி வரு கின்றனர். அறிவு, சீலம், அமைதி, வீரம் முதலிய உயர்குணங் கள் பல ஒளி மிகுந்திருப்பினும் சகோதரர்களுக்குள் அமைந்த அன்புரிமையையே இவர்பால் வரைந்து நோக்கி உலகம் விழைந்து போற்றி வருகின்றது. உடன்பிறப்பாளர்கட்கு உயிர்ப் பிறப் பாளராய் இவர் உயர்ந்து விளங்குகின்றார். ஒரு தாய் வயிற்றில் இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தால் அவற்றுள் முன்னதற்கு இராமன் எனவும், பின்னதற்கு இலட்சுமணன் எனவும், பெய ரிட்டு இன்றும் வழங்கி வருகின்றனர். உருவம் பருவம் முத லியன ஒத்துத் துணைவர் இருவர் இணைபிரியாதிருந்தால் அவர் களைக் கண்டவர் “இவர் என்ன! இராம லட்சுமணர்கள் போல் இருக்கிறார்களே!” என்று இவரை உவமைகூறி உவகையுறுவதை இன்றும் கண்கூடாகக் கண்டும் கேட்டும்வருகின்றோம். இவரிடம் அமைந்துள்ள அன்புரிமை தனிநிலையில் இனிமை கனிந்துள்ளது. மனித சமூகத்திற்கு இவரது வரவு முறை ஓர் புனித நிலையைப் புரிந்து என்றும் புத்தொளி விரிந்து வருகின்றது.

உயர் குணங்கள் பலவும் ஒருங்கே நிறைந்துள்ள இம் மூர்த்திகளின் சீர்த்திகள் வார்த்தைகளால் வரைந்து கூறல மையா. “வானும் வையமும் வளர்ந்து நிற்கின்ற இவருடைய மாண்புகளை நானும் நீயுமா நயந்து காணவல்லோம்?” என்று

ஒருமுறை நாரதரும் வால்மீகி யாருமே வியந்து கூறியுள்ளார் என்றால் இவருடைய சீர்மை நீர்மைகளைக் குறித்து வேறு கூறுவது என்? மண்ணுலகம் மகிமையுறப் புண்ணிய ஒளிகளாய் இவர் பொலிந்து விளங்கினர்.

இராமனும் இலக்குவனும் போல் பரதனும் சத்துருக்கனும் எங்கும் இணைபிரியாது துணையமைந்திருந்தனர். இந்த இணைப்பு மூலத்தொடர்பை உணர்த்தி நின்றது. சத்துருக்கன் சங்கின் அமிசம் ஆதலின் சக்கரத்தின் கூறு ஆன பரதனைத் தழுவி நின்றான். இலக்குவன் பாயல் அணையான பாம்பின் கலை ஆதலால் பள்ளிகொண்ட பெருமாள் எனப் புள்ளிகொண்டு வந்தவனை இடைவிடாது பொருந்தி இருந்தான். பாரில் வருகின்ற உயிரினங்கள் பூர்வ வாசனைகளின்படியே செயல் இயல்களில் தோய்ந்து சேர்க்கைவாழ்க்கைகளில் செறிந்துபோக்கும் நோக்கும்பொலிந்து ஊக்கமொடு திகழும் என்பது இதனால் உணர்ந்துகொள்ளலாம்.

உழுவலன்புடன் தழுவி ஒழுகிய இந்த விழுமிய சோடிகளுடைய கெழுதகைமைகள் உலகம் இன்புற ஒளி செய்து நின்றன. அந்நிலைமையைப் புலமை நலம் கனியக் கவி இனிது விளக்கியிருக்கிறார். அடியில் வருவன காண்க.

பரதனும் இளவலும் ஒருநொடி பகிராது
இரதமும் இவுளியும் இவரினும், மறைநூல்
உரைதரு பொழுதினும் ஒழிகிலர்; எனையாள்
வரதனும் இளவலும் எனமருவினரே. (1)

வீரரும் இளைஞரும் விரிபொழில் களின்வாய்
ஈரமொ டுறைதரு முனிவரரிடை போய்ச்
சோர்பொழு தணிநகர் துறுகுவர் எதிர்வார்
கார்வர அலர்பயிர் பொருவுவர் களியால். (2)

ஏழையர் அனைவரும் இவர்தட முலைதோய்
கேழ்கிளர் மதுகையர் கிளைகளும் இனையார்
வாழிய எனஅவர் மனனுறு கடவுள்
தாழ்குவர் கவுசலை தயரதன் எனவே. (3)

கடல்கரு முகிலொளிர் கமலமது அலரா
வடவரை யுடன்வரு செயலென, மறையும்
தடவுத லறிவரு தனிமுத லவனும்
புடைவரும் இளவலும் எனநகர் புகல்வார். (4)

(திருவவதாரப்படலம், 131-134)

குழந்தைகளுடைய இளம்பருவநிலைகள் இங்ஙனம் வளம் படிந்து வளர்ந்து வந்துள்ளன. இப்பிள்ளைகளின் வளர்ச்சி எல்லார்க்கும் உள்ளக் கிளர்ச்சியாய் உவகை விளைத்துள்ளமையை உரைகள்தோறும் உணர்ந்து வருகின்றோம்.

இரதமும் இவுளியும் இவர்தல் என்றது அரசகுலமாட்சி தெரியநின்றது. இவுளி = குதிரை. இவர்தல் = ஏறிநடாத்துதல். தேர் யானை முதலிய சீரிய வாகனாதிகள் ஊர்ந்து வீரியம் புரிந்து பாரியல் ஓர்ந்து பண்புடன் பழகி வந்தனர் என்க.

பரதனும் சத்துருக்கனும் இணைபிரியாமல் எப்பொழுதும் மனம் ஒத்து இசைந்திருந்தார் ஆதலால், "ஒரு நொடி பகிராது" என்றார். நொடி என்பது இமைப்பொழுது என்பதுபோல் மிகவும் குறுகிய கால அளவைக் குறித்து நின்றது. நடு விரலோடு பெருவிரலை இணைத்து நொடிக்கும் நேரத்தைக் குறித்து வருதலால் இது நொடி என வந்தது. ஒருமுறை நொடிக்கும் அளவும் இருவரும் பிரிகிலர் என்பதாம். நொடித்தல் = விரல் முறுக்கிச் சுடக்கிடுதல்.

"உன்னல் காலே உறுத்தல் அரையே
முறுக்கல் முக்கால் விடுத்தல் ஒன்றே."

என்னும் சூத்திரத்தில் நொடியின் கூறும் படிமுறையும் குறிக்கப் பட்டுள்ளமை காண்க. குற்றெழுத்தை உச்சரிக்கும் ஒலியளவைக்கு மாத்திரைகளாகக் கண் இமையையும், கைநொடியையும் இலக்கண நூலார் கணக்கு அமைத்திருக்கின்றனர்.

"கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்டவாறே."
(தொல்காப்பியம்)

என வரும் இதனால் அவற்றின் இயல்புகள் புலனும்.

முன்னது கட்புலன்; பின்னது செவிப்புலன் என்க. இருபுலனுணர்வும் ஒருங்கமைந்துள்ளமையான் இருவரது சேர்க்கையை விளக்குதற்கு நொடி இங்கே நுவல நேர்ந்தது.

ஒரு சிறிதும் இணைபிரியாமல் துணைவர் இருவரும் இங்ஙனம் இனிதமர்ந்து நின்றனர். அந்நிலைமைக்கு உவமை குறித்திருக்கும் திறம் உவகை நிலையமா யுரிமையுணர நின்றது.

"வரதனும் இளவலும் என மருவினரே"

என்றது விநயமிக வாய்ந்து இனிமை கனிந்து வந்தது. இங்கே வரதன் என்றது இராமனை. அன்பர் விரும்பிய வர பலங்களை அருளவல்லவன் என்பதாம். என்னை ஆள் வரதன் என்றதனால் கவிக்கு அன்னவன்பாலுள்ள ஆர்வமும் உரிமையும் அறிய நின்றன. மருவல் ஒருமையுடன் தழுவி உறைதல்.

பண்ணும் இசையும், பரிதியும் மதியும், கண்ணும் இமையும், உயிரும் உடலும் என ஒற்றுமைக்குரிய பொருள்களுள் யாதொன்றையும் ஒப்புரைக்காமல் இராமலக்குவரையே பரதசத்துருக்கனருக்கு எதிரெடுத்துக் காட்டியது அதிசயமுடையதாய்ச் சுவை சுரந்துள்ளது. மூத்த சோடியைத் தவிர வேறு ஏற்ற ஒப்பு யாண்டும் என்றும் இளைய சோடிக்கு இல்லை என்பதாம்.

இணைநிகர் துணைகளாய் இவ்வாறு இனிது வளர்ந்த இவர் புனித நிலையில் பொலிந்து விளங்கி மனித வருக்கத்திற்கு மகிமையை விளைத்துவந்தனர். இளமையிலேயே ஞானநலங்கனிந்த முனிவரர்களிடமே இக்குமரர்கள் பழகிவரலாயினர்.

"ஈரமொடு உறைதரு முனிவரர் இடைபோய்ச்
சோர்பொழுது அணிநகர் துறுகுவர்"

என்றதனால் குழவிப் பருவத்திலேயே இந்த அருமைக் குழந்தைகளுடைய அறிவமைதிகள் தெரியநின்றன.

யாண்டும் அருள் நீர்மையுடையராய் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகும் செவ்விய நிலையினர் ஆதலால் ஈரமுடைமை மாதவர்களுக்கு ஏற்றமாக வந்தது. ஈரம் = இரக்கம், அருள். வீர இளைஞர்கள் ஈரமுனிவருடன் ஆர அமர்ந்து நேரம் போக்கி நெடுநகர் மீண்டனர் என்பது நெறிமுறை யறிய வந்தது.

நகரயலேயுள்ள குளிர்பூஞ்சோலைகளில் இனிய குடிசைகளை அமைத்துத் தண்ணளியுடையராய்த் தவவாழ்க்கை புரிந்துவரும் புண்ணிய சீலர்களுடன் பகல் முழுதும் பழகி அரிய கலைகள் பலவும் ஆராய்ந்து மாலைப்பொழுதானவுடன் அரசிளங்குமரர்கள் ஊருக்குத் திரும்பி வருவர் என்னும் அருமைக்காட்சியை உரிமையுடன் விழைந்து கண்டு இங்கே நாம் உவந்து நிற்கின்றோம்.

## பழக்க வழக்கங்கள்

இளமைப் பழக்கமும் பயிற்சியும் வளமைமிகப் பெற்றுப் புனிதநிலையில் பொங்கி வந்துள்ளமை இதனால் இனிது புலனும்.

செல்வக் குழந்தைகள் இளமையில் நல்லவர்களுடன் பழகி வரவேண்டும் என்னும் புத்திமதிகளை இங்கே கவி உய்த்துணர வைத்திருக்கிறார்.

முனிவர் ஆச்சிரமங்களிலிருந்து இந்தச் சுகுண சுந்தரர்கள் அந்திப்பொழுதில் மீண்டு வரும்பொழுது எதிரே கண்டவரெவரும் கழிபேருவகையராய்க் களிப்பூர்ந்து நின்றனர். அந்நிலைமையை ஓர் உவமையால் உணர்த்தியிருக்கிறார்.

"கார்வர அலர்பயிர் பொருவுவர் களியால்"

எனவரும் இதனால் அக்குமரர்களுடைய உயர்வும் தகவும் உரிமையும் உணரலாகும். பயிரினங்களுக்குப் பருவமுகில்போல் உயிரினங்களுக்கு இராமன் ஒளி செய்து வந்தான் என்பதாம்.

உலகம் உவப்பத் தோன்றிய இக்குலமக்களைக் கண்குளிர நோக்கிய பெண்களும் ஆண்களும், "இவர் என்றும் சுக சீவிகளாய் இனிது வாழ்ந்துவரவேண்டும்" எனக் கடவுளைவேண்டி உழுவலன்புடன் வழிபட்டு வந்தனர்.

உலகிலுள்ள மகளிர் ஆடவர் என்னும் இருபாலாரும் இவர்பால் கழிபெருங்காதல் மண்டி வழிபாடுகள்செய்துவந்தார் என்றதனால் இவரது இனிய குணநலங்கள் எவரையும் பரவசப்படுத்தியிருந்தன என்பது எளிது புலனும். தாம்பெற்ற பிள்ளைகள் ஆகவே உவந்து கண்டு ஒவ்வொருவர் உள்ளமும் உருகி நின்றதென்பதாம். தாய் அன்பும் தந்தை வாஞ்சையுமே எங்கும் தலையெடுத்து வந்தன என்பார், "கவுசலை தயரதன் எனவே" என்றார். இம்மக்கள்பால் மன்பதை கொண்டிருந்த அன்புநிலை அளவிடலரியதாய் உளமிகவுருகி உவகை சுரந்து வந்தது.

இவ்வாறு எல்லாரும் இன்பூர்ந்து வாழ்த்திவர இவர் பண்பூர்ந்து வளர்ந்து வந்தார். அன்புடைத் தம்பியரை ஆர்வமுடன் தழுவி இராமன் சீர்மையோடு சிறந்து விளங்கினன்.

"மறையும் தடவுதல் அறிவரு தனிமுதலவன்"

என்றது யாரும் அறிதற்கரிய பெருமானாய் நின்ற அவன் இங்கே ஊரும் நாடும் ஒருங்கே காண ஒரு சிறுவனாயுலாவிவந்தான்

என்பதாம். மறையும் தடவுதற்கரிய தனிமுதல்வன் ஒருவனுக்குப் புதல்வனாய்த் தரை தடவ நின்றான் என அவன் நிலைமையைக் கவி இங்கே நெஞ்சுருகி யுரைத்திருக்கிறார்.

ஞானமுனிவர்களுடன் அளவளாவி அறிவுரைகளாடி மாலை வேளையில் தம்பியர் பின்வர இந்நம்பி சிலசமயம் பாதசாரியாய் நடந்து வருவன். அங்ஙனம் வருங்கால் நகரின் அருகே எதிர்ப்பட்ட சனங்கள் சக்கரவர்த்தித் திருமகன் என்று பயந்து பத்தி விநயத்துடன் அயல் ஒதுங்கி நிற்பர்.

தொழுத கையோடு உடல் குழைந்து உளமிக வுருகிப் புடை ஒடுங்கி நிற்கின்ற அந்நகர மாந்தரை இராமன் முகமலர்ந்து நெருங்கிக் கருணை ததும்ப நோக்கிப் பவளவாய் திறந்து இனிய மொழிகளால் சேமநலங்களை விசாரிப்பன். உள்ளன்புடன் இவ்வள்ளல் உவந்து உசாவிய நிலையைக் கவி வரைந்து காட்டியிருக்கிறார். அக்காட்சியை அடியில் காண்க.

எதிர்வரும் அவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா
எதுவினை இடரிலை இனிதுநும் மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொல் எனவே. (திருவவதாரம், 135)

எதிரே கண்ட குடிசனங்களை முதிர்பெருங் கருணையுடன் இராமன் இங்ஙனம் முகமலர்ந்து வினவியிருக்கிறான். திருவயோத்தியின் அருகே மாலைப்பொழுதில் இராமனது இளமைப் பருவத்தில் நிகழ்ந்த ஒரு இனிய நிகழ்ச்சியை உலகம் என்றும் காண இக்கவிப்படம் நன்று காட்டியருள்கின்றது. உரையாடுந் திறனுக்கு இஃது ஓர் உரைகல்லாய் ஒளிர்கின்றது. சொல்லினும் பொருளிலும் உள்ளுணர்ச்சிகள் உயர்நிலையில் ஓங்கி உவகை கனிந்து மிளிர்கின்றன.

இதில் நான்கு வினாக்கள் வந்துள்ளன.

எது வினை?

இடர் இலை?

இனிது நும் மனை?

மதிதரு குமரரும் வலியர் கொல்?

என அதிவிநயமாய் இத்தலமகன் வினவி யருளினான்.

நீங்கள் சுகமாயிருக்கிறீர்களா? தொழில் என்ன? இடையூறு யாதும் இல்லையே? குடும்ப வாழ்க்கை இனிது நடைபெறுகின்றதா? உங்களுடைய மனைவி மக்கள் அனைவரும் நலமாயிருக்கிறார்களா? என நகரவாசிகளை நோக்கி அன்பு ததும்ப அமுதொழுகத் தன் குமுதவாய் திறந்து இராமன் குசலம் விசாரித்திருத்தலை இவ்வினாக்கள் விளக்கி நிற்கின்றன.

செய்யும் தொழில் யாது? என்று வினவி இருத்தலினால் எதிர்ப்பட்டவர் பெரிய செல்வச் சீமான்கள் அல்லர்; சாதாரணமான தொழிலாளிகளே என்பது தெளிவாம். ஆகவே ஏழை மக்களிடத்தும் பேரருள்கொண்டு இவன் பேணி வந்துள்ளமை பெறப்பட்டது. தீனதயாளு என இம்மானவனுக்கு ஒருபேர் மருவி நின்றது.

"மதிதருகுமார்" என்றதனால் மதிகெட்ட பிள்ளைகள் அந்நாட்டில் இல்லை என்பது தெரியவந்தது. அப்படி ஒன்று இருக்குமாயின் அது பிள்ளையல்ல என்பதாம். "*அறிவறிந்த மக்கள்" என வள்ளுவப்பெருந்தகை விசேடித்துக் குறித்துள்ளதும் ஈண்டு உள்ளத்தக்கது. மதி அளவே மதிப்பு என்க.

ஒரு சக்கரவர்த்தித் திருமகன் இளம்பருவத்தில் இவ்வளவு கனிவுடன் குடிகளிடம் உளமிரங்கி உரிமைகொண்டாடியது எவ்வளவு பெருந்தன்மையை விளக்கியுள்ளது! "முந்திரிமேல் காணி மிகுவதேல் கீழ் தன்னை இந்திரனா எண்ணிவிடும்" என்றபடி சிலர் சிறிது செல்வம் எய்தினும் செருக்கு மீக்கூர்ந்து கண்ணிருந்தும் குருடராய்க், காதிருந்தும் செவிடராய், வாயிருந்தும் மூகராய் மனந் திமிர்ந்து நின்று தம்மை ஒத்த மக்களை எள்ளியிகழ்ந்து இறுமாந்து நோக்குதலை நாம் இடைநோக்கி வருகின்றோம். அவரது புன்மையும் இவனது தன்மையும் நரகமும் சுவர்க்கமும் போல் நிலைமாறி நிற்கின்றன. இச்செல்ல மகனுடைய செயலியல்களைச் செல்வச் சிறுவர்கள் சிறிது தெரியினும் மிகவும் பெரியராய் உயிர்க்குறுதிகண்டு உயர்நலமடையலாம்.

உலகில் எவ்வளவு உயர்ந்த நிலைகளை யடையினும் மனிதன் இவ்வாறு ஒழுகிவரவேண்டும் என இவ்வுத்தமன் ஒழுகிக்காட்டியுள்ள உணர்வொழுக்கங்கள் பல. அவ்வுணர்வு நலங்கள் காவியத்தில் ஆங்காங்கு ஓவியவுருவங்களாய் உயிர்பெற்றிருக்கின்றன.

தனது பெருமித நிலைக்கு ஏற்ப "எது வினை" என்பது முதலாகச் சுருங்கிய சொல்லால் இங்கே உசாவியுள்ள நயம் உவந்து பாராட்டத்தக்கது. சுருங்கச் சொல்லுதல் கலையழகு களில் தலை சிறந்தது; ஆகவே இவனது புலமை நிலையை அது புலன்கொளச் செய்தது. சத்தியவாக்கி ஆதலின் யாண்டும் அள வோடு இனிது பேசுதல் இக்குலமகனுக்கு இயல்பாயமைந்தது. "ஸத்யாய மித பாஷிணாம்" எனக் காளிதாசர் இரகுவமிசத்தில் குறித்துள்ளதும் ஈண்டு அறியத் தக்கது.

சொல்லின் சுருக்கம் அறிவின் பெருக்கத்தால் அமைவது ஆகலான் இப்பேரறிவாளனது பேச்சு யாண்டும் சீர்மையும் நீர் மையும் நிறைந்து தெளிவமைந்து வருகின்றது.

" Brevity is the soul of wit " (Hamlet, II. 2)

"சுருங்கச் சொல்லலே புத்திநுட்பமாம்" என மேல் நாட்டுக் கவிஞரும் கூறியுள்ளனர். அதிமதி நுட்பமாய் உயர் கலை கற்றுள்ள இம்மதிமான் இயல் எழில் திகழ இங்ஙனம் நய முடன் பேசினன்.

அன்பு நலங்கனிந்த இந்த இன்பமொழிகளைக்கேட்டவுடனே அந்தக் குடிசனங்கள் அளவிடலரிய ஆனந்த முடையராய்ப் பணிவுடன் நின்று பதில்மொழி பகர்ந்தார். அம்மொழிகளில் உழுவலன்புகள் உயிர்துடித்துள்ளன. அடியில் வருவன காண்க.

குடிகள் பதில் உரைத்தது

"அந்தைய நினைஎம தரசென உடையேம்
இந்தொரு பொருளல; எமதுயி ருடனேழ்
மகிதல முழுவதும் உறுக; இம்மலரோன்
உகுபக லளவென உரைநனி புரிவார்."
(திருவவதாரம், 136)

தம்மிடம் சேமலாபங்களை விசாரித்து வினவிய இராமனுக்கு நகரமக்கள் இவ்வாறு பதிலுரைத்திருக்கின்றனர். அவரது உள் ளுருக்கமும் உவகைப் பெருக்கமும் உரையுருவங்களில் இங்கே வெளிப்பட்டுள்ளன.

உருவநிலையைக் கண்டவுடனேயே பெரு மகிழ்வடைந்து உருகி வணங்கி மரியாதையுடன் புடையொதுங்கி நின்ற சனங்

கள் தம் அருகு வந்து முகமலர்ந்து இராமன் அன்புரையாடிய பொழுது உள்ளமும் உயிரும் குளிர்ந்து இன்பமீதூர்ந்து பரவசமாயினர்; அதன் பின் பதில் மொழி கூறினர். பதிலிலுள்ள மதிநலமும் விநயமும் அதிசயமாயுள்ளன.

மனைவிமக்கள் நலமா? வாழ்க்கை இனிது நடந்துவருகின்றதா? என்பன முதலாக முன்பு உசாவிய வினக்களுக்கெல்லாம் ஐய! அஃது; என ஒரு மொழியிலேயே பதில் தந்தனர். இராமன் முன்னம் வினவிய நிலைகளையெல்லாம் இச்சுட்டு தொட்டு நின்றது. அஃது என்றது அப்படியே என்றவாறு.

அரசகுலதிலகமே! சமூகம் உசாவியபடியே தொழில்கள் வழுவாமல் வருவாயுடன் வளர்ந்து வருகின்றன; மனை இனிது; மக்கள் வலியர்; ஒக்கலும் கிளைஞரும் உவந்து வருகின்றனர்; இடர் யாதொன்றும் இல்லை; யாண்டும் இன்பமாய் நாங்கள் வாழ்ந்து வருகின்மேறும் என்பார், "அஃது" என்றார்.

இவன் சந்நிதியில் அதிகமாகப் பேசுதல் உசிதமன்றென்று கருதி மரியாதையுடன் ஒரே வார்த்தையில் பதில் உரைத்தார். உரைத்தவர் மேலும் தம் உறுதியை வலியுறுத்தினர்.

தேவரீரை அரசனகப் பெற்றுள்ள எங்களுக்கு வேறு என்ன தேவை? யாதொரு குறையும் என்றும் வாராது; இகலோக சுக போகங்களெல்லாம் ஒருங்கே வாய்ந்து உவந்து வாழ்ந்து வருதலாகிய இது ஒரு பெரிதா? பரமபதமடையும் பாக்கியமும் எமக்கு உரிமையாக உண்டு என்பார், "நின்னை எமது அரசு என உடையேம்; இஃது ஒரு பொருள் அல" என்றார். உன்னைத் தலைவனகப் பெற்றிருக்கிற எங்கள் உயர் நிலைமையை எவரும் நிலையிடலரிதென்பதாம்.

இங்ஙனம் சொன்னவர் பின்பு அன்பு மீறி அவசமுடன் பேசலாயினர். எங்கள் உயிரும் ஏழுலகங்களும் பிரம கற்பம் வரையும் உன் குடி உடைமைகளாகப் படியமைந்திருக்க வேண்டும் எனத் தொழுதகையராய் உழுவலன்புடன் உவந்து வாழ்த்தினர். உள்ளம் உருகினமையால் உரைகள் உயர்நிலையில் துள்ளியெழுந்தன.

"மலரோன் உகுபகல் அளவும் உறுக"

என்றது எளிமை தோன்ற ஓர் எல்லை குறித்தபடியிது. பிரமன் அழியும் வரையும் நீ நிலையாய் அரசுபுரிந்தருளவேண்டும் என்பதாம். பல்லாண்டு பல்லாண்டு ஆக நீ பாராண்டு அருள்க என்றவாறு. இராம ராச்சியத்தை உயிரினங்கள் உவந்துள்ளமை இதனால் உணர்ந்துகொள்ளலாம்.

கோமகன் நிலைமையும் குடிகளின் தகைமையும் பூமகள் இன்புற இங்கே பொங்கி யுள்ளன. "வையம் உயிராக அதனை உய்யத்தாங்கும் உடலன்ன மன்னனாய்" இவ்வையன் உருவாகி யுள்ளமையால் உயிர்கள் இங்ஙனம் பரவசமாகிப் பாராட்டலாயின. ஆன்ம வுரிமைகள் ஈண்டு மேன்மை சுரந்து மிளிர்கின்றன.

பிற வுயிர்கள் நலமுற ஒருவன் விரும்புவனாயின் அவன் நலத்தை உலகமுழுவதும் ஒருங்கே விழைந்து உவந்து நிற்கும் என்னும் உயர்ந்த ஒரு தத்துவமும் இங்கே உய்த்துணர நின்றது.

தன் உள்ளநலத்தினளவே உலகம் உவந்துகொள்ள அரசன் உயர்ந்து விளங்குகின்றான். எல்லாரும் நலமுற எண்ணி வருபவன் பல்லாற்றானும் பலன் பெற்றுப் பதவியில் உயர்கின்றான்.

## உள்ளத்தளவே உலகம் உள்ளது

விக்கிரமார்க்கனும் பட்டியும் ஒரு நாள் மாலையில் அயலூர் ஒன்றில் மாறுவேடம்பூண்டு வேறு நோக்குடன் உல்லாசமாய் வெளியே உலாவப் போயினர். சாலை வழியே சிறிது தூரம் போகவே எதிரே மிகவும் முதியவன் ஒருவன் விறகு சுமந்து வெய்துயிர்த்து வந்தான். அவனைக் கண்டதும் அரசன் உள்ளம் இரங்கினான். "ஐயோ! தள்ளாத வயதில் இந்தக்கிழவன் தளர்ந்து வருந்துகின்றானே" என்று அருகே வருகின்ற அமைச்சனிடம் உளைந்து மொழிந்தான். உடனே அவன் யாதும் பதிலுரையாமல் அந்தக் கிழவனிடம் வந்து, 'அப்பா! இந்த நாட்டை ஆளுகின்ற அரசனைக் குறித்து நீ கேள்விப்பட்டிருக்கின்றாயா?" என்று கேட்டு நின்றான். நிற்கவே, அவன் பட்டியை விழைந்து நோக்கி, "என்னையா நீ இப்படிப் பேசுகின்றாய்! எங்கள் விக்கிரமார்க்க மகாராசாவைத் தெரியாதவனும் உலகத்தில் உண்டா? இந்தச் சூரியன்போல் அந்தச் சூரியனும் உலகமெங்கும் ஒளி வீசி நிற்கின்றது; அது கருணைக் கடல்; கற்பக தரு; தரும

நிலையம்; அப்புண்ணிய மூர்த்தியை எண்ணினாலே எங்கள் பசியெல்லாம் தீர்ந்துபோமே" என ஆர்ந்த அன்புடன் நேர்ந்து பேசினான். அவனை அனுப்பிவிட்டு மன்னனை நோக்கி மந்திரி புன்னகை புரிந்தான். "என்ன பட்டி! இவ்வயோதிகன் என்னை இன்னவாறு புகழ்ந்து போற்றுகின்றான்" என அரசன் வியந்து கேட்டான். அமைச்சன் பதில் உரையாது பாணித்து நின்றான். அவ்வமயம் அவ்வழியே ஒரு இளங்குமரி தண்ணீர்க்குடத்தைத் தலையில் வைத்துக்கொண்டு தருக்குடன் வந்தாள். அவளது நிலையைக் கண்டதும் வேந்தன் நெஞ்சம் கடுத்தான். "ஆடவர் நிற்பதைக் கொஞ்சங்கூட மதியாமல் இந்தக் கழுதை கைவீசி வருகின்ற ஒய்யாரத்தைப் பார்த்தாயா?" என்று பட்டியிடம் பரிந்து உரைத்தான். அதற்குள் அவள் அருகே வந்தாள். அவளை நோக்கி, "அம்மா! நீ விக்கிரமார்க்க மன்னனைக்கேள்விப் பட்டதுண்டா?" எனப் பட்டி கேட்டான். "அவனைக் கேட்டு எனக்கு ஆகவேண்டியது என்ன?" என்று அவள் அடமாகப் பதிலுரைத்தாள். "அவர் இன்று இறந்துபோனதாக வதந்தி; அதனாலே தான் உன்னைக் கேட்டேன் அம்மா!" என்று பட்டி மீட்டும் விநயமாகச் சொன்னான். "அட! அந்தக் கழுதை போனால், இன்னொரு கழுதை வந்துவிட்டுப் போகின்றது; எங்களுக்கு என்ன வந்தது?" என்று அவள் விரைந்து போனாள். மன்னன் மனம் கொதித்தான்; மந்திரி அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு மெய்யை உணர்த்தினான்:

"அரசர் பெரும! தாங்கள் முன்னம் அக்கிழவனிடம் அன்பு புரிந்தமையால் அவன் தங்கள்பால் ஆர்வங்கொண்டாடினான். இத்தருணியிடம் குரோதம் கொண்டமையால் அவள் விரோதங்கொண்டு வெகுண்டு பேசினாள். மனிதனுடைய உள்ளத்தின்படியே உலகம் அவனுக்கு எதிரொலி செய்கின்றது.

மானச தத்துவங்கள் எவரும் எளிதில் அறியாதபடி அதி நுட்பங்களை யுடையன. தம் இயக்கத்தின் அளவே அகிலத்தையும் அவை ஆட்டி வருகின்றன. தண்ணளி நிறைந்து புண்ணிய எண்ணங்கள் பொதிந்த பொழுதுதான் ஓர் உயிர் கண்ணியம் மிகப்பெறுகின்றது. தன்னுயிர் என மன்னுயிர்களைப் புரந்து வருகின்றவன் எவனோ அவனே பொன்னுயிராய் உயர்ந்து

போகின்றான்." என இன்னவாறான ஆன்ம தத்துவ நலங்களைப் பட்டி விளக்கி யருளினான். வேந்தன் வியந்து கேட்டு உவந்து நின்றான். இந்தக்கதை நிகழ்ந்த உண்மை எவ்வாறாயினும் மனிதனுடைய மனோதத்துவ நிலையை இனிது விளக்கியுள்ளது.

தன் மனம் வாக்கு காயங்களால் ஒருவன் பிறவுயிர்க்குச் செய்யும் நலம் தீங்குகளெல்லாம் தனக்கே உரிமையாய் விளைந்து பெருகி விரைந்து வருகின்றன என்பதை இதனால் உணர்ந்து கொள்ளலாம். விதைத்தே விளைவாம் என்க.

இராமன் குடிகள் நலத்தைக் கூர்ந்து கருதினான்; அவை அவனை நெடிதுபேணி நெஞ்சுருகி நின்றன. அந்நிலையினைக் கலைநலங் கனியக் கவி காட்டியிருக்கிறார். கோசல நாட்டவர் பேசுவதில் வல்லவர் என்பதைக் கூர்ந்துணரும்படி இங்கே குறித் தருளினார்.

அஃது இஃது எனச் சொற்செட்டாக இலக்கண வரம்போடு சுட்டியுள்ளமை ஒட்டி யுணர வுரியது.

"விளைக பொலிக அஃதே" (சிந்தாமணி, 231) என்புழி "நினது நினைவே" என்பதை அஃதே என்று குறித்திருத்தல் காண்க. தேவரீர் எண்ணியவாறே எல்லாம் சேமம் எனச் சனங்கள் ஒரு சொல்லால் இங்ஙனம் உணர்த்தி நின்றார்.

வருமொழி முதலில் உயிர் எழுத்து வரின் நிலைமொழிச் சுட்டிலுள்ள ஆய்தம் கெடாது நிற்கும்; மெய்வரின் கெடும் என்பது இயல்விதி.

"முன்னுயிர் வருமிடத்து ஆய்தப்புள்ளி
மன்னல் வேண்டும் அல்வழியான." (தொல்காப்பியம்)

என்பதை ஈண்டு எண்ணிக்கொள்க. ஐய, ஒரு என உயிர் முதல்மொழிகள் வந்துள்ளமையான் சுட்டுகளில் ஆய்தம் ஒட்டி நின்றது. நாட்டுப் பேச்சிலும் நலம் படிந்திருந்த தென்பதாம்.

பொது மக்கள் இவ்வளவு அறிவும் நுட்பமும் அமையப் பேசினார் என்றதனால் அத்தேசத்தின் நிலைமை தெளிவுற வந்தது.

## பருவ நிலை

உலகுயிர்கள் உள்ளம் உருகி இங்ஙனம் உவந்து போற்ற இச்செல்லமகன் நல்லன பயின்று நலம் பல புரிந்து நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் எழில் சிறந்து ஒளி மிகுந்து இனிது வளர்ந்து வந்தான்.

வயது பதினாறு ஆயது. கலைகள் முழுவதும் நிரம்பிப் பூரணசந்திரன்போல் இந்த இராமச்சந்திரன் பொலிந்து விளங்கினன். அங்ஙனம் விளங்கிவருங்கால் ஒரு நாள் விசுவாமித்திரர் திருவயோத்திக்கு வந்தார். தசரதனைக் கண்டு தாம் செய்யும் வேள்விக்கு உதவிபுரியும்படி இராமனைத் துணைதர வேண்டினர். மன்னன் முதலில் மறுகினன். பின்னர்த் தேறித் தன் இன்னுயிரனைய குமாரனை முனிவரிடம் கையடையாக உதவினன்.

## கதை எழுச்சி

இதிலிருந்துதான் இராமசரிதம் புத்தொளி பெற்றுப் பொலிந்து விளங்குகின்றது. காரிய விளைவுகள் சீரிய நிலையில் சிறந்து காவியத்தில் கனிந்து வந்துள்ளன. கதை வளர்ச்சி சுவை மிகத் தோய்ந்து எங்கணும் சுமுகமாய்ச் சொலித்து நிற்கின்றது. இயற்கை நிகழ்ச்சியாய் இனிது வளர்ந்து புனித நிலையில் அது பொலிந்து விளங்குந்திறம் நுணுகி யுணருந்தோறும் உவகை நிலையமாய் ஓங்கி வருகின்றது. இராமகதை கம்பரது கலையழகோடு கலந்து உம்பர் அமுதமாய் உயர்சுவை பெற்றுள்ளது. ஒரு புண்ணிய சரிதம் கண்ணியமான கலைப்பெருக்கில் கனிந்து வந்துள்ளமையால் மண்ணவரெல்லாரும் எண்ணரிய காலம் மாந்தி மகிழ அது நீண்டு நிலவுகின்றது. தரும நிலையமாகவும் நீதி நிலையமாகவும் வீரநிலையமாகவும் அன்பு நிலையமாகவும் இன்ப நிலையமாகவும் விரிந்து பரந்து அஃது உயர்ந்து ஒளிர்கின்றது. அதன் வகையும் தொகையும் வரம்பிடலரியன. அழகும் அமைதியும் காண்பரெவர்க்கும் என்றும் புதியனவாய் இன்பம் பயந்து யாண்டும் உயர் நலங்களை விளைத்து வருகின்றன.

## இராமன் கோசிகர்பின் சென்றது

வந்த மாதவர்க்கு உதவி புரிந்து வரும்படி தந்தை அருளவே இம் மைந்தன் எழுந்தான். ஆயுதசாலையுள் புகுந்தான். போர்க்

கோலம் புனைந்து வில்லும் கையுமாய் வெளியே வந்தான். அழ கொளிதவழ வீரப்பொலிவுடன் அன்று வில் ஏந்திவந்த இராமனைக் காணவே காமனும் நாணினான். ஆணழகன் என்று ஆதரமீதூர்ந் தான். ஊர்ந்தும், "சிவனை மயக்கிய நான் இவனை மயக்கேனா" என அவன் இயல்பின்படி நினைந்து விரைந்து துணிந்து மிதிலை யில் போய் ஒளிந்து இவனது வரவை எதிர்பார்த்திருந்தான்.

இராமன் பூண்டபடியே இலக்குவனும் வீரவுடை தரித்து வில்லுடன் வந்தான். முன்னவனை மாத்திரம் முனிவர் வேண்டி யிருப்பினும் பின்னவன் என்ன வகையிலும் இணைபிரியாதவனாத லால் அண்ணனைத் தொடர்ந்து ஆர்வமொடு நின்றான். தன் செல்லக்குழந்தைகள் வில்லேந்தி வந்த வீர நிலையைக் கண்டதும் வேந்தன் உள்ளம் வியந்து உவகைக் கடலில் ஆழ்ந்தான் ஆயினும் பிள்ளைப் பிரிவை நினைந்து பேதுறலானான். பின்பு துணிந்து அனுப்பினான். மைந்தரை அழைத்துக்கொண்டு மாதவர் போயினார். பருவம் நிரம்பு முன் பொரு திறம் விழைந்து முனி வர் பின் அன்று இவ்விருவரும் போனது பொருவரும் காட்சி யாய்ப் பொலிவெய்தி நின்றது. கண்டவரெல்லாரும் கண் குளிர நோக்கிக் கைகுவித்து நின்றார். வீரதேவதை ஈருருவடைந்து பாரில் நடந்து சென்றதுபோல் இவர் தொடர்ந்து சென்றார். வெற்றித் திருவும் விழைந்து வந்து இவரது கொற்றப் புயத்தில் குடி புகுந்தமர்ந்தாள்.

கண்கொள்ளாக் கட்டழகாகிய இந்த அரசிளங் குமரர் இருவரும் கால் நடந்துசென்று அன்று ஏழு நாழிகை வழி கடந் தனர். மாலையடைந்தது; அடையவே அங்கோர் இனிய பூஞ் சோலையில் முனிவருடன் தங்கி உணவருந்தி உவந்திருந்தனர். மறுநாள் வைகறையில் எழுந்து தென்கிழக்கு நோக்கி மூவரும் வந்தார். இவர் கங்காநதியை அடையவும் சூரியன் உதயமாயி னான். அவ்வுதய நிலையையும், அவ்வமையம் இவர் அங்கு அடைந் ததையும் குறித்துக் கவி உரைத்திருப்பது அடியில் வருவது.

உதயகால வருணனை

தாழ் மாமழை தழுவு நெற்றியால்
சூழி யானைபோல் தோன்று மால்வரைப்
பாழி மாமுகட்டு உச்சி பச்சைமா
ஏழும் ஏறப்போய் ஆறும் ஏறினார். (கையடைப் படலம், 23)

ஆதவன் உதிக்கவும் மாதவர் அரசிளங்குமரர்களுடன் கங்கை கடந்த காட்சியைக் கவி இப்படிக் காட்டியிருக்கிறார்.

மால்வரை என்றது இங்கே உதயகிரியை. தாழும் மா மழை என்றது கீழே தாழ்ந்து வந்து படிந்து தவழ்ந்துள்ள மேகசாலங்களை. மழை = மேகம். அம்மலை முகத்தே வெண்மையான மேகம் படிந்துள்ளமையான் முகபடாம் அணிந்த மதயானை போல் தலை நிமிர்ந்து நிலையுயர்ந்து அது நிலவி நின்றதென்பதாம்.

சூரிய உதயம் மலையில் தோன்றிவருகின்றது என்பது நூல் மரபு. மேல் நாட்டு நூல்களிலும் இது வழங்கப்பட்டுள்ளது.

"Look, the morn in russet mantle clad,
Walks over the dew of yon high eastern hill."
(Hamlet, I. 1)

"குணதிசை மலையில் குளிர்பனிமேல் உதயஒளி செவ்வாடை புனைந்து உலாவுகின்றது பார்!" என ஆங்கிலப் பெருங் கவிஞராகிய ஷேக்கிஸ்பியர் குறித்திருக்கிறார். மால் வரை உச்சியில் ஏற என்றதோடு இது இணையொத்து வந்துள்ளமை காண்க.

சூரியனுடைய இரதத்தில் பூட்டப்பட்டுள்ள குதிரைகள் பசுமை நிறமுடையன; ஏழு என்னும் தொகையின ஆகலான் பச்சை மா ஏழும் என்றார். ஒளி வடிவமான சூரிய மண்டலத்தின் முன்னே வேத சந்தங்கள் ஊழ்முறை யமைந்து ஏழ்வகையாக ஒலி செய்துள்ளன; அவற்றைக் குதிரைகளாகப் புராணங்கள் இங்ஙனம் உருவகஞ் செய்து வரலாயின.

"ஏழும் ஏறப்போய் ஆறும் ஏறினர்"

என்றதில் சொல்நயம் உல்லாசமாய் உவகையை விளைத்துள்ளது. ஆறு என்றது நதியோடு எண்ணையும் குறித்து நின்றது. மொழிகளோடு கவிகள் ஒரோ வழி இவ்வாறு உவகையாய் விளையாட நேர்கின்றனர்.

"அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்;
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்;—நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும்
முருகா! என் றோதுவார் முன்." (முருகு)

இதன் கண்ணும் எண்ணங்கள் எண்ணப்பட்டுள்ளமை காண்க.

அன்பர் ஏதேனும் அஞ்சி முகம் வாடின் உடனே ஆறுதலை யண்ணல் ஆறுதல் செய்ய நேரே தோன்றுவர்; பராமுகமாய் ஒருகால் நினைந்தாலும் அவ்வள்ளலுடைய இருகால்களும் உள்ளத்தே ஒளி செய்து தோன்றும் எனத் தம் அனுபவத்தை இக் கவிஞர் இங்ஙனம் விளக்கியிருக்கிறார்.

தாம் கருதிய எண்ணங்களையும் அநுபவங்களையும் தெளிவாக உலகிற்கு உணர்த்துதலோடு உவகையின்பங்களும் விழுமிய நிலையில் விளைய மொழிகளைக் கவிகள் அழகுடன் வெளியிடுகின்றனர்.

## அங்க நாடு அடைந்தது

வழி நடந்து இவ்வாறு நதியடைந்த மூவரும் கங்கையில் நீராடிக் காலை யுண்டி கொண்டு தென்திசை நோக்கி வந்தார். அங்கநாடு சேர்ந்தார். பிற்பகலில் அங்கோர் இளமரக் காவுள் தங்கினார். அங்ஙனம் இருக்குங்கால் அந்தத் தேசநிலையைக் குறித்துக் கோசிகரிடம் இராமன் சில கேள்விகள் கேட்டான். அவர் பதில் உரைத்தார். இந்த உரையாடலில் முனிவர் பல சரிதங்களை விளக்கியிருக்கிறார்.

## கோசிகர் கதைகள் சொன்னது

சிவபெருமானுடைய நெற்றிக்கண் அக்கினியால் எரிந்து போன மன்மதனது அங்கம் ஆகிய எலும்பு உகுந்துள்ளமையால் அது அங்கநாடு எனப் பெயர் பெற்றது எனவும், அங்கே ஒரு முறை அப்பரமன் யோகம் புரிந்திருந்தான் எனவும், அந்த ஆச்சிரமத்தில் அருந்தவர்கள் என்றும் உறைந்திருக்கிறார்கள் எனவும், அது தவலோகம்போல் மிகவும் பரிசுத்தமுடையது எனவும், அதன் மகிமை அளவிடலரியது எனவும் அறிவித்தருளினார்.

பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேல் முடுகினார் அறிவுசென்று
உற்றவா னவன்இருந்து யோகுசெய் தனன்எனில்,
சொற்றவாம் அளவதோ? மற்றிதன் தூய்மையே!

(தாடகை வதைப் படலம், 3)

என அந்தத் தவ நிலயத்தைக் குறித்து இந்தவாறு முனிவர் உரைத்திருக்கிறார். இதில் சிவபெருமானைக் குறித்திருக்கும்நிலை உய்த்துணரத் தக்கது. தவசி வாக்குகள் தத்துவ நோக்கின.

பற்று=உற்ற பொருள்களில் ஊன்றிநிற்கும் உள்ளக்காதல்.
அவா=உறாத பொருள்களைநாடி ஓடி யுழலும் ஆசை.

இருவகைப் பற்றுக்களையும் அறவே ஒழித்துப் பிறவிதீர நிற்கும் அரிய துறவிகளுடைய உத்தமமான தத்துவ ஞானத்தால் அருமையாகத் தரிசிக்கத்தக்க பெருமான் எனச் சிவ பரம்பொருளை இங்கே உணர்த்தியிருக்கிறார். வால் உணர்வு என்பது நூலுணர்வுக்கு மேல்பட்டது; தெய்வத் தன்மையுடையது; யாதொரு மாசுமின்றி மிகவும் தெளிந்து தூய்மையாயுள்ள தத்துவ ஞானம் இங்கே வாலுணர்வு என வந்தது.

பற்றுஅவாக்களோடு படிந்துழலுகின்ற மாலுணர்வு பரிசுத்தனை பரமனை யாதும் அணுகாது ஆதலால் அவனை அணுகவல்ல உணர்வு நிலையை நுணுகி யுணருமாறு இங்கே நுவன்றருளினர்.

"மேலமுடுகினர் அறிவு சென்று உற்றவானவன்" என்றதிலுள்ள உரைநுட்பத்தையும், உணர்வின் வேகத்தையும், உயர் யோகத்தையும் ஊன்றி நோக்குக. வானவன் என்றது மகாதேவன் என்றவாறு.

துன்பமயமான பிறவிக்கு மூலகாரணமாயுள்ளது அவா ஆதலால் அது அடியோடு ஒழிந்த பொழுதுதான் பிறவி தீர்ந்து பேரின்பம் காணமுடியும் என்பதாம். "வேரொடும் பசை அற" என்ற தொனிக்குறிப்பினல் அவா அணுவளவிருந்தாலும் பிறவி அறாதென்பது தெரியலாகும்.

"*அவாஎன்ப எல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து" (குறள், 361)

என்ற தேவர் வாக்கையும் நன்கு சிந்தித்துணர்க.

பற்றைவிடு; அவாவை ஒழி; அங்ஙனமாயின் உடனே உனக்குச் சிவானந்தப்பேறு உண்டாம் என உயிர்க்கு உய்தியான உண்மை இங்கே உணர்த்தப்பட்டுள்ளது.

மனத்தை மாசுறுத்தி மனிதனை நீசப்படுத்தும் ஆசை அற்றபோதுதான் ஈசன் உற்றவனுவான் என்க.

* அவாவை வித்து என்றது அல்லல் எல்லாவற்றிற்கும் ஆதிமூலமாய் உள்ளிருந்து கிளைத்துப் பல்வேறு கிளைகளாய்ப் படர்ந்து விரிந்து படுகாடாய் அடர்ந்து நிற்கும் அதன் நெடிய கொடிய நிலை தெரிய என்க.

"ஆசைஎனும் பெருங்காற்றூடு இலவம்பஞ்சு
எனவுமனது அலையுங்காலம்
மோசம்வரும்; இதனாலே கற்றதும் கேட்டதும்
தூர்ந்து, முத்திக்கான
நேசமும்நல் வாசமும்போய்ப், புலனாயிற்
கொடுமைபற்றி நிற்பர் அந்தோ!
தேசுபழுத்து அருள்பழுத்த பராபரமே நிராசை
இன்றேல், தெய்வம் உண்டோ?" (தாயுமானவர்)

எனத் தாயுமான சுவாமிகள் உருகி உரைத்துள்ள இந்த அருமைப் பாசுரத்தை ஈண்டு ஊன்றி ஓர்ந்து உணரவேண்டும். நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ? என்ற இந்தக் கேள்வியில் எவ்வளவு கம்பீரம் உள்ளது? என்ன துணிவு! என்ன தெளிவு! என்ன உண்மை! எண்ணித் தெளிக.

நிராசையே தெய்வம் என்றதனால் அதனை எய்தியவரே தெய்வம் ஆவர் என்பது பெறப்பட்டது. ஆசை முற்றும் அற்றது நிராசை என்க. நீசமான ஆசை அறவே நிராசையான ஈசனாய் ஆன்மா நிலவும் என்பதாம்.

"பற்று அவா அற்றவர் உற்ற வானவன்" என முனிவர் முன் குறித்தது, உயிர்களின் மூலத் தொடர்பையும் உறவுரிமையையும் அநாதியான ஆதார நிலையையும் உணர்த்தி யுள்ளது.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" (குறள், 350)

என்றது பொய்யாமொழி. உய்தி காட்டியுள்ள இதனை முன்னதனோடு இணைத்து நோக்கி இனவுண்மை தெரிக.

வழியிடையே இராமனுக்கு முனிவர் கூறியிருக்கும் வரலாற்று முறைகளும், நாட்டு நிலைகளும், உணர்வுறுதிகளும் இங்ஙனம் பலவுள்ளன. உரைகள் உயர்ந்த நோக்கில் உதித்துவந்தன.

அழகிய ஓர் அரசிளங்குமரனும் அரிய கலை நிரம்பிய ஒரு பெரிய தவசியும் உடன்கலந்துள்ள இவ்வுறவு நிலையை ஆதாரமாக வைத்துக்கொண்டு பல அறிவு நலங்களை உலகம் உணர்ந்து கொள்ளக் கவி தொடர்ந்து வெளிப்படுத்தி வருகின்றார். வெளியிடுந் திறம் அளி சுரந்து தெளிவமைந்து ஒளி மிகுந்துள்ளது.

இங்ஙனம் தங்கியிருந்த முனிவர் மறுநாள் எழுந்து குமாரர்களுடன் வழி நடந்தார். இடையே பெரிய பாலைவனம் எதிர்ப்பட்டது. அது மிகவும் கொடிய வெப்பமுடையது. அதன் நிலைமையைக் கவி நன்கு விளக்கி யிருக்கிறார். தம் கருத்தில் கண்டதை உலகம் கண்ணெதிரே காணும்படி அவர் காட்டியுள்ளார். அந்தக் காட்சி அச்சமும் அவலமும் நிறைந்திருப்பினும் நிலத்தின் நிலைமையும் கலைத்திறமும் கலந்து உணர்ச்சிக்கு உவப்பை விளைத்து வருகின்றது. சிறிது விரிய நேரினும் பொறுமையுடன் கூர்ந்து நோக்கத் தக்க உரிமை மிக வாய்ந்தது. பாலையைக் குறித்துவரும் பாடல்கள் அடியில்வருவன.

## பாலை நிலம்

பருதிவா னவன்நிலம் பசையறப் பருகுவான்
விருதுமேற் கொண்டுலாம் வேனிலே அல்லது, ஓர்
இருதுவே றின்மையால் எரிசுடர்க் கடவுளும்
கருதின்வேம் உள்ளமும்; காணின்வேம் நயனமும். (1)

படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவேம், முடிய மூடிருளும் வான் முகடு வேம்;
விடியுமேல் வெயிலும் வேம்; மழையும்வேம்; மின்னினோடு
இடியும் வேம் என்னில்வேறு யாவை வேவாதவே? (2)

விஞ்சுவான் மழையின்மேல் அம்பும் வேலும்படச்
செஞ்சவே செருமுகத் தன்றியே திறனிலா
வஞ்சர்தீ வினைகளால் மானமா மணி இழந்து
அஞ்சினார் நெஞ்சுபோல் என்றும் ஆறாதரோ! (3)

பேய்பிளந் தொக்கநின் றுலர்பெருங் கள்ளியின்
தாய்பிளந் துக்ககா ரகில்களும் தழையிலா
வேய்பிளந் துக்கவெண் தரளமும் விடவரா
வாய்பிளந் துக்கசெம் மணியுமே மனமெலாம். (4)

பாரும் ஓடாது நீடாதெனும் பாலதே;
சூரும் ஓடாது கூடாதரோ; சூரியன்
தேரும் ஓடாது மாமாகமீ தேரின் நேர்
காரும் ஓடாது; நீள்காலும் ஓடாதரோ. (5)

கண்கிழித் துமிழ்விடக் கனலரா அரசுகார்
விண்கிழித் தொளிருமின் அனையபன் மணிவெயில்
மண்கிழித் திடஎழும் சுடர்கள் மண்மகள் உடல்
புண்கிழித் திடஎழும் குருதியே போலுமே. (6)

புழுங்குவெம் பசியொடு புரளும் போர் அரா
விழுங்கவங் தெழுந்தெதிர் விரித்த வாயின்வாய்
முழுங்குதிண் கரிபுகு முடுகி மீமிசை
வழுங்குவெங் கதிர்சுட மறைவு தேடியே. (7)

ஏகவெங் கனலர சிருந்த காட்டினில்
காகமும் கரிகளும் கரிந்து சாம்பின
மாகவெங் கனலெனும் வடவைத் தீச்சுட
மேகமும் கரிந்திடை வீழ்ந்த போலுமே. (8)

கானகத் தியங்கிய கழுதின் தேர்க்குலம்
தானகத் தெழுதலால் தலைக்கொண் டோடிப்போய்
மேனிமிர்ந் தெழுந்திடில் விசும்பும் வேம் என
வானவர்க்கு இரங்கி நீர் வளைந்தது ஒத்ததே. (9)

ஏய்ந்தவக் கனலிடை எழுந்த கானல்தேர்
காய்ந்தவக் கடுவனங் காக்கும் வேனிலின்
வேந்தனுக்கு அரசுவீற் றிருக்கச் செய்ததோர்
பாய்ந்த பொற் காலுடைப் பளிக்குப் பீடமே. (10)

தாவரும் இருவினை செற்றுத் தள்ளரும்
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போல் பசையும் அற்றதே. (11)

பொரிபரற் படர்நிலம் பொடிந்து கீழுற
விரிதலின் பெருவழி விளங்கித் தோன்றலால்
அரிமணிப் பணத்தரா அரசன் நாட்டினும்
எரிகதிர்க் கினிதுபுக்கு இயங்க லாயதே. (12)

(தாடகை வதைப் படலம், 5-16)

பாலை நில விளக்கம் காவியத்தின் இடையே இப்படி வந்திருக்கிறது. இந்தப் பாடல்களை ஊன்றிப்படித்துப் பொருள் நிலைகளையும் உணர்வுக் காட்சிகளையும் ஓர்ந்துகொள்ளுங்கள்.

சூரியனுடைய வெப்பம் மிகுந்த வேனில் பருவமே அங்கு நிலைபெற்றுள்ளது ; அதன் கொதிப்பை அக்கினிதேவன் நினைத்தாலும் அவனது நெஞ்சு வெந்துபோம் ; காணில் கண்கள் வேம்; சொன்னால் நா வேம் ; பகைவருடைய வஞ்சனையில் சிக்கி மானம் இழந்துநின்ற மேன்மக்களுடைய நெஞ்சம்போல் அது கொதித்திருந்தது ; கள்ளியும் அகிலும் கருகி, மூங்கில் வெடித்துப்பாங்கு எங்கும் பயங்கரமா யிருந்தது. கதிரவன் தேரும் அதன் நேரே ஓடாது ; மேகமும் போகாது; காற்றும் இயங்காது. நில வெடிப்புகள் பாதலம் வரையும் தெரியும்படி கோரமாயிருந்தன. வழி தவறி வந்த யானைகள் அங்கே நிழல் காணாமல் தவித்துப் பாம்புகளின் வாய்களை முழைகள் என நினைந்து புகுந்துமாய்ந்தன. பிராணிகள் எல்லாம் கரிந்து வெந்து கழிந்து கிடந்தன ; கானல் நீர் மேலே படர்ந்திருந்த தோற்றம் அவ்வெப்பம் வானுலகை எரித்து விடாதபடி வளைந்து நின்றதுபோல் விளங்கியது; முற்றத் துறந்த முனிவர்களுடைய நெஞ்சம் போலவும் வேசியர் உள்ளம் போலவும் அந்நிலம் பசையற்றிருந்தது. கமர் வழிகளில் வெயில் வெப்பம் ஆழ்ந்து பாய்ந்து அனல் மிகுந்து நின்றது என இன்ன வாறு அதன் கொடுமைகள் குறிக்கப்பட்டுள்ளன.

காட்டில் எதிர்ந்த கடும் சுரத்தைப் பாட்டில் அமைத்துக் கம்பர் இப்பகுதியை இங்ஙனம் நீட்டியிருக்கிறார். இந்நீட்சி கதைப்போக்குக்குச் சிறிது தடையாயிருப்பினும், இயற்கைக் காட்சிகளை விளக்கிக் கலைப்பண்பை உணர்த்திக் கற்பனைத்திறம் கனிந்து நிற்றலால் உவகைக்கு இடமாய் ஒளி செய்துள்ளது.

நீரும் நிழலும் இன்றி எப்பொழுதும் வெப்பம் மிகுந்துள்ள நிலப்பகுதிகள் எல்லா நாடுகளிலும் இடையிடையே மிடைந்து கிடக்கின்றன. ஆயினும், இந்நாட்டுக் கவிஞர்கள் அதனைப் பகுத்தறிந்து வகுத்து உணர்த்தியுள்ளதுபோல் வேறு எந்நாட்டு இலக்கியங்களும் விளக்கவில்லை.

அதனை ஒரு திணையாகவே அமைத்துத் தொல்காப்பியர் விரித்து விளக்கியிருக்கிறார். அந்தப் பேராசிரியர் விதித்துள்ள இலக்கண முறையைத் தழுவிச் சங்கத்துச் சான்றோர் பலரும் பாலை நிலப் பகுதியை விதந்து பாடியிருக்கின்றனர். பொருளீட்டல் கருதித் தலைவியைப் பிரிந்து போகின்ற தலைவன் இடையே

எதிர்ந்த சுரத்தை நோக்கி வருந்த மீதூர்ந்து மனைவியைநினைந்து மறுகியது முதலாகத் துறைகள் பல அமைந்து அம்முறைகள் விரிவடைந்துள்ளன. பாலையும் தமிழும் என்னும் பேரோடு அவை ஒரு நூலாகி வரவுரியன. ஈண்டு விரிவஞ்சி விடுகின்றேன். ஆயினும் அவற்றின் போக்கும் நோக்கும் பொருளமைதிகளும் தெரிய மாதிரிக்குச் சில காட்டுகின்றேன்.

"பெயல்மழை துறந்த புலம்பறு கடத்துக்
கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி
துறைநமொன் தூவித் துணைப்புறவு இரிக்கும்
அத்தம் அரிய என்னார், நத்துறந்து
பொருள்வயிற் பிரிவார் ஆயின்இவ் வுலகத்துப்
பொருளே மன்ற பொருளே;
அருளே மன்ற யாரும்இல் லதுவே." (குறுந்தொகை, 174)

இது வெண்பூதி என்னும் புலவர் பாடியது. தன்னைத் தனியே விட்டு அயலே பொருள் தேடப் போகத் துணிந்த தலைவனைக் குறித்து ஒரு தலைவி தோழியிடம் சொல்லியபடியிது. நம்மைத் துறந்து வெம்மை மிகுந்த காட்டின் கொடுமையையும் கருதாமல் பொருளை விரும்பி இவர் பிரிவாராயின் பொருள் ஒன்றுதான் மதிக்கத்தக்கது; அருளை யாரும் மதியார் போலும்? அந்தோ! இவ்வுலகநிலையிருந்தபடி என்னே! என்று அவள் நொந்து கூறியிருத்தலை இதில் நுனித்து நோக்குக. இவை சன்னையில் பேசிய நன்னய மொழிகள். அடியில் வருவதும் காண்க.

"அரிதாய அறனெய்தி அருளியோர்க்கு அளித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியும் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயின் சென்றநம் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய்! வலிப்பல்யான் கேளினி;
அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாஅய்! காடென்றார், அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின் உண்ணும் களிறெனவும்உரைத்தனரே;
இன்பத்தின் இகந்தொரீஇ இலைதீந்த உலவையால்
துன்புறூஉம் தகையவே காடென்றார் அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறகரா லாற்றும் புறவெனவும் உரைத்தனரே:

கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉம் தகையவே காடென்றார் அக்காட்டுள்
இன்னிழல் இன்மையால் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவும் உரைத்தனரே;
என வாங்கு,
இனைநலம் உடைய கானம் சென்றோர்
புனைநலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்
பல்லியும் பாங்கொத்து இசைத்தன
நல்லெழில் உண்கணும் ஆடுமால் இடனே.''
(பாலைக்கலி, 11)

இது, பொருள் ஈட்டம் கருதிப் பிரிந்து போயுள்ள தலைவர் விரைந்து வந்து விடுவார் என ஒரு தலைவி தன் தோழியிடம் சொன்னது. அவர் கடந்து சென்ற வனத்தைக் குறித்துச் சில குறிப்புக்களை உரைத்துத் தெளிவுபடுத்துகிறாள்: ''கொடிய பாலை நிலத்தில் குடிநீர் கிடையாது; ஓரோர் இடத்தில் அரிதாகச் சுனையில் கலங்கிக் கிடக்கும் சிறுநீரை ஆண்யானை காணின் முதலில் தன் பெட்டைக்கு ஊட்டியே பின்பு அது குடிக்கும்; வெப்பம் பொறுக்காமல் தவிக்கும் பேடையை ஆண்புறா தன் சிறகுகளால் வீசி ஆற்றி நிற்கும்; யாதொரு நிழலும் கிடையாமல் வெயிலில் மறுகுகின்ற பிணைமானைத் தன் உடல் நிழலில் ஒதுங்கியிருக்கும்படி கலைமான் உதவி யருளும்'' என அச்சுரத்திலுள்ள ஆண் இனங்கள் தம் துணைகளுக்குச் செய்யும் அன்புரிமையையும் ஆதரவையும் முன்பு என்பால் நேரில் சொல்லியிருத்தலால் அந்த உணர்ச்சியோடு விரைவாக அவர் வந்து விடுவார் என்றே நம்புகின்றேன்; அதற்கு ஏற்பப் பல்லியும் வலப்புறத்தே ஒலிக்கின்றது; எனது இடக்கண்ணும் துடிக்கின்றது; என்று அவள் உரையாடியிருத்தலை இதன்கண் ஊன்றிப்பார்க்க.

பெருங்கடுங்கோ என்னும் புலவரால் இது பாடப்பட்டது. பாலைப்பண்புகளைத் துலக்கிப் பலநலங்களையும் கலைத்திறம் கனிய விளக்கியிருத்தலால் பாலைபாடிய பெருங்கடுங்கோ எனப் பண்டைப் புலவர்களால் அவர் போற்றப் பெற்றுள்ளார். நீரும் நிழலுமிழந்து சீரழிந்து போயுள்ள வன்னிலத்தைப்பற்றிப் பன்னலங்களும் விளங்க முன்னோர் இங்ஙனம் நன்னயமாகப் பாடியிருக்கின்றனர். இன்னவாறு சங்கப் பாடல்கள் பல வுள்ளன.

"நதி கொண்டன வெம்பரல் நுண்ணிலைவேல்
பதி கொண்டு பரந்தன போன்றுளவால்
விதி கண்டவர் அல்லது மீது செலார்
வதி கொண்டதொர் வெவ்வழல் வாய்சொலின்வேம்; (1)

குழவிப்பிடி குஞ்சரம் மாழ்கும் எனத்
தழுவிச் சுடு வெவ்வழல் தாங்குவன;
கெழுவிப் பெடையைக் கிளர்சேவல் தழீஇத்
தொழுதிச் சிறகிற் றுயராற் றுவன; (2)

கலையின்பிணை கன்றிடும் என்று கசிந்து
இலையின் நிழல் அவ்வயின் இன்மையினல்
நிலையின் நிழல்தா னது நின்று கொடுத்து
உலையும் வெயில்நின் றுருகும் உரவோய்!" (3)

(சீவக சிந்தாமணி)

பாலைநிலக் கொடுமையை உரைத்துவந்திருக்கும் இது மேற் குறித்த பாடலோடு நேரொத்து நிற்றலறிக.

அந்தச் சுரத்தின் வெம்மையைச் சொல்லின் வாய் வேம் என இதில் வந்துள்ளது. பகரினும் நாவேம்; கருதின் உள்ளம் வேம்; காணின் நயனம் வேம் என மூன்று நம் கவிகளில் வந்துள் ளன. கவிஞர் வாக்குகள் காலக்குறிப்புகளைக் காட்டுகின்றன.

கந்தபுராணத்தில் கச்சியப்ப சிவாசாரியர் பாடியிருக்கும் பாலைநிலவருணனை கம்பர் வாக்கோடு முழுதும் ஒப்புநோக்க வுரியது. கதையின் பொருத்தமும் இசைந்திருக்கின்றது. முருகப் பெருமான் சூரபன்மனை வெல்லக்கருதி வானவர்களோடு வட திசையிருந்து தென்திசை நோக்கி வருங்கால் இடையே ஒரு பாலைவனம் எதிர்ப்பட்டது. சுரம்புகு படலம் என்று பேரிட்டு அதனை ஆசிரியர் நயமாக விளக்கியிருக்கிறார். சிலபாடல்கள் அடியில் வருவன காண்க.

"கற்றை யங்கதிர்ப் பரிதியும் மதியும்அக் கானம்
சுற்றி ஏகுவதல்லது மிசைபுகார்; சுரரும்
மற்றுளார்களும் அனையரே; எழிலியும் மருத்தும்
எற்றை வைகலும் அதன்புடை போகவும் இசையா. (1)

சேனம் வெம்பணி ஒண்புறு இரலைமான் செந்நாய்
யானை யாதிகள் அவ்வனத் திருக்கவும் ஆவி
போன தில்லையால் அங்கியில் தோன்றிய பொருள்கள்
மேனி கன்றுவ தன்றியே விளியுமோ அதனல்? (2)

எண்ணினும் சுடும் பாலையங் கானிடை எழுந்த
தண்ணகன் புகை அழல்படு கின்ற காட்சியவே
விண்ணின் நீலமும் செக்கரும் அவற்றினல் வெடித்த
புண்ணும் மொக்குளும் கதிர்களும் உடுக்களும் போலாம்.

கோல வெங்கதிர் மதியிவர் வைகலும் கொடிய
பாலை வெஞ்சுரத் தாரழல் வெம்மைபட் டனரோ
காலை தன்னினும் மாலையம் பொழுதினும் கங்குல்
வேலை தன்னிலும் பிறவினும் வேலைநீர் படிவார். (4)

ஒள்ளிதாகிய தலைமையிற் பிறந்துளோர் உலகம்
எள்ளும் நல்குர வெய்தலால் இழிந்தவர் கண்ணும்
கொள்ளு மாறொரு பயன்குறித் தேகல்போல் கொடிய
கள்ளி தன்புடை நிழலுக்கு ஒதுங்குவ கரிகள். (5)

விஞ்சு கானல்வெண் தேரினை யாறென விரும்பி
நெஞ்சில் உன்னியே இரலைமான் மடப்பிடி நெடுந்தாட்
குஞ்சரம் திரிந் துலைவன கொடியவெம் பணிகால்
நஞ்சு தன்னையும் அருந்துவ னுமலிநீர் நசையால். (6)

கள்ளி பட்டன பாலையும் தீந்தன கரிந்து
முள்ளி பட்டன எரிந்தன குராமரம் முளிந்து
கொள்ளி பட்டன காரகில் அன்னதால் கொடுந்திப்
புள்ளி பட்டது போன்றது பாலையம் புவியே.''

(கந்தபுராணம், சுரம்புகுபடலம்)

இந்தக் கவிகளை ஊன்றிப் படித்து முந்திவந்துள்ள கருத்துக் களோடு இணைத்து நோக்கி இனநலங்கள் தெரியவேண்டும். பாலை நிலமாகிய ஓரே பொருளைக் குறித்துப் பேசியிருப்பினும் கவிஞர் களுடைய கல்விப் பயிற்சி, காலச்சூழல், சமயப்பற்று, சார்ந்த பழக்கம், உலக அனுபவம், உள்ளப் பான்மை முதலியன தனித் தனியே அவரவருடைய உரைகளில் ஊடுருவிக் கிடக்கின்றன.

வெப்பம் மிகுந்த ஒரு நிலப்பகுதியைக் குறித்துச் சரித்திர ஆசிரியர்கள் எழுதினல் அங்குள்ள கொதிப்பு நிலை, மணல் திடர் கள், பட்ட மரங்கள், பரல்கற்கள், பாழிடங்கள் முதலியவற்றை வரட்சி தோன்ற விரித்துப் போவர்; கவிஞர் கூறின் அவற்றின் இயற்கை நிலைகளோடு உணர்ச்சி நலங்கள் பல உள்ளம் படிந்து வியப்பும் விம்மிதங்களும் விளைந்து உவப்புகள் வளர்ந்து வருகின் றன. சொல்லும் முறை சுவை கனிந்துள்ளமையால் எல்லாரும் இன்புறுகின்றார்.

பாலைநிலக் கொதிப்புக்கும் அதன் பசையற்ற தன்மைக்கும் நம் கவியரசர் குறித்துள்ள உவமானங்கள் கருதி யுணரத்தக்கன.

மேன்மையான ஒரு சுத்த வீரனைப் போரில் நேரில் வெல்லாமல் எதிரிகள் வஞ்சச் சூழ்ச்சியால் வயப்படுத்தியபொழுது அவன் நெஞ்சம் எப்படிக் கொதிக்குமோ அப்படி அந் நிலம் என்றும் ஆறாத கொதிப்பாய் உள்ளே மீறி நின்றது என்பார்,

"வஞ்சர் தீவினைகளால் மானமாம் மணி இழந்து
அஞ்சினார் நெஞ்சுபோல் என்றும் ஆறாதரோ"

என்றார். இதில் எவ்வளவு சிந்தனைகள் அடங்கியுள்ளன! நன்கு சிந்திக்கவேண்டும். மானம் என்றதனால் அவரது மேன்மை தெரிய வந்தது. மணி என்றது அஃது உயிர்க்கு அணிசெய்துள்ளமை யான் என்க.

உண்மையான வீரர்கள் எங்கும் நேர்மையாகவே நேர்நின்று தொழில் செய்வர்; கையால் ஆகாத பேடி மக்கள் தாம் கோளும் குண்டுணிகளும் புரிந்து சதியாலோசனைகள் செய்து அதிபாதகங்களை விளைப்பர் ஆதலால், அவரது புன்மை நிலையும் புலையும் தெரியத் "திறன் இலா வஞ்சர் தீவினை" என்றார்.

நல்ல மானிகளுக்கு இழுக்கு நேர்ந்தால் அவரது உள்ளக் கொதிப்பு வெளியே சொல்லமுடியாதபடி எல்லை மீறி நிற்கும்; அந்நிலை என்றும் நிலையான நிலக்கொதிப்புக்கு உவமையாய்வந்தது.

கொடிய வஞ்சகனான சகுனி செய்த சூதினால் மகாவீரர்களான பஞ்சபாண்டவர்கள் நிலையழிந்து நெஞ்சங் கொதித்து நின்ற நிலையை நினைந்து சொன்னதுபோல் இது நினைக்கவுள்ளது. அஞ்சினார் என்றதில் தொனிக்குறிப்பும் இணைந்தெண்ண நின்றது.

அஞ்சுபேரும் ஆறாக் கொதிப்பாளராய் அடவிபோய் அழன்றிருந்து மறுபடி வந்து அம்பும் வேலும் மழையெனச் சொரிந்த செருமுகத்தில் எதிர்ந்து செறுநரைவென்று விளங்கிய கதை விளக்கமுடையதாயினும், இங்கே வழங்கிய குறிப்பு கவியின் காலத்தில் நேர்ந்த ஓர் அநுபவ நிகழ்ச்சியாகவும் ஊகிக்கவுள்ளது.

புறத்தே வெப்பு நிலைக்கு இவ்வாறு ஓர் ஒப்புரைத்தார்; அகத்தே நீர்ப்பசையற்று யாண்டும் அது நெடிது வரண்டுள்ளமைக்கு வேறு இரண்டு உவமைகள் கூறலாயினர்.

முற்றத் துறந்த முனிவர்களுடைய உள்ளம் போலவும், வஞ்சவேசியர் நெஞ்சம் போலவும் யாதொரு பசையும் இன்றி அந்நிலம் வறந்து பரந்து கிடந்த தென்பதாம்.

"தன்னைக் கண்டவர் கண்ணீரைத் தான் காண்ப தல்லது யாண்டும் உண்ணீர் இல்லா ஒரு பெரும் பாழ்" என்றபடி நெடிது வரண்டு நீர்ப் பசையற்றுள்ள அப்பாலையின் பரிதாப நிலையை மாறுபாடான இருவேறுவமைகளால் கூறியிருக்கும் திறம் கூர்ந்து சிந்திக்கற் பாலது.

"இருவினை செற்று, மூவகை அரண் கடிந்து, முத்தியில் போபவர்" என்றதில் போர்க்காட்சியும் வெற்றித் திறனும் விளங்கி நிற்றலறிக. முத்தியுள் புகுதலின் அருமையும், அதில் புக வல்லவரது இயல்பும் உயர்வும் இதனால் அறியலாகும்.

காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்றும் ஒன்றன்பின் ஒன்றாய் உயர்ந்து பேரின்ப நிலையைக் காணமுடியாதபடி பெருகி நின்று உயிர்களுக்குத் துயர் விளைத்து வருதலால் அவை பகை அரண் என உருவகிக்க நேர்ந்தன.

முத்தி நகரத்தை அடைதற்கு இன்ன இன்ன தடைகள் இடையே நீண்டு நிற்கின்றன; அவற்றையெல்லாம் தாண்டிச் செல்லவல்லவரே அந்த ஆனந்த நிலயத்தை அடைய முடியும் என இதில் அறிவுறுத்தியருளினர். எவரும் எளிதே தாவுதற்கு அரியது என்பது தாவரும் என்றதனால் அறிய நின்றது.

உலகப் பற்று முற்றும் அற்றுப் பரத்தையே பற்றி நிற்கும் முத்தர்களுடைய உள்ளத்தில் பாசப் பசை யாதும் இராது ஆதலால் பசையற்ற பாலைநிலத்திற்கு அது உவமையாய் வந்தது. உள்ளே பகை அற்றமையால் எவ்விடங்களிலும் விளைவுகள் அற்றன என்க. இனி எவ்வழியும் வேறு பிறப்பில்லை என்பதை அவ்வறப்பு இவ்வழி உணர்த்தி நின்றது.

பொருள் ஒன்றிலேயன்றி வேறு எவரிடமும் ஒரு சிறிதும் அன்பின்றி வன்கண்மை மிக்குள்ளமையால் அவ்வன்புலத்திற்கு வேசியரது நெஞ்சு நிலையைப் நேர் எடுத்துக்காட்டினர்.

"பொன்விலை மகளிர் மனம் எனக் கீழ்போய்" என *முன்னம் அகழியின் ஆழத்துக்கு உவமை குறித்தார்; இங்கே பாலையின் பசையற்ற நிலைமைக்கு அதனை ஒப்புரைத்திருக்கிறார். பசை = அன்பு, ஈரம். ஈரமற்ற கோர நெஞ்சினர் என அவர்மேல் ஈரமின்றி உலகம் ஓர உணர்த்தியபடியிது. ஈரப்பற்று இல்லாத நிலத்திற்குப் பாசப்பற்றும் நேசப்பற்றும் இல்லாத மனங்களை இனங்களாக்கி நம் மனங்கொள்ளச் செய்துள்ளார்.

உயர்ந்த ஞானியர் உள்ளத்தையும், இழிந்த வேசியர் மனத்தையும் ஒருங்கே பிணைத்து நம் கண்முன் நிறுத்தி உண்மையை உணர்த்தியிருக்கும் விசித்திரம் வியப்பை விளைத்து உவப்பூர்த்துள்ளது. உள்ள வுணர்ச்சிகள் ஆழ்ந்து சிந்திக்கவுரியன.

பசையற்ற பாலையைக் கூறுமிடத்தும் பசையுள்ள உறுதி நலங்களை இவ்வண்ணம் கவி இனிதாக உதவியருள்கின்றார்.

சிறந்த மதயானை வெயில் வெப்பத்திற்கு அஞ்சிக் கரிந்து போன கள்ளிநிழலில் வந்து ஒதுங்கி நிற்றலுக்கு, உயர்ந்த குடிப் பிறப்பாளர் வறுமைத் துயரால் வாடி இழிந்தவரிடம் போய் இன்னலுழந்து நிற்றலைக் கச்சியப்பர் முன்னம் எடுத்துக் காட்டியிருக்கிறார். இக்காட்சி எவ்வளவு பரிதாபமாய் உள்ளத்தை உருக்கியுள்ளது! உலக நிலைகளை உயிருருக உணர்வு தெளியக் கவிகள் இங்ஙனம் உரைத்து வருகின்றனர்.

பாழான பாலைநிலமும் கவிகள் வாக்கில் படிந்து வரும்பொழுது பல நலங்களும் விளைந்து நிலையுயர்ந்து நிலவுகின்றது.

"பாலைஎன் றுலர்ந்த செந்நிலங் கானல்
  பரப்பினைப் புனல்என ஓடிச்
சாலவும் இளைத்துத் தவித்துழை யினங்கள்
  தனித்தனி மறுகிய மறுக்கம்
மாலுளர்ந் திருண்ட புன்மனச் சிறியோர்
  மருங்கினில் இரந்திரந்து இடைந்து
காலறத் தேய்ந்த பலகலை மேலோர்
  கருத்தினில் வருத்தம் ஒத்தனவே" (சீறாப்புராணம்)

பாலை நிலத்தில் தோன்றிய கானல் பரப்பினை நீர் என நினைந்து மான்கள் ஓடித் தவித்தமைக்கு இதில் குறித்திருக்கும் உவமையைக் கூர்ந்து நோக்குக. உழை = மான்.

* பாலகாண்டம், நகரப்படலம், பாடல் 14.

நல்ல கல்விமான்கள் பொல்லாத உலோபிகளிடம் போய்ப் பொருள் விரும்பித் திரியும் புலையாட்டம்போல் இனிய கலைமான்கள் கொடிய கானலை நப்பி ஓடிக் காலோய்ந்து நொந்தன என்பதாம். கவிஞர் கருத்துக்கள் எப்படியெல்லாம் ஓடியிருக்கின்றன!

சயங்கொண்டான் என்னும் புலவர் பாலையைக் குறித்துப் பாடியிருப்பதில் மட்டும் சிறிது பார்த்துவிட்டு மேலேபோவோம்.

"காடுதனைக் கடத்தும் எனக் கருமுகிலும்
வெண்மதியும் கடக்க அப்பால்
ஓடியிளைத் துடல்வியர்த்த வியர்வன்றே
உகுபுனலும் பனியும் ஐயோ! (1)

விம்முகடு விசைவனத்தின் வெம்மையினைக்
குறித்தன்றே விண்ணோர் விண்ணின்
மைம்முகடு முகில்திரையிட்டு அமுதவட்டம்
ஆலவட்டம் எடுப்பதையோ! (2)

அணிகொண்ட குரங்கினங்கள் அலைகடலுக்கு அப்பாலை
மணல் ஒன்று காணுமல் வரை எடுத்து மயங்கினவே."
(கலிங்கத்துப்பரணி)

பாலைக் கொடுமையை இப்பாவலர் இப்படி ஒரு அதிகாரம் பாடியிருக்கிறார். இங்கே காட்டியிருக்கும் மூன்று தாழிசைகளிலும் இவரது கற்பனை நிலைகளைக் கருதிப் பாருங்கள். அந்தப் பாலை வனத்தில் உள்ள ஒரு மணலை எடுத்துக்கொண்டுபோய்க் கடலில் போட்டால் உடனே கடல்நீர்முழுவதும் வற்றிப்போம்; அதன்பின் காலால் எளிதாக நடந்துபோய்விடலாம்; இந்த உளவு தெரியாமல் பலமலைகளையும் பறித்தெடுத்து கடலில் அணைகட்டிக் குரங்குகள் முன்னம் கருத்தழிந்துபோயினவே! என்று இங்கே இவர் இரங்கி உரைத்துள்ளமை காண்க.

கவிஞர்களுடைய அறிவுக் காட்சிகளும், கற்பனை விளைவுகளும், உலகானுபவங்களும், உரைத் திறங்களும் இங்ஙனம் பலவாறு பெருகிக் கலையுலகில் உவகை நலங்களை விளைத்து உலகுயிர்கள் நலமுற நிலையாய் நின்று என்றும் ஒளிவீசி யுலாவுகின்றன.

## மந்திரம் உபதேசித்தது

இத்தகைய பாலை வனத்தை யடைந்தவுடனே விசுவாமித்திரர் இராம லக்குவரை நினைந்து இரங்கினர். "மனவுறுதி வாய்ந்த மகாவீரர்களே ஆயினும் உடல் மிக மெல்லியர்; அசை

ளங்குமரர்கள் ; நல்ல சுகபோகிகள் ; இப்பாலையில் இவர்கள் கால்கள் நடக்க வல்லனவல்ல" என்று இரக்கமீதூர்ந்து இனிது நோக்கி இருவரையும் அருகணைத்து இரண்டு விஞ்சை மந்திரங்கனைச் செவியில் உபதேசித்தார். அவை பலை, அதிபலை என்னும் பெயரினையுடையன. அவற்றை உள்ளூற ஓர்ந்து இவர் சிந்தித்தார். சிந்திக்கவே அக்கொடிய சுடுசுரம் குளிர் பூம்பொழில்போல் இனிதாயிசைந்து இதம் பயந்திருந்தது. இராமன் அதிசயமடைந்து தம்பியைப் பார்த்து அருந்தவர் நிலையை வியந்து மகிழ்ந்தான். பின்பு யாதொரு சிரமமுமின்றி முனிவர் பின் இருவரும் அப்பாலையில் இனிது நடந்து சென்றார். அங்ஙனம் செல்லுங்கால் அக்காட்டின் பாழ்நிலையைச் சூழநோக்கி அதன் காரணத்தைக் கோசிகரிடம் இராமன் கேட்டான். கேட்ட நிலையை அடியில் பார்க்க.

" சூறிபடு கங்கையந் தொங்கல் மௌலியான்
விழிபட வெந்ததோ ? வேறு தானுண்டோ ?
பழிபடா மன்னவன் படைத்த நாட்டின் ஊங்கு
அழிவது என் காரணம் ? அறிஞ ! கூறென்றான்."

"சிவபெருமானுடைய நெற்றிக் கண் அக்கினியால் வெந்ததா ? அல்லது வேறு எரியால் நீறுபட்டதா ? புண்ணியசீலனான மன்னவன் ஆளுகின்ற நாட்டின் இடையே இவ்வாறு பாழான படுகாடு படர்ந்து கிடப்பதற்குக் காரணம் யாது ? நாதா !" என்று இக்கோமகன் கேட்கவே அம்மாதவன் பதில்கூற நேர்ந்தான்.

## தாடகை வரலாறு

இதிலிருந்துதான் தாடகை சரிதம் விளைந்து வருகின்றது. கதையை வெளியே கொண்டு வருகின்ற நயமும் நளினமும் உவகை நிலையமாயுணர்வு சுரந்துள்ளன. உரைகள் உறுதி சூழ்ந்தெழுந்தன.

தாம் வேள்விச் சாலையை அடையுமுன்னமே இடையே முடித்தற்குரிய அரிய கருமத்தை இக் கேள்வி முடித்தருளியது என்று முடிவினை நினைந்து முனிவர் பெருமகிழ்வடைந்தார். காரிய முடிவில் கண்ணூன்றி விரிய நிலையை விரித்து விரைந்து பயன்பெற அழுமாக அமைதி ஆய்ந்து மொழிந்தார். அவரது உரைத்திறம் வியத்தகு நிலையில் விரிந்து வந்துள்ளது. அன்று அவர் கூறியபடியை அடியில் வரும் பாடல்களில் அறிக.

என்றலும் இராமனை நோக்கி இன்னுயிர்
கொன்றுழல் வாழ்க்கையள் கூற்றின் தோற்றத்தள்
அன்றியும் ஐயிரு நூறு மையன்மா
ஒன்றிய வலியினள் உறுதி கேளெனு; (1)

மண்ணுருத் தெடுப்பினும் கடலை வாரினும்
விண்ணுருத் திடிப்பினும் வேண்டிற் செய்கிற்பாள்
எண்ணுருத் தெரிவரும் பாவம் ஈண்டிஓர்
பெண்ணுருக் கொண்டெனத் திரியும் பெற்றியாள். (2)

பெருவரை இரண்டொடும் பிறந்த நஞ்சொடும்
உருமுறழ் முழக்கொடும் ஊழித் தீயொடும்
இருபிறை செறிந்தெழு கடலுண்டாமெனின்
வெருவரு தோற்றத்தள் மேனி மாறுமே. (3)

நீடகை அரவுறழ் நீலக் கையினள்
காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரேல்
ஆடவர் பெண்மையை அவாவும் தோளினுய்!
தாடகை என்பதுஅச் சழக்கி நாமமே. (4)

கன்னவில் தோளினுய்! கமலத் தோன் அருள்
மன்னுயி ரனைத்தையும் வாரி வாய்ப்படுத்து
இன்னுயிர் வளர்க்கும் ஓர் எரிகொள் கூற்றம் நேர்
அன்னவள் யாவள்என் றறையக் கேட்டியால்.
(தாடகை வதைப் படலம், 21-25)

தாடகையைக் குறித்து முன்னுரையாக முனிவர் இவ்வாறு பேசியிருக்கிறார். இந்த வார்த்தைகளிலிருந்து அவள்மீது இவர் கொண்டுள்ள கோப நிலைமையும் அவளது கொடுமை யியல்பும் தெரியநின்றன. நேரில் கண்டவராதலால் நெஞ்சறிய வுரைத்தார்.

அடுந்திறலினள்; கொடுந் தொழிலினள்; ஆயிரம் யானைப் பலம் கொண்டவள்; மண்ணுலகையும் விண்ணுலகையும் எண்ணியபடியே எளிதில் வெல்லவல்லவள்; எண்ணிட முடியாத பாவங்களெல்லாம் ஒருங்கு திரண்டு ஓர் பெண் உருவம் எனப் பெருகி நின்றவள்; கடல் அவள் உடலுக்கும், ஊழித்தீ செம்பட்டை மயிருக்கும், நஞ்சு கண்களுக்கும், இடிமுழக்கம் வாய்மொழிக்கும், மலைகள் முலைகளுக்கும், பிறைகள் வக்கிர தந்தங்களுக்கும் ஒப்புரைக்கும்படி உக்கிர வடிவமுடையவள்; அக்கிரமங்கள் மிக்கவள் என இப்படி அவளை அருந்தவர் விளக்கியிருக்கிறார்.

பெருவரை இரண்டோடும் என்று தொடங்கி மிகவும் நாகரீகமாக உருவக அணியில் உரை செய்திருப்பது ஊன்றி உணரவுரியது. உள்ளத் தீமைகள் தெரிய உருவின் கொடுமை குறித்தார்.

இங்ஙனம் பேசி வரும்பொழுதே இராமனது பேரழகில் ஈடுபட்டு முனிவர் பரவசமாகியுள்ளார்.

"கண்ணில் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!" என்று இராமனை அவர் விளித்துள்ளது களிப்பு மிகுந்து வந்தது. பற்றற்ற முனிவருடைய வாயிலிருந்து இவ்வளவு பற்றுடன் மொழிகள் வெளிவந்துள்ளன. உரைகளிலுள்ள உணர்ச்சி நிலைகள் ஓர்ந்து சிந்திக்கத் தக்கன. "ஆடவர் பெண்மையை அவாவும் தோள்" என்னும் இந்தத் தொடர்மொழி எண்ணி எண்ணி இன்புறற்பாலது.

இராமனைக் கண்ட ஆடவர்கள் "நாம் ஒரு பெண்ணாய்ப் பிறந்திருந்தால் இந்த அழகனை மணந்து இன்புறலாமே" என்று ஒவ்வொருவரும் ஆசைமீதூர்ந்து ஆர்வம் புரிவர் என்பதாம்.

ஆடவர் இவ்வாறாயின் பெண்கள் நிலைமை எவ்வாறாம்?

கண்டவர்களுடைய கண்ணையும் மனத்தையும் கவர்ந்து எண்ணரிய இன்ப நிலையமாய் இராமனது எழில்நிலை யிருந்துள்ளமையை முனிமொழி இங்ஙனம் வெளிப்படுத்தி நின்றது. "பும்ஸாம் த்ருஷ்டி சித்தாப ஹாரிணம்" என்றார் வால்மீகி முனிவரும். ஆடவருடைய கண் மனங்களைக் கவரும் அழகன் என்பது மேற்குறித்த தொடரின் பொருளாம்.

ஆடவரை விதந்து குறித்தது அதிசய நிலை தெரிய வந்தது. பெண்கள்மேல் ஆண்களும், ஆண்கள் மீது பெண்களும் ஆதாமீதூர்ந்து காதல் கொள்ளுதல் இயல்பு. அந்த இயற்கை நிலையை மீறியுள்ள அற்புத அழகை விற்பன விநயங்களுடன் இங்கு விளக்கியபடியிது.

"புண்ணவாம் புலவு வாட்கைப் பொலன்கழற் புனைந்த பைந்தார்க்
கண்ணவாம் வனப்பினானைக் காமனே கண்ட போழ்தும்
பண்ணவாம் பவளச் செவ்வாய்ப் படாமுலைப் பரவை யல்குற்
பெண்ணவா நிற்கும் என்றால் பிணையனாட்கு உய்தல் உண்டோ."
(சீவக சிந்தாமணி, 1528)

இது சீவகனைக் குறித்துக் கூறியது. அவனைக் காமன் கண்டாலும் தான் ஒரு பெண் ஆக அவாவி நிற்பன் என்பதாம்.

இதனையும் நம் கவியையும் இணைத்து நோக்கி இயைபு தெரிக.

"பெண்ணாளவன்றே ஆண் அவா வுறும்இப் பேரெழில்
என்று பேதுறுவார்" (நைடதம், சுயம்வரப்படலம், 82)

நளனைக் குறித்துக் கூறியுள்ள இதுவும் ஈண்டு எண்ணத் தக்கது. ஆடவர் பெண்மையை அவாவும் தோளன் என இராகவனை நம் கவி குறித்துள்ளபடியே முன்வந்த கவிகள் இருவரும் தங்கள் காவியத் தலைவரைக் குறித்திருக்கின்றனர். அழகைப் பற்றிய இந்த அழகிய பிரயோகம் சிந்தாமணிக்கு முந்தியே தமிழில் வழங்கப்பட்டுள்ளது.

சிறந்த அழகனைப்பற்றிப் புகழ்ந்து கூறுங்கால், "ஆணுக்கு ஆள் ஆசைப்படவேண்டும்" என்று வியந்து பேசுதலை உலக வழக்கிலும் காண்கின்றோம்.

இராமனது திருமேனி அழகில் உள்ளம் பறிபோய் முனிவரே உருகி யுரைத்திருத்தலால் அதன் புனித மகிமை தனியுணர நின்றது. தேவர் முதல் யாவரையும் அது பரவசப்படுத்தி யுள்ளமை பல இடங்களிலும் அறியப்படுகின்றது.

காதலொழிந்துள்ள மாதவர் இங்ஙனம் ஆதரம் புரிந்துள்ளமையால் அவ்வெழில் திவ்விய நிலையினதென்பது தெளிவாம்.

மன்மதனை மாத்திரம் விதந்து சுட்டிச் சீவகன் அழகை அங்கே குறித்தார்; உலகில் தோன்றிய ஆடவரனைவரையும் ஒருங்கே வரைந்து இராமனது பேரழகை இங்கே விரித்தார். காமன் முதலிய பூமான்கள் எல்லாரும் இராமன் கவினில் கழி பெருங் காதலராய் உளமுருகி யுள்ளனர் என்பதாம்.

கதாநாயகன்பால் கவிக்குள்ள காதல் வரம்பு மீறி இடங்கள் தோறும் இங்ஙனம் வெளிப்பட்டு வருகின்றது.

அவாவும் மேனியாய் என்னாது தோளினாய் என்றது வீரத் திறலை விளைந்தென்க. அழகில் மட்டுமன்று ஆற்றலிலும் ஆடவரெவராயினும் இராமன் எதிரே பெண்மை நீர்மையே அமைந்து எண்மையாளராய் மென்மையுறுவர் என்பதாம்.

கொடிய தாடகையினுடைய கோர வடிவத்தை வருணித்து வரும்பொழுது இனிய இராமனது எழில் நலம் முனிமொழியில் வந்தது காரிருளில் பேரொளிபோல் பெருமகிழ்வா யுள்ளது.

இவ்வாறு கோசிகர் கூறிய உரைகளைக் கேட்டதும் இராமன் மிகவும் வியப்படைந்தான். "ஒரு பெண் இவ்வளவு கொடுமையும் வன்மையும் உடையவளா யிருப்பளா? ஆயிரம் மதயானைப் பலம் அமையுமா? அளவுக்கு மீறிய வலியமைந்திருத்தற்கு யாது காரணம்? இயற்கை நிலைக்கு விரோதமாயுள்ளதே?" என ஐயமுற்று அருந்தவரிடம் விநயமுடன் வினவினன். வினவவே அவளது மூல சரித்திரம் முழுவதையும் முறையே முனிவர் சொல்லத் தொடங்கினர். அவ்வரலாறு அடியில் வருவது.

## தாடகையின் பூர்வ நிலை

தேவர்களுள் ஒரு பிரிவினரான இயக்கர் குலத்திலே சுகேது என்னும் அரசன் ஒருவன் ஆட்சி புரிந்து வந்தான். அவன் பேராற்றலுடையவன். எல்லாச் செல்வங்களும் நிறைந்திருந்தும் பிள்ளைப்பேறு இல்லாமையால் அவன் உள்ளம் வருந்தி உபவாசமிருந்து பிரமனை நோக்கி அருந்தவம் புரிந்தான். மலரவன் தோன்றினன். தோன்றவே அரசன் தொழுது வணங்கித் தன் விழைவினை உரைத்தான். வேதன் ஆதரவுடன் நோக்கி, "அப்பா! உனக்கு இந்தப் பிறப்பில் மைந்தர்கள் இல்லை; ஒரு மகள் தோன்றுவள்; அவள் பேரழகும் பெருவலியு முடையளாய் யாரும் வியப்ப அமைந்து நிற்பள்" என்று அருள் புரிந்து விட்டு அயன் அகன்று போயினன். அவ்வாறே பெண் குழந்தை பிறந்தது. கண் குளிர நோக்கிக் களிப்பு மீதூர்ந்து வசுந்தரி என்று பேரிட்டு வளர்த்து வந்தான். பருவம் அடைந்தாள். இளமை சுரந்து எழில் நிறைந்துள்ள தனது அருமை மகளுக்கு உரிய நாயகனை அவன் நெடிது நாடி முடிவில் தனது மரபில் ஒரு குறுநிலமன்னனான சுந்தன் என்னும் அழகனுக்கு மணமுடித்துத் தந்தான். தரவே உலகநிலையை அறவே மறந்து இருவரும் ஒருவராய் மருவி நுகர்ந்து காமபோகத்தில் களிப்பூர்ந்து கிடந்தார்.

## போகம் துய்த்தது

"காமனும் இரதியும் கலந்த காட்சி யிது
ஆமென இயக்கனும் அணங்கனும் வேறு
யாமமும் பகலும் ஓரின்று என்னலாய்த்
தாமுறு பெருங்களிச் சலதி மூழ்கினர்,

## பிள்ளைகள் பிறந்தது

பற்பல நாட்செலீஇப் பதுமை போன்றொளிர்
பொற்பினாள் வயிற்றிடைப் புவனம் ஏங்கிட
வெற்பணி புயத்துமாரீச னும்விறல்
மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினார்.”

என்றதனால் அவரது அன்புக்காதலும் இன்ப நுகர்ச்சியும் இனிது புலனாம். இங்ஙனம் பிள்ளைகளைப் பெற்றுப் பெரும் போகங்கள் துய்த்து அவர் உள்ளங் களித்து வந்தார். அழகிய மனைவியையும், வலிய மக்களையும், செல்வ நிறைவையும் நினைந்து சுந்தன் செருக்கு மிகுந்து திமிர்ந்து நின்றான். அந்நிலையில் ஒரு நாள் வேட்டைக்குச் சென்றான். அங்கே அகத்திய முனிவரது ஆச்சிரமத்தைக் கண்டான். அணுகி நோக்கினான். சாந்த சீலராகிய அவர் இலைக்குடிசை யருகே அமைதியாய் அமர்ந்திருந்தார். அந்த அருந்தவருடைய பெருந்தகைமையை யாதும் உணராமல் அவரது குறுகிய உருவநிலையைக் குறித்து இவன் மிகவும் பரிகசித்தான். அவர் ஒரு சிறிதும் மாறு பேசாமல் புன்முறுவல் புரிந்து இன்முகத்துட னிருந்தார். இப்புன்மையாளன் மேலும் பொங்கி நின்று அங்கு நின்ற பூஞ்செடிகளைப் பறித்தெறிந்து புள்ளிமான்களை வதைத்தான்; பின்பு துள்ளி எதிர் வந்து “குள்ளனே! நீ பெரிய கள்ளனே” என்று எள்ளி யிகழ்ந்தான். அவர் கொதித்து நோக்கினார்; உடனே இவன் எரிந்துவிழுந்தான்.

“தழல் எழ விழித்தனன் சாம்பர் ஆயினான்”

என்றமையால் அன்று இவன் செத்துவிழுந்த நிலைமையும், அம்மெய்த் தவரது மேன்மையும் தெரிய நின்றன. இங்ஙனம் இறந்துபட்டதை மனைவி தெரிந்தாள்; மனங் கொதித்தாள்; மைந்தர் இருவருடன் விரைந்து ஓடி வந்தாள். முனிவரைக் கண்டாள். முனிவுமீக் கொண்டாள்; “இந்தக் குட்டையனே என் கொழுநனைக் கொன்றான்” என்று கொதித்து மண்டிக் கொல்லமூண்டாள்; மக்கள் இருவரும் பக்கம் வளைந்தார். அவரது கொடுமையையும் மடமையையும் கண்டு முனிவர் வெகுண்டார்; பண்டுபோல் பட்டழிய என்னாமல் பெண்டிரும் இளைஞரும் என்று கருதிச் சிறிது பொறுத்து நின்றார். அப்பொறுமையின் கருத்தறியாமல் கல்லுகளை வாரி வீசி அப்பொல்லாதவர் கொல்ல

முயன்றார். முனிவர் ஒல்லென அதட்டி "நீவிர் மூவரும் அரக்கராகி அடவியில் அலைக" என்று கடுத்துச் சபித்தார். அவ்வாறே உடனே கோர வடிவங்களை யடைந்து யாரும் நடுங்க அவர் அலறிஓடினர். ஓடினவருள் மாரீசனும் சுவாகுவும் பாதலம் புகுந்து சுமாலியிடம் அடைக்கலம் புகுந்திருந்தார். அவருடைய தாய் மாத்திரம் அந்த வனத்திலேயே தங்கி யிருந்தாள். சாபம் புரிந்த பின் அகத்திய முனிவரும் அயலிடம் போயினர். அந்த மாதவருடைய சாப அருள்களை வியந்து தேவரும் புகழ்ந்தார்.

இந்நிகழ்ச்சியில் பல உணர்ச்சிகள் விளக்கப்பட்டுள்ளன. அடியில் வருவன அறிக.

தமிழெனும் அளப்பரும் சலதி தந்தவன்
உமிழ்கனல் விழிவழி ஒழுக உங்கரித்து
அழிவன செய்தலால் அரக்கர் ஆகியே
இழிகென உரைத்தனன் அசனி எஞ்சவே. (1)

வெருக்கொள வுலகையும் விண்ணு ளோரையும்
முருக்கியெவ் வுயிரும்உண் டுழலு மூர்க்கராம்
அரக்கர்கள் ஆயினர் அக்கணத்தினில்
உருக்கிய செம்பென உமிழ்கண் தீயினர். (2)

ஆங்கவன் வெகுளியும் அறைந்த சாபமும்
தாங்கினர் எதிர்செயும் தருக்கிலாமையின்
நீங்கினர் சுமாலியை நேர்ந்து நிற்குயாம்
ஓங்கிய புதல்வரென் றுறவு கூர்ந்தனர். (3)

அவனொடும் பாதலத் தநேக நாட்செலீஇத்
தவனுறு தசமுகன் தனக்கு மாதுலர்
இவரெனப் புடைத்தழித் துலகம் எங்கணும்
பவனனில் திரிகுநர் பகுகி மைந்தர்கள். (4)

மிகுந்திறல் மைந்தரை வேறு நீங்குறுந்
தகுந்தொழில் முனிவரன் சலத்தை யுன்னியே
வகுந்துவின் வசுவரி வதிந்த திவ்வனம்
புகுந்தனள் அழிவெனப் புழுங்கும் நெஞ்சினள். (5)

(தாடகை வதைப் படலம், 38-42)

மாதவரது சாபமும், பாதகரது பரிதாப நிலையும் இங்ஙனம் அறிய நின்றன. அகத்திய முனிவரை இங்கே குறித்திருப்பது

கூர்ந்து நோக்கத்தக்கது. அது ஒரு சரித்திரக் காட்சியை உள்ளடக்கியுள்ளது.

"தமிழ் எனும் அளப்பரும் சலதி தந்தவன்"

என வந்ததனால் தமிழுக்கும் அவருக்கும் உள்ள உறவுரிமை உணரலாகும். சலதி=கடல். எவரும் எல்லை காண முடியாதபடி விரிந்து பரந்து ஆழ்ந்து நிறைந்திருக்கும் நீர்மையையும் நிலைமையையும் தலைமையையும் நினைந்து தமிழைச் சலதி என்றார்.

உவர்க்கடலைக் குடித்தார்; தமிழாகிய இனிய சுவைக்கடலைக் கொடுத்தார்; கொடிய பவக்கடலைக் கெடுத்தார் என்பதாம்.

இத்தகைய திவ்விய மகிமை வாய்ந்த தெய்வமுனிவரிடம் போய் வெய்யன புரிந்தமையால் சுந்தன் வெந்து நீறானான்; அவனுடைய மனைவியும் மக்களும் நொந்து வேறானார் என்றவாறு.

## மாரீசன் இருப்பு

வெருண்டு ஓடிய மாரீசன் தம்பியுடன் சுமாலியிடம் போய் ஒதுங்கி யிருந்தான். சுமாலி என்பவன் இராவணனுடைய தாயைப் பெற்ற பாட்டன். அரக்கர் குலத் தலைவன். தன் பக்கல் வந்து அபயம் புக்கவரை மக்களாக அவன் மதித்துக்கொண்டான். அந்த முறையிலேதான் இராவணனுக்கு மாரீசன் மாமன் என நின்றான். பின்வரும் கதை நிகழ்ச்சிக்கு இசைவான தொடர்புகள் சில முன்னுற இங்ஙனம் முடிக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு அங்கே ஒதுங்கிமறைந்திருந்தவர்கள் பின்பு இராவணன் ஆட்சிக்கு வரவே அவர் ஆற்றல் மிகுந்து வெளியே வந்து உலகமெங்கும் திரிந்து அல்லல்புரிந்து அழிம்புகள்செய்து வந்தார்.

"பவனனில் திரிகுநர் பதகி மைந்தர்கள்"

என்றதனால் அவரது அடலும் கடுமையும் அறிய வந்தன. பவனன்=சுழல்காற்று. சண்டமாருதம்போல் கண்டவிடங்களெங்கணும் கடிது திரிந்து அடுதொழில் ஆற்றினர் என்பதாம். பிள்ளைகள் அங்ஙனம் திரிய, தாய் இவ்வனத்தையே தனக்கு இருப்பிடமாக் கொண்டு நினைத்தபடியெல்லாம் கொடுந்துயர் இழைத்துக் கொடுந்தீமையாய் உள்ளம் கொதித்தோங்கி நின்றாள்.

யட்ச மரபில் பிறந்தும் அழகிய வுருவையிழந்து சாபத்தால் பாபத்தில் மண்டிப் படுகொலியாய்ப் பழி பாதகங்களைச் செய்தாள் என்க. தன் குடும்பம் ஒரு தவசியால் அழிந்து போயதென்ற கோபம் அவள் நெஞ்சில் நிலைத்திருந்தது ஆதலால், தவவேடம் பூண்டவர்களைக்கண்ட இடங்களிலெல்லாம்கொன்று தொலைத்துக் கொடுந்துயர் விளைத்தாள். தவத்திற்குரிய இனிய ஆச்சிரமங்களைச் சிதைத்துக் குளிர்பூம் பொழில்களை அழித்து அந்தவனமுழுவதையும் தனக்கு உரிமையாக்கித் தனியாட்சி செய்து வந்தாள்.

"வகுந்துவின் வசுவரி வதிந்தது இவ்வனம்
புகுந்தனள் அழலெனப் புழுங்கும் நெஞ்சினள்"

என்றதனால் அவ்வனத்தின் முந்திய நிலைமையும், அவள் வந்தபின் நேர்ந்ததும் அறிய நின்றன. வகுந்து=வழி. இந்த வழியெல்லாம் முன்னம் குளிர்நிழலும் கனி மரங்களும் நிறைந்து வண்டுகள் முரல வளம்பொலிந்திருந்தது ; இன்று இப்படி வெப்பமிகுந்து வெஞ்சுரமாயுள்ளது என்றார். வசு=மரங்களின் செறிவு. வரி=வண்டு, நெல், நிழல். "அலர்தாய் வரி நிழல்." (மலைபடுகடாம்) என்புழி வரியின் பொருளை யறிக.

முன்னம் எங்கும் இனிய நிழலுடையதாய்ப் பூத்துச் செழித்து வளம் பொலிந்திருந்த இவ்வனம் இவள் புகுந்தபின் இவ்வாறு பாழாயதென்று பரிதாபம் தோன்ற வுரைத்தார்.

ஒருத்தி நின்று அவ்வன முழுவதையும் அழித்து அவமாக்கிப் பாழ்படுத்தியுள்ளமையை ஓர்உவமையால் விளக்கியிருக்கிறார். அடியில் வருவது காண்க.

உளப்பரும் பிணிப்புறு உலோபம் ஒன்றுமே
அளப்பருங் குணங்களை அழிக்கு மாறுபோல்
கிளப்பரும் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப்பு அழித்து மாற்றினள்.
(தாடகைவதைப்படலம், 43)

தாடகையை உலோபத்தோடு ஒப்பவைத்து அவளது பழி நிலையையும், அழி செயலையும் இதில் இப்படி வெளிப்படுத்தியிருக்கிறார். உவமான நுட்பம் உய்த்துணர வுள்ளது.

## உலோபம்

உலோபம் என்பது பொருள்மேல் மண்டி மருள்கொண்டுள்ள பேராசை. அது மனிதனது மனத்தைக் கவர்ந்து எவ்வழியும் மீளமுடியாதபடி தன் வயப்படுத்தி நிற்கும் வன்மையது ஆகலான் உளப் பரும் பிணிப்பு என அதன் இருப்பும் இயல்பும் தெரிய வுரைத்தார். பிணிப்பு=கட்டு. உறு என்றது உற்று என்றவாறு. உள்ளத்தை முழுதும் பிணித்து உள்ளே உறைந்துள்ள உலோபம் என்னும் இழிகுணம் நல்ல குணங்களை யெல்லாம் நாசப்படுத்துதல் போல் வெளியே தாடகை ஒருத்தி நின்று அவ்வனத்திலுள்ள இனிய கனிமரங்கள் அனைத்தையும் அழித்துத் தொலைத்தாள் என்பதாம்.

ஒருவருக்கும் ஒன்றும் கொடாத கொடுமையே உலோபம் ஆதலின் எல்லாராலும் வெறுக்கப்பட்டு ஈனமாய் அது இழிக்கப் பட்டுள்ளது. அந்த ஈன இயல்பையுடையவனிடம் பொறுமை அடக்கம் முதலிய வேறு எவ்வளவு நல்ல குணங்களிருந்தாலும் அவையெல்லாம் நஞ்சுதோய்ந்த பால் போல் நாசமடைந்தொழிய அஃது ஒன்றே வெளி நீண்டு பழியாய் மிஞ்சி நிற்கும் ஆதலால் "உலோபம் அளப்பரும் குணங்களை அழிக்கும்" என்றார். அளப்பு அரும் என்றது அளவிடலரிய என்றவாறு. எல்லையில்லாத நல்ல இயல்புகளையெல்லாம் ஒரு புல்லிய உலோபம் புலைப்படுத்திவிடும் என்றதனால் அதன் பொல்லாப் புலை நிலை புலப்பட்டு நின்றது. "உத்தம குணங்களெல்லாம் உலோபத்தால் ஒழியுமன்றே" என்றதும் காண்க.

இங்ஙனம் குணநலங்களையெல்லாம் ஒருங்கே யழித்துத் தன்னையுடையானைப் பிண நிலைய மாக்கிப் பெரும் பிழையாய் நீண்டு நிற்றலால் குற்றங்களுளெல்லாம் கொடிய குற்றமாக உலோபம் குறிக்க நின்றது.

> "பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
> எண்ணப் படுவதொன் றன்று" (குறள், 438)

என வள்ளுவப் பெருந்தகை குறித்திருக்கும் இஃது ஈண்டு உள்ளி உணரற் பாலது. பற்றுள்ளம், இவறன்மை என உலோபத்திற்கு இரண்டு பெயர் சூட்டி அதன் படுநிலைமையை அடிகள்

விளக்கியிருக்கும் அழகு அதிசய நிலையது. உளப்பரும் பிணிப்பு என்னும் கவி இந்தக் குறட் கருத்தை நினைந்து வந்திருப்பது போல் தெரிகின்றது. நிலையினை நுணுகி உணர்ந்துகொள்க.

எவ்வகையான குற்றங்களோடும் உலோபத்தை ஒன்றாக ஒத்துவைத்து எண்ணலாகாது; அது நினைத்தாலும் நெஞ்சு வேகும்படியான கொடியது என்பார், "எற்றுள்ளும் எண்ணப் படுவது ஒன்று அன்று" என்றார். இழிந்த குற்றங்கள் எவற்றினும் கழிபெருந் தீமையாய் உலோபம் பழிபடர்ந்துள்ள தென்பதாம். ஆகவே அதன் பாபநிலையும் பாரிழவும் தெரிய வந்தன.

குற்றங்களுள் தலை சிறந்து குணநலங்களையெல்லாம் அடியோடழித்துப் படுபழிகளை நெடிது விளைத்து நிற்கும் கொடுமையுடைமையால் கடுமையாக அது இங்ஙனம் இகழப்பட்டது.

உலோபத்தை யுடையவன் உலோபி. இந்த இழி பெயரை எந்த மனிதனும் ஏற்றுக்கொள்ள நாணுவான். அதனை அனுபவத்தில் காணலாம். காணவே அது எவ்வளவு ஈனம் என்பது இயற்கையில் தெளிவாகின்றது. இழிவுகள் எவற்றினும் கழி பேரிழிவான இப்பழியியல்பு மனிதத்தன்மையை அடியோடு பாழ்படுத்தி விடுகின்றது; விடவே, அவன் எல்லாவற்றுள்ளும் கடையனாய் இழிந்து யாண்டும் எள்ளப்பட நேர்கின்றான் என்க.

கல்ஆலயமாம், தேவருமாம்; கழுதை கசடர் பொதிசுமக்கும்;
கடாவோ உழுது பயிரிடற்காம்; கட்டம் பன்றிக்கு இரையாகும்;
புல்லேறு ஈசர்வாகனமாம்; பொதியும் சுமக்கும்; பிணம் எனிலோ
பூசிமுடித்து மறையோர்க்குப் பொருளை ஈந்து புகழ் எய்தும்;
மல்லார் குட்டிச்சுவரெனிலோ மாடும் உரைஞ்சும், மறைவாகும்;
மதியாத் துடைப்பந் தானெனிலோ மாடகூடங்களை விளக்கும்;
அல்லா உலோபன் தனக்கிணையா யாரை யுரைப்பேன்புவிமீதில்
அவனைக் குறித்துக் கூறுமிடத்து அவனுக்கவனே சரிதானே."

(தனிப்பாடல்)

கழுதை பன்றி பிணம் முதலிய இழிந்த பொருள்களினும் உலோபி மிக இழிந்தவன்; அவனுக்கு இணையான இழிவு வேறு யாண்டும் இல்லை என இதில் சொல்லியுள்ளமை காண்க. புனிதமான மனித இனத்தை உலோபம் எவ்வளவு ஈனமாக்கி இழிவு படுத்தி அழிவுசெய்துள்ளது என்பது இதனால் இனிது புலனும்.

கொடைக்குணம் எவர்க்கும் இன்பமாய்க் குற்றங்களை யெல்லாம் அடக்கி உயர்ந்து ஒளி செய்து நிற்கின்றது; உலோபம் யார்க்கும் வெறுப்பாய் எல்லாக் குணநலங்களையும் அழித்து இழிநிலையில் வளர்ந்து பழி மிகுந்துள்ள தென்க. குணங்கள் கோடியிருப்பினும் உலோபி குன்றி நிற்பன் என்றதனால் குற்றங்கள் பல இருந்தாலும் கொடையாளி உயர்ந்து விளங்குவன் என்பது உணர வந்தது.

புகழும் புண்ணியமும் அடையத்தக்க பொருள் நிறைந்திருந்தும் அதனை மருளாக்கி மறைத்துப் பழியும் பாவமும் வளர்த்துத் தன்னை யுடையானை இழிமகனாக்கி விடுதலால் பிசுனம் மிகவும் ஈனமாக எங்கும் இழிக்கப்பட நேர்ந்தது.

"பொல்லா உலோபம் புகுந்திருக்கும் நெஞ்சிலருள்
நில்லா ததனால் நெடுஞ்செல்வம்—எல்லாம்கை
எய்தியிருந் தாலும் இரங்கார் இதம்செய்யார்
வெய்தாமந் நெஞ்சர் விதி."

என்றதனால் உலுத்தரது பரிதாப நிலை அறியலாகும்.

பொருள்மேல் பற்று மீறி வெறி மண்டி நிற்றலால் அவர் அருளற்றவராய் அவமடையலாயினர் என்க.

"Nature never makes men who are at once energetically sympathetic and minutely calculating." (Eliot)

"பணப்பற்றும் தயையும் (இருளும் ஒளியும் போல்) யாண்டும் ஒருவழிப்படா" என்னும் இந்த ஆங்கில வாக்கியம் ஈண்டு அறியத்தக்கது. உலோபம் அருளற்ற மருளது என்பதாம்.

எந்நாட்டிலும் எல்லாராலும் உலோபம் ஈனமாக இழிக்கப்பட்டுள்ளது. அந்நிலையை அன்னார் நூல்களில் அறிந்துகொள்ளலாம்.

"Misers are generally characterised as men without honour or without humanity, who live only to accumulate, and to this passion sacrifice every other happiness."

(Goldsmith)

"உலோபிகள் மானமும் மனிதத் தன்மையும் இன்றி, எல்லா இன்ப நலங்களையும் துறந்து பொருள் ஒன்றையே

தொகுக்க உயிர் வாழ்கின்றார்" என இதில் அவரைப் பழித்திருக்கிறார். ஆகவே உலுத்தர் எங்கும் பழிக்கப்பட்டுள்ளமை இவற்றால் அறியலாகும்.

"ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை" (குறள், 1003)

என்றதனால் உலோபிகளுடைய ஈனமும் இருப்பும் எவ்வளவு வெறுக்கப்பட்டுள்ளன என்பது எளிது புலனும்.

பொருள் பெற்றும் அருளற்று மருளுற்றிருக்கும் உலுத்தரது நிலைமையைக் காவியத்தில் பல இடங்களிலும் நளினமாகக் கவி காட்டியிருக்கிறார். சில அடியில் வருவன.

"வான் தனைப் பிரிதல்ஆற்று வண்டினம் வச்சை மாக்கள்
ஏன்றமா நிதியம் வேட்ட இரவலர் என்ன ஆர்ப்பத்
தேன்தரு கமலச் செவ்வாய் திறந்தனள் நுகர நாணி
ஊன்றிய கழுநீர் நாளத் தாளினால் ஒருத்தி உண்டாள்."
(பால-உண்டாட்டுப்படலம், 19)

ஒரு மங்கை இனிய பானத்தைச் சிறிய துளையுடைய கழுநீர்த் தண்டினால் உறிஞ்சிப்பருகினாள்; அப்பொழுது அம்மதுவை விழைந்து மேலே வண்டுகள் ஆரவாரித்து நின்றன; அந்நிலை உலோபியின் பொருளை அவாவி அலமருகின்ற இரவலரது பரிபவம் போலிருந்த தென்பதாம். வச்சை மாக்கள்=உலோபிகள். நாளத்தால் பானம் பருகும் நவீனமுறை பண்டைக் காலத்திலேயே இந்நாட்டிலிருந்துள்ள தென்பது இதனால் தெரிந்துகொள்ளலாம்.

"அலர்ந்த பைங்கூழ் அகன்குளக் கீழன
மலர்ந்த வாயிற் புனல்வழங் காமையால்
உலர்ந்த வன்கண் உலோபர் கடைத்தலை
புலர்ந்து நிற்கும் பரிசிலர் போலவே."
(அயோத்தி-பள்ளியடைப்படலம், 26)

"மழைபடப் பொதுளிய மருதத் தாமரை
தழைபடப் பேரிலைப் புரையில் தங்குவ
இழைபடப் பெடையொடும் எள்ளில் நள்ளிகள்
புழையடுத் தொடுங்கின வச்சை மாக்கள்போல்."
(கிட்கிந்தா-கார்காலப்படலம், 121)

"மண்ணுறச் சேற்றுட் புக்குச் சுரிகின்ற மாலைக் குன்றம்
கண்ணிறை போதும் காயும் கனிகளும் பிறவும் கவ்வி
வெண்ணிற மீன்களெல்லாம் வறியவர்என்ன, மேன்மேல்
உண்ணிறை செல்வம் நல்காது ஒளிக்கின்ற உலோபர்ஒத்த"
(உயுத்தகாண்டம், சேதுபந்தனப் படலம், 19)

இவை உலோபிகளைக் குறித்து வந்துள்ளன. நள்ளிகள் = நண்டுகள். ஒன்றும் உதவா வன்கண்ணரென உலோபரது புன்மையை விளக்கிக் கற்பனை நயங்களோடு வந்திருக்கின்ற இக் கவிகளின் பொருள்களைக் கண்ணூன்றி யுணர்ந்து கொள்ளுக.

உலோபிகள்மேல் கவிக்குள்ள வெறுப்பு இவற்றால் வெளிப் பட்டு நின்றது. உலோபம் மிக இழிந்தது ஆகலான் அதனை மக்கள் ஒழித்தொழுகவேண்டும் என்னும் கருத்தினால் இங்ஙனம் விரித்துரைத்தார் என்க.

கீதையில் கண்ணன் இதைக் குறித்துச் சொல்லியிருப்பதை மட்டும் பார்த்துவிட்டு மேலே போவோம்.

"த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசம் ஆத்மந :
காமக் குரோதஸ்ததா லோபஸ்தஸ்மாத் ஏதத்ரயம் த்யஜேத்"
(பகவற் கீதை, 16-21)

"காமம் குரோதம் உலோபம் என்னும் இம் மூன்றும் நரகத்தின் வாசல்கள் ; உயிர்க்கு நாசகரமான இந்நீசங்களை அடியோடு ஒழித்துவிடுக" என இச்சுலோகம் குறித்துநிற்கின்றது.

இங்ஙனம் ஆன்ம நீசமாயுள்ளமையால் உலோபத்தைப் பல படப் பழித்து நூலோர்கள் உரைக்கலாயினர். "களப்பரும் கொடுமைய" என உபமேயத்துக்குக் கொடுத்த அடை இவ்வுவமானத்தையும் நோக்கி நின்றது.

தாடகையினுடைய கொடுமையை இவ்வாறு இவ்விசித்திர வுவமையால் விளக்கிய முனிவர் மேலும் தொடர்ந்து கூறினர்.

"இலங்கையர சன்பணி யமைந்தொ ரிடையூறு
விலங்கல்வலி கொண்டெனது வேள்விநலி கின்றாள்
அலங்கல் முகிலே! அவளின் வங்கநில மெல்லாம்
குலங்களொ டடங்கநனி கொன்று திரிகின்றாள்.

முன்னுல களித்துமுறை நின்ற உயிரெல்லாம்
தன்னுயி ரெனக்கருது தன்மையவன் மைந்த!
என்னினி உணர்த்துவ தினிச்சிறிது நாளில்
மன்னுயி ரனைத்தையும் வயிற்றினிடும் என்ருன்.''

கோசிகரது பேச்சுத் திறம் படிப்படியாய் இப்படி உச்ச நிலையில் ஏறி வருகின்றது. இனிய வளங்கள் சுரந்து கனி மரங்கள் நிறைந்து எங்கும் பசுமையாயிருந்த நல்ல மருத நிலத்தை இவ்வாறு பொல்லாத பாலையாய்ப் பாழ்படுத்திச் சாதுக்களையெல்லாம் கொன்றுதொலைத்து இராவணனுக்கு ஒருபிரதிநிதியாய் உறவுரிமைபூண்டு இந்த நாடு முழுவதும் தன்னரசாக ஆண்டு தருக்கி நின்று அந்த அரக்கி எங்கும் இன்னல் இழைத்து வருகிருள் எனப் பொதுவாகச் சொல்லி வந்தவர் முடிவில் தனக்குத் துன்பம் விளைத்து வருவதையும் இதமாக வுரைத்தார்.

அலங்கல் முகிலே! என இராமனை மனங்கனிந்து விளித்திருக்கிருர். இனிய உனது ஆகம் கண்டமையால் மேகம் கண்ட மேதினிபோல இப்பாலை இனிமேல் போகம் கண்டு பொங்கி விளங்கவேண்டும் என்பதாம்.

"விலங்கல்வலி கொண்டு எனது வேள்வி நலிகின்ருள்"

என்றதனல் தாடகையால் முனிவர் அடைந்திருக்கும் அல்லல் நிலைகள் அறியவந்தன. விலங்கல்=மலை. யாண்டும் கலங்கா நிலையளான அவளுடைய திண்மையையும் திறலையும் பலமுறை நன்கு தெரிந்தவராதலால் அவ்வலியை இங்ஙனம் வரைந்து குறித்தார்.

இராமன் இப்பொழுது வருவது வேள்வி காத்தற்கே. எந்தக்காரியத்தைக் குறித்து அந்த வீரமகன் வில்லுங் கையுமாய் வருகின்ருனே அந்தக் காரியம் முதலில் முடியவேண்டிய இடம் இங்கே தான் என முனிவர் முடிவு சூழ்ந்து உரைத்திருக்கும் திறம் உவந்து நோக்கவுள்ளது.

"நிலம் எல்லாம் கொன்று திரிகின்ருள்"

என்றது அவளது கொலைக் கொடுமையை யுணர்ந்து இக்குல வீரன் கோபமுற என்க. இவ்வாறு சொல்லிவந்தவர் முடிவில் முடிவை உறுதிபெற வலியுறுத்தி இனிதாக விரைவுபடுத்தினர்.

"முன் உலகு அளித்து முறைநின்ற உயிர் எல்லாம்
தன் உயிர் எனக் கருது தன்மையவன் மைந்த!"

என இந்த வண்ணம் இராமனை அன்புகூர்ந்து விளித்தார். இதில் தசரதனைக் குறித்திருக்கும் நிலைமையை நினைக. தனது குலமரபின் இயல்பையும் தலைமுறை வழக்கையும் இராமனுக்கு நினைவுறுத்தியபடியிது. முறை நின்ற உயிர் என்றது நெறிமுறை வழுவாமல் யாண்டும் நீதிநிலையில் ஒழுகிவருகின்ற சாது சனங்களை. மன்னுயிர் புரக்கும் மரபுமுறை தெரியவந்தது.

நல்லோரெல்லாரையும் தன்னுயிர் எனப்பேணிக் காக்கின்ற செங்கோல் மன்னனுடைய அருமைத் திருமகனே! இங்கு ஓர் தீயவள் தீயாய்வளர்ந்து பேயென நின்று தூயவரைக்கொன்று ஓயாமல் துன்பங்களை விளைத்து வருகின்றாளே! அவளைக் கொன்றொழித்து உலகை நன்று காத்தருளவேண்டியது உனது தலைமையான கடமையாம் என நிலைமையைப் பலமாக இங்கே பதிய வைத்திருக்கிறார். உரிமையை உணர்ந்து உதவுக என்பதாம்.

"இனிச் சிறிது நாளில் உயிரனைத்தையும் வயிற்றின் இடும்" என்றது அவளது கொலைபாதகத்தின் கொடுமையையும் வேகத்தையும் கடுமையாகக் காட்டிய படியிது.

அவளை ஒரு கணமும் இனி விட்டு வைக்கலாகாது; விடின் உலகம் அநியாயமாய்க் கெட்டழிந்துபோம்; அக் கெடுநிலையை உணர்ந்து உடனே நீ தொழில் புரிந்தருளவேண்டும் என்பது

இராமன் விரைந்து மூண்டு வினை செய்ய முனிவர் இப்படி விநயமாக மூட்டியிருக்கிறார். கருத்தும் குறிப்பும் கருமசாதனையும் அவர் சொற்களில் உள்ளே எங்கும் புதைந்து கிடக்கின்றன.

அவருடைய உரைகளைத் தொடர்ந்து கேட்டுவந்த இக்குல மகன் இந்த இடத்தில் நின்று மாதவரை ஆதரவுடன் நோக்கி, "ஐயனே! இத்தகைய கொடுமைகளைச் செய்து வருகின்ற அந்த அரக்கி எங்கே இருக்கிறாள்?" என இனிது வினவினான். அங்ஙனம் வினவிய பொழுது இம்மைந்தன் நின்ற நிலை வியப்புமிக வுடையதாய் விறுமீறி யாரும் வியந்து நோக்கவுள்ளது.

## இராமன் வினவிய நிலை

*அங்கிறைவன் அப்பரி சுரைப்ப, அது கேளா*
*கொங்குறை நறைக்குல மலர்ச்சென்னி குலுக்கா*
*எங்குறைவது இத்தொழில் இயற்றுபவள் என்றான்*
*சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்.*
(தாடகை வதைப்படலம், 45)

முனியின் வாய்மொழிகளைச் செவி மடுத்து வந்த இராமன் இங்கே தலை அசைத்தது அவனது நிலைமையைத் துலக்கி நின்றது. இராச கம்பீரமும் ஆழ்ந்த சிந்தனையும் இந்த அசைப்பில் தொய்ந்துள்ளன. கொங்கு=வாசனை. நறை=தேன். குல மலர் என்றது பிச்சி மல்லிகை முதலிய உயர்ந்த சாதிப்பூக்களை. மணம் கமழ்கின்ற சிறந்த மலர்மாலைகள் சூடும் திருவினையுடையது என அச்சென்னியின் பெருமை தெரிய வுரைத்தார். சென்னி=தலை. இடைக்குறைந்தது செய்யுள் இசைக்கு இசைய என்க.

கோங்குஉறை நறைக்குல மலர்ச்சேனி குலுக்கா

என்ற இது எவ்வளவு உள்ளங்களை இது வரை குலுக்கியிருக்கும்?

மரகத வண்ணனை இராமன் குலமலர் பொதிந்த தனது அழகிய திருமுடியைச் சிறிது அசைத்து நெடியதவசிமுன் நேர்ந்து நிற்கும் அருமைக் காட்சியைக் கவி இங்கே எழில் ஒழுக எழுதிக் காட்டியிருக்கிறார். இடம் வாய்த்த பொழுதெல்லாம் அப்புண்ணிய உருவத்தின் கண்ணிய நிலைகளை நம் கண் எதிரே நிறுத்தி எண்ணரிய இன்பங்களை விளைத்து வருகின்றார்.

சென்னி குலுக்கியது என்ன நோக்கம்? அதிசயமான வார்த்தைகளைக் கேட்கும்பொழுது உவகை வியப்புகளால் சிரம் குலுக்கிக் கரம் கொட்டுவது மக்கள் இயல்பு. இது, அந்த வகையைச்சேர்ந்ததன்று; இங்கே நேர்ந்த குலுக்கு, தனி நிலையில் தகவுணர நின்றது. அந்நிலை வீரமேன்மையில் விளைந்து வந்துள்ளது. இயற்கையைக் கவி கவினுறக்காட்டியருள்கின்றார்.

மகாதவசியான இவர் இவ்வளவு மனக்கலக்கத்துடன் மறுகி மொழியும்படி ஒருத்தி அவ்வளவு வலியுடையவளாயிருக்கிறாளா? எனப் பெருமிதமான அலட்சியம் உள்ளே கிளைத்தெழுந்தமையால் கம்பீரமாகத் தலையை வெளியே அங்ஙனம் அசைத்தான்

என்க. இந்த அசைப்பு இப்பாடலில் உயிர்நாடியாய் ஒளிபெற்றுள்ளது.

தன் திறல் நிலை தெரியத் தலை குலுக்கிய இக்குல மகன் பின்பு முனிவரிடம் உசாவினன்.

"எங்கு உறைவது இத்தொழில் இயற்றுபவள்?"

என்ற இவ்வினா என்ன நோக்கத்தில் எழுந்து வந்தது? உரையிலுள்ள தொனிக்குறிப்பையும் உள்ளக்கருத்தையும் ஊன்றி நோக்குக. இத்தொழில் என்னும் சுட்டு முன்னம் முனிவர் உரைத்த கொலை பாதகங்களையெல்லாம் குறித்துக் கொதிப்பேறி வந்தது. உறையுளை உரைத்தருளுங்கள் என்பதாம்.

அவள் தங்கியிருக்கும் இடம் எங்கே? என இவ்வீர மகன் வினவியது முனிவருக்குப் பேருவகையை விளைத்தது.

விண்ணவரையும் வெல்ல வல்ல வெந்திறலுடையவள்; கண்ணெதிரே கண்டவரெவரையும் கொன்று தின்னும் கொடியவள் என யாரும் அஞ்சி அயரும்படி முனிவர் பேசியிருந்தும் இவன் யாதும் அஞ்சாமல் எதையும் பொருட்படுத்தாமல் இருப்பிடத்தை வினவியது வியப்புமிகவுடையது.

இவ்வளவு பயங்கரமான வெவ்விய அரக்கிநிலையைத் தனியே காட்டினிடையே வேறொரு இளங்குமரன் கேட்டால் அவன் உள நிலை என்னும்? உங்கள் அனுபவத்தையும் சேர்த்து ஊகிக்க வேண்டும்.

உள்ளத்தே ஒரு பயமுமின்றி நிலையான பயனை உலகம் அடைய இங்கே இப்படி வினவியவன் யார் தெரியுமா?

"சங்கு உறை கரத்து ஒரு தனிச்சிலை தரித்தான்"

என இனித்த மொழியால் கவி விளக்கியருளினர். வினை முற்றுக்கு வினைமுதலாக வந்துள்ள இந்த வாக்கியத்தின் அழகை விழைந்து நோக்குக. காவியத்தின் இடையிடையே சொன்னலங்கனிந்த சுவையூற்றுகள் இன்னணம் பலவுள.

திருமால் சங்கு ஏந்தியிருப்பது இடக்கரத்தில் ஆதலால் அக்கரத்தில் இப்பொழுது ஒரு வில்லை ஏந்தி அவன் இவ்வண்ணம் ஈண்டு வந்திருக்கிறான் என்பதாம். ஆகவே வந்த காரியம் இனிது முடிந்து மாதவர் மனமிக மகிழ்வர் என்பது குறிப்பு.

அவளுடைய இருப்பிடம் எங்கே? என்று இங்ஙனம் இராமன் வினவவே முனிவர், "அதோ உள்ளமே த அந்த மலைச் சாரலில் இருக்கிறாள்" என அடுத்துநின்ற குன்றைச் சுட்டிக் காட்டினார். அங்ஙனம் சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே தாடகை அங்கிருந்து வெளியேறி விரைந்து ஓடி வந்தாள். அவள் வந்த நிலையை அடியில் காண்க.

## தாடகை கொதித்து வந்த நிலை

கைவரை எனத்தகைய காளையுரை கேளா
ஐவரை அகத்திடை அடைத்தமுனி ஐய!
இவ்வரை இருப்பதவள் என்பதனின் முன்போர்
மைவரை நெருப்பெரிய வந்ததென வந்தாள். (1)

சிலம்புகள் சிலம்பிடை செறித்தகழ லோடும்
நிலம்புக மிதித்தனள் நெளித்த குழி வேலைச்
சலம்புக அனற்றறுகண் அந்தகனும் அஞ்சிப்
பிலம்புக நிலைக்கிரிகள் பின்தொடர வந்தாள். (2)

இறைக்கடை துடித்தபுரு வத்தள் எயிறென்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயள்
மறைக்கடை அரக்கி வடவைக்கனல் இரண்டாய்
நிறைக்கடல் முளைத்தென நெருப்பெழ விழித்தாள். (3)

கடங்கலுழ் தடங்களிறு கையொடுகை தெற்று
வடங்கொள நுடங்கும் இடையாள் மறுகி வானோர்
இடங்களும் நெடுந்திசையும் ஏழுலகும் எங்கும்
அடங்கலும் நடுங்க உரும் அஞ்சநனி ஆர்த்தாள். (4)

ஆர்த்துஅவரை நோக்கிநகை செய்தெவ நும் அஞ்சக்
கூர்த்த நுதி முத்தலை அயிற்கொடிய கூற்றைப்
பார்த்தெயிறு தின்றுபகு வாய்முழை திறந்துஓர்
வார்த்தையுரை செய்தனள் இடிக்குமழை அன்னாள். (5)

கடக்கரும் வலத்தெனது காவல் இதில் யாவும்
கெடக்கரு வறுத்தனென் இனிச்சுவை கிடக்கும்
விடக்கரி தெனக் கருதியோ? விதிகொடுந்தப்
படக்கருதியோ? பகர்மின்! வந்தபரி சென்றே; (6)

மேகமவை இற்றுக விழித்தனள் புழுங்கா
மாகவரை அற்றுக உதைத்தனள் மதித்திண்
பாகமெனும் முற்றெயிறு அதுக்கி அயில்பற்று
ஆகமுற உய்ததெறிவன் என்றெதிர் அழன்றாள்." (7)

(தாடகைவதைப்படலம், 46-52)

தாடகை சீறி வந்து செயிர்த்து நிற்கும் ஆரவார நிலைகளை நாம் இங்கே நேரே பார்த்து நிற்கின்றோம். வக்கிரமான ஒரு கொடிய உக்கிரவடிவத்தைக் கவி இதில் வரைந்து காட்டியிருக்கிறார். பாடல்களை ஊன்றிப் படித்து அரக்கியின் கோரங்களையும், கொடுந்திறல்களையும் கூர்ந்து அறிந்துகொள்ளுங்கள்.

இதோ இந்த மலையில் இருக்கின்றாள் எனக் கோசிகர் இராமனிடம் கூறி முடிக்கு முன்பே அவர் எதிரே தாடகை சீறிவந்தாள் என்றது ஓர் நாடகக் காட்சிபோல் வியந்து நோக்கவுள்ளது. அதிவிசித்திரமான நிகழ்ச்சியை விரைந்து சித்திரித்து எவரும் வெருண்டு காண வெளிநிறுத்திக் கவி ஈண்டு வியப்பை மூட்டியிருக்கிறார்.

"மைவரை நெருப்பு எரிய வந்தது என வந்தாள்"

என்றது அவளது உருவ நிலையை நேரே காட்டியுள்ளது.

ஒரு கரிய மலை தன் உச்சியில் செந்நெருப்பு எரியக் காலோடி வந்ததுபோல் மேல் ஓடி வந்தாள் என்பதாம். கருமலை உடலுருவையும், நெருப்பு தலைமயிரையும் குறித்து வந்தன. உள்ளக் கொதிப்பையும் அக்குறிப்பு உடனுணர்த்தி நின்றது.

"கைவரை எனத் தகைய காளை"

என ஈண்டு இராமனைக் குறித்தது யாண்டும் நிலை கலங்காது நிற்கும் அவனது ஆண்மை நிலை தெரிய. கைவரை=யானை.

உருவப் பொலிவு, கம்பீர நடை, காட்சியின்மாட்சி முதலிய நலங்கள் பலவும் கருதி இவ்வுவமை வந்தது. இங்கே இயல்பான யானையை நோக்காமல் இரு கைகளையுடைய அழகிய ஒரு மரகத மலைபோல்பவன் எனவும் இராமனை உணர்ந்துகொள்ளும்படி இப்பதம் புணர்ந்து நின்றது. வரை=மலை.

இந்தக் கைவரை செய்யும் கைத்தொழிலால் அந்த மைவரை இன்று மாண்டு மடியும் என்பது குறிப்பு.

"ஐவரை அகத்திடை அடைத்த முனி"

எனக் கோசிகரைக் குறித்திருக்கும் அழகு பார்க்க. ஐம்புலன்களையும் வென்று அருந்தவ நிலையில் சிறந்திருக்கும் பெருந்தகை என்றவாறு. ஐவர் என உயர்திணையில் கூறியது அவற்றின் அரிய பெரிய ஆற்றல் அறிய. யாராலும் வெல்லுதற்கரிய புலன்கள் ஐந்தையும் அகத்தே வென்றவர் புறத்தே ஒருத்தியை

அடக்கமுடியாமல் உள்ளம் வருந்தி நெடுநாள் ஆய்ந்து உறுதி சூழ்ந்து முடிவாக இன்று ஒருவனைத் துணைக்கொண்டு வந்திருக்கிறார் என்பதாம். ஆகவே அவளது கொடுந்திறல் நிலையும் வந்திருக்கிறவனுடைய அடுந்திறல் வலியும் அறிய நின்றன.

ஐய! என்றது ஆர்வம் கனிந்து வந்தது. ஐயனே, இவ் வெய்யவளைக் கொய்தொழித்து வையம் உய்ய வகை செய்தருள் என்பதாம். அம் மலை அருகே நின்றமையால் இவ்வரை என்றார்.

இங்ஙனம் சொல்லி முடியு முன்னமே அவள் ஒல்லையில் வந்து உருத்து எதிர்நின்று பல்லைக் கடித்துப் பகுவாய் திறந்து வெருட்டி விழித்து ஆலமெனக் கொதித்துச் சூலத்தை நேரே காட்டிப் பேரிடிகள் போல் ஆர்த்து யாரடா நீங்கள் எனச் சில வார்த்தைகள் கோரமாகக் கூற நேர்ந்தாள்:

"இந்நெடிய வனம் முழுவதும் என்னுடைய பாதுகாவலை யுடையது; யாரும் மீறி வரக்கூடாது; இங்குள்ள பிராணிகளையெல்லாம் கொன்று தின்று குலநாசம் செய்துள்ளேன்; இன்று எனக்கு இரையாய் நீவிர் சாக வந்திருக்கிறீர்! இனி எவ் வகையும் தப்பி வெளியே போகமுடியாது. நீர் பொன்றி மடிந்தீர்; நான் தின்று மகிழ்ந்தேன்" என்று இந்தவாறு எவரும் சிந்தை கலங்கித் திடுக்கிடும்படி அத்தீயவள் சினந்து பேசினாள்.

"யாவும் கெடக் கரு அறுத்தனென்"

என்று தன் சொந்த வாக்குமூலத்தினாலேயே அவளது கொலைபாதகத்தின் கொடுநிலையை உலகம் அறிய உணர்த்தியிருக்கிறார். இதுவரை முனிவர் கூறி வந்த தீமைகளை யெல்லாம் அவள் வாய்மொழிகளால் வலியுறுத்தி இராமன் நேரே தெளியும் படி செய்திருக்கும் கவி சாதுரியம் கருதி மகிழத்தக்கது.

விடக்கு = தசை. சுவை கிடக்கும் விடக்கு என்றது அரசிளங்குமாரர்களுடைய உருவ நிலையைக் கண்டு உவகைமிஞ்சி வந்தது. நல்ல கொழுத்த விருந்து வந்து கிடைத்தது என்று அவள் உள்ளம் குதுகலித்துள்ளமை உரையால் உணரலாகும்.

நல்ல அழகைக் கண்ணில் கண்டும் அப் பொல்லாதவள் வேறொன்றையும் கருதாது புலையுணவையே விழைந்து கொல்ல முனைந்தது அவளது கொடிய கொலைத்தீமைகளை எளிதே வெளிப்படுத்தி நின்றது. பாதக நெஞ்சம் காதகம் கனிந்தது என்க.

"மேகம் அவை இற்று உக விழித்தனள் ;
மாகவரை அற்று உக உதைத்தனள்"

என்றதனால் அன்று அவள் உருட்டி விழித்துக் கொதித்து நோக்கித் தரையை அதட்டி மிதித்து அட்டகாசங்கள் செய்துள்ள ஆரவார நிலைகள் யாவும் இங்கே அறிய நின்றன.

கனன்று விழித்தபொழுது அவள் கண்களிலிருந்து எழுந்த நெருப்புச் சுவாலைகள் மேலேநின்ற நீர் நிறைந்த மேகங்களையும் நிலைகுலையச் செய்தன என்பார் "மேகம் உக விழித்தனள்" என்றார். கோபத்தீயின்பேரெல்லை தெரிய நீர் மேகத்தை நேர்நிறுத்தியுரைத்தார். மாகவரை என்றது ஆகாயம் அளாவிய பெரிய மலைகளை. அவளுடைய ஆங்காரமும் ஆற்றலும் தெரியவந்தன.

பார்த்த பார்வையிலே மேகங்கள் கரிந்துசரிந்தன; உதைத்த உதையிலே மலைகள் நொறுங்கி விழுந்தன என்பதாம்.

யாரும் அஞ்சி நடுங்கும்படி இப்படி ஆதாளி செய்து சூலாயுதத்தை எறிவன் என்று கையை ஓங்கிக் கடுத்து நின்றாள்.

அந்நிலையைக் கண்டு கோசிகரும் கூசினார். அவர் வெறும் தவசியல்லர் ; சிறந்த வீர மரபில் பிறந்த உயர்ந்த இராசமுனி. ஆயினும் பேயினும் கொடிய அப்பேழ்வாய் அரக்கியின் பேராற்றலை நினைந்து பெரிதும் மறுகி அருகுநின்ற இராமனை ஆர்வமொடு நோக்கினார். அக்கோக் குமரர் இருவரும் யாதொரு வேறுபாடுமின்றி அதிசய நிலையில் ஒருவரை ஒருவர் பார்த்துப் புதிய முறுவல் பூத்துப் பொலிவுற்று நின்றார். கதம்கொண்டு கடுத்து நின்ற கரிய பெரிய ஒரு மதயானையைப் பால் குடிமறந்து வெளி வந்த பொழுது முதல் முதலில் கண்ட இளம் சிங்கக்குட்டிகள்போல் இக்குலமக்கள் இயற்கை வீறுடன் அவளை அலட்சியமாக அன்று செயிர்த்து நோக்கிச் சீறி நின்றார். அந்த அரிய தீர நிலையை வீரவுலகம் இன்றும் வியந்து போற்றி மகிழ்ந்து வருகின்றது.

## இராமன் நின்ற நிலை

இவ்வீர வுருவங்களின் விறல் நிலைமையைக் கண்டும் அக்கொடியவள் ஒரு சிறிதும் உணராமல் கோரமே கொண்டு கொதித்து நின்று, "நீங்கள் மூன்று பேரும் இன்று செத்தீர்கள்" என்று தன் கைத்தலத்திருந்த முத்தலைச் சூலத்தைக்கடுத்தெறிய

அடுத்து வந்தாள். வரவே இராமன் முனிவருக்கு முன் போய் நின்று தம்பியையும் பின்பு நிறுத்தித் தறுகண்மையுடன் நின்றான். பெரியவரையும் இளவலையும் மருங்கணைத்து அருகமர்த்தி இக்குலவீரன் அவள் எதிரே நின்றானே யன்றித் தோளில் மாட்டியிருந்த வில்லையும் கையில் எடுக்கவில்லை. அம்பு தொடுத்து அவளை அழித்தொழிக்கவேண்டும் என்று அடுத்து நிற்கும் கோசிகர் கடுத்துத் துடித்தார். இராமன் யாதும் அது கருதவில்லை. பேதை என நினைந்தான்; பெண் என்று இரங்கினான். அந்தப் பெருந்தகைமையை என்னென்று சொல்வது? தரும நீதிகளில் தழைத்து வளர்ந்து சத்தியத்தில் உயர்ந்து திளைத்த சுத்த வீர நிலையே இவ்வுத்தமனிடம் யாண்டும் ஒளி பெற்றுள்ளது.

கொல்லமூண்டு கொதித்து நிற்கும் பொல்லா அரக்கி முன் இச் செல்ல மகன் அன்று சிந்தனை செய்து நின்ற நிலையைக் கவி கவினுற எழுதிக் காட்டி யிருக்கிறார். அந்த அருமைக் காட்சியைக் கண்ணூன்றிக் காணுங்கள்.

அண்ணல் முனி வற்கது கருத்தெனினும் ஆவி
உண்ணென வடிக்கணை தொடுக்கிலன், உயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழில் தொடங்கியுளள் ஏனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்.
(தாடகை வதைப் படலம், 54)

விசுவாமித்திரருடைய எண்ணம், இராமனது மனநிலை, தாடகையினுடைய கொலை நோக்கம் முதலிய பல காட்சிகளை இக் கவிப்படம் நமக்குக் காட்டிநிற்கின்றது. அரிய மனோபாவங்களை அழகிய சொல்லுருவங்களில் இனிது துலக்கி யிருக்கும் திறம் நுணுகி யுணரற் பாலது.

"முனிவற்கு அது கருத்து எனினும்" என்றதில் அது என்றது எதை? ஊன்றி நோக்கும்படி இச் சுட்டு இங்கே தோன்றியுள்ளது. "இராமா! இவள் மிகவும் கொடிய கொலை பாதகி; உடனே கொன்று தொலை; தாமதித்து நின்றால் நமக்குப் பெருந்தீமையாம்; தொடு பகழியை! விடு விரைந்து!" என்று தாடகையைக் கொல்ல முனிவர் உள்ளம் துடிதுடித்து நிற்கின்றார் ஆதலால் அந்நிலைகளையெல்லாம் திரட்டி "அது" என்றார்.

தவநலங்களில் சிறந்த பெரியவர் கொலை நிலையில் இவ்வாறு துணிந்தது அவளது புலைக்கொடுமைகளை நினைந்தே; ஒன்னல்

தீர்ந்து மன்னுயிர் நலமுறக் கருதியதே யன்றித் தன்னலங்கருதி யன்று என்னும் உண்மை நிலை தெரிய அண்ணல் முனி என்றார்.

தண்ணளியும் தகவுமுடைய தவசி இவ்வண்ணம் துணிவதாயின் அவளுடைய பொல்லாத் தீமைகள் எவ்வளவில் எவ்வண்ணம் இருந்திருக்கும்? எண்ணித் தெரிக என்பது குறிப்பு.

அவளை விரைந்து கொல்லும்படி முனிவர் இவ்வாறுவிழைந்து துடித்தார்; அத்துடிப்பை உணர்ந்தும் இராமன் யாதும் விரையாமல் எதிரி நிலைமையை நினைந்து இரக்கமீதூர்ந்து யாது செய்வது? என ஆலோசனை புரிந்தே காலதாமதம் செய்தான்.

" ஆவி உண் என வடிக்கணை தொடுக்கிலன் "

என இராமனது வில்வலியைக் குறித்துத் தொடுத்திருக்கும் சொல்வலியைக் காண்க. எதிரியின் உயிரை உண்டுவா என்று கணையோடு காகுத்தன் பேசிவிடுவான் என்பது ஆவி உண் என்ற ஏவலால் தெரிய வந்தது. உயிருடையதுபோல் உடையவன் கருதியபடி யெல்லாம் உடனே அது செய்தருளும் என்றபடி.

எமன் காலனை ஏவி விடுதல் போல் இராமன் கணையினை ஏவி விடுவன் என்பதாம். ஆகவே இராமன் கையில் கணை எடுத்தபொழுதே எதிரி மெய்யில் உயிர் எடுபடும் என்பது பெறப்பட்டது. கணை = அம்பு. அது கூரிய சீரிய வீரியமுடையது என்பதை வடி உணர்த்தி நின்றது. கூர்மை, என்றும் எவ்வழியும் முனை மழுங்காதது; சீர்மை, தீது தீர்த்து நன்மை புரிவது; வீரியம், யாண்டும் விறலுடன் வென்று மேன்மையுடன் வருவது.

இத்தகைய அற்புத வீரப்பகழி தன் கையில் இருந்தும் "ஐயோ! ஒரு பெண்ணே" என்று கண்ணோட்டம்செய்து கருணை மிகுந்து இவ்வையன் கருத்துளைந்து நின்றான்.

"உயிர்க்கே,துன் எனும் வினைத்தொழில்தொடங்கியுளாள் எனும் பெண் என மனத்திடை பெருந்தகை நினைந்தான் "

கொல்ல முனைந்த அக்கொலை அரக்கி கொதித்து நிற்கும் நிலையையும், இக்குலமகன் உள்ளம் இரங்கி உளைந்து நிற்பதையும் ஒருங்கே கண்டு கவி வருந்தியுள்ளதை அவருடைய உரைகள் நமக்கு இதில் உணர்த்தி நிற்கின்றன.

தன் உயிருக்கே உலை வைத்திருக்கும் கொலைகாரியிடமும் நிலை மாருமல் நெஞ்சிரங்கி நின்ற அரும் பெறலமைதியை வியந்து பெருந்தகை என விழைந்து மொழிந்தார். ஆண்பால் விகுதி கொடுத்துத் திணை நிலை தோன்றக் குணிப் பெயரால் கூறுது குணப் பெயரில் குறித்தது கூர்ந்து சிந்திக்கத்தக்கது.

பண்புப் பெயர் யாண்டும் அருமையும் பெருமையும் தெரிய உரிமை சுரந்து வரும். "திருவே! என் செல்வமே!" என்ற பொழுது உள்ள கனிவு திருவனே செல்வனே என்னுங்கால் எடை குறைதலறிக.

எவரும் வியந்து பாராட்டும்படி அரக்கிமுன் இரக்கமுற்று அமைதியாய் நின்ற இப்பெருந்தகை நிலையை அருந்தவர் அறிந்தார்; உள்ளந்திருந்தி உறுவினைபுரிய உறுதி சூழ்ந்து உரைகள் பல வுரைத்தார். அவருடைய உரைத்திறங்களும் உள்ளக் குறிப்புகளும் அடியில் வருவன.

கோசிகர் கூறிய வாசகங்கள்

வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற்ருள் அயில்
எறிந்து கொல்வென்என்று ஏற்கவும் பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத் தெலாம்
அறிந்து நான்மறை அந்தணன் கூறுவான். (1)

தீதென் றுள்ளவை யாவையும் செய்தமைக்
கோதென் றுண்டிலள் இத்தனை யேகுறை
யாதென் றெண்ணுவ திக்கொடி யாளையும்
மாதென்று எண்ணுவதோ? மணிப்பூணிணுய்! (2)

நாண்மை யேயுடையார் பிழைத்தார் நகு
வாண்மை யேபெற்ற வன்றிறல் ஆடவர்
தோண்மை யேஇவள் பேர்சொலத் தோற்பரேல்
ஆண்மை என்னுமது ஆரிடை வைகுமே? (3)

இந்திரன் இடைந்தான்; உடைந்து ஓடினுர்
தந்திரம்படத் தானவர் வானவர்;
மந்தரம் இவள் தோள்எனின் மைந்த ரோடு
அந்தரம் மினி யாதுகொல் ஆண்மையே. (4)

மன்னர் மன்னவன் காதல! மற்றும் ஒன்று
இன்னம் யாஹுரைக் கின்றது யாது?எனின்,
முன்ஞெர் காலம் நிகழ்ந்த முறைமை யிது
என்ன ஓதலுற் ருன்தவத் திறிலான். (5)

பிருகு என்னும் பெருந்தவன் தன்மனை
வருகயற்கட் கியாதி வல் லாசுரர்க்கு
உருகு காதல் உறவுற வாதலே
கருதி ஆவி கவர்ந்தனன் நேமியான். (6)

வானகத்தினில் மண்ணினில் மன்னுயிர்
போனகம் தனக் கென்றெணும் புந்திய
தானவள் குமதிப்பெய ராள்தனை
ஊன்ஒழித் தனன் வச்சிரத் தும்பர்கோன், (7)

ஆதலால் அரிக்கு ஆகண் டலன் தனக்கு
ஓது கீர்த்தி யுண்டாய வல் லாதிடை
ஏதம் என்பன எய்திய வோசொலாய்
தாதடர்ந்து தயங்கிய தாரினாய். (8)

கறங்கி டத்திகி ரிப்படி காத்தவர்
பிறங்கடைப் பெரியோய்! பெரியோரொடும்
மறங்கொ டித்தரை மன்னுயிர் மாய்த்துநின்று
அறங் கெடுத்தவட்கு ஆண்மையும் வேண்டுமோ? (9)

சாற்று நாளற்ற தெண்ணித் தருமம் பார்த்து
ஏற்றும் விண்என்ப தன்றி இவளைப் போல்
நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர்
கூற்றுண் டோசொலாய் கூற்றுறழ் வேலினாய்! (10)

மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப்பெய்து
தின்னும் புன்மையின் தீமைய தேஜய!
பின்னும் தாழ்குழற் பேதைமைப் பெண்ணிவள்
என்னும் தன்மை எளிமையின் பாலதே. (11)

ஈறில் நல்லறம் பார்த்திசைத்தேன் இவட்
சீறி நின்றிது செப்புகின்றேன் அலேன்;
ஆறி நின்றது அறன்அன்று; அரக்கியைக்
கோறி என்றெதிர் அந்தணன் கூறினான். (12)

(தாடகை வதைப்படலம், 55-66)

தாடகையைக் கொல்லும்படி விசுவாமித்திரர் இராமனிடம் இப்படி ஒரு பிரசங்கம் செய்திருக்கிறார். அவருடைய பேச்சுத் திறங்களையும் வாதமுறைகளையும் உரைகள்தோறும் ஊன்றிப் பாருங்கள். கவிகளின் பொருள்களை முன்னதாக நீங்களே பதம் பதமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும். அதன் பின்னர் எண்ணங்களையும் அரிய தொனிகளையும் இனிதே நுணுகி அறியலாகும்.

பெண் என்று கருதியே இராமன் கணை தொடாமல் கண் மாறி நிற்கின்றான் என்று கண்டு கொண்டார் ஆதலால் அந்த எண்ணத்தை அடியோடு ஒழித்துவிடும்படி முதலில் முனிவர் அடிகோலி யுள்ளார். கொடுமை நிறைந்து கொலை பழுத்துள்ள பழிகாரியான இவளை எளியமகள் என நினைந்து அளி செய்யலாகாது என அவளது கொடுந்தீமையை உளந்தெளியஉணர்த்தினார்.

"தீது என்று உள்ளன யாவையும் செய்து, எமைக்
கோது என்று உண்டிலள் ; இத்தனையே குறை"

என்ற இதில் எத்தனை விநயம்? முனிவருடைய வித்தக வசனங்கள் உய்த்துணர வுரியன.

தீவினைகள் என்பன எவ்வளவுள்ளன அவ்வளவும் செய்து ஆருயிர்களை அநியாயமாய் அழித்திருக்கிறாள் ; இவளது கொலை பாதக நிலைக்கு ஓர் எல்லை இல்லை ; நான் இவ்வளவு தப்பிப்பிழைத் திருப்பது எதனால் என்று தெரியுமா? தவத்தால் இளைத்து நல்ல சதைப்பற்றின்றித் தோலும் எலும்புமாய் மெலிந்திருத்தலினாலே தான் இது சக்கை என்று தள்ளிவிட்டிருக்கின்றாள் என்பார் "எமைக் கோது என்று உண்டிலள்" என்றார். உடல் கொழுத் திருந்தால் இதற்குமுன் உயிரை இழந்திருப்பேன் என்பதாம். இத்தனையே குறை என்றது இகழ்ச்சிக் குறிப்போடு சுருக்கமாக அலுத்துச் சொன்ன வார்த்தை. கருத்தை நுனித்துப் பார்க்க.

"என் போன்ற தவசிகளையும் சாதுக்களையும்அல்லற்படுத்தி அழிதொழில் செய்து வரும் பழிபாதகியாகிய இவளை இராமா? நீ தெளிவாகத் தெரிந்துகொள்ளவேண்டும். வெளி வடிவைக் கண்டு ஏமாந்து அளிபுரியலாகாது" என முன்னுற வழிமொழிந்து தம் கருத்தை வலியுறுத்தினார்.

"இக் கொடியாளையும் மாது என்று எண்ணுவதோ ?"

என்றது இவ்வளவு கொலைத் தீமைகளைச் செய்து திரியும் கொடியவளைப் பெண் என்று எண்ணலாகுமா? என்றவாறு.

பெண் என்றால் அது எவ்வளவு கண்ணியமுடைய பொருள்! இனிய நீர்மையும் இதமும் மென்மையும் உடையதே பெண்மையாகும். மெல்லியலார் என்னும் அந்நல்ல தன்மைக்கும் கொல்லியல்புடைய இப்பொல்லாப் புலைக்கும் எவ்வளவுதூரம் உள்ளது!

"நான் என்று மார்தட்டி நிற்கும் எந்த ஆண்பிள்ளை இவள் எதிரே வந்து நிற்கவல்லவன்? வாள், வேல் முதலியவற்றில் வல்லவர் என்று பேர்பெற்றுள்ள எல்லா வீரர்களும் இவளது பேரைக்கேட்டவுடனே பெருந் திகிலடைந்து உடைந்து போயிருக்கிறார் என்றால் அருந்திறலாண்மை என்பது யாரிடமுள்ளது? இவள் கண்ணுக்குத்தப்பி ஓடிப் பிழைத்தவர்தாம் உயிருடன் வாழ்ந்துளார்; உடன்றுஎதிர்ந்தார் உடனே இறந்தார். மண்ணவர் மட்டுமா? விண்ணவரும் வெருவினர்; எண்ணருந் திறலுடைய இவளைப் பெண்என நினைந்து நிற்றல் பெருபிழை இராமா?" என இன்னவாறு பேசிவந்தவர் இரண்டு இதிகாசங்களை மேற்கோளாக எதிரெடுத்துக் காட்டினார்.

தீயன செய்வரேல் பெண்களாயினும் அவரைக் கொன்று தொலைக்கலாம் என முனிவர் அன்று காட்டிய கதைகள் கருதியுணரவுரியன. இராமன் மனத்தை எப்படியும் திருத்திக் காரியத்தை முடித்துவிடவேண்டும் என்று அவர் கருத்தூன்றி யுள்ளமையால் பொருத்தமான சரித்திர உணர்ச்சிகளை ஆத்திரத்தோடு போதிக்கலாயினர்.

## திருமால் கியாதியை அழித்தது

கியாதி என்பவள் பிருகு முனிவருடைய அருமை மனைவி. சிறந்த மதிநலம் வாய்ந்தவள். அரிய கலைகள் பலவும் பயின்றவள். அசுரகுருவாகிய சுக்கிரன் தாய். தெய்வ வுபாசனை செய்து அற்புத சித்திகள் கைவரப்பெற்றவள். ஒரு முறை அமரருக்கும் அசுரருக்கும் அமர் மூண்டது. முதலில் அமரர் தோற்றனர். மறுபடியும் திருமாலைத்துணைக்கொண்டு வந்து பொருதார். அதில் அசுரர் பலர் அழிந்தார். சிறந்த தலைவர்கள் சிலர் தப்பிப் பிழைத்து இவளிடம் வந்து சரண் புகுந்து மறைந்திருந்தனர். அங்ஙனம் இருக்குங்கால் தேவர்களை மீண்டும் தொலைத்தற்கு வேண்டிய சதியாலோசனைகளை அதிக இரகசியமாகச் செய்து வந்தார். அவ்வுளவினை அமரர் திருமாலுக்கு உணர்த்தினர். அவர் நேரே வந்தார். பகைவரது இருப்பிடத்தைக் காட்டும்படி கியாதியிடம் வேண்டினார். அவள் மறுத்தாள். எவ்வளவு நயந்து வேண்டியும் அவள் இணங்கவில்லை; ஆகவே அவள் சிரத்தை ஆழியால் அறுத்தார்; அதன்பின் அசுரரை அடியோடு தொலைத்தார். அறநெறி ஒழுகுவாரை யாண்டும் அருள் புரிந்து காத்தார்.

## இந்திரன் குமதியைக் கொன்றது

குமதி என்பவள் அசுரேசனாகிய விரோசனனுடைய அருமைத்திருமகள். நல்ல அழகியே ஆயினும் பொல்லாத இயல்பினள். மாரணம் முதலிய மந்திர தந்திரங்களில் வல்லவள். சூழ்ச்சித் திறத்தில் மிகவும் சிறந்தவள். இவளது சொந்தப் பெயர் மந்தரை என்பது. யாரும் அஞ்சத்தக்க வெஞ்செயல்களைத் தன் மதிநுட்பத்தால் விளைத்து வந்தாள் ஆதலால் குமதி என நின்றாள். தனது குலவிரோதிகள் என்று தேவர்கள்மீது இவள் செற்றமும் சினமும் கொண்டிருந்தமையால் இடையே இமையவருலகம் பாழ்படும்படி ஒரு சூனியத்தை மந்திரித்து வந்தாள். மாயமாக இவள் சதிபுரிந்து வருவதை இந்திரன் அறிந்தான். விரைந்து வந்தான். நிலைமையைத் தெளிந்தான். தன் கையில் வைத்திருந்த வச்சிராயுதத்தால் அவளை ஓங்கி அடித்தான்; அவள் உயிர் துடித்து மாண்டாள். அவன் உம்பருலகம் மீண்டான்.

இந்த இரண்டு கதைகளை இங்கே இதமாகக் கோசிகர் இராமனுக்குக் கூறியிருக்கிறார். மாதரே ஆயினும் தீயவர்களுக்கு இடங்கொடுத்துத் தீங்குகள் செய்வரேல் உலக நன்மையை உத்தேசித்து அவரை ஒழித்துவிடவேண்டும் என்பதற்கு மேலோர்களுடைய மூல ஆதாரங்களை முனிவர் இவ்வாறு முகந்து காட்டினார். அவரது சரித ஆராய்ச்சியும், பலகலை நிலையும், உலகியலுணர்வும், காலம் கருதி இடம் நோக்கி உறுதிபெற உரைக்கும் திறனும் இதனால் உணர்ந்துகொள்ளலாம்.

அங்ஙனம் பெண்களைக் கொன்ற அவர்களுக்குப் புகழ் உண்டாயதே அன்றிப் பழியுறவில்லை என்பதையும் வலியுறுத்தினார்.

"அரிக்கு, ஆகண்டலன் தனக்கு, கீர்த்தி உண்டாய"

என்றது அவரது கொலைச்செயலால் விளைந்த பயனை விளக்கியபடி. ஆகண்டலன் = இந்திரன். தேவதேவர்களை எடுத்துக் காட்டியது இராமன் விரைந்து இசைந்து வீரவினை புரிய என்க.

இந்த ஒருத்தியைக் கொன்று தொலைத்தால் உலகிலுள்ள பல உயிர்களையும் பாதுகாத்த புண்ணியம் உனக்கு உண்டாம்; இதனை உண்மையாக உடனே எண்ணியருள் என்பது குறிப்பு.

தருமமும் தவமும் தலைசாய்ந்து இவளால் அவமடைந்துள்ள அந்நிலைமையை நினைந்து உரைத்தேனேயன்றி எனது சுயநலம் கருதி இங்கே யாதும் நான் கூறவில்லை.

"ஈறில் நல்லறம் பார்த்து உரைத்தேன்; இவளைச்
சீறி நின்று இதுசெப்புகின்றேன் அலேன்"

என்றதனால் தம்மை இராமன் தப்பாக எண்ணி விடலாகாதே என்று நுட்பமாக அரண்செய்து கோசிக முனிவர் ஒப்புற வுரைத்துள்ளமை உணரலாகும். என்றும் அழியாது நின்று உயிர்களுக்கு நலம் பயந்து வருதலால் "ஈறு இல் நல் அறம்" எனத் தருமத்தின் நிலைமையும் நீர்மையும் தெரியக் குறித்தார்.

"இவள் மீது செற்றம் கொண்டோ, சினம்மிகுந்தோ, மனம் மாறுபட்டோ நான் பேசவில்லை; உயிர்களுக்குத் தீது புரிந்து வருகின்ற அத்தீமை ஒன்றையே கருதித் திருவுளம் அறிய உரை செய்துள்ளேன்" என இங்ஙனம் முறை செய்து முடித்தார்.

இவரது மொழித்திறம் விழிப்புமிக வுடையது. பல ஏதுக்களையும் துலக்கி இவ்வளவு சாதுரியமாய்ப் பேசிவந்தவர் முடிவில் துணிவுரை கூறியது வியனிலையில் எழுந்தது.

"ஆறி நின்றது அறன் அன்று; அரக்கியைக் கோறி!"

என்று தம் துணிவுதோன்றக் கூறி நின்றார். அவரது அருந்தவ ஆற்றலின் அதிகார ஆணைகள் இதன்கண் தொனித்துள்ளன.

"அந்தணன் கூறினான்" என்றது சிந்தனைக் குரியது.

எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் ஞான முனிவரன் இவ்வாறு கொலைசெய்ய ஏவினமையால் அந்நிலையை நன்கு தெரிந்துகொள்ளவேண்டும் என்பது குறிப்பு.

பல நல்ல பயிர்கள் நன்கு வளரும்பொருட்டு ஒரு தீப் பூண்டை அழித்தல்போல் உலகுயிர்கள் நலமாய் இனிது வளர இவளைக் கொலைசெய்யும்படி குலமுனிவர் குறித்தார் என்பதாம்.

பயிர்க்குக் களைபோல் உயிர்க்கு உறுநோய் செய்துள்ள இவளை உலக பரிபாலகனை நீ கண்டவுடனேயே கொன்றொழிக்க வேண்டும்; அங்ஙனம் கொல்லாது இங்ஙனம் தாமதித்து நிற்பது தருமம் ஆகாது என்பார், "ஆறி நின்றது அறன் அன்று" என்றார்.

நிற்பது என்னாது நின்றது என்றது அந்நிலையைச்சுட்டியது. இதுவரையும் நீ பொறுத்துள்ளதே பெருத்த தப்பு என்பதாம். அறன் அன்று என்றதனால் இந்தத் தாமதம் பாவம் என்பதாயிற்று. தரும நுட்பம் தெரிந்து கருமம் புரிக என்பது கருத்து.

இக்கொலையை ஒரு புண்ணிய கருமமாக எண்ணிச் செய்; வேறு ஒன்றையும் எண்ணற்க; விரைந்து கொல்லுக என்பார் கோறி என்றார். அவரது துடிப்பும் கடுப்பும் சொற்கள்தோறும் துள்ளி நிற்கின்றன.

இந்த உரைகள் முழுவதும் கேட்ட இராமன் முனிவரிடம் பதில் மொழி பகர்ந்தது அதி விநயமுடையதாய் மதிநலங் கனிந்துள்ளது. அடியில் வருவது.

"ஐயன் அங்கது கேட்டுஅறன் அல்லவும்
எய்தினலது செய்கஎன்று ஏவினல்
மெய்ய! நின்னுரை வேதம் எனக்கொடு
செய்கை அன்றே அறம்செயும் ஆறென்றான்."

(தாடகைவதைப்படலம், 67)

விசுவாமித்திரர்பால் இராமன் கொண்டுள்ள மதிப்பும் பத்தியும் இந்த வாக்கு மூலத்தால் நன்கு வெளிப்பட்டுள்ளன.

அறன் அல்லவும் என்றது தரும விரோதமானவை என்றவாறு. பாவகாரியமேயாயினும் தேவரீர் செய் என்று ஏவினல் அதனை உடனே நான் செய்வேன் எனத் தன் சம்மதத்தையும் கீழ்ப்படிதலையும் இராமன் முனிவரிடம் தெளிவாக இங்கே காட்டியிருக்கிறான். காட்சியைக் கண்ணூன்றி நோக்குங்கள்.

பணிவும் துணிவும் வார்த்தைகளில் படிந்து கிடக்கின்றன. ஏவினல் என்றது எசமான் இட்ட கட்டளையை ஏவலாளன் ஒருவன் ஆவலோடு செய்யும் தொண்டின் பாவனை தொனிக்க வந்தது. குருமொழிக்கு மறுமொழி கூறேன் என்றவாறு.

அடிகள் இட்ட கட்டளை எதுவாயினும் அதனைச் சிரமேற்கொண்டு உவந்து விரைந்து செய்து முடிப்பேன் என்பதாம்.

மெய்ய! என்றது தான் உறுதிசெய்து துணிந்தமைக்கு உரிமை குறித்தபடி. சத்திய சீலராகிய முனிவர் எத்திறத்தும் யாண்டும் பொய்யுரையார்; அரக்கியைக் குறித்து இதுவரை

சொன்னவை யாவும் உண்மையேயாம்; ஆகவே இனி ஒரு கணமும் தாழாது தொழில் புரிவேன் என்பது குறிப்பு.

மாதவர் யாது கூறினும் அது எனக்கு வேதவாக்கு; அதை நம்பி நான் பணி புரிகின்றேன் வருவன வருக என்று துணிவு செய்துகொண்டான் என்க. பெரியவர் சொல்லியபடி செய்வதே புண்ணியமாம் என இராமன் எண்ணியுள்ளமை அவன் உரையால் உணரலாகும். இவ்வீர வள்ளலது உள்ளம் சிலருடையவர்பால் சாலவும் அன்புடையதாய்த் தழைத்து வந்துள்ளது.

ஒரு நல்ல மாணாக்கன் தன் ஆசிரியனிடம் நடந்துகொள்ள வேண்டிய ஒழுங்கு முறையை இராமன் ஈண்டு ஒழுகிக் காட்டியிருக்கிறான். அறிவு நிலையோடு வீரநிலையும் இதன்கண் மேன்மை மிகுந்துள்ளது.

## சமர் தொடர்ந்தது

முனிவர் கருதியபடி செய்ய இராமன் உறுதி பூண்டதைத் தாடகை உணர்ந்தாள். முன்னம் முனைந்து முடிகி வந்தவள் எதிர்வதை நினைந்து இதுவரை உருத்து நின்றாள். இப்பொழுது கொதிப்பு மூண்டது. மூளவே தன் கையிலிருந்த சூலத்தைக் கடுத்து வீசினாள். அருகே வருமுன்னரே இராமன் விரைந்து கணைதொடுத்து அதனைத் துணித்து வீழ்த்தினான். வீழ்த்தவே அவள் பாழ்த்தவாய் திறந்து ஆதாளி செய்து அங்கே கிடந்த கல்லுகளையும் மண்ணுகளையும் வாரி வாரி மேலே தொடுத்துச் சொரிந்தாள் முனிவரையும் தம்பியையும் பின்னிறுத்தி இராமன் முன்னேறி நின்று அந்தக் கல்மாரி முழுவதையும் தன் வில் வலியால் விலக்கியருளினான். அளவுக்கு மீறிப் புழுதி மண்டினமையால் எங்கும் புகைப்படலமாய் இருண்டு திசைப்படைய நேர்ந்தது. யாருக்கும் யாதொரு ஊறும் நேராதபடி அவ்வளவையும் தனது பகழி மாரியால் படுதூளி செய்து இக் குலவீரன் பாதுகாத்து நின்றான். புத்தப் புதிதாய் முதல் முதல் நிகழ்ந்த இந்த அதிசயப் போர்க் காட்சியை அடியில்வரும் கவிப்பாடங்களில் காண்க.

கங்கைத் தீம்புனல் நாடன் கருத்தையும்
மங்கைத் தீயனை யாளும் மனக்கொளாச்
செங்கைச் சூலவெந் தீயினைத் தீயவள்
வெங்கட் டீயொடும் வெய்செல வீசினாள். (1)

புதிய கூற்றனை யாள்புகைந் தேவிய
கதிர்கொள் மூவிலைக் காலவெந்தீ, முனி
விதியை மேற்கொண்டு நின்றவன் மேல்உவா
மதியின் மேல்வரும் கோளென வந்ததே. (2)

மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல விற்கால் குனித்ததும் கண்டிலர்
காலனைப் பறித்து அக்கடி யாள்விட்ட
சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர். (3)

அல்லின் மாரி அனைய நிறத்தவள்
சொல்லின் மாத்திரையிற்கடல் தூர்ப்பதோர்
கல்லின் மாரியைக் கைவகுத்தாள் அது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினான். (4)
(தாடகை வதைப்படலம், 68-71)

இதற்குமுன் யாண்டும் போர் புரிந்தறியாத இந்த ஆண்டகை இங்கே செய்திருக்கும் அமராடல்களைக் கண்டு நாம் அதிசயித்து மகிழ்கின்றோம். வீரக்காட்சி என்றும் வியத்தகு நிலையது.

மங்கைத்தீ என்றது ஊழித்தீ என்பதுபோல் வியனிலையில் விசேடித்து வந்தது. சிவந்த தீயே கரிய பெண்ணுருவாய்ப் பெருகி நின்றதுபோல் நெடிதோங்கிக் கொதித்தெழுந்து அடுந்திறலோடு அவள் கொடுந் தொழில் புரிந்தாள் என்பதாம்.

தீம்புனல் நாடனைத் தீயனையாள் எதிர்த்தாள்என்றது நீரால் நெருப்பு அவிதல் போல் இராமனால் தாடகை விரைந்து அழிந்து படுவாள் என்பதைக் குறிப்பாக உணர்த்தி நின்றது.

“முனி விதியை மேற்கொண்டு நின்றவன்”

என்றது கோசிகர் விதித்த கட்டளையை முடிக்கக் கருத்தூன்றி நிற்கின்றவன் என்றவாறு. பெண் என்று கருதி அமர் தொடாமல் அமர்ந்து நின்றவன் முனிவர் “கொல்” என்று சொல்லவே வில்லை எடுத்தான் ஆதலால் அந்நிலை தெரிய வுரைத்தார். தாடகையை முனியும் விதி எனவும் தொனி இதிலுள்ளது.

சந்திரன் மீது இராகு வந்ததுபோல் கொடியசூலம் இராமன் மேல் கொதித்துப் பாய்ந்தது என்றதனால் அவள் குறி வைத்து எறிந்தது இன்னதை என்பது நன்கு தெரியவந்தது.

“கதிர்கொள் மூவிலைக் கால வெந்தீ”

என்றமையால் அச்சூலம் மூன்று கவருடைய தென்பதும் ஊழித்தீபோன்ற தென்பதும் தோன்றி நின்றன.

நெருப்பைக் கக்கிக்கொண்டு அப்படிக் கொதித்துவந்த அக் கொடிய சூலத்தை இராமன் எப்படித் தடுத்தான்?

"மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்,
கோல விற்கால் குனித்ததும் கண்டிலர்;"

எனக் கம்பர் இப்படிக் காட்டியிருக்கிறார். இராமன் வில்லை வளைத்ததும், பகழியைத் தொடுத்ததும், யாரும் காணவில்லை. பின்னர்க் கண்டது என்ன?

சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர்

என்க. இந்த அற்புதப் போர்த் திறல் மக்களுக்கு அதிசயத்தை மூட்டி யாண்டும் அந்த் ஆண்டகையை வியந்து துதிசெய்யும்படி விழைவூட்டி நிற்கின்றது. என்ன வீரம்! என்ன வேகம்!

சூலத்தை அவள் ஓங்கி எறியும் வரையும் இவன் வில்லை வளைக்கவேயில்லை; எறிந்த பின்புதான் விரைந்து கணை தொடுத்து அதனை வீழ்த்தி யிருக்கிறான் என்பது இங்கே பெய்திருக்கும் சொற் குறிப்புகளால் உய்த்துணரவுள்ளது.

வில் வளைத்த பின்பே அம்பு தொடுப்பது வழக்கம்; அந்த இயற்கையை மாற்றி வாளி தொட்டதை முன் குறித்தது வேகத் தின் வியத்தகு நிலையை விளக்க என்க.

வில் வளைத்ததும், அம்பு எடுத்ததும், குறி தொடுத்ததும் ஒருவரும் கண்டிலர்; ஆனால் எதிரி ஏவிய சூலம் துண்டங்கள் பலவாய்த் துணிபட்டுத் தரையில் உதிர்ந்ததையே எல்லாரும் கண்டு வியந்தனர் என்பதாம்; ஆகவே இராமனது கரவேக சர வேகங்களின் அற்புத நிலையும், அருந்திறலாண்மையும் அறிய நின்றன.

கண்டனர் என்றது அருகே நின்ற தம்பியும், முனிவரும், மேலே உள்ள தேவரும் என்க. என்ன செய்தான் என்று யாரும் யாதும் தெரியாமல் மின்னல் வெட்டியதுபோல் இன்னவன் கணை அன்று இறும்பூது விளைத்த தென்பதாம்.

காலன் எனக் கனன்று வந்த அக் கொடிய சூலம் இப்படிப் பொடியாய்ப் போகவே அக்கொடியவள் கோபாவேசமூண்டு

கையில் கிடைத்தவற்றை யெல்லாம் வாரியெடுத்துக் கடுமையாக மேலும் மேலும் வீசலானுள். கடலையும் தூர்க்கும்படியான கல்லின் மாரி என்றதனுல் அதன் எல்லை நிலை புலனும். சூலத்தை ஒரு வாளியால் தொலைத்தவன் பின்பு அவள் சொரிந்த மலை மண் மரங்களைப் பலகணைகளால் தலை மறைத்தான் ஆதலால்,

"வில்லின் மாரியின் வீரன் விலக்கினுன்"

என்ருர். அவள் ஆற்றிய தாக்குதல்களை யெல்லாம் தடுத்து வந்தானேயன்றி அவள்மேல் கடுத்து யாதும் இவன் கணை தொடுக்கவில்லை. பெண்ணே என்ற எண்ணம் இன்னமும் இப் புண்ணிய வீரன் நெஞ்சில் புகுந்து நின்றது. எப்படியும் அச் சுறுத்தி அவளை அயலே ஓட்டிவிடவேண்டும் என்னும் நோக்கத் தோடு அதிசாதுரியமாக வில்லாண்மை காட்டி இவ்வல்லாளன் பகழிகளை மிகவும் பதமாக ஏவி இதமாய் விளையாடி நின்ருன்.

அந்நிலையைக் கோசிகர் உணர்ந்தார்: "இராம நாதா! நீ கருதி விளையாடிக் காலம் நீட்டித்து நிற்கும் நிலை சரியன்று; மாலைப்பொழுது நெருங்கிவிட்டது; அவள் மாயையில் மிகவும் வல்லவள்; அல் அடைந்தால் பின்பு அவளை யாராலும் வெல்ல முடியாது; முன்னதாகக் கொல்லாதுவிடின் பின்பு நம்மை அவள் கொன்றே விடுவாள்; என் வார்த்தையை நம்பு; வீணே பார்த்து நில்லாதே!" என்ருர். இந்த இறுதிமொழி சொல்லி வாய்மூடுமுன் னமே இராமனுடைய வில்லிலிருந்து ஒரு கணை துள்ளி எழுந்தது. அவள் நெஞ்சை நோக்கிக் குறி செய்துவிட்டமையால் அவ்வாறே விரைந்து பாய்ந்து ஊடுருவி உயிர் குடித்து அது உயர்ந்து போயது. அச்சுடு சரம் கடுவேகத்துடன் அடுதொழில் செய்து நெடிதுபோன அதிசய நிலையைக் கவி அழகாக விளக்கியிருக்கிருர். அடியில் வருவது காண்க.

சொல்ஒக்கும் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல்ஒக்கும் நிறத்தினுள்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது அப்புறம் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்றன்றே.
(தாடகை வதைப்படலம், 72)

இராமபாணம் தாடகை நெஞ்சை ஊடுருவிச் சென்ற நிலை யைக் குறித்து வந்திருக்கும் இது எல்லாருடைய நெஞ்சங்களி லும் நிலைத்து நின்று நிலையான மகிழ்ச்சியை என்றும் விளைத்து வருகின்றது. உவமையும் பொருள்களும் ஊன்றி உணர உரியன.